

# லெனின்

# நூல் திரட்டு

வரலாற்றில் கார்ல் மார்க்ஸ் தத்துவத்துக்கு விதிக்கப்பட்ட வருங்காலம்

மார்க்ஸியத்தின் மூன்று தோற்றுவாய்களும் மூன்று உள்ளடக்கக் கூறுகளும்

மார்க்ஸியமும் திருத்தல்வாதமும்

ஜனநாயகப் புரட்சியில் சமூக-ஜனநாயகவாதத்தின் இரண்டு போர்த்தந்திரங்கள்

1

## பதிப்பாளர் குறிப்பு

நான்கு பாகங்களில் வெளியிடப்படும் இந்தத் தமிழ்ப் பதிப்பு வி.இ. லெனின், முழு நூல் திரட்டு, ஐந்தாவது ருஷ்ய மொழிப் பதிப்பிலிருந்து மொழி பெயர்க்கப்பட்டது.

**В. И. Ленин**

ИЗБРАННЫЕ ПРОИЗВЕДЕНИЯ

Часть первая

*На тамильском языке*

## வாசக நேயர்களுக்கு

இந்த மொழிபெயர்ப்பைப் பற்றியும் இந்தப் புத்தகத்தின் தயாரிப்பைப் பற்றியும் வாசக நேயர் களின் கருத்தை முன்னேற்றப் பதிப்பகம் மகிழ்வுடன் வரவேற்கும்.

கடிதங்களைத் தயை செய்து „Progress Publishers, 21, Zubovsky Boulevard, Moscow, USSR“ என்ற முகவரிக்கு அனுப்புங்கள்.



Л $\frac{10102—474}{014(01)—77}$ 714—77

சோவியத் நாட்டில் அச்சிடப்பட்டது

## பொருளடக்கம்

# முகவுரை

விளதீமிர் லெனின் விட்டுச் சென்றிருக்கும் எழுத்துக் கருவூலம் மிகப் பெரிது, அது உலகக் கம்யூனிஸ்டு இயக்கத்துக்கும் முற்போக்கு மனித குலம் அனைத்துக்கும் மதிப்பிடற்கரிய ஐசுவரியமாகும்.

1893 முதல் 1923 வரையில், முப்பது ஆண்டுக் காலத்தில், அவர் நூற்றுக் கணக்கான நூல்களும் சிறுநூல்களும் எழுதினார்; ஆயிரக் கணக்கான கட்டுரைகளும் கடிதங்களும் வரைந்தார்; எத்தனையோ கட்சிக் காங்கிரஸ்களிலும் மாநாடுகளிலும் சோவியத்துகளது காங்கிரஸ்களிலும் உழைப்பாளி மக்கள் கூட்டங்களிலும் உரைகளும் சொற்பொழிவுகளும் நிகழ்த்தினார்.

அவரது நூல்கள் புரட்சிகர மார்க்ஸியத் தத்துவத்தின் வளர்ச்சியில் புதிய கட்டமாகிய லெனினியக் கட்டத்தைக் குறிப்பவை. இந்நூல்களில் அவர், முதலாளித்துவ சித்தாந்த வாதிகளையும் திருத்தல்வாதிகளையும் சந்தர்ப்பவாதிகளையும் எதிர்த்து விடாப்பிடியான போராட்டம் நடத்தி, விஞ்ஞானக் கம்யூனிஸத்தின் நிருவகர்களது மகத்தான கருத்துக்களை ஆதரித்து நின்றார். மார்க்ஸியப் போதனையை அவர் புதிய வரலாற்று நிலைமைகளில் வளர்த்துச் செழுமை செய்து, ஏகாதிபத்தியத்துக்கும் சோஷலிஸத்துக்கு மாறிச் செல்வதற்குமான சகாப்தத்தில் ருஷ்யாவின், உலகமுழுவதின் தொழிலாளி வர்க்க இயக்கத்தை எதிர்நோக்கிய பணிகளுக்கு ஒத்திசைவானதாக்கினார்.

நான்கு பாகங்களுடைய இந்நூல் திரட்டில் லெனின், மார்க்ஸியத் தத்துவத்தின் ஆதாரக் கோட்பாடுகளை வளர்த்திடுகிறார்; பாட்டாளி வர்க்கத்தின், ஏனைய உழைப்பாளி மக்களின் விடுதலைப் போராட்டத்துக்கு இந்தத் தத்துவம் எவ்வளவு முக்கியமானதென்பதைத் தெளிவுபடுத்துகிறார். கட்சியானது தொழிலாளி வர்க்க இயக்கத்தின் முன்னேறிய சக்தியும் தலைமை தாங்கும் சக்தியுமாகும் என்ற போதனையை அவர் எடுத்துரைக்கிறார். முதலாளித்துவ-ஜனநாயகப் புரட்சியிலும், முதலாளித்துவ-ஜனநாயகப் புரட்சியிலிருந்து சோஷலிஸப் புரட்சிக்கான மாற்றத்தைச் செயல்படுத்துவதிலும், மாபெரும் அக்டோபர் சோஷலிஸப் புரட்சியின் வெற்றிக்கும் பாட்டாளி வர்க்கச் சர்வாதிகாரத்தை நிறுவுவதற்கும் உறுதி பெறச் செய்வதற்குமான போராட்டத்திலும் கம்யூனிஸ்டுக் கட்சியின் ஆதாரநெறியையும் போர்த்தந்திரத்தையும் அவர் வரையறுக்கிறார். சோஷலிஸத்தைக் கட்டியமைப்பதற்கான திட்டத்தை வகுத்தளிக்கிறார்; உலகக் கம்யூனிஸ்டு, தொழிலாளி வர்க்க இயக்கத்தின் பிரச்சினைகளைப் பரிசீலிக்கிறார்.

**வரலாற்றில் கார்ல் மார்க்ஸ் தத்துவத்துக்கு விதிக்கப்பட்ட வருங்காலம், மார்க்ஸியத்தின் மூன்று தோற்றுவாய்களும் மூன்று உள்ளடக்கக் கூறுகளும், மார்க்ஸியமும் திருத்தல்வாதமும்**— முதல் பாகத்தின் துவக்கக் கட்டுரைகளான இவற்றில், மார்க்ஸினுடைய தத்துவத்தின் புரட்சிகர உள்ளடக்கத்தையும், அதன் மகத்தான சக்தியையும் ஜீவ ஆற்றலையும் லெனின் புலப்படுத்துகிறார். மார்க்ஸியமானது உலக நாகரிகத்தின் உச்சி முடியாகுமென்றும், 19ஆம் நூற்றாண்டின் தலைசிறந்த சிருஷ்டிகளான ஜெர்மானியத் தத்துவஞானம், ஆங்கிலேய அரசியல் பொருளாதாரம், பிரெஞ்சு சோஷலிஸம் ஆகியவற்றின் நேர் வாரிசாகுமென்றும் குண நிர்ணயம் செய்கிறார். ''மார்க்ஸின் போதனை மெய்யானது, எனவேதான் அது சர்வவல்லமை பெற்றிருக்கிறது. அது பரிபூரணமானது, உள்ளிணக்கம் கொண்டது. ஒருங்கிணைந்த உலகக் கண்ணோட்டத்தை, எந்த வடிவிலுமான மூடநம்பிக்கைக்கோ பிற்போக்கிற்கோ முதலாளித்துவ ஒடுக்குமுறையின் நியாய

விளக்கத்துக்கோ இணங்காத உலகக் கண்ணோட்டத்தை மக்களுக்கு அது அளிக்கின்றது'' என்று லெனின் எழுதுகிறார்.

மார்க்ஸியமானது அதன் தன்மையின் காரணமாகவே எப்போதும் வாழ்க்கையை, எதார்த்தத்தின் மறுக்க முடியாத உண்மைகளைக் கணக்கில் எடுத்துக் கொள்ளும்படி கோருகிறது என்பதை லெனின் இடையறாது அடிக்கோடிட்டு வற்புறுத்துகிறார். இறுகிக் கெட்டிப் பிடித்துவிட்ட, பழமைப்பட்டு வழக்கொழிந்து போன சூத்திரங்களாலும் வரையறுப்புகளாலுமான அமைப்பாக மார்க்ஸியம் மாற்றப்படுவதைக் கண்டிப்பான முறையில் எதிர்க்கிறார். மாறும் வரலாற்றுச் சூழ்நிலைக்கு ஒத்திசைவாய் மார்க்ஸியத்தை ஆக்க வழியில் வளர்த்துச் செல்வது அவசியமென்று வலியுறுத்துகிறார். காலங் கடந்ததாகிவிட்ட ஒரு தத்துவத்தை இறுகப் பற்றிக் கொள்வதற்குப் பதில் திட்டவட்டமான நிலைமைகளில் மார்க்ஸியத்தை வளர்த்துச் செல்வதற்கும், அதைக் கையாளுவதற்கும், எவ்வளவுதான் சிக்கலானதாக இருப்பினும் எந்தச் சூழ்நிலைக்கும் மார்க்ஸிய முறையைப் பயன்படுத்திச் சரியானபடி தீர்வு காண்பதற்குமான வல்லமையை வெளிப்படுத்துவதுதான் சமுதாய நிகழ்ச்சிகள் குறித்து அனுசரிக்கப்பட வேண்டிய மார்க்ஸிய அணுகு முறையின் சாராம்சமாகும் என்று லெனின் எடுத்துரைக்கிறார். அதேபோது மார்க்ஸியத்தின் அடிப்படைக் கோட்பாடுகளை விட்டு விலகும் எவ்விதமான திரிபுகளையும் மார்க்ஸியத்தின் அடிநிலைக் கோட்பாடுகளுக்குச் செய்யப்படும் எவ்விதமான திருத்தங்களையும் அவர் துணிவுடனும் சிறிதும் பிறழாமலும் எதிர்க்கிறார்.

முதலாளித்துவ விஞ்ஞானம் அனைத்துமே மார்க்ஸியத்தின் பால் ஜன்மப் பகைமையும் வெறுப்பும் கொண்டுள்ளது என்று எழுதுகிறார் லெனின். ஏனெனில் எதை எதிர்த்து மார்க்ஸியம் ஓயாது ஒழியாது போராடுகிறதோ அந்த முதலாளித்துவத்தை ஆதரித்து நிற்பதாகும் முதலாளித்துவ விஞ்ஞானம். முதலாளி வர்க்கத்தாரும் அவர்களது அடிவருடிகளும் மார்க்ஸியத்தைப் பொய்யென நிரூபிப்பதற்காகவும் அதை அழித்தொழிப்பதற்காகவும் தம்மால் இயன்றது அனைத்தும் செய்கிறார்கள். ஆனால் இவர்கள் செய்துள்ள,

தொடர்ந்து செய்து வரும் முயற்சிகள் எல்லாம் விரயமே. கோடானு கோடியான உழைப்பாளி மக்கள் மார்க்ஸிய-லெனினியத்தின் மாபெரும் போதனையை மையமாகக் கொண்டு ஒன்றுதிரண்டு வருகிறார்கள்.

மார்க்ஸியத்தின் வெளிப்படையான பகைவர்களை எதிர்த்தும், சொல்லளவில் மட்டும் மார்க்ஸியத்தை ஏற்றுக் கொள்வோரை எதிர்த்தும் லெனின் இடையறாத போராட்டம் நடத்துகிறார். மார்க்ஸியத் தத்துவத்தின் வெற்றிகர முன்னேற்றமானது அதன் பகைவர்களை மார்க்ஸிய வேடம் பூணுமாறு நிர்ப்பந்திக்கிறது. புரட்சிகர மார்க்ஸியத்தின் எதிராளிகள் கடந்த காலத்தில் இந்த முறையைக் கையாண்டிருக்கிறார்கள், இன்றும் தொடர்ந்து கையாளுகிறார்கள்.

விஞ்ஞானக் கம்யூனிஸம் திண்மை பெறுவதைத் தொடர்ந்து திருத்தல்வாதத்துக்கெதிரான போராட்டம் மேலும் கடுமையாகிச் செல்லுமென்று முன்னறிந்து கூறிய லெனின், மார்க்ஸியம் தவிர்க்க முடியாதபடி திருத்தல்வாதத்தின் மீது, பெயரளவில் மார்க்ஸியத்தை அங்கீகரித்து அதேபோது அதன் புரட்சிகர உள்ளடக்கத்தை விட்டொழித்துவிடுவோர் மீது வெற்றி பெறவே செய்யுமென்று கூறுகிறார்.

மார்க்ஸிய-லெனினியத் தத்துவத்தைத் திருத்திப் புரட்ட முயலும் முதலாளித்துவப் புரட்டர்கள் விரிவாகக் கையாளும் ஒரு முறை என்னவெனில், லெனினியத்தை மார்க்ஸியத்துக்கு எதிரானதாக்குவதுதான். இந்த முயற்சியில் ஒரு போதும் அவர்கள் வெற்றி பெற்றதில்லை, ஏனென்றால் முதலாளித்துவத்திலிருந்து சோஷலிஸத்துக்கு மாறிச் செல்வதற்கான புதிய சகாப்தத்தின் மார்க்ஸியமே, முதலாளித்துவத்தின் வீழ்ச்சிக்கும் சோஷலிஸத்தின், கம்யூனிஸத்தின் வெற்றிக்குமான சகாப்தத்தின் மார்க்ஸியமே லெனினியம். லெனின் எதைப் புகுத்தி மார்க்ஸியத்தை வளர்த்திட்டாரோ, அதுவேதான் மார்க்ஸியத்தின் வற்றாத ஜீவ ஆற்றலுக்குரிய ஆதாரமாகும்.

தொழிலாளி வர்க்கக் கட்சிக்குப் புரட்சிகர மார்க்ஸிய சித்தாந்தத்தின் முக்கியத்துவத்தையும், முன்னேறிய தத்துவத்தை ஆயுதமாகக் கொண்டதும் தொழிலாளி வர்க்க இயக்

கத்துக்குத் தலைமை தாங்கும் வல்லமையுடையதுமாகிய சித்தாந்தவாதியாகவும் அரசியல் தலைவராகவும் கட்சிக்குள்ள பாத்திரத்தையும் பொருளாதாரவாதத்தின் ஆதரவாளர்களுடன் ஓர் உரையாடல் என்னும் கட்டுரையில் சக்தி வாய்ந்த முறையில் லெனின் தெளிவுபடுத்திக் காட்டுகிறார்.

சோஷலிஸப் புரட்சியின் தத்துவத்தை ஆழ்ந்த முறையில் விரிவுபட லெனின் எடுத்துரைக்கிறார். இங்கு முதன்மையாகக் குறிப்பிடப்பட வேண்டியவை: ஜனநாயகப் புரட்சியில் சமூக-ஜனநாயகவாதத்தின் இரண்டு போர்த்தந்திரங்கள்; ஐரோப்பிய ஐக்கிய நாடுகள் வேண்டும் எனும் முழக்கத்தைப் பற்றி; அரசும் புரட்சியும்; மார்க்ஸியமும் புரட்சியெழுச்சியும்; பாட்டாளி வர்க்கப் புரட்சியும் ஓடுகாலியான காவுத்ஸ்கியும்; ''இடதுசாரி'' கம்யூனிஸம்—இளம்பருவக் கோளாறு. புரட்சியில் பாட்டாளி வர்க்கத்தின் மேலாதிக்கம் என்னும் கருத்தையும், முதலாளித்துவ-ஜனநாயகப் புரட்சி சோஷலிஸப் புரட்சியாக வளர்வதன் தத்துவத்தையும் இந்நூல்களிலும் பிறவற்றிலும் லெனின் வளர்த்திடுகிறார். ஏகாதிபத்தியச் சகாப்தத்தில் முதலாளித்துவ வளர்ச்சியினை ஆளும் விதிகளைப் புலப்படுத்துகிறார், இந்த வளர்ச்சி ஏற்றத்தாழ்வானது என்பதைத் தெளிவுபடுத்துகிறார். இந்த நிலைமை உலகை மறுபங்கீட்டுக்காக முதலாளித்துவ நாடுகளிடையே போராட்டத்தைக் கடுமையாக்குவதையும், உலக ஏகாதிபத்தியத்தின் அணி அனைத்துக்கும் குழி பறித்திடும் ஏகாதிபத்தியப் போர்களை மூளச் செய்வதையும் லெனின் நிரூபிக்கின்றார். ஏகாதிபத்திய நாடுகளாலாகிய சங்கிலியில், சோஷலிஸப் புரட்சிக்கு ஒட்டுமொத்தமாக முதிர்ச்சியடைந்து பக்குவமாகிவிட்ட ஏகாதிபத்திய அமைப்பில், தாக்கித் தகர்க்கப்படக் கூடிய கரணைகளைத் தோன்றச் செய்கிறது. இதிலிருந்து லெனின் கேந்திரமான ஒரு முடிபை வந்தடைகிறார், ஆரம்பத்தில் சோஷலிஸமானது ஒருசில நாடுகளில் மட்டும், தனித்து ஒரேயொரு நாட்டில் மட்டுங்கூட வெற்றிவாகை சூடக் கூடும் என்பதும், ஏககாலத்தில் எல்லா நாடுகளிலும் அது வெற்றியடைவது சாத்தியமல்ல என்பதுமே அந்த முடிபு. மார்க்ஸியத்தின் செல்வக் களஞ்சியத்துக்கு இந்த முடிபு, அளவின்றி செல்வம் திரட்டித் தந்துள்ளது.

சோஷலிஸப் புரட்சி என்பது, தலைமையான சக்தியாக அமைந்த பாட்டாளி வர்க்கத்தின் போராட்டத்துடன் விவசாயிகளது போராட்டமும் தேசவிடுதலை இயக்கமும் ஒன்று சேர்வதாகும் என்கிருர் லெனின். நடைமுறையானது இந்தத் தத்துவத்தை உன்னத முறையில் மெய்ப்பித்து உறுதி செய்திருக்கிறது. ருஷ்யாவில் மாபெரும் அக்டோபர் சோஷலிஸப் புரட்சியின் வெற்றி, சோவியத் யூனியனில் கட்டியெழுப்பப்பட்ட சோஷலிஸம், உலக சோஷலிஸ அமைப்பின் உதயம், காலனியாதிக்க அமைப்பின் தகர்வு, சில ஆசிய, ஆப்பிரிக்க நாடுகள் முதலாளித்துவமல்லாத வளர்ச்சிப் பாதையில், சோஷலிஸப் பாதையில் அடியெடுத்து வைத்திருப்பது ஆகிய இவை எல்லாம் உலகின் புரட்சிகர வளர்ச்சிப் போக்கில் லெனினது கருத்துக்களின் வெற்றியைக் குறிப்பவை.

**சோஷலிஸப் புரட்சியும் தேசங்களின் சுயநிர்ணய உரிமை**யும் எனும் ஆய்வுரைகளிலும் பிற நூல்களிலும் லெனின், பிரிந்து போவதும் அடங்கலான சுயநிர்ணய உரிமை எல்லாத் தேசங்களுக்கும் உண்டென்பதை நிலைநாட்டி ஆதரிக்கிருர்; முதலாளித்துவ தேசியவாதத்தின் எல்லா வெளிப்பாடுகளையும் கண்டனம் செய்கிருர். தேசங்களது சமத்துவத்துக்கும் ஒருங்கிணைவுக்கும் நட்புக்குமான போராட்டத்தில் ஒன்றுபடுமாறு எல்லாத் தேசங்களையும் சேர்ந்த தொழிலாளர்களுக்கும் அறைகூவல் விடுக்கின்ருர். சோஷலிஸம் ஒன்ருல் மட்டுமே மெய்யாகவே ஜனநாயகமான சர்வதேசிய அடிப்படையில் தேசங்களை ஒன்றையொன்று நெருங்கி வந்து ஒன்றுசேர வைக்க முடியுமென்பதையும், இது சுதந்திரமான, சரிசமமான தேசங்களது கூட்டணிக்கும் நட்புக்கும் வழி கோலுமென்பதையும் அவரால் முன்னறிந்து கூற முடிந்தது.

ஏகாதிபத்தியத்தை லெனின் தீர்க்கமாக ஆராய்ந்ததன் விளைவாகும், இரண்டாம் பாகத்தில் உள்ள **ஏகாதிபத்தியம்—முதலாளித்துவத்தின் உச்ச கட்டம்** என்னும் அரும்பெரும் நூல். மார்க்ஸின் **மூலதனம்** வெளிவந்தபின் கழிந்திருந்த அரை நூற்ருண்டுக் காலத்தில் உலக முதலாளித்துவ வளர்ச்சி

யின் விளைவுகளை அவர் இந்நூலில் தொகுத்துரைத்தார். முதலாளித்துவத்தின் உதயம், வளர்ச்சி, சரிவு இவற்றை ஆளும் விதியை மார்க்ஸூம் எங்கெல்ஸூம் புலப்படுத்தினர். இந்த விதியின் அடிப்படையில் உலக ஏகாதிபத்தியத்தின் பொருளாதார, அரசியல் சாராம்சத்தை லெனின்தான் முதன் முதல் ஆழ்ந்த விஞ்ஞான முறையில் பகுத்தாய்ந்தார். உலக முதலாளித்துவத்தின் பொருளாதாரத்தில் புதிய நிகழ்வுகளைப் பொதுமைப்படுத்தி, முதலாளித்துவ சமுதாயத்தின் எல்லா முரண்பாடுகளும் ஏகாதிபத்தியத்தில் தீவிரமடைவது தவிர்க்க முடியாததென அவர் நிரூபித்தார். ஏகாதிபத்தியத்தை அவர் புல்லுருவித்தனமான, அழுகிப் போகும் அந்திமக் கால முதலாளித்துவமாகக் குண நிர்ணயம் செய்தார். இந்த முதலாளித்துவம் வீழ்ந்துபடுவதற்குரிய நிலைமைகளைத் தெளிவுபடுத்தினர், முதலாளித்துவம் அகற்றப்பட்டு அதனிடத்தில் முற்போக்கான ஒரு புதிய சமூக அமைப்பை, அதாவது சோஷலிஸத்தைக் கட்டுவது தவிர்க்கமுடியாததும் அத்தியாவசியமானதும் ஆகுமென்று காட்டினர். ஏகாதிபத்தியமானது சோஷலிஸப் புரட்சிக்குரிய தறுவாயாகுமெனக் குறிப்பிட்டார்.

மாபெரும் அக்டோபர் சோஷலிஸப் புரட்சிக்குப் பிறகு, கொடும் போர் நடைபெற்று வந்த காலத்தில் லெனின் தொடர்ந்து சோஷலிஸப் புரட்சி, பாட்டாளி வர்க்கச் சர்வாதிகாரம், முதலாளித்துவத்திலிருந்து சோஷலிஸத்தைச் சென்றடைவதற்கான மாற்றம் ஆகியவற்றின் தத்துவார்த்தப் பிரச்சினைகளில் ஈடுபடுத்தி வந்தார். பாட்டாளி வர்க்கச் சர்வாதிகாரத்தின் கடமைகளையும் பணிகளையும், மாறிப் போகும் காலகட்டத்துக்குரிய பொருளாதார வளர்ச்சியின் விதிகளிலிருந்து எழும் பிரச்சினைகளையும், வர்க்கங்களுக்கு இடையிலான உறவுகளையும், சோஷலிஸ சமூக உறவுகளும் பிறகு கம்யூனிஸ சமூக உறவுகளும் உருவாவதையும் லெனின் பின்வருவனவற்றில் விளக்குகின்றார்: பாட்டாளி வர்க்கச் சர்வாதிகாரத்துக்குரிய காலபகுதியில் பொருளாதாரமும் அரசியலும்; மாபெரும் தொடக்கம் (போர்முனையல்லாத உட்பகுதிகளில் தொழிலாளர்களின் திரம். ''கம்யூனிஸ்டு சுபோத்னிக்குகள்'').

ருஷ்யாவின் இளங் கம்யூனிஸ்டுக் கழகத்தின் மூன்ருவது அனைத்துருஷ்யக் காங்கிரஸில் நிகழ்த்திய சொற்பொழிவில், வளரும் தலைமுறையினரது கம்யூனிஸ போதத்துக்கும் கல்விக்குமான வேலைத்திட்டத்தை லெனின் வகுத்தளிக்கிருர். மனித குலத்தால் சேகரிக்கப்பட்ட அறிவு அனைத்தையும் கற்றும் பணியை, படிப்பை வேலையுடன், கம்யூனிஸத்துக் கான நடைமுறைப் போராட்டத்துடன் இணைத்துக் கொள்ளும் பணியை அவர் இளந்தலைமுறையினர் முன்னுல் வைத்தார். பாட்டாளி வர்க்கக் கலாசாரம் குறித்து என்னும் நகல் தீர்மானத்திலும், குபேர்னியா, உயெஸ்து கல்வி இலாகாக்களின் அரசியல் கல்விப் பணித்துறையாளர்களது அனைத்துருஷ்ய மாநாட்டில் 1920 நவம்பர் 3ல் நிகழ்த்திய சொற்பொழிவிலும், மற்றும் நாட்குறிப்பிலிருந்து சில பக்கங்கள் என்பதிலும் அவர் பாட்டாளி வர்க்கச் சர்வாதிகாரத்தின் கல்விப் பணிகளையும், கலாசார வளர்ச்சியில் கம்யூனிஸ்டுக் கட்சிக்குள்ள தலைமைப் பாத்திரத்தையும் கோடிட்டுக் காட்டினுர். கட்சிப் பிரசாரம், கிளர்ச்சி அனைத்தும், கட்சியின் சித்தாந்தப் பணி பூராவும், கம்யூனிஸத்தை அமைத்திடுவதற்கான நடைமுறை வேலைகளுடன் துண்டிக்க முடியாதபடி இணைத்திருக்க வேண்டும் என்ருர் அவர்.

போர்க்குணம் கொண்ட பொருள்முதல்வாதத்தின் முக்கியத்துவம் குறித்து என்ற கட்டுரையில் அவர் தத்துவத் துறையில் நடைபெற வேண்டிய பணிகளை வரையறுத்துக் குறிப்பிட்டார். தத்துவஞானம் குறித்தான கட்சி அணுகுமுறைக்கு முன்னுதாரணமாகத் திகழும் கட்டுரை இது.

அமெரிக்கத் தொழிலாளர்களுக்கு எழுதிய கடிதம் என்பதில், அமெரிக்க ஏகாதிபத்தியவாதிகளது உண்மை சொரூபத்தை லெனின் வெளிப்படுத்திக் காட்டுகிருர், மக்களது துன்பதுயரத்திலிருந்து நூற்றுக் கணக்கான கோடி டாலர்களை மூட்டை கட்டிக் கொண்ட இவர்களைத் தோலுறித்துக் காட்டுகிருர். பிரிட்டிஷ்-அமெரிக்க ஏகாதிபத்தியம் தேசங்களை ஒடுக்கும் கொடுங்கோலனுய், புரட்சி இயக்கத்தின் கொலைகாரனுய், எல்லா நாடுகளின் உழைப்பாளிப் பெருந்திரளினருக்கு முன்னுல் தன்னை அம்பலப்படுத்திக்கொண்டுவிட்டதைக் குறிப்பிடுகிருர்.

சோஷலிஸ அமைப்பு, முதலாளித்துவ அமைப்பு ஆகிய இரு வேறு அமைப்புகளாக உலகம் பிளவுண்டுவிட்ட பிற்பாடு உலகின் புரட்சிகர வளர்ச்சிப் போக்கின் இயக்கு சக்திகளையும் திசைவழியையும் ''பிராவ்தா''வின் பத்தாவது ஆண்டு நிறைவு குறித்து; சொற்பமாயினும் சிறந்ததைவயே நன்று என்கிற கட்டுரைகளில் லெனின் பகுத்தாராய்கிறார். உலகக் கம்யூனிஸ்டு இயக்கம், தேசவிடுதலை இயக்கம் இவற்றின் வேலைத்திட்ட, நிறுவன, போர்த்தந்திரக் கோட்பாடுகளை இவற்றில் தெளிவுபடுத்துகின்றார்.

மார்க்ஸிய-லெனினியத்தின் நெறியமைவு வரலாற்று வழியில் பிழையற்றதென்பது, உழைப்பாளி மக்களது உலக விடுதலை இயக்கத்தின் போக்கு அனைத்தாலும், உலக சோஷலிஸ அமைப்பின் உதயத்தாலும், முதலாளித்துவ நாடுகளில் பாட்டாளி வர்க்கப் போராட்டத்தின் சாதனைகளாலும், காலனியாதிக்க அமைப்பின் தகர்வாலும் நிரூபிக்கப்படுகிறது.

லெனினியம் ஒரு சர்வதேச போதனையாகும். எல்லா நாடுகளையும் சேர்ந்த தொழிலாளி வர்க்கம், விடுதலை இயக்கம் ஆகியவை பெற்றுள்ள அனுபவத்தை அது பிரதிபலிக்கிறது. இந்தப் போதனையின் அடிப்படைக் கோட்பாடுகள் எந்த நாட்டுக்கும் — அது அடைந்திருக்கும் வளர்ச்சி நிலை எதுவாயினும்—பொருத்துவனவாகும். எல்லா நாடுகளின் உழைப்பாளி மக்களுக்கும் இந்தப் போதனை இன்பகரமான எதிர்காலத்தை அமைத்துக் கொள்வதற்கான வழிமுறைகள் குறித்து தெளிவான சித்திரத்தை அளிக்கிறது, சமாதானத்துக்கும் முன்னேற்றத்துக்குமாகிய சக்திகள் வெற்றி பெறுமென்று திடநம்பிக்கையை அவர்களுக்கு ஊட்டுகிறது. லெனினியத்தின் அடிப்படைக் கருத்தகள் அனைத்து மனித குலத்துக்கும் வளர்ச்சிப் பாதையை ஒளி பெறச் செய்து காட்டுகிறவை; மக்கள் இக்கருத்துகளைப் புரிந்து இவற்றை தாங்களுடையதாக்குவதற்கு இந்தத் தொகுப்பில் அடங்கியுள்ள நூல்கள் துணை புரிகின்றன.

**சோவியத் யூனியன் கம்யூனிஸ்டுக் கட்சி**
**மத்தியக் குழுவைச் சேர்ந்த**
**மார்க்ஸிய-லெனினியக் கழகம்**

# வரலாற்றில் கார்ல் மார்க்ஸ் தத்துவத்துக்கு விதிக்கப்பட்ட வருங்காலம்[1]

*சோஷலிஸச் சமுதாயத்தின் சிற்பியாய்ப் பாட்டாளி வர்க்கம் வகிக்கும் வரலாற்றுப் பாத்திரத்தை மார்க்ஸின் தத்துவம் தெளிவுபடுத்துகிறது. இதுவே இத்தத்துவத்தின் முதன்மையான சிறப்பு. மார்க்ஸ் இத்தத்துவத்தை விரித்துரைத்தபின் உலகெங்கணும் நடைபெற்றுள்ள நிகழ்ச்சிகளின் போக்கு இதை மெய்ப்பித்திருக்கிறதா?*

*1844ல் மார்க்ஸ் இதை முதன்முதல் எடுத்துரைத்தார். 1848ல் வெளியான மார்க்ஸ், எங்கெல்ஸின் கம்யூனிஸ்டு அறிக்கை ஏற்கெனவே இத்தத்துவத்தை முழுமையாகவும் முறையாகவும் விரித்துரைத்தது; இந்நாள் வரை இதுவே தலைசிறந்த விரிவுரையாய் இருந்து வருகிறது. அதன்பின் உலக வரலாறு மூன்று முக்கியமான காலக்கூறுகளாய்த் தெளிவாய்ப் பிரிக்கப்பட்டிருக்கிறது: (1) 1848ஆம் ஆண்டுப் புரட்சியிலிருந்து[2] பாரிஸ் கம்யூன் (1871)[3] வரை; (2) பாரிஸ் கம்யூனிலிருந்து ருஷ்யப் புரட்சி (1905) வரை; (3) ருஷ்யப் புரட்சிக்குப்பின்.*

*இந்தக் காலக்கூறுகள் ஒவ்வொன்றிலும் மார்க்ஸின் தத்துவத்துக்கு விதிக்கப்பட்ட வருங்காலம் என்னவென்பதைக் காண்போம்.*

*1*

*முதல் காலக்கூறின் துவக்கத்தில் மார்க்ஸின் தத்துவம் எவ்வகையிலும் கோலோச்சும் நிலையில் இருக்கவில்லை. சோஷலிஸத்தின் எண்ணிறந்த குழுக்கள் அல்லது போக்குகளில்*

ஒன்றுகவே இருந்தது. உண்மையில் கோலோச்சிக் கொண்டிருந்த சோஷலிஸ வடிவங்கள் பிரதானமாய் நமது நரோதியத்தை[4] ஒத்தவை: வரலாற்று இயக்கத்தின் பொருள்முதல்வாத அடித்தளத்தைப் புரிந்துகொள்ளாமை, முதலாளித்துவச் சமுதாயத்தில் ஒவ்வொரு வர்க்கத்துக்குமுள்ள பாத்திரத்தையும் முக்கியத்துவத்தையும் தனித்துப் பிரிக்கும் திறனின்மை, ஜனநாயகச் சீர்திருத்தங்களின் முதலாளித்துவத் தன்மையை ''மக்கள்'', ''நீதி'', ''உரிமை'' முதலியவற்றைப் பற்றிய பல்வேறு போலி சோஷலிஸச் சொற்றுெடர்களைக் கொண்டு மூடிமறைத்தல் முதலான பலவற்றிலும் இவை நமது நரோதியத்தை ஒத்தவை.

மார்க்ஸியத்துக்கு முற்பட்ட சோஷலிஸத்தின் இந்தக் கதம்பத் திரளான, ஆடம்பரமான வாய்வீச்சு வடிவங்கள் யாவற்றுக்கும் 1848ம் ஆண்டுப் புரட்சி மரண அடி கொடுத்தது. எல்லா நாடுகளிலும் இப்புரட்சி சமுதாயத்தின் பல்வேறு வர்க்கங்களையும் செயலில் வெளிப்படச் செய்து புலப்படுத்திக் காட்டிற்று. குடியரசுவாத முதலாளித்துவ வர்க்கத்தினர் பாரிசில் 1848 ஜூன் நாட்களில் தொழிலாளர்களைச் சுட்டுவீழ்த்தியதானது பாட்டாளி வர்க்கம் மட்டும்தான் இயற்கையாகவே சோஷலிஸத் தன்மையுடையது என்பதை முடிவாய்ப் புலப்படுத்திக் காட்டிற்று. மிதவாத முதலாளித்துவ வர்க்கத்தினர் எந்த வகையான பிற்போக்கையும் கண்டு அஞ்சுவதைவிட பாட்டாளி வர்க்கத்தின் சுயேச்சையைக் கண்டுதான் நூறு மடங்கு கூடுதலாய் அஞ்சி நடுங்கினர். கோழைகளாய் அண்டிப் பிழைக்கும் மிதவாதிகள் பிற்போக்கிற்கு அடிபணிந்து தண்டமிட்டனர். விவசாயி மக்கள் நிலப்பிரபுத்துவத்தின் மீதமிச்சங்கள் ஒழிக்கப்பட்டதுடன் திருப்தியடைந்து ஒழுங்கின் ஆதரவாளர்களோடு சேர்ந்து கொண்டனர், சில சமயங்களில் தொழிலாளர் ஜனநாயகத்துக்கும் முதலாளித்துவ மிதவாதத்துக்கும் இடையே ஊசலாடியதோடு சரி. வர்க்கத்தன்மையற்ற சோஷலிஸம், வர்க்கத்தன்மையற்ற அரசியல் இவை குறித்த எல்லாத் தத்துவங்களும் அப்பட்டமான அபத்தமே என்பது நிரூபணமாயிற்று.

முதலாளித்துவ மாற்றங்களுக்குரிய இந்த வளர்ச்சியைப் பாரிஸ் கம்யூன் (1871) நிறைவுறச் செய்தது; வர்க்க உறவுகள் மிகவும் ஒளிவுமறைவற்ற உருவில் காட்சி தரும் அரசியலமைப்பு வடிவமான குடியரசு உறுதி பெறப் பாட்டாளி வர்க்கத்தின் வீரதீரம் மட்டுமே காரணம்.

ஏனைய எல்லா ஐரோப்பிய நாடுகளிலும் மேலும் சிக்கலான, நிறைகுறையான வளர்ச்சி இதே விளைவுக்கு இட்டுச் சென்றது—முதலாளித்துவச் சமுதாயம் திட்டவட்டமான உருப் பெற்றுவிட்டது. முதல் காலக்கூறின் (1848-71) கடைப் பகுதியில், புயல்களும் புரட்சிகளுமாயிருந்த இப் பகுதியில், மார்க்ஸியத்துக்கு முற்பட்ட சோஷலிஸம் இறந்து போயிற்று. முதலாவது அகிலம் (1864-72),[5] மற்றும் ஜெர்மன் சமூக-ஜனநாயகக் கட்சி எனும் சுயேச்சையான பாட்டாளி வர்க்கக் கட்சிகள் உதித்தெழுந்தன.

## 2

இரண்டாவது காலக்கூறு (1872-1904) அதன் ''அமைதியான'' தன்மையால், புரட்சிகள் இல்லாத நிலையால் முதல் காலக்கூறினின்று வேறுபடுத்திக் காட்டப் பெற்றது. மேற்குலகு முதலாளித்துவப் புரட்சிகளை நடத்தி முடித்துவிட்டது. கிழக்குலகு இன்னும் அந்த மட்டத்துக்கு உயர்ந்தாகவில்லை.

வரவிருந்த மாற்றங்களுக்காக ''அமைதி வழியில்'' தயாரிப்புகள் செய்து கொள்ளும் கட்டத்தினுள் மேற்குலகு அடியெடுத்து வைத்தது. அடிப்படையில் பாட்டாளி வர்க்கத் தன்மையுள்ள சோஷலிஸ்டுக் கட்சிகள் எங்கும் அமைக்கப் பட்டன. இவை முதலாளித்துவ நாடாளுமன்ற முறையை உபயோகித்துக் கொள்ளவும், தமக்குச் சொந்தமான நாளேடுகளையும் கல்வி போதனை நிலையங்களையும் தொழிற் சங்கங்களையும் கூட்டுறவுக் கழகங்களையும் நிறுவிக் கொள்ளவும் கற்றுக் கொண்டன. மார்க்ஸின் தத்துவம் முழுநிறைவான வெற்றிபெற்றுப் பரவத் தொடங்கிற்று. பாட்டாளி வர்க்கத்தின் சக்திகளை ஆய்ந்து தேர்ந்து அணிதிரட்டும் நிகழ்ச்சிப்

போக்கும், வரவிருந்த போராட்டங்களுக்கான அதன் தயாரிப்பும், மெதுவாக இருந்தாலும் இடையறாது முன்னேறின.

மார்க்ஸியத்தின் தத்துவார்த்த வெற்றியால் கட்டாயப் படுத்தப்பட்ட அதன் பகைவர்கள் மார்க்ஸியவாதிகளாய் மாறுவேடமிட்டுக் கொண்டனர் — வரலாற்றின் இயக்கவியல் போக்கு அத்தகையதாய் இருந்தது. உள்ளுக்குள் உளுத்துப் போய்விட்ட மிதவாதமானது சோஷலிஸ்டுச் சந்தர்ப்பவாதத்தின் வடிவில் தனக்குப் புத்துயிர் அளித்துக் கொள்ள முயன்றது. மாபெரும் போர்களுக்காக சக்திகளை ஆயத்தமாக்கிக் கொள்வதற்குரிய இந்தக் காலக்கூறு, இந்தப் போர்கள் கைவிடப்படுதலைக் குறிப்பதாய் அவர்கள் வியாக்கியானம் செய்தனர். கூலி அடிமை முறையை எதிர்த்துப் போராடுவதற்கு அடிமைகளின் நிலைமைகளில் ஏற்பட்ட மேம்பாடு, இந்த அடிமைகள் சுதந்திரத்துக்கான தமது உரிமையை அற்பக் காசுக்காக விற்றதைக் குறிப்பதாய் அவர்கள் கொண்டனர். கோழைத்தனமாய் அவர்கள் ''சமூக அமைதி'' (அதாவது அடிமையுடைமையாளர்களுடன் அமைதி), வர்க்கப் போராட்டத்தைக் கைவிடுதல் முதலானவற்றை உபதேசித்தனர். நாடாளுமன்றத்தில் சோஷலிஸ்டு உறுப்பினர்களிடையிலும், தொழிலாளி வர்க்க இயக்கத்தின் பல்வேறு அதிகாரிகளிடையிலும், ''அனுதாபங் கொண்ட'' அறிவுத் துறையினரிடையிலும் அவர்கள் மிகப் பல ஆதரவாளர்களைப் பெற்றிருந்தனர்.

### 3

ஆனால் சந்தர்ப்பவாதிகள் ''சமூக அமைதியைப்'' புகழ்ந்தும் ''ஜனநாயகத்தில்'' புயல்களுக்கு அவசியமில்லை என்று பேசியும் மனநிறைவெய்தி முடிந்தார்களோ இல்லையோ, மாபெரும் உலகப் புயல்களுக்கான ஒரு புதிய தோற்றுவாய் ஆசியாவிலே உதித்தெழுந்தது. ருஷ்யப் புரட்சியைத் தொடர்ந்து துருக்கியிலும் பாரசீகத்திலும் சீனாவிலும் புரட்சிகள் மூண்டன.[6] புயல்களுக்கும் ஐரோப்பாவில் அவற்றின் ''எதிரொலிகளுக்கும்'' உரிய ஒரு சகாப்தத்தில்தான் இப்பொழுது

நாம் வாழ்ந்து வருகிறோம். மாபெரும் சீனக் குடியரசுக்கு—"நாகரிகமடைந்த" பல்வேறு கழுதைப்புலிகளும் பற்களை நறநறவென்று கடித்துக் கொண்டு இன்று இக்குடியரசை எதிர்த்துக் கிளம்புகின்றன—ஏற்படும் கதி எதுவாயினும், உலகில் எந்த சக்தியாலும் ஆசியாவில் பழைய பண்ணையடிமை நிலையைத் திரும்பவும் நாட்டவோ, ஆசியநிலை, அரை-ஆசிய நிலை நாடுகளில் பெருந்திரளான மக்களின் வீரம் செறிந்த ஜனநாயகத்தை அழித்தொழிக்கவோ முடியப் போவதில்லை.

வெகுஜனப் போராட்டத்துக்குத் தயார் செய்வதற்கும் அதை வளர்த்துச் செல்வதற்குமான நிலைமைகளில் கவனம் செலுத்தாமலிருந்த சிலர், ஐரோப்பாவில் முதலாளித்துவத்துக்கு எதிரான தீர்மானகரமான போராட்டம் நீண்ட காலத்துக்குத் தள்ளிப்போடப்பட்டு வந்ததினுல் நம்பிக்கையிழந்த நிலைக்கும் அராஜகவாதத்துக்கும் இழுத்துச் செல்லப் பட்டுவிட்டனர். அராஜகவாத நம்பிக்கைவறட்சி எவ்வளவு கிட்டப்பார்வையானது, நெஞ்சு உரமில்லாதது என்பதை இப்பொழுது நாம் காண முடியும்.

எண்பது கோடி மக்கள் தொகை கொண்ட ஆசியா இதே ஐரோப்பிய இலட்சியங்களுக்கான போராட்டத்தினுள் ஈர்க்கப்பட்டிருக்கும் இவ்வுண்மை நமக்கு நன்னம்பிக்கையை ஊட்டி ஆர்வமளித்திட வேண்டும், நம்பிக்கை வறட்சியை யல்ல.

ஆசியப் புரட்சிகள் மிதவாதத்தின் திராணியின்மையையும் இழிநிலையையும், ஜனநாயகத் துடிப்புள்ள வெகுஜனங்களுடைய தானியங்கு நிலையின் சிறப்பான முக்கியத்துவத்தையும், பாட்டாளி வர்க்கத்துக்கும் எல்லா வகையான முதலாளித்துவ வர்க்கத்தாருக்கும் இடையிலுள்ள எடுப்பான பிரிவினைக் கோட்டையும் திரும்பவும் நமக்குக் காட்டியுள்ளன. ஐரோப்பா, ஆசியா இவை இரண்டின் அனுபவத்துக்குப் பின், வர்க்கத்தன்மையற்ற அரசியல் குறித்தும் வர்க்கத் தன்மையற்ற சோஷலிஸம் குறித்தும் பேசுகிறவர் யாராயிருந்தாலும் அவர் கூண்டிலே வைத்து ஆஸ்திரேலியக் கங்காரு பக்கத்தில் கண்காட்சியில் காட்டப்படவேண்டியவரே ஆவார்.

*ஆசியாவை அடுத்து ஐரோப்பாவும் — ஆசிய வழியில் இல்லாவிட்டாலுங்கூட—அதிரத் தொடங்கிவிட்டது. 1872-1904ம் ஆண்டுகளின் ''அமைதிக்'' காலக்கூறு இனி ஒரு போதும் திரும்ப வழியின்றிக் கடந்துசென்றுவிட்டது. உயர்ந்து விட்ட வாழ்க்கைச் செலவும் டிரஸ்டுகளின் கொடுங் கோன்மையும் என்றுமே கண்டிராத அளவுக்குப் பொருளாதாரப் போராட்டத்தைக் கூராக்கி வருகின்றன. இந்த நிலைமை, மிதவாதத்தால் மிக அதிகமாய்க் கெடுக்கப்பட்டிருக்கும் பிரிட்டிஷ் தொழிலாளர்களையுங்கூட இயக்கத்தில் செயல் பட வைத்திருக்கிறது. ''வைரம் பாய்ந்த'' பிற்போக்குவாத முதலாளித்துவ-நிலப்பிரபுத்துவ நாடான ஜெர்மனியிலுங் கூட அரசியல் நெருக்கடி சூடேறி வருவதைக் காண்கிறோம். ஜன்னிவேகங் கொண்ட படைக்கலப் பெருக்கமும், ஏகாதிபத்தியக் கொள்கையும் தற்கால ஐரோப்பாவை வெடிமருந்துப் பீப்பாயையே அதிகம் ஒத்த ''சமூக அமைதிச்'' சகாப்தமாக மாற்றி வருகின்றன. அதே நேரத்தில் எல்லா முதலாளித்துவக் கட்சிகளும் அழுகிக் கெடும் நிகழ்ச்சிப் போக்கும் பாட்டாளி வர்க்கத்தின் முதிர்ச்சியும் திடமாக முன்னேறிவருகின்றன.*

*மார்க்ஸியம் தோன்றியது முதல் உலக வரலாற்றின் மூன்று பெரும் காலக்கூறுகளில் ஒவ்வொன்றும் மார்க்ஸியத்துக்குப் புதிய உறுதிப்பாடும் புதிய வெற்றிகளும் கிட்டச் செய்திருக்கிறது. ஆனால் பாட்டாளி வர்க்கத்தின் தத்துவம் என்ற முறையில் மார்க்ஸியத்துக்கு வரவிருக்கும் வரலாற்றின் காலக்கூறினில் இன்னும் பெரிய வெற்றி கிட்டப் போகிறது.*

பிராவ்தா, *இதழ் 50,*
*1913 மார்ச் 1*
*கையொப்பம்:* வி.இ.

நூல் திரட்டு,
*தொகுதி 23,*
*பக்கங்கள் 1-4*

# மார்க்ஸியத்தின் மூன்று தோற்றுவாய்களும் மூன்று உள்ளடக்கக் கூறுகளும்[7]

மார்க்ஸின் போதனை, நாகரிக உலகெங்கிலும் அதிகாரத் தரப்பினதும், மிதவாதிகளதும் ஆகிய இரு வகையான முதலாளித்துவ விஞ்ஞானத்திடமிருந்தும் அளவற்ற பகைமையையும் வெறுப்பையும் கிளப்பிவிடுகிறது. மார்க்ஸியம் ஒரு வகையான ''நச்சுத்தன்மை கொண்ட குறுங்குழுவாதம்'' என்று அது கருதுகிறது. அதனிடமிருந்து வேறு எந்த விதமான போக்கையும் எதிர்பார்க்க முடியாதுதான். ஏனெனில், வர்க்கப் போராட்டத்தின் அடிப்படையில் அமைந்துள்ள ஒரு சமுதாயத்தில் ''ஒருசார்பற்ற'' சமுதாய விஞ்ஞானம் எதுவும் இருக்க முடியாது. அதிகாரத் தரப்பைச் சேர்ந்த விஞ்ஞானம் அனைத்தும், மிதவாதிகளது விஞ்ஞானம் அனைத்தும் ஏதாவதொரு விதத்தில் கூலி அடிமை முறையை ஆதரிக்கிறது. மார்க்ஸியமோ கூலி அடிமைமுறையை ஈவிரக்கமின்றி எதிர்த்துப் போர்ப் பிரகடனம் செய்துள்ளது. மூலதனத்துக்குக் கிடைக்கும் இலாபத்தைக் குறைப்பதன் மூலம் தொழிலாளர்களின் கூலியை உயர்த்தலாமா என்ற பிரச்சினையில் முதலாளிகள் ஒருசார்பற்றவர்களாய் இருப்பார்களென எதிர்பார்ப்பது எப்படி அசட்டுத்தனமாகுமோ, ஏமாளித்தனமாகுமோ, அப்படித்தான் கூலி அடிமை முறைச் சமுதாயத்தில் விஞ்ஞானம் ஒருசார்பற்றதாய் இருக்குமென எதிர்பார்ப்பதும் அசட்டுத்தனமாகும், ஏமாளித்தனமாகும்.

இது மட்டுமல்ல. தத்துவஞானத்தின் வரலாறும் சரி, சமுதாய விஞ்ஞானத்தின் வரலாறும் சரி, மார்க்ஸியத்தில் ''குறுங்குழுவாதம்'' போன்றதெதுவும் கிடையாது என்ப

யைத் தெள்ளத் தெளிவாகக் காட்டுகின்றன. அதாவது, அது ஒரு இறுகிப்போன வரட்டுத் தத்துவமல்ல; உலக நாகரிக வளர்ச்சியின் ராஜபாட்டையின் வழியே வராமல் அதனின்று விலகி வேறொரு வழியே முளைத்த போதனை அல்ல. மாறாக, மனிதகுலத்தின் முன்னணிச் சிந்தனையாளர்கள் ஏற்கெனவே எழுப்பியிருந்த கேள்விகளுக்கு மார்க்ஸ் விடைகள் தந்தார் என்பதில்தான் குறிப்பாக அவருடைய மேதாவிலாசம் அடங்கியுள்ளது. தத்துவஞானம், அரசியல் பொருளாதாரம், சோஷலிஸம் ஆகியவற்றின் தலைசிறந்த பிரதிநிதிகளுடைய போதனைகளின் நேரடியான, உடனடியான தொடர்ச்சியாகத் தான் மார்க்ஸின் போதனை எழுந்தது.

மார்க்ஸின் போதனை மெய்யானது, பிழையற்றது; அதனால்தான் அது எல்லாம் வல்ல தன்மை பெற்றிருக்கிறது. அது முழுமையான, உள்ளிணக்கம் கொண்ட போதனை. ஒரு ஒன்றிணைந்த உலகப் பார்வையை அது மக்களுக்கு அளிக்கிறது. எந்த வடிவத்திலுமமைந்த மூடநம்பிக்கைகளோ, பிற்போக்கோ, முதளாளித்துவ ஒடுக்குமுறைக்கு ஆதரவோ இந்த உலகப் பார்வையுடன் ஒத்துவர முடியாது. ஜெர்மானியத் தத்துவஞானம், ஆங்கிலேய அரசியல் பொருளாதாரம், பிரெஞ்சு சோஷலிஸம் என்ற வடிவத்தில் 19ம் நூற்றாண்டில் மனிதகுலம் படைத்துத் தந்த தலைசிறந்த படைப்புகளின் உரிமை பெற்ற வாரிசுதான் மார்க்ஸியம்.

இவை மார்க்ஸியத்தின் மூன்று தோற்றுவாய்களாகும், மூன்று உள்ளடக்கக் கூறுகளாகும். இவற்றைச் சுருக்கமாகக் கவனிப்போம்.

1

பொருள்முதல்வாதம்தான் மார்க்ஸியத்தின் தத்துவஞானமாகும். பொருள்முதல்வாதம் ஒன்றுதான் முரணற்ற தத்துவஞானமாகும், இயற்கை விஞ்ஞானங்களுடைய எல்லாப் போதனைகளுக்கும் ஏற்புடையதாகும், மூடநம்பிக்கைகளுக்கும் பகட்டுக்கும் பசப்புக்கும் இன்ன பிறவற்றுக்கும் தீராப்

பகையாகும் என்பது ஐரோப்பாவின் நவீனகால வரலாறு பூராவிலும், இன்னும் முக்கியமாய் மத்திய காலக் குப்பைக் கூளங்களை எதிர்த்தும் நிறுவனங்களிலும் கருத்துக்களிலும் ஆட்சி புரிந்த நிலப்பிரபுத்துவத்தை எதிர்த்தும் நடைபெற்ற முடிவான கடும் போரின் களனுயிருந்த பிரெஞ்சு நாட்டில் 18ம் நூற்றுண்டின் இறுதியிலும் தெளிவாக மெய்ப்பிக்கப் பட்டது. ஆகவே பொருள்முதல்வாதத்தை "மறுப்பதற்கும்", பலவீனப்படுத்துவதற்கும், பழிப்பதற்கும், ஜனநாயகத்தின் எதிரிகள் முழுமூச்சுடன் முயன்று பார்த்தார்கள். தத்துவஞானக் கருத்துமுதல்வாதத்தின் பல வகை வடிவங்களை இவர்கள் ஆதரித்தனர். இவ்வகைக் கருத்துமுதல் வாதம் ஏதாவது ஒரு வழியில் எப்பொழுதும் மதத்தைப் பாதுகாக்கவோ ஆதரிக்கவோதான் செய்கிறது.

மார்க்ஸும் எங்கெல்ஸும் தத்துவஞானப் பொருள்முதல் வாதத்தை மிகுந்த மனத்திண்மையோடு ஆதரித்துப் பாதுகாத்தனர். இந்த அடிப்படையிலிருந்து விலகிச் செல்லும் ஒவ்வொரு திரிபும் மிகவும் தவருயிருப்பதை அவர்கள் அடிக்கடி விளக்கி வந்தார்கள். எங்கெல்ஸ் எழுதிய **லுத்விக் ஃபாயர்பாக், டூரிங்குக்கு மறுப்பு**[8] என்கிற நூல்களில் அவர்களுடைய கருத்துக்கள் மிகத் தெளிவாகவும் முழுமையாகவும் விரித்துரைக்கப்பட்டுள்ளன. **கம்யூனிஸ்டு அறிக்கை** என்கிற நூலைப் போலவே இவ்விரண்டு நூல்களும் வர்க்க உணர்வு பெற்ற ஒவ்வொரு தொழிலாளிக்கும் அவசியமான கைப் புத்தகங்களாகும்.

18ம் நூற்றுண்டின் பொருள்முதல்வாதத்துடன் மார்க்ஸ் நின்றுவிடவில்லை. அவர் தத்துவஞானத்தை முன்னேறச் செய்தார். மூலச்சிறப்புள்ள ஜெர்மன் தத்துவஞானம் திரட்டிய செல்வங்களைக் கொண்டு, குறிப்பாக ஹெகலின் தத்துவ முறை—இதிலிருந்தே ஃபாயர்பாகின் பொருள்முதல்வாதம் தோன்றியது—திரட்டிய செல்வங்களைக் கொண்டு, அவர் பொருள்முதல்வாதத்தை வளப்படுத்தினர். இந்தச் செல்வங்களில் பிரதானமாக விளங்குவது **இயக்கவியல்தான்**. இயக்கவியல் என்பது மிகமிக முழுமையான, ஆழமான, ஒருதலைப்பட்சமில்லாத வடிவத்தில் வளர்ச்சியைப் பற்றி

விளக்கி விவரிக்கும் போதனையாகும்; நிரந்தரமாக வளர்ச்சியுற்ற வண்ணமுள்ள பருப்பொருளை நமக்குப் பிரதிபலித்துக் காட்டும் மனித அறிவின் சார்புநிலையை வலியுறுத்தும் போதனையாகும். ரேடியம், மின்னணுக்கள், தனிமங்களில் ஒன்று மற்றொன்ருக மாறுவது—இவை போன்ற இயற்கை விஞ்ஞானத்தின் மிக நவீன கண்டுபிடிப்புகளெல்லாம் மார்க்ஸின் இயக்கவியல் பொருள்முதல்வாதமே சரியானது என்று வியக்கத்தக்க முறையில் உறுதிப்படுத்தியுள்ளன. அழுகிப்போன பழைய கருத்துமுதல்வாதத்தைப் பற்றிய ''புதிய'' மறு வியாக்கியானங்களைக் கொண்டு முதலாளித்துவத் தத்துவ ஞானிகள் தந்த போதனைகளால் இதைத் தடுக்க முடியவில்லை.

தத்துவஞானப் பொருள்முதல்வாதத்தை மார்க்ஸ் ஆழமாக்கி வளர்த்து நிறைவுபெறச் செய்தார். இயற்கை பற்றிய அதன் ஞானத்தை மனித சமுதாயம் பற்றிய அறிவாகவும் விரிவாக்கிஞர். மார்க்ஸின் வரலாற்றுத் துறைப் பொருள் முதல்வாதம் விஞ்ஞானச் சிந்தனைக்குக் கிடைத்த மாபெரும் வெற்றியாக அமைந்தது. முன்பெல்லாம் வரலாற்றையும் அரசியலையும் பற்றிய கருத்துக்களில் குழப்பமும் தான்தோன்றித்தனமும் ஆதிக்கம் செலுத்தி வந்தன. இப்போது அவை போய், வியப்பூட்டும் அளவுக்கு ஒருமித்த முழுமையும் உள்ளிணக்கமும் கொண்ட ஒரு விஞ்ஞானத் தத்துவம் வந்துவிட்டது. வரலாற்றுத் துறைப் பொருள்முதல்வாதம் என்ற இந்தத் தத்துவம் காட்டுவதென்ன? உற்பத்திச் சக்திகளின் வளர்ச்சியின் விளைவாக ஒரு சமுதாய அமைப்பு முறையிலிருந்து அதைவிட உயர்தரமான இன்னொரு சமுதாய அமைப்பு முறை எப்படி வளர்கிறது என்பதை—உதாரணமாக, நிலப்பிரபுத்துவச் சமுதாய அமைப்பு முறையிலிருந்து முதலாளித்துவச் சமுதாய அமைப்பு முறை எப்படி வளர்கிறது என்பதை—அது காட்டுகிறது.

இயற்கை என்பது—அதாவது வளர்ச்சி பெற்றுக் கொண்டேயிருக்கும் பருப்பொருள் என்பது—மனிதனுக்கு அப்பால் சுயமாக இருந்து வருகிறது. இந்த இயற்கையை மனித அறிவு பிரதிபலிக்கிறது. அதே போலத்தான் மனிதனின் சமுதாய

அறிவு எனப்படுவதும் (அதாவது தத்துவஞானம், மதம், அரசியல் முதலானவை சம்பந்தமாக மனிதன் கொண்டிருக்கும் பல்வேறு கருத்துக்களும் போதனைகளும்) சமுதாயத்தின் பொருளாதார அமைப்பு முறையைப் பிரதிபலிக்கிறது. அரசியல் நிறுவனங்கள் என்பவையெல்லாம் பொருளாதார அடித்தளத்தின் மீது நிறுவப்பட்ட மேல்கட்டுமானமேயாகும். உதாரணமாக, நவீன ஐரோப்பிய அரசுகளின் பல்வேறு அரசியல் வடிவங்கள் எல்லாம் பாட்டாளி வர்க்கத்தின்மேல் முதலாளி வர்க்கம் செலுத்தி வரும் ஆதிக்கத்தைப் பலப்படுத்த எப்படி பயன்படுகின்றன என்பதை நாம் பார்க்கிறோம்.

மார்க்ஸின் தத்துவஞானம் முழுநிறைவு பெற்ற தத்துவஞானப் பொருள்முதல்வாதமாகும். இந்தப் பொருள்முதல்வாதம் மனிதகுலத்திற்கு, குறிப்பாகத் தொழிலாளி வர்க்கத்துக்கு, மகத்தான அறிவுச் சாதனங்களை வழங்கியிருக்கிறது.

## 2

பொருளாதார அமைப்பு முறை என்ற அடித்தளத்தின் மீதுதான் அரசியல் மேல்கட்டுமானம் கட்டப்படுகிறது என்று தெளிந்து ஏற்றுக் கொண்டவுடன், மார்க்ஸ் தமது பெரும்பாலான கவனத்தை இந்தப் பொருளாதார அமைப்பு முறையின்மீது செலுத்தினார். மார்க்ஸின் பிரதான நூலாகிய மூலதனம் நவீன காலத்திய—அதாவது, முதலாளித்துவ—சமுதாயத்தின் பொருளாதார அமைப்பு முறையை ஆராயும் நூலாகும்.

மார்க்ஸுக்கு முற்பட்ட மூலச்சிறப்புள்ள அரசியல் பொருளாதாரம் முதலாளித்துவ நாடுகள் எல்லாவற்றிலும் அதிக வளர்ச்சி பெற்றிருந்த இங்கிலாந்திலே உருவாயிற்று. ஆதாம் ஸ்மித்தும் டேவிட் ரிக்கார்டோவும் பொருளாதார அமைப்பு முறையை ஆராய்ந்து மதிப்பு பற்றிய உழைப்புத் தத்துவத்துக்கு அஸ்திவாரமிட்டார்கள். அவர்களுடைய பணியை மார்க்ஸ் தொடர்ந்து நடத்தினார். இந்தத் தத்துவத்தை

அவர் திட்டமாக நிருபித்து முரணற்ற வகையில் விவரித்தார். ஒவ்வொரு பண்டத்தின் மதிப்பும் அதை உற்பத்தி செய்வதில் செலவழிக்கப்பட்ட சமுதாய ரீதியில் அவசியமான உழைப்பு நேரத்தின் அளவைக் கொண்டுதான் நிர்ணயிக்கப்படுகிறது என்று அவர் விளக்கிக் காட்டினுர்.

முதலாளித்துவப் பொருளாதாரவாதிகள், பொருட்கள் இடையிலான (ஒரு பண்டம் மற்ருென்றுடன் பரிமாற்றம் செய்து கொள்ளப்படும்) உறவு என்பதாக விவரித்ததில் மனிதர்கள் இடையிலான உறவு நிலவுவதை மார்க்ஸ் புலப்படுத்திஞர். பண்டப் பரிமாற்றம் தனித்தனியான உற்பத்தியாளர்களிடையே சந்தை மூலமாக ஏற்படும் பிணைப்பைக் காட்டுகிறது. பணம் என்பது இந்தப் பிணைப்பு தனிப்பட்ட உற்பத்தியாளர்களின் பொருளாதார வாழ்க்கை முழுவதையும் பிரிக்க முடியாதபடி முழுமொத்தமாக இணைத்து மேலும் மேலும் நெருக்கமாவதைக் குறிக்கிறது. மூலதனம் என்பது இந்தப் பிணைப்பு மேலும் வளர்ச்சியுறுவதைக் குறிக்கிறது; அதாவது மனிதனின் உழைப்புச் சக்தியே ஒரு பரிமாற்றப் பண்டமாகிவிடுவதைக் குறிக்கிறது. கூலி பெறும் உழைப்பாளி நிலம், ஆலைகள், உழைப்புக் கருவிகள் ஆகியவற்றின் சொந்தக்காரர்களிடம் தனது உழைப்புச் சக்தியை விற்கிருன். தொழிலாளி வேலை நாளின் ஒரு பகுதியைத் தன்னையும் தனது குடும்பத்தையும் பராமரித்துக் கொள்வதற்கு வேண்டிய செலவுக்காக (அதாவது, கூலிக்காக) உழைப்பதில் கழிக்கிருன். மறு பகுதியில் ஊதியமின்றியே உழைத்து முதலாளிக்கு மிகுதி மதிப்பை உண்டாக்கித் தருகிருன். இந்த மிகுதி மதிப்புத்தான் இலாபத்துக்குத் தோற்றுவாய், அதுதான் முதலாளி வர்க்கத்தின் செல்வத்துக்குத் தோற்றுவாய்.

மிகுதி மதிப்பைப் பற்றிய போதனைதான் மார்க்ஸின் பொருளாதாரத் தத்துவத்துக்கு மூலக்கல் ஆகும்.

தொழிலாளியின் உழைப்பால் உண்டாக்கப்பட்ட மூலதனம் சிறு உற்பத்தியாளர்களை அழித்து வேலையில்லாதோர் பட்டாளத்தைப் படைப்பதின் மூலமாகத் தொழிலாளியை நெருக்குகிறது. தொழில் துறையில், பெருமளவான உற்பத்தி

பெறுகிற வெற்றி பளிச்சென்று தெரிகிறது. ஆனல், இதே நிகழ்ச்சியை விவசாயத் துறையிலும் நாம் பார்க்க முடியும். பெருமளவான முதலாளித்துவ விவசாயத்தின் உயர்நிலை அதிகமாகிக் கொண்டே போகிறது; விவசாயத்தில் இயந் திரங்களை உபயோகிப்பதும் அதிகரிக்கிறது; பண மூலதனத் தின் சுருக்குக் கயிற்றில் விவசாயப் பொருளாதாரம் சிக்கிக் கொள்கிறது; அது தனது பிற்பட்ட தொழில்நுட்பத்தின் சுமையால் அழுத்தப்பட்டு அழிகிறது. விவசாயத் துறையில் சிற்றளவான உற்பத்தியின் சீர்குலைவுக்குரிய வடிவங்கள் வேருயிருப்பினும், இச்சீர்குலைவு ஏற்படுவது மறுக்கமுடியாத உண்மையாகும்.

மூலதனம் சிற்றளவான உற்பத்தியை ஒழிப்பதன் மூலம், உழைப்பின் உற்பத்தித்திறன் அதிகரிப்பதற்கும் பெரிய முத லாளிகளின் கூட்டுகளுக்கு ஏகபோக நிலை படைப்பதற்கும் வகை செய்கிறது. உற்பத்தியே மேலும் மேலும் சமுதாயத் தன்மை பெறுகிறது: ஒரு முறையான பொருளாதார ஒழுங் கமைப்பிலே இலட்சக் கணக்கான, கோடிக் கணக்கான தொழிலாளர் பிணைக்கப்பட்டு விடுகின்றனர். ஆனல் அந்தக் கூட்டு உழைப்பின் உற்பத்திப் பொருளை விரல்விட்டு எண் ணத்தக்க ஒரு சில முதலாளிகள் உடைமையாக்கிக் கொள் கிருர்கள். உற்பத்தியில் அராஜகம் வளர்கிறது; அதே போல் நெருக்கடிகளும் வளர்கின்றன; சந்தைகளைப் பிடித்துக் கொள்வதற்கான ஆவேச வேட்டையும் அதிகமாகிறது; திரளான மக்களின் வாழ்க்கைக் காப்புறுதியின்மையும் அதிகரிக்கிறது.

தொழிலாளர்கள் மூலதனத்தை அண்டிப் பிழைக்க வேண்டிய நிலையை முதலாளித்துவ முறை தீவிரப்படுத்தும் அதே சமயத்தில் ஒன்றுதிரண்ட உழைப்பு எனும் மாபெரும் பலத்தையும் பிறப்பித்துவிடுகிறது.

பரிமாற்றப் பண்டப் பொருளாதாரத்தின் ஆரம்ப வித்துக்களிலிருந்து, சாதாரணப் பரிமாற்றத்திலிருந்து தொடங்கி, மிக உயர்ந்த வடிவங்கள் வரையில், பெருமள வான உற்பத்தி வரையில் முதலாளித்துவத்தின் வளர்ச்சியை மார்க்ஸ் ஆராய்ந்து காட்டினர்.

பழையவையும் புதியவையும் அடங்கலான எல்லா முதலாளித்துவ நாடுகளின் அனுபவமும் இந்த மார்க்ஸியத் தத்துவம் பிழையற்றதாகும் என்பதை ஆண்டுதோறும் மேலும் மேலும் கூடுதலான தொழிலாளர்களுக்குத் தெளிவாக நிரூபித்துக் காட்டி வருகிறது.

உலகெங்கும் முதலாளித்துவம் வெற்றி பெற்றுவிட்டது. ஆனால் இந்த வெற்றி மூலதனத்தின்மீது உழைப்பு காணப் போகும் வெற்றியின் முன்னறிவிப்பே ஆகும்.

### 3

நிலப்பிரபுத்துவ அமைப்பு முறை வீழ்த்தப்பட்டு ''சுதந்திரமான'' முதலாளித்துவச் சமுதாயம் இப்பூவுலகில் தோன்றிய பொழுது இந்தச் சுதந்திரம் உழைப்பாளிகளை ஒடுக்கவும் சுரண்டவும் அமைந்த புதியதோர் அமைப்பு முறையையே குறித்தது என்பது உடனே தெளிவாக விளங்கலாயிற்று. இந்த ஒடுக்குமுறையின் பிரதிபலிப்பாகவும் இதற்கான கண்டனமாகவும் பல்வேறு சோஷலிஸப் போதனைகள் உடனே தலைதூக்கத் தொடங்கின. ஆனால் ஆரம்பகாலத்திய சோஷலிஸம் கற்பனை சோஷலிஸமாகத்தான் இருந்தது. அது முதலாளித்துவச் சமுதாயத்தை விமர்சித்தது, கண்டித்தது, சபித்தது; அந்தச் சமுதாயத்தை ஒழிக்க வேண்டும் என்று கனாக் கண்டது; அதைவிட மேலான ஓர் அமைப்பு முறையைப் பற்றி ஆகாயக் கோட்டை கட்டி வந்தது; சுரண்டுவது ஒழுக்கக்கேடான செயல் என்று பணக்காரர்களுக்கு உணர்த்த முயற்சித்தது.

ஆனால் கற்பனை சோஷலிஸத்தினால் விடுதலைக்கான மெய்யான வழியைக் காட்ட முடியவில்லை. முதலாளித்துவத்தில் நிலவும் கூலி அடிமை முறையின் சாராம்சத்தை அதனால் விளக்க முடியவில்லை. முதலாளித்துவ முறையின் வளர்ச்சி பற்றிய விதிகளை அதனால் கண்டுபிடிக்க முடியவில்லை. ஒரு புதிய சமுதாயத்தின் படைப்பாளியாக அமைய வல்ல சமுதாயச் சக்தியை அதனால் சுட்டிக்காட்டவும் முடியவில்லை.

இதற்கிடையில், நிலப்பிரபுத்துவத்தின் வீழ்ச்சியையும் பண்ணை அடிமை முறையின் வீழ்ச்சியையும் தொடர்ந்து ஐரோப்பா முழுவதிலும், குறிப்பாக பிரான்ஸில், ஏற்பட்ட புயல் போன்ற புரட்சிகள், **வர்க்கங்களின் போராட்டம்**தான் எல்லா வளர்ச்சிக்கும் ஆதாரமாயும் உந்து விசையாகவும் உள்ளது என்பதை மேலும் மேலும் தெளிவாக வெளிப் படுத்தின.

நிலப்பிரபுத்துவ வர்க்கத்துக்கெதிராய் அரசியல் சுதந் திர இலட்சியத்துக்கு கிடைத்த எந்த ஒரு வெற்றியும் அவ் வர்க்கத்தின் மூர்க்கமான எதிர்ப்பில்லாமல் கிடைத்துவிட வில்லை. முதலாளித்துவச் சமுதாயத்தின் பல்வேறு வர்க்கங் களிடையே ஜீவமரணப் போராட்டம் இல்லாமல் எந்த முத லாளித்துவ நாடும் ஓரளவு சுதந்திரமான, ஜனநாயக அடிப் படையில் வளர்ச்சியுற்றுவிடவில்லை.

வேறு எவருக்கும் முன்பாக மார்க்ஸுக்குத்தான் உலக வரலாறு போதிக்கும் முடிபை இதிலிருந்து கண்டறியவும், அந்த முடிபை முரணின்றிச் செயல்படுத்தவும் முடிந்தது, இதில்தான் அவருடைய மேதாவிலாசம் இருக்கிறது. **வர்க்கப் போராட்டத்தைப்** பற்றிய போதனைதான் அந்த முடி பாகும்.

நீதி, மதம், அரசியல், சமுதாயம் சம்பந்தமான எல்லா விதச் சொல்லடுக்குகளுக்கும் பிரகடனங்களுக்கும் வாக்குறுதி களுக்கும் பின்னே ஏதாவதொரு வர்க்கத்தின் **நலன்கள்** ஒளிந்து நிற்பதைக் கண்டு கொள்ள மக்கள் தெரிந்து கொள் ளாத வரையில் அரசியலில் அவர்கள் முட்டாள்தனமான ஏமாளிகளாகவும் தம்மைத் தாமே ஏமாற்றிக் கொள்வோ ராகவும் இருந்தனர், எப்போதும் இருப்பார்கள். பழைய ஏற்பாடு ஒவ்வொன்றும் எவ்வளவுதான் அநாகரிகமானதாக வும் அழுகிப்போனதாகவும் தோன்றிய போதிலும் ஏதாவது ஓர் ஆளும் வர்க்கத்தின் சக்திகளைக் கொண்டு அது நிலை நிறுத்தப்பட்டு வருகிறது. சீர்திருத்தங்கள், மேம்பாடுகள் ஆகியவற்றின் ஆதரவாளர்கள் இதை உணராத வரையில் பழைய அமைப்பு முறையின் பாதுகாவலர்கள் அவர்களை என்றென்றும் முட்டாள்களாக்கிக் கொண்டேயிருப்பார்கள்.

இந்த வர்க்கங்களின் எதிர்ப்பைத் தகர்த்து ஒழிப்பதற்கு ஒரே ஒரு வழிதான் உண்டு. அது என்ன? பழைமையைத் துடைத்தெறியவும் புதுமையைப் படைக்கவும் திறன் பெற்ற வையும் சமுதாயத்தில் தங்களுக்குள்ள நிலையின் காரணமாக அப்படிப் படைத்துத் தீரவேண்டிய கட்டாயத்திலிருக்கிற வையுமான சக்திகளை நம்மைச் சூழ்ந்துள்ள இதே சமுதாயத் திற்குள்ளேயே நாம் கண்டுபிடித்து, அந்தச் சக்திகளுக்கு அறிவொளியூட்டிப் போராட்டத்திற்கு ஒழுங்கமைத்துத் திரட்ட வேண்டும். இது ஒன்றேதான் வழி.

மார்க்ஸின் தத்துவஞானப் பொருள்முதல்வாதம் ஒன்று தான் ஒடுக்கப்பட்ட வர்க்கங்களெல்லாம் அதுவரை உழன்று கொண்டிருந்தஆன்மீகஅடிமைத்தனத்திலிருந்து வெளியேறும் வழியைப் பாட்டாளி வர்க்கத்திற்குக் காட்டியிருக்கிறது. மார்க்ஸின் பொருளாதாரத் தத்துவம் ஒன்றுதான் பொது வான முதலாளித்துவ அமைப்பு முறையில் பாட்டாளி வர்க் கத்தின் உண்மை நிலையை விளக்கியுள்ளது.

அமெரிக்காவிலிருந்து ஜப்பான் வரை, ஸ்வீடனிலிருந்து தென்னாப்பிரிக்கா வரை, உலகமெங்கும் பாட்டாளி வர்க்கத் தின் சுயேச்சையான நிறுவனங்கள் பெருகிக் கொண்டே யிருக்கின்றன. தனது வர்க்கப் போராட்டத்தை நடத்திச் செல்வதன் வாயிலாகப் பாட்டாளி வர்க்கம் அறிவொளியும் கல்வியும் பெற்று வருகிறது; முதலாளித்துவச் சமுதாயத்திற் குரிய சார்புக் கருத்துகளினின்று தன்னை விடுவித்துக் கொண்டு வருகிறது; தன் அணிகளை நெருக்கமாகத் திரட்டிச் சேர்த்து வருகிறது; தனது வெற்றிகளின் வீச்சை அளந்தறியக் கற்றுக் கொண்டு வருகிறது; தன் சக்திகளை எஃகு போல் திடப்படுத்தி வருகிறது; தடை செய்ய முடியாதபடி வளர்ந்து வருகிறது.

| | |
|---|---|
| புரோஸ்வெஷேனியே, இதழ் *3*, *1913* மார்ச் மாதத்தில் வெளிவந்தது | நூல் திரட்டு, தொகுதி *23*, பக்கங்கள் *40-48* |

கையொப்பம்: வி.இ.

# மார்க்ஸியமும் திருத்தல்வாதமும்

வடிவகணித வெளிப்படை உண்மைகள் மனித நலன்களைப் பாதிக்குமாயின் அவற்றை மறுக்க நிச்சயம் முயற்சி செய்வார்களெனக் கூறும் பிரபல முதுமொழி ஒன்று உண்டு. இறையியலின் பழங்காலத் தப்பெண்ணங்களுக்கு முரணான இயற்கை-வரலாற்றுத் தத்துவங்களுக்கு வெறித்தனமான எதிர்ப்பு காட்டப்பட்டது, இன்னமும் காட்டப்பட்டு வருகிறது. ஆகவே மார்க்ஸியத் தத்துவம்—தற்காலச் சமுதாயத்தின் மிகவும் முன்னேறிய வர்க்கத்துக்கு அறிவொளி ஊட்டி அதை ஒழுங்கமைக்க நேரடியாய் உதவுவதும், இந்த வர்க்கத்தின் முன்னுள்ள கடமைகளைச் சுட்டிக்காட்டுவதும், தற்போதுள்ள அமைப்பு (பொருளாதார வளர்ச்சி காரணமாய்) தவிர்க்க முடியாதபடி வீழ்த்தப்பட்டு அதனிடத்தில் ஒரு புதிய அமைப்பு தோன்றுமென்பதை நிரூபிப்பதுமான மார்க்ஸியத் தத்துவம்—அதன் வாழ்வு முழுதும் போராடியே ஒவ்வொரு அடியாய் முன்னேற வேண்டியிருந்துள்ளது என்பதில் வியப்பு ஏதுமில்லை.

முதலாளித்துவ விஞ்ஞானமும் தத்துவஞானமும் பற்றி கூறத் தேவையில்லை. சொத்துடைத்த வர்க்கங்களின் வளரும் தலைமுறையை மழுங்கடிக்கவும் உள்நாட்டு, வெளிநாட்டுப் பகைவர்களுக்கு எதிராய் அதைப் ''பயிற்றுவிக்கவும்'' அதிகார பூர்வமான பேராசிரியர்களால் அதிகாரவர்க்க முறையிலே இவை போதிக்கப்படுகிறவை. இந்த விஞ்ஞானம் மார்க்ஸியம் என்பதாய் ஒன்று இருப்பதைக் கேட்பதற்குக் கூட மறுக்கிறது; மார்க்ஸியம் ஏற்கெனவே பொய்யென

நிரூபிக்கப்பட்டு அழித்தொழிக்கப்பட்டுவிட்டதெனக் கூறு கிறது. சோஷலிஸத்தை மறுத்துப் பிழைப்பு தேடிக் கொள் ளும் இளம் விஞ்ஞானிகளும், காலாவதியாகிவிட்ட எல்லா வித ''அமைப்புகளின்'' மரபுகளையும் பாதுகாத்து நிற்கும் தள்ளாத கிழவர்களும் ஒருங்கே துடித்தெழுந்து மார்க்ஸைத் தாக்குகின்றனர். மார்க்ஸியத்தின் முன்னேற்றமானது, தொழிலாளி வர்க்கத்தினரிடையே அதன் கருத்துக்கள் பரவி வேரூன்றி உறுதி பெறுவதானது, மார்க்ஸியத்தின் மீதான இந்த முதலாளித்துவத் தாக்குதல்களின் வேகத்தையும் கடு மையையும் தவிர்க்க முடியாதபடி அதிகரிக்கச் செய்கிறது. அதிகாரபூர்வமான விஞ்ஞானத்தால் ''அழித்தொழிக்கப் படும்'' ஒவ்வொரு தரமும் மார்க்ஸியம் மேலும் மேலும் வலுவும் உறுதியும் உயிர்துடிப்பும் பெற்று ஓங்குகிறது.

தொழிலாளி வர்க்கப் போராட்டத்துடன் தொடர்பு கொண்டு பிரதானமாய்ப் பாட்டாளி வர்க்கத்திடம் நிலவும் தத்துவங்களிடையேகூட மார்க்ஸியம் தனது நிலையை எடுத்த யெடுப்பிலே உறுதியாய் நாட்டிக் கொண்டுவிடவில்லை. அதன் வாழ்வின் முதல் அரைநூற்றுண்டில் (1840ம் ஆண்டுகளி லிருந்து தொடங்கி) மார்க்ஸியம் அடிப்படையிலேயே தனக்கு விரோதமான தத்துவங்களுக்கு எதிராய்ப் போராட்டத்தில் ஈடுபட்டிருந்தது. நாற்பதாம் ஆண்டுகளின் ஆரம்பத்தில் மார்க்ஸும் எங்கெல்ஸும் தத்துவஞானம் பாற்பட்ட கருத்து முதல்வாதக் கண்ணோட்டத்தினராய் இருந்த தீவிர இளம் ஹெகல்வாதிகளுடன்[9] கணக்குத் தீர்த்துக் கொண்டனர். நாற்பதாம் ஆண்டுகளின் முடிவில் பொருளாதாரத் தத்துவத் துறையில் புரூதோனியத்தை[10] எதிர்த்துப் போராட்டம் ஆரம்பமாயிற்று. கொந்தளிப்பு மிக்க 1848ல் தம்மை வெளிப்படுத்திக் கொண்ட கட்சிகளையும் தத்துவங்களையும் பற்றிய விமர்சனத்தின் வாயிலாய் ஐம்பதாம் ஆண்டுகளில் இந்தப் போராட்டம் முடிவடையலாயிற்று. அறுபதாம் ஆண்டு களில் போராட்டம் பொதுத் தத்துவத் துறையிலிருந்து நேரடியான தொழிலாளர் இயக்கத்துக்கு மேலும் நெருங்கிய ஒரு துறைக்கு மாற்றப்பட்டது; அகிலத்திலிருந்து பக்கூனின் வாதம்[11] வெளியேற்றப்பட்டது. எழுபதாம் ஆண்டுகளின்

தொடக்கத்தில் சிறிது காலத்துக்குப் புரூதோன் ஆதரவாளரான முல்பெர்கரும், எழுபதாம் ஆண்டுகளின் கடைப் பகுதியில் நேர்காட்சிவாதி டூரிங்கும் ஜெர்மனியில் முக்கியமாயிருந்தனர். ஆனல் அப்பொழுதே பாட்டாளி வர்க்கத்திடம் இருவருக்கும் மிகச் சொற்ப செல்வாக்கே இருந்தது. தொழிலாளர் இயக்கத்தில் ஏனைய எல்லா சித்தாந்தங்களின் மீதும் இதற்குள்ளாகவே மார்க்ஸியம் சந்தேகத்துக்கு இடமில்லாதபடி வெற்றி கண்டு வந்தது.

தொண்ணூறும் ஆண்டுகளுக்குள் இந்த வெற்றி பிரதானமாய் நிறைவு எய்திவிட்டது. புரூதோனிய மரபுகள் வேறு எங்கேயும்விட மிக அதிகக் காலத்துக்கு நிலைத்திருந்த லத்தீனிய நாடுகளிலுங்கூட, தொழிலாளர் கட்சிகள் தமது வேலைத் திட்டங்களையும் போர்த்தந்திரங்களையும் நடைமுறையில் மார்க்ஸிய அடித்தளங்கள் மீதுதான் வகுத்துக் கொண்டன. தொழிலாளர் இயக்கத்தின் புத்துயிர் பெற்ற சர்வதேச நிறுவனம்—காலத்துக்குக் காலம் கூடிய சர்வதேசக் காங்கிரஸ்களின் வடிவில் அமைந்த இது—தொடக்கத்திலிருந்து அனேகமாய்ப் போராட்டமின்றியே மார்க்ஸியக் கருத்தோட்டத்தையே முக்கியமான எல்லாக் கூறுகளிலும் ஏற்றுக் கொண்டிருந்தது. இவ்விதம் மார்க்ஸியம் தனக்கு விரோதமான ஏறக்குறையஒருமித்ததாய் அமைந்த தத்துவங்கள் யாவற்றையும் வெளியேற்றியபின், அந்தத் தத்துவங்களில் அடங்கிய போக்குகள் பிற வழிகளில் தலைகாட்ட முற்பட்டன. போராட்டத்தின் வடிவங்களும் முகாந்திரங்களும் மாறினவேயன்றி போராட்டம் தொடர்ந்து நடைபெற்றே வந்தது. மார்க்ஸியத்தின் வாழ்வில் இரண்டாவது அரைநூற்றுண்டானது(தொண்ணூறும்ஆண்டுகளிலிருந்து)மார்க்ஸியத்துக்கு விரோதமாய் மார்க்ஸியத்தினுள்ளிருந்தே செயல்பட்ட ஒரு போக்கிற்கு எதிரான போராட்டத்துடன் தொடங்கிற்று.

ஒரு காலத்தில் சுத்தமான மார்க்ஸியவாதியாய் இருந்த பெர்ன்ஷ்டைன் பெயரை இப்போக்கு தாங்கியுள்ளது. அவர் மிக்க ஆரவாரம் எழுப்பியவர்; மார்க்ஸுக்குத் திருத்தங்கள் செய்வதின், மார்க்ஸைத் திருத்துவதின், திருத்தல்வாதத்தின் மிக முனைப்பான வெளிப்பாடாய் இருந்தவர். ருஷ்யாவி

லுங்கூட, பொருளாதாரத்தில் நாட்டின் பிற்பட்ட நிலை காரணமாகவும், பண்ணையடிமை முறையின் மீதமிச்சங்களின் சுமையால் ஒடுக்கப்பட்ட விவசாயிகள் மக்கள் தொகையில் மிகப் பெரும்பான்மையோராய் இருப்பதன் காரணமாகவும் மார்க்ஸியமல்லாத சோஷலிஸம் இயல்பாகவே வேறெங்கே யும்விட மிக நெடுங்காலத்துக்கு நிலைத்திருந்துள்ள ருஷ்யாவி லுங்கூட, தெட்டத் தெளிவாய் நம் கண்முன்னே இது திருத் தல்வாதமாய் மாறிக் கொண்டிருக்கிறது. நிலப் பிரச்சினை யிலும் (நிலம் அனைத்தையும் ஊர் ஆட்சிக்குட்படுத்தும் திட் டத்திலும்) மற்றும் வேலைத்திட்டம், போர்த்தந்திரம் பற்றிய பொதுப் பிரச்சினைகளிலும் நமது சமூக-நரோத்னிக்குகள் பழைய கருத்தமைப்பின்—இந்தப் பழைய கருத்தமைப்பு தனக்குரிய வழியில் ஒருமித்ததாய் அமைந்து அடிப்படை யிலேயே மார்க்ஸியத்துக்குப் பகைமையானதாய் இருந்தது — அழுகிப்போன, காலாவதியாகிவிட்ட மீதமிச்சங்களுக்குப் பதிலாய் மார்க்ஸுக்குத் ''திருத்தங்கள்'' செய்வதை மேலும் மேலும் கைக்கொண்டு வருகின்றனர்.

மார்க்ஸியத்துக்கு முற்பட்ட சோஷலிஸம் நொறுக்கப் பட்டுவிட்டது. முன்பு போல தனது சொந்த அடிப்படை யிலிருந்து போராடுவதற்குப் பதிலாய், இப்பொழுது அது மார்க்ஸியத்தின் பொது அடிப்படையிலே நின்று, திருத்தல் வாதமாய்ப் போராட்டத்தை நடத்தி வருகிறது. ஆகவே திருத்தல்வாதத்தின் சித்தாந்த உள்ளடக்கத்தைப் பரிசீலனை செய்வோம்.

தத்துவஞானத் துறையில் திருத்தல்வாதமானது முத லாளித்துவப் பேராசிரியர் பாணியைச் சேர்ந்த ''விஞ் ஞானத்தைப்'' பின்தொடர்ந்து சென்றது. பேராசிரியர்கள் ''கான்ட்டுக்குத் திரும்பிச் சென்றனர்''—திருத்தல்வாதம் உடனே நவீன-கான்ட்டிய வாதிகளின்[12] வாலைப் பற்றிக் கொண்டு பின்சென்றது. தத்துவஞானப் பொருள்முதல் வாதத்தை எதிர்த்துப் பாதிரிமார்கள் ஆயிரம் தரம் கூறி வந்திருக்கும் வழக்கமான வெற்றுரைகளைப் பேராசிரியர்கள் திருப்பிக் கூறினர்—உடனே திருத்தல்வாதிகளும் இளக்கார மாய் நகைத்துக் கொண்டு பொருள்முதல்வாதம் நெடுங்

காலத்துக்கு முன்பே ''தவறென நிரூபிக்கப்பட்டுவிட்டதே'' என்று (கடைசியாய் வெளிவந்த *Handbuch*கிலிருந்து சொல்லுக்குச் சொல் அப்படியே திருப்பிக் கூறி) முணுமுணுத்தனர். பேராசிரியர்கள் ஹெகலைச் ''செத்த நாய்'' என ஒதுக்கித் தள்ளிவிட்டு, அதேபோதில் ஹெகலினுடையதை விட ஆயிரம் மடங்கு அற்பமான, படுமட்டமான கருத்து முதல்வாதத்தை உபதேசம் செய்தபடியே மிக அலட்சியமாய் இயக்கவியலிடமிருந்து முகத்தைத் திருப்பிக் கொண்டனர்—உடனே திருத்தல்வாதிகள் அவர்கள் பின்னால் ஓடி, ''தந்திரமான'' (மற்றும் புரட்சிகரமான) இயக்கவியலைக் கைவிட்டு அதற்குப் பதில் ''எளிய'' (மற்றும் அமைதியான) ''பரிணாமத்தைக்'' கைக் கொண்டு, விஞ்ஞானத்தைத் தத்துவஞான வழியில் கொச்சையாக்கி இழிவுபடுத்தும் சகதிக் குழியிலே சிக்கித்தவித்தனர். பேராசிரியர்கள் தமது கருத்துமுதல்வாத, ''விமர்சன'' அமைப்புகளை ஆதிக்கத்திலிருந்த மத்திய காலத்திய ''தத்துவஞானத்துக்கு'' (அதாவது இறையியலுக்கு) உகந்தவாறு சரிசெய்து கொள்வதின் வழியே ஆட்சியாளர்களிடமிருந்து தமது சம்பளங்களைச் சம்பாதித்துக் கொண்டனர்—திருத்தல்வாதிகளும் உடனே அவர்கள் பக்கம் சேர்ந்து கொண்டனர், தற்கால அரசு சம்பந்தமாய் அல்லாமல் முன்னேறிய வர்க்கத்தின் கட்சி சம்பந்தமாய் மதத்தை அவரவரது ''தனிப்பட்ட விவகாரமாக்க'' முயன்றனர்.

இவ்வாறு மார்க்ஸைத் திருத்தும் ''திருத்தங்களுக்கு'' வர்க்க முறையில் மெய்யான பொருள் என்னவென்பது கூறாமலே விளங்கும். சர்வதேச சமூக-ஜனநாயக இயக்கத்தில் பிளெஹானவ் ஒருவர்தான் திருத்தல்வாதிகளுடைய படுமோசமான இந்த வெற்றுரைகளை முரணற்ற இயக்கவியல் பொருள் முதல்வாதக் கண்ணோட்டத்திலிருந்து விமர்சித்துக் கண்டித்த மார்க்ஸியவாதி என்பதை மட்டும் இங்குக் குறிப்பிடுவோம். பிளெஹானவின் போர்த்தந்திரச் சந்தர்ப்பவாதத்தை விமர்சிக்கிறதாய் வேஷம் போட்டுக்கொண்டு பழைய பிற்போக்குத் தத்துவஞானக் குப்பைக்கூளத்தைக் கள்ளத்தனமாய் உள்ளே கொண்டுவர மிகவும் தவறான முயற்சிகள் செய்யப்

படும் இத்தருணத்தில் இதை மேலும் அழுத்தந்திருத்தமாய் வலியுறுத்துவது அவசியமாகும்.*

அரசியல் பொருளாதாரத்துக்கு வருவோமாயின் இத் துறையில் திருத்தல்வாதிகளுடைய ''திருத்தங்கள்'' மேலும் அதிக விரிவாகவும் நுட்ப விவரங்கள் வழிப்பட்டனவாயும் இருந்ததை முதற்கண் குறிப்பிடுதல் வேண்டும். ''பொருளாதார வளர்ச்சி பற்றிய புதிய விவரங்களைக்'' கொண்டும் பொது மக்களை வயப்படுத்த முயற்சிகள் செய்யப்பட்டன. பெருமளவான உற்பத்தி குவிவதும் அது சிற்றளவான உற்பத்தியை அகற்றிடுவதும் விவசாயத்தில் நடைபெறுவதே இல்லையென்றும், வர்த்தகத்திலும் தொழில் துறையிலும் மிகவும் மெதுவாகவே நடைபெறுகின்றன என்றும் கூறப் பட்டது. நெருக்கடிகள் இப்பொழுது அரிதாகியதோடு பலம் குறைந்துவிட்டதாகவும், இவற்றை அறவே நீக்கிவிடும் ஆற்றலைக் கார்ட்டல்களும் டிரஸ்டுகளும் மூலதனத்துக்கு அளித் திடுமென எதிர்பார்க்கலாம் என்றும் கூறப்பட்டது. வர்க்கப் பகைமைகளின் கடுமை மேலும் மேலும் குறைந்து தணிந்து வரும் போக்கின் காரணத்தால் முதலாளித்துவம் சந்திக்கச் சென்று கொண்டிருக்கும் ''அழிவுத் தத்துவம்'' ஆதாரமற்றதாகுமெனக் கூறப்பட்டது. முடிவில், மார்க்ஸின் மதிப்புத் தத்துவத்தை பேம்-பாவர்க்கின் வழியில் திருத்து வதில் தவறு ஒன்றுமில்லை என்றும் கூறப்பட்டது.

இந்தப் பிரச்சினைகளில் திருத்தல்வாதிகளை எதிர்த்து நடத்திய போராட்டமானது, இதற்கு இருபது ஆண்டு களுக்கு முன்பு டூரிங்குடன் எங்கெல்ஸ் நடத்திய சர்ச்சையைப்

* பக்தானவ், பஸாரவ், மற்றும் சிலர் எழுதும் மார்க்ஸியத் தத்துவஞானம் பற்றிய கட்டுரைகள் என்னும் புத்தகத்தைப் பார்க்கவும். இப்புத்தகத்தைப் பரிசீலிக்க இதுவல்ல இடம். நவீன-கான்ட் வழிப்பட்ட திருத்தல்வாதிகளைப் பற்றி மேலே நான் கூறியுள்ளவை யாவும் இந்தப் ''புதிய'' நவீன-ஹியூம்-பெர்க்கிலி வழிப்பட்ட திருத்தல்வாதிகளுக்கும் சாராம்சத்தில் பொருந்தும் என்பதை வருங்காலத்தில் கூடிய சீக்கிரம் ஒரு கட்டுரைத் தொடரிலோ, தனிப் பிரசுரத்தி லோ நிரூபிப்பேன் என்று மட்டும் தற்போது குறிப்பிடு கிறேன்[13].

போல் அதே அளவுக்குப் பயனுள்ள முறையில் சர்வதேச சோஷலிஸத்தில் தத்துவார்த்தச் சிந்தனையை மறுமலர்ச்சி பெறச் செய்தது. உண்மைகள், புள்ளிவிவரங்கள் இவற்றின் துணை கொண்டு திருத்தல்வாதிகளுடைய வாதங்கள் பகுத்தாராயப்பட்டன. தற்காலச் சிற்றளவு உற்பத்தி குறித்து திருத்தல்வாதிகள் முனைந்து நின்று தமக்குச் சாதகமான சித்திரம் தீட்டினர் என்று நிரூபிக்கப்பட்டது. தொழில் துறையில் மட்டுமின்றி, விவசாயத்திலுங்கூட சிற்றளவான உற்பத்தியைவிடப் பெருமளவான உற்பத்தியே தொழில்நுட்ப வழியிலும் வர்த்தக வழியிலும் மேலாயுள்ளது என்று மறுக்க முடியாத உண்மைகள் மெய்ப்பிக்கின்றன. ஆனால் பரிமாற்றப் பண்ட உற்பத்தி விவசாயத்தில் மிகக் குறைவான வளர்ச்சியே பெற்றிருக்கிறது; பொதுவாகப் பேசுமிடத்து, தற்காலப் புள்ளிவிவர இயலாளர்களும் பொருளாதாரவாதிகளும் உலகப் பொருளாதாரத்தின் பரிமாற்ற நிகழ்ச்சிப் போக்கினுள் விவசாயம் மேலும் மேலும் இழுத்துக் கொள்ளப்படுவதைச் சுட்டிக்காட்டும் தனிக் கிளைகளையும் (சில நேரங்களில் செயற்பாடுகளையுங்கூட) தேர்வாய்வு செய்வதில் அதிகத் தேர்ச்சியுடையோராய் இல்லை. இடையறுது உணவுத் தரத்தை மோசமாக்கியும் நிரந்தரப் பட்டினியாலும் வேலை நேரத்தை அதிகமாக்கியபடியும் கால்நடைகளின் தரத்தையும் பராமரிப்பையும் சீர்கேடுறச் செய்தும்தான் சிற்றளவான உற்பத்தியானது இயற்கைப் பொருளாதாரத்தின் இடிபாடுகள்மீது தன்னை நிலைநிறுத்திக் கொள்கிறது—சுருக்கமாய்க் கூறினுல், முதலாளித்துவப் பட்டறை உற்பத்தியை எதிர்த்துக் கைத்தொழில் உற்பத்தி தன்னை நிலைநிறுத்தி வந்த அதே வழிகளில்தான். விஞ்ஞானத்திலும் தொழில்நுணுக்கத்திலும் ஏற்படும் ஒவ்வொரு முன்னேற்றமும் முதலாளித்துவச் சமுதாயத்தில் சிற்றளவு உற்பத்தியின் அடித்தளங்களுக்குத் தவிர்க்க முடியாதவாறும் விடாப்பிடியாகவும் குழி பறிக்கிறது. பல சந்தர்ப்பங்களில் குழப்படியாகவும் சிக்கலாகவுமுள்ள இந்த நிகழ்ச்சிப் போக்கை அதன் எல்லா வடிவங்களிலும் ஆராய்வதும், முதலாளித்துவத்தில் சிறு உற்பத்தியாளர் அழியாது நிலைப்பது முடியாதென்பதையும் முதலாளித்துவத்தில் விவசாயி

யின் சிறு சாகுபடிக்குக் கதிமோட்சமில்லை என்பதையும் பாட்டாளியின் கண்ணோட்டத்தை விவசாயி ஏற்பது அவசியம் என்பதையும் தெளிவுபடுத்திக் காட்டுவதும் சோஷலிஸ்டு அரசியல் பொருளாதாரத்தின் கடமையாகும். இந்தப் பிரச்சினையில் ஒருசார்பாகவும் முதலாளித்துவத்தின் முழு அமைப்புடன் தொடர்பின்றியும் தேர்ந்து கொண்ட விவரங்களின் அடிப்படையில் திருத்தல்வாதிகள் மேம்போக்கான பொது முடிவுகளுக்கு வந்து, விஞ்ஞானத்தின் கண்ணோட்டத்தில் தவறு செய்தனர். புரட்சிகரப் பாட்டாளியின் பார்வை நிலையை ஏற்குமாறு வற்புறுத்துவதற்குப் பதிலாய் சிறு உடைமையாளனின் போக்கை (அதாவது முதலாளி வர்க்கத்தினரின் போக்கை) ஏற்குமாறு அவர்கள் தெரிந்தோ தெரியாமலோ தவிர்க்க முடியாதபடி விவசாயியை அழைத்ததன் மூலம், அல்லது வற்புறுத்தியதன் மூலம், அரசியலின் கண்ணோட்டத்தில் தவறு செய்தனர்.

நெருக்கடிகளின் தத்துவம் குறித்தும் அழிவுத் தத்துவம் குறித்தும் திருத்தல்வாதத்தின் நிலை மேலும் படுமோசமானதாகவே இருந்தது. மிகச் சொற்ப காலத்துக்கு மட்டுமே தான், அதுவும் மிக மோசமான பார்வைக்கேடு உள்ளவர்தான் ஒரு சில ஆண்டுக் காலத் தொழில் துறை ஏற்ற நிலையாலும் செழிப்புக் காலத்தாலும் வயப்படுத்தப்பட்டு, மார்க்ஸின் தத்துவத்தினுடைய அடிப்படைகளைத் திருத்தியமைக்க வேண்டுமென நினைக்க முடியும். நெருக்கடிகள் கடந்த காலத்துக்குரியனவாகிவிடவில்லை, செழிப்பைப் பின்தொடர்ந்து நெருக்கடி வருகிறது என்பதை யதார்த்த நிலைமைகள் மிக விரைவாகவே திருத்தல்வாதிகளுக்குத் தெளிவுபடுத்தின. குறிப்பிட்ட நெருக்கடிகளின் வடிவங்களும் வரிசைமுறையும் சித்திரமும் மாறினவேயன்றி, நெருக்கடிகள் முதலாளித்துவ அமைப்பின் தவிர்க்க முடியாத ஓர் அங்கமாய்த்தான் நிலைத்திருந்தன. கார்ட்டல்களும் டிரஸ்டுகளும் உற்பத்தியை ஒன்றுபடுத்திய அதே நேரத்தில், எல்லோருக்கும் கண்கூடாய்த் தெரியும்படியான முறையில் உற்பத்தியின் அராஜகத்தையும் பாட்டாளி வர்க்கத்தினுடைய வாழ்க்கைக் காப்புறுதியின்மையையும் மூலதனத்தின் ஒடுக்குமுறையையும் தீவிரப்

படுத்தி, இதன் மூலம் வர்க்கப் பகைமைகளை முன்பின் கண்டிராத அளவுக்குக் கடுமையாக்கின. முதலாளித்துவமானது அழிவை நோக்கி — தனிப்பட்ட அரசியல், பொருளாதார நெருக்கடிகளைக் குறிக்கும் பொருளிலும் முதலாளித்துவ அமைப்பு அனைத்தின் முழு அழிவைக் குறிக்கும் பொருளிலும் —விரைந்தோடிக் கொண்டிருக்கிறது என்பது குறிப்பாய் இதே புதிய பகாசுர டிரஸ்டுகளின் மூலம் மிக மிகத் தெளிவாகவும் மிகமிகப் பெரிய அளவிலும் தெளிவு படுத்தப்பட்டிருக்கிறது. அண்மையில் அமெரிக்காவில் ஏற்பட்டிருக்கும் நிதி நெருக்கடியும் ஐரோப்பா பூராவிலும் பயங்கரமாய் அதிகரித்திருக்கும் வேலையில்லாத் திண்டாட்டமும் —எக்கணமும் மூண்டுவிடும் நிலையிலுள்ள தொழில் துறை நெருக்கடியைப் பற்றிக் கூறவே வேண்டாம், பல அறிகுறிகள்இதனைச் சுட்டிக்காட்டுகின்றன—திருத்தல்வாதிகளுடைய அண்மைக் காலத்திய ''தத்துவங்கள்'' திருத்தல்வாதிகளிடையேகூட பலரும் அடங்கலாய் எல்லோராலும் மறக்கப்பட்டுவிடும் நிலையை உண்டாக்கியுள்ளன. ஆனால் அறிவுஜீவிகளின் இந்த நிலையின்மை தொழிலாளி வர்க்கத்துக்கு அளித்திடும் படிப்பினைகள் ஒருபோதும் மறக்கப்படலாகாது.

மதிப்புத் தத்துவத்தைப் பொறுத்தமட்டில் பேம்-பாவர்க்கின் பாணியில் சிறிதும் தெளிவற்ற சூசகங்களையும் பெருமூச்சுகளையும் தவிர்த்து, திருத்தல்வாதிகள் வேறு எதுவுமே அளித்திடவில்லை, ஆகவே விஞ்ஞான சிந்தனையின் வளர்ச்சியில் எவ்விதத் தடயமும் விட்டுச் செல்லவில்லை என்பதற்கு மேல் ஒன்றும் சொல்லத் தேவையில்லை.

அரசியல் துறையில், திருத்தல்வாதமானது மார்க்ஸியத்தின் அடித்தளத்தை, அதாவது வர்க்கப் போராட்டத் தத்துவத்தைத் திருத்த மெய்யாகவே பெருமுயற்சி செய்தது. அரசியல் சுதந்திரமும் ஜனநாயகமும் அனைத்து மக்கள் வாக்குரிமையும் வர்க்கப் போராட்டத்துக்கான அடிநிலையை அகற்றிவிடுவதாகவும், தொழிலாளி வர்க்கத்துக்குத் தாய்நாடில்லை என்கிற கம்யூனிஸ்டு அறிக்கையின் பழம்பெரும் நிர்ணயிப்பைப் பொய்யாக்கிவிடுவதாகவும் கூறினார்கள். ஏனெனில் ''பெரும்பான்மையோரின் சித்தம்'' ஆதிக்கம் செலுத்து

வதால், ஜனநாயகத்தில் அரசை வர்க்க ஆதிக்கத்திற்கான உறுப்பாய் யாரும் கருதலாகாதென்றும், பிற்போக்காளர்களுக்கு எதிராய் முற்போக்கான, சமுதாய-சீர்திருத்தவாத முதலாளித்துவ வர்க்கத்தினருடன் கூட்டுகள் நிறுவிக் கொள்வதை நிராகரிக்கலாகாதென்றும் கூறினர்.

திருத்தல்வாதிகளுடைய இந்த வாதங்கள் ஓரளவு பாங்குற வகுக்கப்பெற்ற கருத்தமைப்பாகும் என்பதை, அதாவது பிரசித்தமான பழைய மிதவாத-முதலாளித்துவக் கருத்தமைப்பாகும் என்பதை மறுப்பதற்கில்லை. முதலாளித்துவ நாடாளுமன்ற முறையில் வாக்குரிமையையும் அரசாங்க விவகாரங்களில் பங்கு கொள்ளும் உரிமையையும் குடிமக்கள் அனைவரும் பாகுபாடின்றிப் பகிர்ந்து கொள்வதால் இது வர்க்கங்களையும் வர்க்கப் பிரிவினைகளையும் ஒழித்திடுகிறது என்று மிதவாதிகள் எப்பொழுதுமே கூறி வந்துள்ளனர். இத்தகைய கருத்துக்கள் எவ்வளவு அபத்தமானவை என்பதைப் பத்தொன்பதாம் நூற்றாண்டின் பிற்பாதியில் ஐரோப்பாவின் வரலாறு அனைத்தும், இருபதாம் நூற்றாண்டின் துவக்க ஆண்டுகளில் ருஷ்யப் புரட்சியின் வரலாறு அனைத்தும், கண்கூடாய்க் காட்டுகின்றன. ''ஜனநாயக'' முதலாளித்துவத்தின் சுதந்திரத்தில் பொருளாதாரப் பாகுபாடுகள் மேலும் தீவிரமாகிக் கடுமையாகின்றனவே ஒழிய குறைந்துவிடவில்லை. மிகவும் ஜனநாயகமான முதலாளித்துவக் குடியரசுகளிலுங்கூட இக்குடியரசுகளும் வர்க்க ஒடுக்குமுறைஅமைப்புகளே என்ற அவற்றின் உள்ளியல்பான தன்மையை நாடாளுமன்ற முறை அப்பட்டமாய்த் தெரியப்படுத்துகிறதேயன்றி, அவற்றில் வர்க்க ஒடுக்குமுறையை அகற்றிவிடவில்லை. அரசியல் நிகழ்ச்சிகளில் முன்பு தீவிரமாகப் பங்குபெற்ற பகுதிகளைக் காட்டிலும் அளவிட முடியாத விரிவான மக்கள் பகுதியினருக்கு அறிவொளியூட்டி அவர்களை ஒழுங்கமைத்திடத் துணை புரிவதன் மூலம் நாடாளுமன்ற முறை நெருக்கடிகளையும் அரசியல் புரட்சிகளையும் அகற்றிவிடவில்லை, இப்புரட்சிகளின் போது உள்நாட்டுப் போர் அதிகபட்ச அளவுக்குக் கடுமையாகும்படியே செய்கிறது. இது தவிர்க்க முடியாதபடி எப்படி கடுமையாகிவிடுகிறது என்பதை 1871ம்

ஆண்டு வசந்தத்தில் பாரிஸ் நிகழ்ச்சிகளும் 1905 குளிர்காலத்தில் ருஷ்ய நிகழ்ச்சிகளும் மிக மிகத் தெளிவாய்க் காட்டின. பாட்டாளி வர்க்க இயக்கத்தை நசுக்கும் பொருட்டு பிரெஞ்சு முதலாளி வர்க்கம் ஒரு கணங்கூடத் தயங்காது தேசம் அனைத்துக்கும் எதிரான பகைவனுடன், பிரெஞ்சு நாட்டைச் சீரழியச் செய்த அந்நியச் சேனையுடன், ஒப்பந்தம் செய்து கொண்டது. நாடாளுமன்ற முறை, முதலாளித்துவ ஜனநாயகம் இவற்றின் தவிர்க்க இயலாத உள்ளார்ந்த இயக்கவியலை—வெகுஜனப் பலாத்காரத்தின் மூலம் சர்ச்சைக்கு முன்னிலும் கூர்மையான முடிவு காண வழி வகுக்கும் இதனை—புரிந்து கொள்ளாதவர்கள் இந்த நாடாளுமன்ற முறையின் அடிப்படையில் கோட்பாட்டு வழியில் முரணின்றியும், தொழிலாளி வர்க்க வெகுஜனங்கள் இந்தச் ''சர்ச்சைகளில்' வெற்றிகரப் பங்கு கொள்ள மெய்யாகவே அவர்களைத் தயார் செய்யும் விதத்திலும் பிரசாரமும் கிளர்ச்சியும் நடத்த ஒருபோதும் முடியாது. மேற்கு நாடுகளில் சமூக-சீர்திருத்த மிதவாதிகளுடனும், ருஷ்யப் புரட்சியில் மிதவாதச் சீர்திருத்தவாதிகளுடனும் (காடேட்டுகள்[14]) செய்து கொள்ளப்பட்ட கூட்டணிகள், ஒப்பந்தங்கள், இணைப்புகள் இவற்றின் அனுபவமானது, வெகுஜனங்களுடைய உணர்வை மழுங்கடிக்கவே இந்த ஒப்பந்தங்கள் உதவுகின்றன, அவை போராடும் வீரர்களைச் சிறிதும் போராடும் ஆற்றலற்ற, மிகுந்த ஊசலாட்டமும் துரோகத் தன்மையும் கொண்டவர்களுடன் இணையச் செய்து, வெகுஜனங்களுடைய போராட்டத்தின் மெய்யான முக்கியத்துவத்தைப் பலவீனப்படுத்துகின்றனவே அன்றி அதனை உயர்த்தவில்லை என்பதை ஐயந்திரிபற நிரூபித்துக் காட்டியுள்ளது. பிரான்சில் மில்லிரான் போக்கு[15]—விரிவான, மெய்யாகவே நாடு தழுவிய அளவில் திருத்தல்வாத அரசியல் போர்த்தந்திரத்தைக் கையாளுவதில் நடத்திய மிகப் பெரிய பரிசோதனை இது—உலகெங்கணும் பாட்டாளி வர்க்கம் எந்நாளும் மறக்க முடியாத வகையில் திருத்தல்வாதம் குறித்து நடைமுறை வாயிலான ஒரு மதிப்பீட்டை அளித்திருக்கிறது.

சோஷலிஸ இயக்கத்தின் இறுதி நோக்கம் குறித்துத் திருத்தல்வாதம் அனுசரிக்கும் கண்ணோட்டம் அதன் பொருளாதார, அரசியல் போக்குகளுடன் பொருந்துகிற இயற்கையான நிரப்புக் கூறுகும். ''இயக்கமே யாவும், இறுதி நோக்கம் ஒரு பொருட்டல்ல''—பெர்ன்ஷ்டைனுடைய இந்த வசீகரச் சொற்றொடர் நீண்ட பல வியாக்கியானங்களைக் காட்டிலும் சிறப்பாய்த் திருத்தல்வாதத்தின் உட்பொருளைத் தெரிவிக்கிறது. (தனது நடத்தையைச் சந்தர்ப்பத்துக்குச் சந்தர்ப்பம் மாற்றி நிர்ணயித்துக் கொள்ளுதல், அன்றன்றைக்குமான நிகழ்ச்சிகளுக்கும் அற்ப விவகார அரசியலின் திருப்பங்களுக்கும் தன்னைத் தகவமைத்துக் கொள்ளுதல், பாட்டாளி வர்க்கத்தின் தலையாய நலன்களையும் முதலாளித்துவ அமைப்பு அனைத்தின், முதலாளித்துவப் பரிணாமம் அனைத்தின் அடிப்படைக் கூறுகளையும் மறந்துவிடுதல், இந்தத் தலையாய நலன்களை அந்தந்த தருணத்திற்குரிய மெய்யான அல்லது கற்பிதமான நலன்களுக்காகப் பலியிடுதல் — இவையேதான் திருத்தல்வாதத்தின் கொள்கை.) இந்தக் கொள்கையின் தன்மையிலிருந்தே வெளிப்படையாய்ப் பெறப்படுவது என்னவெனில், இது எண்ணிலடங்காப் பல்வேறு வடிவங்களை ஏற்கும் என்பதும், ஓரளவுக்கோ பெருமளவுக்கோ ''புதுமையான'' ஒவ்வொரு பிரச்சினையும், நிகழ்ச்சிகளில் ஓரளவுக்கோ பெருமளவுக்கோ எதிர்பாராத, முன்னறியாத ஒவ்வொரு திருப்பமும்—அடிப்படை வளர்ச்சித் திசையை அது மிகச் சொற்ப அளவுக்கு மட்டுமேதான், மிக மிகச் சொற்ப காலத்துக்கேதான் மாற்றுகிறது என்றாலுங்கூட—தவிர்க்க முடியாத வகையில் ஏதேனும் ஒரு வகைத் திருத்தல்வாதத்தை எப்பொழுதும் தோற்றுவிக்கவே செய்யும் என்பதுந்தான்.

திருத்தல்வாதம் தவிர்க்க முடியாததாய் இருப்பதற்குத் தற்கால சமுதாயத்தில் அதற்குள்ள வர்க்க வேர்கள்தான் காரணம். திருத்தல்வாதம் ஒரு சர்வதேச நிகழ்ச்சிப்போக்கு. ஜெர்மனியில் சுத்தமான மார்க்ஸியவாதிகளுக்கும் பெர்ன்ஷ்டைனியர்களுக்கும், பிரான்ஸில் கெட்டின் [Guesde] ஆதரவாளர்களுக்கும் ஜொரேஸ் ஆதரவாளர்களுக்கும் (தற்போது

இன்னும் முக்கியமாய் புருஸ் ஆதரவாளர்களுக்கும்),[16] பிரிட்டனில் சமூக-ஜனநாயகச் சம்மேளனத்துக்கும்[17] சுயேச்சைத் தொழிற் கட்சிக்கும்,[18] பெல்ஜியத்தில் புருக்கேருக்கும் வண்டர்வேல்டேக்கும், இத்தாலியில் முழுமையாளர்களுக்கும்[19] சீர்திருத்தவாதிகளுக்கும், ருஷ்யாவில் போல்ஷிவிக்குகளுக்கும் மென்ஷிவிக்குகளுக்கும்[20] இடையிலான உறவுநிலை இந் நாடுகள் யாவற்றின் தற்போதைய நிலையில் இருந்து வரும் மிகப் பல்வேறுபட்ட தேசிய நிலைமைகளையும் வரலாற்றுக் கூறுகளையும் மீறி, சாராம்சத்தில் எங்கும் ஒன்றே போல் இருக்கிறது; சிறிதளவேனும் தகவல் தெரிந்த, சிந்தனை ஆற்றல் கொண்ட எந்த சோஷலிஸ்டுக்கும் இது குறித்துக் கடுகளவும் சந்தேகம் இருக்க முடியாது. உண்மையில் இன்றைய சர்வதேச சோஷலிஸ்டு இயக்கத்தினுள் நிளவும் ''பிரிவினை'' தற்போது உலகின் பல்வேறு நாடுகள் யாவற்றிலும் ஒரே விதமான வழியில்தான் போய்க் கொண்டிருக்கிறது. முப்பது அல்லது நாற்பது ஆண்டுகளுக்கு முன்பு பல்வேறு நாடுகளிலும் பல்வேறுபட்ட போக்குகள் சர்வதேச சோஷலிஸ்டு இயக்கம் ஒன்றினுள் போராடிக் கொண்டிருந்ததுடன் ஒப்பிடுகையில் இன்றைய நிலைமை பிரம்மாண்டமான முன்னேற்றம் ஏற்பட்டிருப்பதற்குச் சான்று கூறுகிறது. லத்தீனிய நாடுகளில் ''புரட்சிகர சிண்டிக்கலிஸமாய்''[21] உருவாகியுள்ள அந்த ''இடதுசாரி திருத்தல்வாதமுங்'' கூடத் தன்னை மார்க்ஸியத்துக்குத் தகவமைத்து, மார்க்ஸியத்தைத் ''திருத்தி வருகிறது'': இத்தாலியில் லப்ரியோலாவும் பிரான்சில் லாகர்டேலும் தவறுகப் புரிந்து கொள்ளப்பட்ட மார்க்ஸின் நிலையிலிருந்து சரியாய்ப் புரிந்து கொள்ளப்பட்ட மார்க்ஸின் நிலைக்கு அடிக்கடி வேண்டுகோள் விடுக்கின்றனர்.

சந்தர்ப்பவாதத் திருத்தல்வாதத்தைப் போல அதே அளவுக்கு வளர்ச்சியடையாது இருந்து வரும் இந்தத் திருத்தல்வாதத்தின் சித்தாந்த உள்ளடக்கத்தை இங்கு நாம் பகுத்தாராய்வதற்கில்லை. இந்தத் திருத்தல்வாதம் இன்னமும் சர்வதேச நிகழ்ச்சிப்போக்கு ஆகவில்லை, எந்தவொரு நாட்டிலும் சோஷலிஸ்டுக் கட்சியுடன் இன்னமும் அது எந்தவொரு பெரிய நடைமுறைப் போராட்டத்தின் சோதனையையும்

கண்டதில்லை. ஆகவே மேலே சித்தரிக்கப்பட்ட ''வலதுசாரி திருத்தல்வாதத்தைப்'' பரிசீலிப்பதுடன் நாம் நிறுத்திக் கொள்கிறோம்.

முதலாளித்துவ சமுதாயத்தில் இது தவிர்க்க முடியாத தாய் இருப்பதன் மூலகாரணம் என்ன? தேசியத் தனி இயல்பு களிலும் முதலாளித்துவ வளர்ச்சியின் அளவுகளிலும் இருக் கும் வேறுபாடுகளைக் காட்டிலும் இது ஆழமுடையதாய் இருப் பது ஏன்? ஏனெனில் ஒவ்வொரு முதலாளித்துவ நாட்டிலும் பாட்டாளி வர்க்கத்துடன் கூடவே விரிவான சிறு முதலாளித் துவப் பகுதியினர், சிறு உடைமையாளர்கள் எப்பொழுதுமே இருந்து வருகிறார்கள். முதலாளித்துவம் சிற்றளவான உற்பத்தியிலிருந்துதான் தோன்றியது,இடையறாது தோன்றிக் கொண்டும் இருக்கிறது. முதலாளித்துவம் தவிர்க்க முடியாதபடி மீண்டும் மீண்டும் பல புதிய ''மத்தியதரப் பகுதிகளை'' (ஆலைகளை அண்டிப் பிழைக்கும் தொழிலகங்கள், வீட்டுப் பணித்துறை, சைக்கிள், மோட்டார் தொழில்களைப் போன்ற பெருந் தொழில்களின் தேவைகளைப் பூர்த்தி செய்ய நாடெங்கிலும் சிதறிக் கிடக்கும் சிறு தொழிலகங்கள், இன்ன பிற) தோற்றுவித்துக் கொண்டிருக்கிறது. இந்தப் புதிய சிறு உற்பத்தியாளர்கள் இதே போலத் தவிர்க்க முடியாதபடித் திரும்பவும் பாட்டாளி வர்க்க அணிகளுக்குத் தள்ளப்பட்டு விடுகிறார்கள். விரிவான தொழிலாளர் கட்சிகளின் அணி களில் சிறு முதலாளித்துவ உலகக் கண்ணோட்டம் திரும்பத் திரும்பத் தலைதூக்குவது இயற்கையே. பாட்டாளி வர்க்கப் புரட்சியால் கதி மாற்றங்கள் ஏற்படுகின்ற வரையில் இது இப்படியேதான் இருக்கும், இருக்க வேண்டும் என்பது இயற்கையே. ஏனெனில் இத்தகைய ஒரு புரட்சியை உண் டாக்க மக்கள் தொகையில் பெருவாரியானோர் ''அறவே'' பாட்டாளி வர்க்கத்தவராக்கப்படுவது அவசியமென நினைப் பது மிகப் பெரும் தவறாகும். இப்பொழுது அடிக்கடி நாம் சித்தாந்தத் துறையில் மட்டும் அனுபவித்து வருகின்றவை, அதாவது மார்க்ஸுக்குத் தத்துவார்த்தத் திருத்தங்கள் செய் வது குறித்த சர்ச்சைகள்—நடைமுறையில் தற்போது தொழி லாளர் இயக்கத்தின் தனிப்பட்ட துணைப் பிரச்சினைகள்

குறித்து மட்டும் திருத்தல்வாதிகளுடனுன போர்த்தந்திரக் கருத்து வேறுபாடுகளாகவும் அவற்றின் அடிப்படையிலான பிளவுகளாகவும் தலைதூக்குகிறவை — பாட்டாளி வர்க்கப் புரட்சியானது சர்ச்சைக்குரிய எல்லாப் பிரச்சினைகளையும் கூர்மையாக்கிவிடும் போதும், வெகுஜனங்களின் நடத்தையை நிர்ணயிப்பதில் மிகுந்த உடனடி முக்கியத்துவம் வாய்ந்தஅம் சங்கள் பற்றிய எல்லாக் கருத்து வேறுபாடுகளையும் ஒன்று குவியச் செய்யும் போதும், மும்முரமான போராட்டத்துக்கி டையில் நண்பர்களிடமிருந்து பகைவர்களை இனங்கண்டு கொள்வதையும் முடிவு கட்டும்படியான விதத்தில் பகைவ னுக்கு அடி கொடுக்கும் பொருட்டு மோசமான கூட்டாளிகளை விலக்கித்தள்ளுவதையும் அவசியமாக்கிவிடும் போதும் ஒப்பிட முடியாத மிகப் பெரிய அளவிலே வருங் காலத்தில் தொழி லாளி வர்க்கம் நிச்சயம் அனுபவிக்க வேண்டியிருக்கும்.

பத்தொன்பதாம் நூற்ருண்டின் முடிவில் திருத்தல் வாதத்தை எதிர்த்துப் புரட்சிகர மார்க்ஸியம் நடத்தும் சித்தாந்தப் போராட்டமானது, சிறு முதலாளித்துவப் பகுதி யினரின் எல்லா ஊசலாட்டங்களையும் பலவீனங்களையும் மீறித் தனது இலட்சியத்தின் முழு வெற்றியை நோக்கி முன்னேறி வீறு நடைபோடும் பாட்டாளி வர்க்கத்தினுடைய மாபெரும் புரட்சிப் போர்களின் பீடிகையே ஆகும்.

*1908 மார்ச் பிற்பாதியில்—*
*ஏப்ரல் 3 (16)க்குப் பிற்படாமல்*
*—எழுதப் பெற்றது*

*1908 செப்டம்பர் 25க்கும்*
*அக்டோபர் 2க்கும் (அக்டோபர்*
*8க்கும் 15க்கும்) இடையே,*
**கார்ல் மார்க்ஸ் (1818-1883),**
*ஸெயின்ட் பீட்டர்ஸ்பர்க்,*
*ஓ. மற்றும் எம். கேத்ரவ்*
*பதிப்பகம் எனும் தொகுப்பில்*
*வெளியிடப்பட்டது*
*கையொப்பம்:* **விள. இலியின்**

நூல் திரட்டு,
*தொகுதி 17,*
*பக்கங்கள் 15-26*

# நமது வேலைத்திட்டம்

(தற்போது சர்வதேச சமூக-ஜனநாயகம் சித்தாந்த ஊச லாட்டத்தால் பீடிக்கப்பட்ட ஒரு நிலையில் இருக்கிறது. இது காறும் மார்க்ஸ், எங்கெல்சின் போதனைகள் புரட்சித் தத்து வத்துக்குரிய உறுதி வாய்ந்த அடித்தளமாய்க் கருதப்பட்டு வந்தன; ஆனால் இப்பொழுது இந்தப் போதனைகள் குறை பாடானவை என்றும் பழமைப்பட்டுவிட்டவை என்றும் பறைசாற்றும் குரல்கள் நாற்புறமிருந்தும் எழுப்பப்படுகின் றன. சமூக-ஜனநாயகவாதியாய்த் தம்மை அறிவித்துக் கொண்டு, சமூக-ஜனநாயகக் கொள்கை முழக்க ஏடு ஒன்றை வெளியிட முன்வரும் எவரும், ஜெர்மன் சமூக-ஜனநாயக வாதிகளின் கவனத்தையும் அவர்கள் மட்டுமின்றி ஏனைய பலரின் கவனத்தையும் ஆட்கொண்டு வரும் ஒரு பிரச்சினை குறித்துத் தமது போக்கு என்ன என்பதைத் துல்லியமாய் வரையறுத்துக் கூறியாக வேண்டும்.)

நாம் முற்றிலும் மார்க்ஸியத் தத்துவார்த்த நிலையையே எமது அடிநிலையாய்க் கொண்டு நிற்கிறோம்: மார்க்ஸியம் தான் முதன்முதல் சோஷலிசத்தைக் கற்பனாவாதத்திலிருந்து விஞ்ஞானமாய் மாற்றியமைத்துத் தந்தது; இந்த விஞ்ஞா னத்துக்கு உறுதியான அடித்தளத்தை நிறுவிக் கொடுத்தது; இதை இதன் எல்லாக் கூறுகளிலும் மேலும் வளர்த்தும் விவர மாய் விரித்தமைத்தும் செல்வதற்குப் பின்பற்ற வேண்டிய பாதையைச் சுட்டிக் காட்டிற்று. தொழிலாளியை வேலைக்கு அமர்த்திக் கொள்வதானது, அதாவது உழைப்புச் சக்தியை விலைக்கு வாங்குவதானது, சொத்துடைமையற்ற லட்சோப

லட்சக் கணக்கானேரை நிலம், ஆலைகள், சுரங்கங்கள் முதலானவற்றின் உடைமையாளர்களாகிய விரல்விட்டு எண்ணக் கூடிய ஒருசில முதலாளிகள் அடிமை செய்து விடுவதை எப்படி மூடிமறைக்கிறது என்பதை விளக்கியதன் மூலம், நவீன கால முதலாளித்துவப் பொருளாதாரத்தின் தன்மையை அது வெளிப்படுத்திக் காட்டிற்று. நவீன கால முதலாளித்துவ வளர்ச்சி அனைத்துமே, பெருமளவான பொருளுற்பத்தியானது சிற்றளவான பொருளுற்பத்தியைக் கழித்துக் கட்டிவிடும் போக்கினை வெளிப்படுத்திச் செல்வதையும், சோஷலிசச் சமுதாய அமைப்பை சாத்தியமும் அத்தியாவசியமும் ஆக்கும் நிலைமைகளைத் தோற்றுவிப்பதையும் அது தெளிவுபடுத்திக் காட்டிற்று. வேர்விட்டு வளர்ந்துள்ள பழக்க வழக்கங்கள், மற்றும் அரசியல் சூழ்ச்சிகள், புரியாப் புதிர்களான சட்டங்கள், கடுஞ்சிக்கலான தத்துவங்கள் ஆகியவற்ருலாகிய புகை மூட்டத்தினுள் மறைந்திருக்கும் வர்க்கப் போராட்டத்தை, பல்வேறு வகைப்பட்ட சொத்துடைத்த வர்க்கங்களுக்கும் சொத்துடைமையற்றோர் அனைவரின் தலைமையில் நிற்கும் சொத்தில்லாப் பெருந் திரளாகிய பாட்டாளி வர்க்கத்துக்குமிடையே நடைபெறும் இந்தப் போராட்டத்தை எப்படிக் கண்டறிந்து கொள்வதென்று அது நமக்குக் கற்றுக் கொடுத்தது. புரட்சிகர சோஷலிஸ்டுக் கட்சியின் முன்னுள்ள மெய்யான பணியை அது தெளிவுபடுத்திற்று: சமுதாயத்தைத் திருத்தியமைப்பதற்குத் திட்டங்கள் வரைவதல்ல, தொழிலாளர்களுடைய நிலைமையை மேம்படச் செய்வது குறித்து முதலாளிகளுக்கும் அவர்களது அடிவருடிகளுக்கும் அறிவுரை அளிப்பதல்ல, சதிகள் புரிந்திடுவதல்ல இப்பணி, பாட்டாளி வர்க்கத்தினுடைய வர்க்கப் போராட்டத்தை ஒழுங்கமைப்பு செய்வதும், பாட்டாளி வர்க்கம் அரசியல் அதிகாரம் வெல்வதையும் சோஷலிசச் சமுதாயம் ஒழுங்கமைக்கப் படுவதையும் இறுதிக் குறிக்கோளாய்க் கொண்ட இந்த வர்க்கப் போராட்டத்துக்குத் தலைமை தாங்குவதுமே இப்பணி என்று அது தெளிவுபடுத்திற்று.

இப்பொழுது நாம் கேட்கிறோம்: இந்தத் தத்துவத்தைப் ''புதுப்பிப்பதாய்ப்'' பலக்கக் கூறிக் கொள்கிருர்களே, இக்

காலத்தில் பெருங் கூச்சல் எழுப்பி வருவோரும் ஜெர்மன் சோஷலிஸ்டு பெர்ன்ஷ்டைனை மையமாய்க் கொண்டு திரண்டிருப்போருமாகிய இவர்கள் புதிதாய் எதையேனும் இத்தத்துவத்தில் புகுத்தியிருக்கிறார்களா? எதுவுமே இல்லை. வளர்த்திடுமாறு மார்க்சும் எங்கெல்சும் நம்மைப் பணித்துச் சென்ற இந்த விஞ்ஞானத்தை ஓரடியுங்கூட இவர்கள் முன்னேறச் செய்துவிடவில்லை; புதிய போராட்ட முறைகள் எவற்றையும் இவர்கள் பாட்டாளி வர்க்கத்துக்குக் கற்றுக் கொடுத்துவிடவில்லை. மாறாக, இவர்கள் பிற்பட்ட தத்துவங்களிலிருந்து சிறு கவளங்களைக் கடன்வாங்கி, பாட்டாளி வர்க்கத்துக்குப் போராட்டத் தத்துவத்தையல்ல, விட்டுக் கொடுத்துச் செல்லும் தத்துவத்தை—பாட்டாளி வர்க்கத்தின் மிகக் கொடும் பகைவர்களுக்கு, சோஷலிஸ்டுகளை வருத்துவதற்காக அயராது புது வழிமுறைகளைத் தேடியலையும் அரசாங்கங்களுக்கும் முதலாளித்துவக் கட்சிகளுக்கும் விட்டுக் கொடுத்துச் செல்லும் தத்துவத்தை—பிரசாரம் செய்துப் பின்வாங்கியே சென்றிருக்கிறார்கள். ருஷ்ய சமூக-ஜனநாயகத்தின் மூலவர்களிலும் தலைவர்களிலும் ஒருவரான பிளெஹானவ், பெர்ன்ஷ்டைனுடைய மிகவும் அண்மையதான ''விமர்சனத்தை'' ஈவிரக்கமின்றி கண்டன விமர்சனம் செய்தது முற்றிலும் சரியானதே. பெர்ன்ஷ்டைனுடைய கருத்துக்கள் ஜெர்மன் தொழிலாளர்களுடைய பிரதிநிதிகளாலும் இப்பொழுது நிராகரிக்கப்பட்டிருக்கின்றன (ஹனோவர் காங்கிரசில்).[22]

நாம் இதைச் சொல்வதற்காக மடை திறந்துவிட்டாற் போல குற்றச்சாட்டுகள் பாய்ந்து வருமென எதிர்பார்க்கின்றோம். சோஷலிஸ்டுக் கட்சியை ''மெய்யான பக்திமான்களது'' திருச்சபையாய், ''சமயக் கோட்பாடுகளிலிருந்து'' விலகிச் செல்லும் திரிபுகளுக்காகவும் சுயேச்சையான ஒவ்வொரு கருத்துக்காகவும் ''மறுத்துப் பேசுவோரைத்'' தண்டிக்கும் அமைப்பாய் மாற்ற விரும்புகிறோம் என்றும் மற்றும் பலவாறாகவும் கூச்சல்கள் எழுப்பப்படும். புதிய மோஸ்தராகி விட்ட இந்தச் சுடுசொற் கணைகள் யாவும் நாம் அறிந்தவையே. ஆனால் சிறு துளியளவும் உண்மையோ பொருளோ

இவற்றில் இல்லை. எல்லா சோஷலிஸ்டுகளையும் ஒருசேர இணைத்திடும் புரட்சிகரத் தத்துவம் இல்லையேல், அவர்கள் தமது பற்றுறுதிக்குரிய திட முடிவுகளுக்கு ஆதாரமாய் அமைவதும் அவர்கள் தமது போராட்ட முறைகளிலும் செயல் வழிகளிலும் கையாளக் கூடியதுமான புரட்சிகரத் தத்துவம் இல்லையேல், வலிமை வாய்ந்த சோஷலிசக் கட்சியும் இருக்க முடியாது. நீங்கள் அறிந்த வரை மெய்யானதென நீங்கள் கருதும் இத்தகைய ஒரு தத்துவத்தை ஆதாரமற்ற தாக்குதல்களிலிருந்தும், அதைச் சீர்கேடுறச் செய்வதற்கான முயற்சிகளிலிருந்தும் பாதுகாக்கிறீர்கள் என்றால், எல்லா விமர்சனத்துக்கும் நீங்கள் பகையாகிவிட்டதாய் அர்த்தமல்ல. மார்க்சின் தத்துவத்தை நாங்கள் முற்றும் முடிவானஒன்றாய், மீறவொண்ணாத ஒன்றாய்க் கருதவில்லை. மாறாக, அது சோஷலிஸ்டுகளுக்குரிய விஞ்ஞானத்தின் அடிக்கல்லை மட்டுமே அமைத்துக் கொடுத்திருக்கிறது, சோஷலிஸ்டுகள் வாழ்க்கையுடன் சேர்ந்து நடைபோட விரும்பினால் இந்த விஞ்ஞானத்தை எல்லாத் திசைகளிலும் வளர்த்துச் செல்வது அவசியம் என்பதை நாம் ஐயமற அறிவோம். மார்க்ஸின் தத்துவத்தை தன்னிச்சையான முறையில் விரிவுபட வளர்த்திடுவது முக்கியமாய் ருஷ்ய சோஷலிஸ்டுகளுக்கு மிகவும் தேவையாகுமெனக் கருதுகிறோம். ஏனெனில் இந்தத் தத்துவம் பொதுவான வழிகாட்டும் கோட்பாடுகளையே அளித்திடுகிறது; தனிப்பட்ட முறையில் அவை பிரான்சிலிருந்து வேறு விதமாய் இங்கிலாந்திலும், ஜெர்மனியிலிருந்து வேறு விதமாய் பிரான்சிலும், ருஷ்யாவிலிருந்து வேறு விதமாய் ஜெர்மனியிலும் கையாளப்படுகிறவை. ஆகவே தத்துவார்த்தப் பிரச்சினைகள் பற்றிய கட்டுரைகளுக்கு எமது பத்திரிகையில் மகிழ்ச்சியுடன் நாம் இடம் அளிப்போம், சர்ச்சைக்குரிய விவரங்களைப் பகிரங்கமாய் விவாதிக்குமாறு எல்லாத் தோழர்களுக்கும் அழைப்பு விடுக்கின்றோம்.

எல்லா சமூக-ஜனநாயகவாதிகளுக்கும் பொதுவான வேலைத்திட்டத்தை ருஷ்யாவில் கையாளுகையில் எழும் முக்கியமான பிரச்சினைகள் யாவை? பாட்டாளி வர்க்கத்தினுடைய வர்க்கப் போராட்டத்துக்கு நிறுவன ஒழுங்கமைப்பு

செய்வதும், பாட்டாளி வர்க்கம் அரசியல் அதிகாரம் வெல்வதையும் சோஷலிச சமுதாயம் ஒழுங்கமைக்கப்படுவதையும் இறுதிக் குறிக்கோளாய்க் கொண்ட இந்த வர்க்கப் போராட்டத்துக்குத் தலைமை தாங்குவதுமே இந்த வேலைத் திட்டத்தின் சாரப்பொருள் என்று நாம் கூறியிருக்கிறோம். பாட்டாளி வர்க்கத்தின் வர்க்கப்போராட்டமானது, பொருளாதாரப் போராட்டமும் (தொழிலாளர்களுடைய நிலைமை மேம்பாடு அடைவதற்காகத் தனிப்பட்ட முதலாளிகளையோ, முதலாளிகளது தனிப்பட்ட குழுக்களையோ எதிர்த்து நடைபெறும் போராட்டம்), அரசியல் போராட்டமும் (மக்களுடைய உரிமைகள் விரிவடைவதற்காகவும், அதாவது ஜனநாயகத்துக்காகவும், பாட்டாளி வர்க்கத்தின் அரசியல் அதிகாரம் விரிவடைவதற்காகவும் அரசாங்கத்தை எதிர்த்து நடைபெறும் போராட்டம்) உள்ளடங்கியதாகும். ருஷ்ய சமூக-ஜனநாயகவாதிகள் சிலர் (ரபோச்சயா மீசில் ஏட்டை[23] நடத்துவோரும் இவர்களிடையே இருப்பது வெளிப்படை) பொருளாதாரப் போராட்டமானது ஒப்பிட முடியாத அளவுக்கு மிகவும் முக்கியமானதென்று கருதுகின்றனர், அரசியல் போராட்டத்தை இவர்கள் அதிகமாகவோ, குறைவாகவோ நெடுந்தொலைவிலுள்ள எதிர்காலத்துக்கே உரியதாய் ஒதுக்கிவிடும் அளவுக்கு ஏறத்தாழ போய்விடுகின்றனர். இந்தக் கண்ணோட்டம் முற்றிலும் தவறானது. தொழிலாளி வர்க்கத்தின் பொருளாதாரப் போராட்டத்தை ஒழுங்கமைப்பு செய்வது அவசியமென்பதை எல்லா சமூக-ஜனநாயகவாதிகளும் ஏற்றுக் கொள்கிறார்கள்; இந்த அடிப்படையில் தொழிலாளர்களிடையே கிளர்ச்சி நடத்துவது, அதாவது முதலாளிகளுக்கு எதிரான தொழிலாளர்களது அன்றாட போராட்டத்தில் அவர்களுக்கு உதவுவதும், ஒடுக்கு முறையின் ஒவ்வொரு வடிவத்தையும் ஒவ்வொரு சந்தர்ப்பத்தையும் அவர்களுடைய கவனத்துக்குக் கொண்டுவருவதும், ஒன்றுபட வேண்டியதன் தேவையை இவ்வழியில் அவர்களுக்குத் தெளிவுபடுத்துவதும் இன்றியமையாதது என்பதை அவர்கள் ஏற்றுக் கொள்கிறார்கள். ஆனால் பொருளாதாரப் போராட்டத்துக்காக அரசியல் போராட்டத்தை மறப்பதானது சர்வதேச

சமூக-ஜனநாயகத்தின் அடிப்படைக் கோட்பாட்டை விட்டு விலகுவதாகிவிடும், தொழிலாளர் இயக்கத்தின் வரலாறு அனைத்தும் நமக்குப் போதிப்பதை மறப்பதாகிவிடும். முதலாளித்துவவர்க்கத்தையும் அதற்குச் சேவை புரியும் அரசாங்கத்தையும் ஐயந்திரிபறப் பின்பற்றுவோர் தொழிலாளர்களது முழுக்க முழுக்க பொருளாதாரச் சங்கங்களை அமைக்கவும், இவ்விதம் அவர்களை ''அரசியலிலிருந்து'', சோஷலிசத்திலிருந்து திசை திருப்பிவிடவும் மீண்டும் மீண்டும் முயற்சிகள் செய்தும் இருக்கிறார்கள். ருஷ்ய அரசாங்கமும்கூட இது போன்ற ஒரு முயற்சியை மேற்கொள்வது முற்றிலும் சாத்தியமே; மக்களுக்குச் சில அற்ப கவளங்களை, இன்னும் சரியாய்ச் சொல்வதெனில் போலியான கவளங்களை விட்டெறிய எப்பொழுதுமே அது முயன்றிருக்கிறது, ஒடுக்கப் படுகிறோம், உரிமைகளில்லாதோராய் இருக்கிறோம் என்ற உண்மையிலிருந்து மக்களுடைய சிந்தனைகளைத் திருப்பலாம் என்பதற்காவது இவ்வாறு அது முயன்றிருக்கிறது. தொழிலாளர்கள் தடையின்றி சுதந்திரமாய்க் கூட்டங்கள் நடத்தவும் சங்கங்கள் அமைக்கவும் தமது சொந்த செய்தியேடுகளைப் பெற்றிருக்கவும் தேசியச் சட்டமன்றங்களுக்குத் தமது பிரதிநிதிகளைத் தேர்ந்தெடுத்து அனுப்பவும் உரிமையுடையோராய் இருந்தாலன்றி, ஜெர்மனியிலும் ஏனைய எல்லா ஐரோப்பிய நாடுகளிலும் (துருக்கியையும் ருஷ்யாவையும் தவிர்த்து) தொழிலாளர்களுக்கு இருந்து வரும் இந்த உரிமைகளை உடையோராய் இருந்தாலன்றி, எந்தப் பொருளாதாரப் போராட்டமும் தொழிலாளர்களுக்கு நீடித்த மேம்பாட்டைக் கிடைக்கச் செய்யவும் முடியாது, பெரிய அளவில் நடத்தப்படவுங்கூட முடியாது. ஆனால் இந்த உரிமைகளை வென்று கொள்ள வேண்டுமாயின் அரசியல் போராட்டம் நடத்துவது இன்றியமையாததாகும். ருஷ்யாவில் தொழிலாளர்கள் மட்டுமின்றி குடிமக்கள் எல்லோருமே அரசியல் உரிமைகள் இல்லாதோராகவே இருக்கின்றனர். ருஷ்யா ஒரு வரம்பில்லாத, எதேச்சாதிகார முடியரசாய் இருந்து வருகிறது. ஜார் மன்னர்தான் சட்டங்கள் பிறப்பிக்கின்றார், அதிகாரிகளை நியமிக்கின்றார், அவர்களைக் கட்டுபாடு செய்

கின்றார். இக்காரணத்தினால் ருஷ்யாவில் ஜாரும் அவரது அரசாங்கமும் எந்த வர்க்கத்தையும் சாராமல் இருந்து எல்லோரையும் சரிசமமாய் நடத்துவது போலத் தோன்றுகிறது. ஆனால் எதார்த்த உண்மை என்னவெனில் எல்லா அதிகாரிகளும் சொத்துடைத்த வர்க்கங்களிடம் மட்டுமிருந்தே முழுக்க முழுக்க பொறுக்கியெடுக்கப்படுகின்றனர்; எல்லோரும் பெரு முதலாளிகளுடைய செல்வாக்குக்கு உட்பட்டோராய் இருக்கிறார்கள்; இந்தப் பெரு முதலாளிகள் அமைச்சர்களைத் தமக்குத் தண்டமிட்டுப் பணி புரியச் செய்கிறார்கள்; தாம் விரும்புவதை எல்லாம் நிறைவேற்றிக் கொண்டுவிடுகிறார்கள். ருஷ்யாவின் தொழிலாளி வர்க்கம் இரட்டை ஆதிக்கத்துக்கு அடிமைப்பட்டு வதைபடுகின்றது. முதலாளிகளாலும் நிலப்பிரபுக்களாலும் அது கொள்ளையிடப்பட்டுச் சூறையாடப்படுகின்றது, இவர்களை எதிர்த்துப் போராடாமல் அதைத் தடுப்பதற்காகப் போலீஸ் அதன் கைகால்களைக் கட்டிப் போட்டு வாய்க்கும் பூட்டு போடுகிறது, மக்களுடைய உரிமைகளைப் பாதுகாப்பதற்கான முயற்சி ஒவ்வொன்றும் அடக்கி ஒடுக்கப்படுகின்றது. முதலாளிக்கு எதிரான ஒவ்வொரு வேலை நிறுத்தமும் இராணுவமும் போலீசும் தொழிலாளர்கள் மீது கட்டவிழ்த்துவிடப்படுவதில் முடிவுறுகிறது. ஒவ்வொரு பொருளாதாரப் போராட்டமும் தவிர்க்க முடியாதபடி ஓர் அரசியல் போராட்டமாகிவிடுகின்றது. சமூக-ஜனநாயகவாதமானது ஒன்றை மற்றொன்றிலிருந்து பிரிக்க முடியாதபடி இரண்டையும் பாட்டாளி வர்க்கத்தின் ஒரே வர்க்கப் போராட்டமாய் இணைத்தாக வேண்டும். இத்தகைய ஒரு போராட்டத்தின் முதலாவதும் தலைமையானதுமான நோக்கம் அரசியல் உரிமைகளை வென்று கொள்வதாய், அரசியல் சுதந்திரத்தை வென்று கொள்வதாய் இருத்தல் வேண்டும். பீட்டர்ஸ்பர்க் தொழிலாளர்கள் தனித்திருந்து, சோஷலிஸ்டுகளிடமிருந்து கிடைத்த சிறிதளவு உதவியைக் கொண்டு, அரசாங்கத்துடன் போராடி அதனிடமிருந்து ஒரு சலுகையைப் பிடுங்கிக் கொள்வதில் — வேலை நேரத்தைக் குறைக்கும் சட்டம்[24] ஏற்கப்படும்படிச் செய்வதில்—விரைவில் வெற்றி பெற்றுள்ளனர் என்றால், ஒட்டுமொத்தமாய்

ருஷ்யாவின் தொழிலாளி வர்க்கம் ருஷ்யாவின் ஒருமித்த சமூக-ஜனநாயகத் தொழிலாளர் கட்சியால் தலைமை தாங்கப்பெற்று, விடாப்பிடியாய்ப் போராடி ஒப்பீடில்லாத அளவுக்கு மிக முக்கிய சலுகைகளை வென்று கொள்ள முடியும்.

வேறு எந்த வர்க்கமும் அதற்கு உதவ வராவிட்டாலுங் கூட ருஷ்யாவின் தொழிலாளி வர்க்கம் தனித்து நின்று தனது பொருளாதார, அரசியல் போராட்டத்தை நடத்திச் செல்ல முடியும். ஆனால் அரசியல் போராட்டத்தில் தொழிலாளர்கள் தனித்து நிற்கவில்லை. மக்கள் அறவே உரிமைகள் இல்லாதோராய் இருத்தப்பட்டிருப்பதும், பஷி-புஜுக்[25] அதிகாரிகளுடைய சட்ட நெறியற்ற காட்டுத்தனமும், சுதந்திரச் சிந்தனை உரிமையும் சுதந்திரப் பேச்சு உரிமையும் அடக்கி ஒடுக்கப்படுவதற்கு மனம் ஒப்ப முடியாதோரான நேர்மை உள்ளமுடைத்த, கல்வியறிவு பெற்ற மக்கள் அனைவரையும் ஆத்திரங்கொள்ளச் செய்கின்றன; அடக்குமுறையால் நசுக்கப்படும் போலிஷ் இனத்தோர், ஃபின் இனத்தோர், யூதர்கள், ருஷ்ய சமயப் பிரிவினர் ஆகியோரையும் இவை ஆத்திரங்கொள்ளச் செய்கின்றன; அதிகாரிகளின், போலீசாரின் அடக்குமுறையிலிருந்து எங்குமே காப்பு பெற முடியாதோராய் இருக்கும் சிறு வணிகர்கள், பட்டறையதிபர்கள், விவசாயிகள் ஆகியோரையும் இவை ஆத்திரங்கொள்ளச் செய்கின்றன. மக்களின் இத்தொகுதியோர் எவரும் தனித்து நின்று விடாப்பிடியான அரசியல் போராட்டம் நடத்தும் ஆற்றலுடையோர் அல்லர். ஆனால் தொழிலாளி வர்க்கம் இந்தப் போராட்டத்தின் கொடியை உயர்த்தும் போது எல்லாப் பக்கங்களிலிருந்தும் அதற்கு ஆதரவு கிடைக்கும். ருஷ்யாவின் சமூக-ஜனநாயகவாதம் மக்களது உரிமைகளுக்காகப் போராடுவோர் அனைவரின், ஜனநாயகத்துக்காகப் போராடுவோர் அனைவரின் தலைமையிலே நின்று செயல்படும், அது வெல்லற்கரிய பலமுடைத்ததாகிவிடும்!

இவையே எமது அடிப்படைக் கருத்தோட்டங்கள். இவற்றை நாம் எமது பத்திரிகையில் முறையாகவும் எல்லாக் கோணங்களிலிருந்தும் வளர்த்துச் செல்வோம். இவ்விதம்

நாம், ருஷ்யாவின் சமூக-ஜனநாயகத் தொழிலாளர் கட்சி தான் வெளியிட்டுள்ள அறிக்கையில்[26] சுட்டிக்காட்டியிருக்கும் பாதையிலே நடைபோடுவோம் என்பதில் எமக்கு எந்தச் சந்தேகமும் இல்லை.

*1899 அக்டோபர் பிற்படாமல் எழுதப் பெற்றது*

*1925ல்,* லெனின் மஞ்சரி, III*ல் வெளியிடப்பட்டது*

நூல் திரட்டு,
*தொகுதி 4,*
*பக்கங்கள் 182-86*

## எங்கிருந்து தொடங்குவது?

''என்ன செய்ய வேண்டும்?'' என்ற கேள்வி, கடந்த சில ஆண்டுகளாக, ருஷ்ய சமூக-ஜனநாயகவாதிகளை எதிர் நோக்கும் மிக அவசரமான கேள்வியாக உருப்பெற்றிருக் கிறது. (1880ம் ஆண்டுகளின் இறுதியிலும் 1890ம் ஆண்டு களின் தொடக்கத்திலும் இருந்தது போல) எந்தத் திசை வழியைத் தேர்ந்தெடுத்துக் கொள்வது என்பதல்ல, தேர்ந்து தெளிந்த திசைவழியில் செல்வதற்கு என்னென்ன நடை முறை நடவடிக்கைகளை எவ்வாறு மேற்கொள்வது என்பது தான் இப்போதைய பிரச்சினை. நடைமுறை வேலைக்கான அமைப்பு, திட்டம் ஆகியவற்றைப் பற்றியது இப்போதைய பிரச்சினை. நடைமுறை வேலையில் ஈடுபடும் கட்சிக்குரிய இந்த அடிப்படையான பிரச்சினை—போராட்டத்தின் தன்மை யையும் வழிமுறைகளையும் பற்றிய இந்தப் பிரச்சினை — நம்மால் இன்னும் தீர்க்கப்படவில்லை என்பதை நாம் ஒப்புக் கொள்ள வேண்டும். மேலும், இப்பிரச்சினை சிந்தனையின் வருந்தத்தக்க நிலையின்மையையும் ஊசலாட்டத்தையும் வெளிப்படுத்துகின்ற ஆழமான கருத்து வேற்றுமைகளை எழுப்பிக்கொண்டிருக்கிறது என்பதையும் நாம் ஒப்புக்கொள்ள வேண்டும். ஒருபுறத்தில், ''பொருளாதாரவாதப்'' போக்கு[27] அழிந்தொழிவதற்கான அறிகுறி ஏதும் இல்லை; அது அரசியல் அமைப்பு வேலையையும் அரசியல் கிளர்ச்சி வேலையையும் குறைக்கவும் குறுக்கவும் முயன்று கொண்டிருக்கிறது. மறு புறத்தில், கோட்பாடற்ற கதம்பவாதப் போக்கு முன்போலத் தற்பெருமையுடன் தலை நிமிர்ந்து நிற்கிறது. இந்தக் கதம்பவாதம் ஒவ்வொரு புதிய ''போக்குக்கும்'' உகந்த வாறு தன்னைத் தகவமைத்துக் கொள்கிறது, முழு இயக்கத்தின் அடிப்படையான கடமைகளிலிருந்தும் நிரந்தரத் தேவைகளி

*லிருந்தும் தாற்காலிக அவசியங்களை அதனுல் வேறுபடுத்திப் பார்க்க முடியாது.)* *இத்தகைய போக்கு தன் இருப்பிடமாக* ரபோச்சியே தேலோ *ஏட்டை*[28] *தேர்ந்தெடுத்து விட்டதென்பது தெரிந்த விஷயம். இந்தப் போக்கின் கடைசி ''வேலைத்திட்ட'' அறிக்கை—''வரலாற்று முக்கியத்துவம் வாய்ந்த திருப்பம்'' என்ற ஆடம்பரத் தலைப்பிட்ட ஆடம்பரக் கட்டுரை* (லிஸ்தோக் ரபோச்சிகோ தேலா,[29] *இதழ் 6)—இந்தப் போக்கைப் பற்றிய நமது பண்புரையைத் தெள்ளத் தெளிவாக மெய்ப்பிக்கிறது. அவர்கள் நேற்றுத்தான் ''பொருளாதாரவாதத்துடன்'' பசப்புக் காதல் புரிந்தார்கள்;* ரபோச்சயா மீசில் *பற்றிய உறுதியான கண்டனத்தைக் கண்டு வெஞ்சினம் கொண்டார்கள்; எதேச்சாதிகாரத்தை எதிர்த்து நடத்தும் போராட்டத்தைப்பற்றிப் பிளெஹானவ் முன்வைத்த கருத்தின் வேகத்தைக் ''குறைக்க'' முயன்றனர். இன்றோ, ''சூழ்நிலைகள் 24 மணி நேரத்தில் மாறினுல் போர்த்தந்திரங்களும் 24 மணி நேரத்திற்குள் மாற வேண்டும்'' என்று லீப்க்னெஹ்ட் சொன்னதை மேற்கோள் காட்டுகிறார்கள்; எதேச்சாதிகாரத்தை நேரடியாகத் தாக்குவதற்கு, கடுமையாகத் தாக்கி அழிப்பதற்கு, ''பலம் வாய்ந்த போராட்ட அமைப்பு'' வேண்டும் என்று பேசுகிறார்கள்; ''பரவலான, புரட்சிகரமான அரசியல் கிளர்ச்சியை'' (இப்போது எத்தகைய செயலூக்கம்—புரட்சிகரமான கிளர்ச்சியாம், அரசியல் கிளர்ச்சியாம்!) ''பொது மக்களிடையே நடத்துவதைப்'' பற்றியும், ''கண்டனம் செய்யத் தெருவிற்கு வரும்படி இடைவிடாமல் அழைக்கவேண்டும்'' என்பதைப்பற்றியும், ''அழுத்தமான'' (கவனிக்க!)''அரசியல் தன்மைபெற்ற தெரு ஆர்ப்பாட்டங்களை நடத்த வேண்டும்'' என்பதைப் பற்றியும், இவற்றையொத்த பிறவற்றைப் பற்றியும் பேசுகிறார்கள்.*

இஸ்க்ராவின்[30] *முதல் இதழிலேயே நாம் முன்வைத்த வேலைத்திட்டத்தை—தனித்தனிச் சலுகைகளைப் போராடிப் பெறுவதோடு நில்லாமல், எதேச்சாதிகாரக் கோட்டையையே வன்மையாகத் தாக்கி அழிப்பதை நோக்கமாகக் கொண்ட, நிறுவன முறையில் அணிதிரண்ட பலம் வாய்ந்த கட்சியை அமைக்க வேண்டுமென்ற நம் திட்டத்தை —* ரபோச்சியே

தேலோ இவ்வளவு விரைவாக மேற்கொண்டதைக் குறித்து நாம் ஒருகால் திருப்தியைத் தெரிவித்திருக்கலாம்; ஆனால் நம் வேலைத்திட்டத்தை மேற்கொண்டவர்களிடம் எவ்வித உறுதியான நோக்கு நிலையும் இல்லாதிருப்பது, முழு திருப்தியைப் பாழ்படுத்திவிடக் கூடியது.

ரபோச்சியே தேலோ லீப்க்னெஹ்ட் பெயரை வீணாகக் குறிப்பிட்டுள்ளது. ஒரு தனிப்பட்ட பிரச்சினைபற்றிய கிளர்ச்சியின் போர்த்தந்திரங்களையோ, கட்சி அமைப்பின் ஏதாவதொரு விவரம் பற்றிய போர்த்தந்திரங்களையோ, 24 மணி நேரத்தில் மாற்றிக் கொள்வது சாத்தியம். ஆனால் போர்த் தன்மை கொண்ட அமைப்பும் திரளான மக்களுக்கிடையே அரசியல் கிளர்ச்சியும் பொதுவாக எப்போதும் இன்றியமையாத தேவைதானா என்பதைக் குறித்துத் தம் கருத்தை 24 மணியில், ஏன், 24 மாதத்தில்கூட, எந்தக் கோட்பாடும் இல்லாத நபர்கள்தான் மாற்றிக் கொள்ள முடியும். இதைப் பொறுத்தமட்டில், சூழ்நிலை மாறிவிட்டதென்றும் காலம் மாறிவிட்டதென்றும் வாதிப்பது பரிகசிக்கத்தக்கதாகும்; போர்த்தன்மை வாய்ந்த அமைப்பை உருவாக்குவதும் அரசியல் கிளர்ச்சியை நடத்துவதும் ''மந்தமான, அமைதியான'' எல்லாச் சூழ்நிலைகளிலும், ''புரட்சிகரமான ஊக்கம் குன்றித் தேயும்'' எல்லாக் காலங்களிலும் கட்டாயமாக ஆற்ற வேண்டிய கடமையாகும். அது மட்டுமல்ல. அந்தச் சூழ்நிலையிலும் அந்தக் காலப் பகுதிகளிலும்தான், இத்தகைய வேலை மிக அவசியமாகும்; ஏனென்றால், புரட்சிக் கலகங்கள் திடீரென்று வெடித்தெழும் நேரங்களில் அமைப்பை அமைப்பதென்பது காலம் கடந்த முயற்சி ஆகிவிடும். நொடி நேர எச்சரிக்கையில் செயலில் இறங்குவதற்குத் தயார் நிலையில் அமைப்பு இருக்க வேண்டும். ''இருபத்துநான்கு மணி நேரத்தில் போர்த்தந்திரங்களை மாற்றிக் கொள்வதாம்''! ஆனால் போர்த்தந்திரங்களை மாற்றிக் கொள்வதற்கு முதலிலேயே போர்த்தந்திரங்களை வகுத்திருக்கவேண்டுமே. எல்லாவிதச் சூழ்நிலைகளிலும் எல்லாக் காலங்களிலும் நடத்தப்பட்ட அரசியல் போராட்டத்தில் சோதிக்கப் பெற்ற வலுவான அமைப்பு இல்லாமல், உறுதியான கோட்பாடுகளால் ஒளி

யூட்டப்பட்டு விடாப்பிடியாக நிறைவேற்றப்பெறும் முறையான செயல்திட்டத்தைப் பற்றிப் பேசுவதற்கே இடமில்லே. அத்தகைய செயல்திட்டமே போர்த்தந்திரங்களென்று குறிப்பிடப் பெறுவதற்குத் தகுதியானது. இவர்களது கூற்றைத் தான் சற்றுப் பார்ப்போம்; ''வரலாற்று முக்கியத்துவம் வாய்ந்த காலம்'', பயங்கரவாதம் என்ற ''புத்தம் புதிய'' பிரச்சினையை நம் கட்சிக்குமுன் வைத்திருக்கிறது என்று 'சொல்கிருர்கள். நேற்று அரசியல் அமைப்பும் கிளர்ச்சியும் 'புத்தம் புதிய'' பிரச்சினைகளாக இருந்தனவாம்; இன்றே பயங்கரவாதம் ''புத்தம் புதிய'' பிரச்சினையாக உருவாகியிருக்கிறதாம். முந்தையதற்கும் பிந்தையதற்கும் இடையே உள்ள தொடர்பைச் சிறிதும் நினைவுகூராத இந்த நபர்கள், போர்த்தந்திரங்களைத் தீவிரமாக மாற்றுவதைப் பற்றி விவாதிப்பது விந்தையாக இல்லையா?

நல்ல காலமாக ரபோச்சியே தேலோவின் கருத்து சரியில்லை. பயங்கரவாதம் என்பதைப் புதிய பிரச்கினையாகக் கருதுவதற்கு சிறிதும் ஆதாரமில்லை. இப்பிரச்சினையைப் பற்றி ருஷ்ய சமூக-ஜனநாயகவாதிகளுக்கிடையே உறுதியாக நிலவிய கருத்து என்ன என்பதைச் சுருக்கமாக விளக்கினல் போதுமானது.

கோட்பாடு ரீதியில் நாம் பயங்கரவாதத்தை ஒரு பொழுதும் நிராகரித்ததில்லை; நிராகரிக்கவும் முடியாது. பயங்கரவாதம் என்பது போராட்ட நடவடிக்கையில் ஒருவகையாகும். அது படைகளின் குறிப்பிட்ட நிலையையும், குறிப்பிட்ட சூழ்நிலைகளையும் பொறுத்து, போராட்டத்தின் குறிப்பிட்ட தருணத்தில் முற்றிலும் பொருத்தமாக இருப்பதுமட்டுமின்றி இன்றியமையாததாகவும்கூட இருக்கலாம். ஆனல் இவர்களது கூற்றின் சாரம் என்ன? போராட்டத்தின் முழு ஏற்பாட்டுடன் நெருக்கமாகப் பின்னிப் பிணைந்த வகையில், களம் புகுந்து போர் புரியும் படையின் ஒரு நடவடிக்கையாக இவர்கள் இப்போது பயங்கரவாதத்தைக் கருதாமல், எந்தப் படையுடனும் தொடர்பற்ற விதத்தில், தனித்து நிற்கும் தாக்குச் செயலாகவே அதனைக் கருதிப் பேசுகிருர்கள். மைய அமைப்பு இல்லாத நிலையில், வட்டாரப் புரட்சி அமைப்புகள் பலவீனமாக இருக்கும் நிலையில், பயங்கரவாதம் இந்த

வகையிலேதான் உருவாகும். எனவேதான், தற்போதைய சூழ்நிலையில் இத்தகைய போராட்ட முறை காலத்திற்கு ஒவ்வாததாயும் பொருத்தமற்றதாயும் உள்ளதென்று நாம் உறுதியாகச் சாதிக்கிறோம். மேலும் இப்போராட்ட முறை தீவிரமாகப் போராடும் வீரர்களின் கவனத்தை, முழு இயக்கத்தின் நலன்களைக் கருதுங்கால் மிகமிக அதிகமான முக்கியத்துவம் வாய்ந்த உண்மைக் கடமையிலிருந்து அப்பால் திருப்புகிறது என்றும், அது அரசாங்கச் சக்திகளை அல்ல, புரட்சிச் சக்திகளையே சீர்குலைக்கிறது என்றும் நாம் உறுதியாகப் பிரகடனம் செய்து வருகிறோம். அண்மைகால நிகழ்ச்சிகளை நினைவூட்டிக் கொள்ளுங்கள்: நம் கண்ணெதிரே, மிகப் பரந்த அளவிலான நகரத் தொழிலாளரும் ''சாமானியக் குடிகளும்'' போராட்டத்தில் குதிக்கத் துடிதுடிக்கிறார்கள். ஆனால் புரட்சியாளர்களுக்குத் தலைவர்களையும் அமைப்பாளர்களையும் கொண்ட செயற்குழு எதுவும் இல்லை. இத்தகைய சூழ்நிலைகளில் ஆற்றல் மிக்க புரட்சியாளர்கள் பயங்கரவாதத்தைத் தழுவுவதால், நாம் எந்தப் போர்ப் படைகள் மீது உண்மையில் நம்பிக்கை வைக்கலாமோ அந்தப் போர்ப் படைகள் பலவீனமடையும் என்ற ஆபத்து ஏற்படாதா? அதிருப்தி அடைந்து, எதிர்ப்பு தெரிவித்துக் கொண்டு, போராட்டத்துக்குச் சித்தமாயிருப்பவர்களும், சிதறியிருக்கும் காரணத்தால் மட்டுமே வலுக்குறைந்திருப்பவர்களுமான திரளான மக்களுக்கும் புரட்சி அமைப்புகளுக்குமிடையே உள்ள தொடர்பு துண்டிக்கப்பெறும் என்ற ஆபத்து ஏற்படாதா? அந்தத் தொடர்புதானே நமது வெற்றிக்கான ஒரே உத்தரவாதம். தனிப்பட்ட வீரச்செயல்களின் முக்கியத்துவத்தை மறுக்கும் நோக்கம் நமக்குச் சிறிதும் இல்லை. ஆனால் பயங்கரவாதத்தை மிக அதிகமாகப் பயன்படுத்துவதை எதிர்த்தும், அதை முதன்மையான, அடிப்படையான போராட்ட முறையாகக் கருதுவதை எதிர்த்தும் கடுமையாக எச்சரிப்பது நம் கடமை. மேற்சொன்ன கருத்து இப்போது மிகப் பலரை ஈர்த்திருக்கிறது. பயங்கரவாதம் என்பது போராட்ட நடவடிக்கைகளில் முறையானதொன்றாக ஒரு பொழுதும் இருக்க முடியாது. அதிகமாகச் சொல்லப்

போனுல், தீர்மானமான தாக்குதலின் வழிதுறைகளில் ஒன்ருக அது பயன்படலாம். ஆனுல் தீர்மானமான தாக்குதலைத் தொடுக்கும்படி மக்களை இப்போது அழைக்க முடியுமா? ரபோச்சியே தேலோ அப்படித்தான் நினைப்பதாகத் தோன்றுகிறது. எவ்வாருயினும், ''தாக்கும் படையில் அணிதிரளுங்கள்!'' என்று அது கூவுகிறது. ஆனுல் இவ்வாறு கூவுவது வெறும் உணர்ச்சி வேகமே தவிர விவேகமல்ல. நம் படை பலத்தின் பெரும்பகுதி, தொண்டர்களையும் எழுச்சிக்காரர்களையும் கொண்டது. நிரந்தரமான படைப் பிரிவுகள் ஒரு சிலவே நம்மிடம் உள்ளன; அவையும் திரட்டப்படவில்லை; ஒன்ருேடொன்று இணைக்கப்படவில்லை; தாக்கும் படைகள் அமைப்பது கிடக்க, இந்தப் படைகள் பொதுவில் ராணுவ வரிசையில் அணிவகுப்பதற்கான பயிற்சியைக்கூடப் பெறவில்லை. இந்தச் சூழ்நிலைகளில் நம்முடைய போராட்டத்தின் பொது நிலைமைகளைக் கூர்ந்து நோக்கவல்ல எவருக்கும், நிகழ்ச்சிகளின் வரலாற்று வளர்ச்சியில் உள்ள ஒவ்வொரு ''திருப்பத்திலும்'' அந்தப் பொது நிலைமைகளைப் பற்றி விழிப்பாயிருக்கவல்ல எவருக்கும், தெளிவாயிருக்க வேண்டியது என்னவென்ருல், இந்த நேரத்தில் நமது முழக்கம் ''தாக்குவதற்கு முற்படு'' என்பதாகாது; மாருக, ''பகைவனின் கோட்டையை முறையாக முற்றுகை இடு'' என்பதாதல் வேண்டும். வேறு வகையில் சொன்னுல், நம் கட்சியின் உடனடிக் கடமை, நமக்கு இப்போது உள்ள எல்லாச் சக்திகளையும் உடனே தாக்குதலுக்கு அழைப்பதல்ல; மாருக, புரட்சிகரமான அமைப்புக்கு ஏற்பாடு செய்வதற்கு அழைப்பதாகும். அந்த அமைப்பிற்கு எல்லாச் சக்திகளையும் ஒன்றுசேர்க்கவும், இயக்கத்தைப் பெயரளவில் அன்றி, நடைமுறையில் நடத்தவும் ஆற்றல் இருக்க வேண்டும்; அதாவது அந்த அமைப்பு ஒவ்வொரு கண்டன நடவடிக்கையையும் திடீர் எழுச்சியையும் ஆதரிக்கவும், தீர்மானப் போருக்கு வேண்டிய ராணுவ பலத்தை அதிகப்படுத்தி வலுப்படுத்துவதற்கு அவற்றைப் பயன்படுத்தவும் எந்த நேரத்திலும் சித்தமாயிருக்க வேண்டும்.

கோட்பாடு ரீதியில் இந்த முடிவை ஆட்சேபிக்கும்

நபர்களைக் கண்டுபிடிப்பது மிகவும் கடினமாகும். ஏனென்றால் பிப்ரவரி-மார்ச்சு நிகழ்ச்சிகள்[31] கற்பிக்கும் பாடம் மிகவும் தெளிவானது. ஆனால் இந்த நேரத்தில் நமக்கு வேண்டியிருப்பது பிரச்சினைக்குக் கோட்பாடு ரீதியில் முடிவு காண்பது அல்ல; அதற்கு நடைமுறைத் தீர்வு காண்பதேயாகும். எத்தகைய அமைப்பு தேவை, எவ்வகைப்பட்ட வேலைக்கு அது அவசியம்—இதைத் தெளிவாகப் புரிந்து கொள்ள வேண்டும் என்பது மட்டுமல்லாமல் அந்த அமைப்புக்குரிய சரிநுட்பமான திட்டத்தையும் வகுக்க வேண்டும்; அப்போதே, அந்த அமைப்பைக் கட்டியமைக்கும் வேலையை எல்லாத் திசைகளிலிருந்தும் தொடங்க முடியும். இந்தப் பிரச்சினையின் அவசரத்தையும் முக்கியத்துவத்தையும் கருதி, நாம் ஒரு திட்டத்தின் சுருக்கத்தைத் தோழர்கள் முன் சமர்ப்பிக்கிறோம்; இதனை விவரமாக விளக்கும் ஒரு துண்டுப்பிரசுரம் தயாராகிக் கொண்டிருக்கிறது.[32]

நம் கருத்தில், ஓர் அகில ருஷ்ய அரசியல் செய்தித்தாளை நிறுவுவதே, நம் செயலின் ஆரம்பப் புள்ளியாக, நாம் விரும்பும் அமைப்பைப் படைக்கும் முதல் நடைமுறை வேலையாக இருக்க வேண்டும். இந்தச் செய்தித்தாளே அமைப்பை ஒரே சீராக வளர்க்கவும் செழுமைப்படுத்தவும் விரிவுபடுத்தவும் அடிப்படையம்சமாகப் பயன்படும். எல்லாவற்றிற்கும் மேலாக நமக்கு அவசியமானது ஒரு செய்தித்தாளே. அதில்லாமல் நாம் கோட்பாடுரீதியில் முரணில்லாததும் முழுமையானதுமான பிரசாரத்தையும் கிளர்ச்சியையும் முறையாக நடத்த முடியாது. ஆனால் அத்தகைய பிரசாரத்தையும் கிளர்ச்சியையும் நடத்துவது பொதுவில் சமூக-ஜனநாயகவாதத்தின் நிலையான, முக்கியமான கடமையாக, குறிப்பாகத் தற்காலத்துக்குரிய அவசரக் கடமையாகத் திகழ்கிறது; ஏனெனில் இப்பொழுதே மிகப் பரவலான மக்கட்பகுதிகளிடையே அரசியலிலும் சோஷலிஸம் பற்றிய பிரச்சினைகளிலும் மிக அதிக அக்கறை கிளம்பியிருக்கிறது. தனி நபர்களின் செல்வாக்கினாலும் வட்டாரத் துண்டுப்பிரசுரங்களாலும் சிறு புத்தகங்களாலும் பிறவற்றாலும் நடைபெறுகின்ற சிதறலான கிளர்ச்சியை முறையான பொதுக் கிளர்ச்சி மூலம் வலுப்

படுத்தும் அவசியம் இன்று போல் என்றும் இருக்கவில்லை. இந்தப் பொதுக் கிளர்ச்சியைப் பத்திரிகைகள் மூலமே முறையாக நடத்த முடியும். இதுவே நமது போர் நடவடிக்கைகளின் ஆரம்பத் துறையானாலும் மிக முக்கியமான துறையாகும். இதை நாம் எவ்வளவு உறுதியாக நிறுவியிருக்கிறோம் என்பதைக் கணிப்பதற்குச் செய்தித்தாள் எவ்வளவு அடிக்கடியும் ஒழுங்காகவும் வெளியிடப்படுகிறது (வினியோகிக்கப் படுகிறது) என்பதே மிகத் துல்லியமான அளவுகோலாகப் பயன்படும் என்றால் அது மிகையாகாது. மேலும், நமக்குத் தேவையான பத்திரிகை, அகில ருஷ்யப் பத்திரிகையாகவே இருக்க வேண்டும். பத்திரிகைகளின் மூலம் மக்கள் மீதும் அரசாங்கத்தின் மீதும் நமது செல்வாக்கை நாம் ஒன்றுபடுத்த முடியவில்லையானால், அவ்வாறு இருக்கும் வரையில், செல்வாக்கின் அதிக சிக்கலான, கடினமான, ஆனால் தீர்மானமான இதர வழிமுறைகளை ஒன்றிணைப்பது பற்றிச் சிந்திப்பதெல்லாம் வெறுங் கற்பனையேயாகும். சித்தாந்த ரீதியிலும் நடைமுறை, நிறுவன வழியிலும் நம் இயக்கத்தை மிக அதிகமாகப் பாதிக்கும் குறைபாடு என்ன? சிதறியிருப்பதேயாகும்; மிகப் பெரும்பாலான சமூக-ஜனநாயகவாதிகள் கிட்டத்தட்ட முழுமையாக வட்டார வேலைகளில் முழுகிக் கிடப்பதேயாகும். இந்த வேலைகள் அவர்களின் கண்ணோட்டத்தையும் செயல்களின் பரப்பையும் மறைமுகமாகச் செயல்படுவதில் திறனையும் ஆயத்தமான நிலையையும் குறுக்கிவிடுகின்றன. சிதறுண்டு கிடக்கும் இந்நிலையில்தான் முன்னே குறிக்கப்பட்ட நிலையில்லாமை, ஊசலாட்டம் ஆகியவற்றின் மிக ஆழமான வேர்களைப் பார்க்க வேண்டும். இந்தக் குறைபாட்டைக் களைந்தெறிவதில், பல்வேறு வட்டார இயக்கங்களை ஒரே அகில ருஷ்ய இயக்கமாக மாற்றியமைப்பதில், எடுத்துக் கொள்ள வேண்டிய முதல் நடவடிக்கை, அகில ருஷ்யச் செய்தித்தாளைத் தொடங்குவதேயாகும். கடைசியாக, நமக்கு தேவையான பத்திரிகை ஓர் அரசியல் செய்தித்தாளாகவே இருக்க வேண்டும். அரசியல் செய்தித்தாள் ஒன்று இல்லாமல், அரசியல் இயக்கம் என்று அழைக்கத் தகுதியுடைய இயக்கத்தைப் பற்றி இன்றைய ஐரோப்பாவில்

சிந்திக்கவே முடியாது. அச்செய்தித்தாள் இல்லாமல், நமது கடமையை—அரசியல் அதிருப்தியையும் கண்டனத்தையும் வெளிப்படுத்தும் அம்சங்கள் அனைத்தையும் ஒன்றுசேரத் திரட்டி, அவற்றைக் கொண்டு பாட்டாளி வர்க்கத்தின் இயக்கத்தைச் செழுமைப்படுத்தும் கடமையை—நாம் நிறைவேற்ற முடியவே முடியாது. நாம் முதல் நடவடிக்கையை எடுத்திருக்கிறோம்; அதாவது, தொழிலாளி வர்க்கத்திடையே, ''பொருளாதார நோக்கில்'' ஆலைகளில் நிகழும் அக்கிரமங்களை அம்பலப்படுத்த வேண்டுமென்ற ஆர்வத்துடிப்பை எழுப்பிவிட்டிருக்கிறோம். இப்பொழுது அடுத்த நடவடிக்கையை எடுக்க வேண்டும்: அதாவது கூடுதலாகவோ குறைவாகவோ அரசியல் உணர்வு பெற்றுள்ள எல்லா மக்கட் பகுதிகளிடமும் **அரசியல் நோக்கில்** அக்கிரமங்களை அம்பலப் படுத்த வேண்டுமென்ற மனவெழுச்சியை உண்டாக்குவது அவசியம். தற்பொழுது, அரசியல் அக்கிரமங்களை அம்பலப் படுத்தும் குரல்கள் மெலிந்து நலிவுற்று, அரிதாகி, நடுங்கி நிற்கும் நிலையினால், நாம் மனந்தளரவே கூடாது. மக்கள் அனைவரும் போலீஸ் அடக்குமுறைக்கு முற்ற முழுக்க அடங்கிக் கிடக்கிறார்கள் என்பது இதற்குக் காரணம் இல்லை. உண்மையான காரணம் என்னவென்றால் இச்செயலில் ஈடுபடத் திறமையும் சித்தமும் உள்ளவர்களுக்கு ஏறிப்பேச ஒரு மேடை இல்லை; பேச்சாளர்களின் பேச்சுகளை ஆவலுடன் கேட்டு அவர்களை ஊக்குவிக்கக் கூட்டத்தினர் இல்லை. தவிரவும், ''சர்வ வல்லமை வாய்ந்த'' ருஷ்ய அரசாங்கத்தின் மீது குறை சொல்வதற்கேற்ற சக்தியை மக்களிடையே எங்கும் அவர்கள் காணுவதற்கில்லை. ஆயினும் இவையெல்லாம் மின்னல் வேகத்துடன் இப்பொழுது மாறி வருகின்றன. இப்படிப் பட்ட சக்தி இருக்கத்தான் செய்கிறது. இது புரட்சிகரமான பாட்டாளி வர்க்கமாகும். அரசியல் போராட்டத்திற்குத் தன்னைக் கூவி அழைக்கும் அறைகூவலுக்குச் செவி கொடுத்து அதை ஆதரிப்பதுமட்டும் அல்லாமல், போராட்டத்தில் தைரியமாக இறங்குவதற்கும் தான் ஆயத்தமாக இருப்பதை அது ஏற்கெனவே வெளிப்படுத்திக் காட்டியுள்ளது. நாம் இப்போது நாடெங்கும் ஜார் ஆட்சியை அம்பலப்படுத்துவதற்

கான ஓர் அரங்கத்தை அமைக்கும் நிலையில் இருக்கிறோம், அத்தகைய அரங்கத்தை அமைப்பது நம் கடமையாகும். அந்த அரங்கம் சமூக-ஜனநாயகவாதப் பத்திரிகையாக இருக்க வேண்டும். ருஷ்யத் தொழிலாளி வர்க்கம், ருஷ்ய சமுதாயத்தின் மற்ற வர்க்கங்களினின்றும் பிரிவுகளிலிருந்தும் வேறுபட்டதாய் அரசியல் அறிவைப் பெறுவதில் நிலையான அக்கறை காட்டுகிறது; அவ்வர்க்கத்திடையே சட்டவிரோதமான இலக்கியத்துக்கு எப்பொழுதும் (அதிகக் கொந்தளிப்பு ஏற்படும் காலகட்டங்களில் மட்டும் அல்ல) மிகப் பெரிய கிராக்கி உண்டு. திரளான மக்களிடையே இத்தகைய பெரிய கிராக்கி ஏற்பட்டிருப்பது, அனுபவமுள்ள புரட்சித் தலைவர்கள் தோன்றியிருப்பது, தொழிலாளி வர்க்கம் ஓர் இடத்தில் குவிந்திருப்பது—இதுதான் இவ்வர்க்கத்தைப் பெரிய நகரங்களின் தொழிலாளர் சேரிகளிலும் தொழிற்சாலை குடியிருப்புகளிலும் உண்மையான சொந்தக்காரனுகச் செய்கிறது—இக்காரணங்களினுல் எல்லாம் ஓர் அரசியல் செய்தித்தாளைத் தொடங்குவது பாட்டாளி வர்க்கத்திற்கு முற்றிலும் சாத்தியமான செயலாகிவிடுகிறது. பாட்டாளி வர்க்கத்தின் வாயிலாக அந்தப் பத்திரிகை நகர்ப்புற சிறு முதலாளித்துவத்தினர், நாட்டுப்புறக் கைத்தொழிலாளர்கள், கிராம விவசாயிகள் ஆகியோரின் அணிகளில் ஊடுருவி, உண்மையிலேயே பொதுமக்களுக்குரிய அரசியல் செய்தித்தாளாகிவிடும்.

எனினும், செய்தித்தாள் ஆற்ற வேண்டிய பங்கு, கருத்துக்களைப் பரப்புவதிலும் அரசியல் அறிவைப் புகுத்துவது, அரசியல் கூட்டாளிகளை ஈர்த்துக் கொள்வது ஆகிய நடவடிக்கைகளில் மட்டும் அடங்கிவிடுவதில்லை. பத்திரிகை என்பது கூட்டுத்துவப் பிரசாரகனுகவும் கூட்டுத்துவக் கிளர்ச்சிக்காரனுகவும் இருப்பதோடு கூட்டுத்துவ ஒழுங்கமைப்பாளனுகவும் உள்ளது. இவ்வகையில் இதனைக் கட்டிடம் கட்டும்பொழுது அதனைச் சுற்றி எழுப்பும் சாரத்திற்கு ஒப்பிடலாம்; சாரம் கட்டிடத்தின் புற வடிவத்தைக் காட்டுகிறது; தனித் தனிக் கட்டிடத் தொழிலாளர்களிடையே உள்ள தொடர்புக்கு வசதி ஏற்படுத்தி வேலையைப் பிரித்துக் கொடுக்கவும் ஒழுங்கமைந்த உழைப்பினுல் அடையப் பெற்ற பொதுப்

பலன்களைக் கணித்தறியவும் உதவுகின்றது. செய்தித்தாளின் உதவியாலும் தொடர்பினுலும் ஒரு நிரந்தர அமைப்பு தாளுகவே அமையத் தொடங்கும். அந்த அமைப்பு வட்டார வேலைகளில் மட்டும் அன்றி, முறையான பொது வேலையிலுங்கூட ஈடுபடும்; அரசியல் நிகழ்ச்சிகளைக் கவனமாகக் கண்காணிக்கவும், அவற்றின் முக்கியத்துவத்தையும் மக்கட்தொகையின் பல்வேறு பகுதியினரின்மீது அவை செலுத்தும் செல்வாக்கையும் மதிப்பிடவும், புரட்சிகரமான கட்சி இந்நிகழ்ச்சிகளை மாற்றி உருவாக்குவதற்கேற்ற வழிமுறைகளை வகுக்கவும் அது தன் உறுப்பினர்களுக்குப் பயிற்சி அளிக்கும். பத்திரிகைகளுக்கு முறையாகச் செய்தி வழங்குவது, பிரதிகளைச் சரியாக வினியோகிப்பது ஆகிய செயல்துறைப் பணிமட்டுமே ஒன்றுபட்ட கட்சியின் வட்டார ஏஜெண்டுகளடங்கிய வலைப் பின்னலைப் படைப்பதை இன்றியமையாததாக்கிவிடும். அந்த ஏஜெண்டுகள் ஒருவரோடொருவர் நேரடியான தொடர்பு கொள்வார்கள்; பொது நிலைமைகளோடு அறிமுகமாகி இருப்பார்கள், அகில ருஷ்ய வேலையின் தனித்தனிக் கடமைகளை ஒழுங்காக நிறைவேற்றப் பழக்கம் பெறுவார்கள்; மேலும், அந்தந்தப் புரட்சி நடவடிக்கைகளை நடத்துவதன் மூலம் தங்கள் வன்மையைச் சோதித்துப் பார்ப்பார்கள். இந்த ஏஜெண்டுகளின் வலைப்பின்னல் அமைப்பே* நமக்குத் தேவையான அமைப்பின் அடிப்படையாக விளங்கிவிடும்; அதாவது நாடு முழுமையும் தழுவி நிற்கக் கூடிய அளவுக்குப் பெரிய ஒரு அமைப்பாகும் அது; கருரான, விவரமான வேலைப் பிரிவினை ஏற்படுத்தக் கூடிய அளவுக்கு அது பரந்ததாயும்

---

* நமது கட்சியின் வட்டாரக் கமிட்டிகளோடு (குழுக்கள், வட்டங்கள் ஆகியவற்ரேடு) நெருங்கிய தொடர்பு கொண்டு வேலை செய்தால்தான் இந்த ஏஜெண்டுகளுக்கு வெற்றி கிடைக்கும் என்பது தெளிவு. பொதுவில், கட்சியை ஒன்றுபடுத்துவதற்காகப் பன்முறை முயன்ற கமிட்டிகளின் — இன்றில்லாவிட்டால் நாளைக்கு, ஓர் உருவில் இல்லாவிட்டால் வேருெரு வடிவில் அந்த ஒற்றுமையை நிச்சயமாக நிறுவவிருக்கும் அக்கமிட்டிகளின்—தீவிர ஆதரவுடன்தான் நாம் முன்வைத்திருக்கும் திட்டம் முழுவதையும் நிறைவேற்ற முடியும்.

பல வகைப்பட்டதாயும் அமையும்; எல்லாவிதச் சூழ்நிலை களிலும் எல்லாத் ''திருப்பங்களிலும்'' எதிர்பாரா நிலைமை களிலும் தனது சொந்த வேலையைத் தளர்ந்து கொடுக்காமல் நடத்துவதற்கு அதற்குத் தேவையான உறுதி இருக்கும்; அதிக பலம் படைத்த எதிரி, தன் அணிகளை எல்லாம் ஒரே இடத்தில் திரட்டிக் குவிக்கும் போது, அவனுடன் திறந்த வெளியில் போர் செய்வதைத் தவிர்க்கவும், ஆயினும் இந்த எதிரி எளிதில் இயங்க முடியாததைத் தனக்குச் சாதகமாகப் பயன்படுத்திக் கொண்டு, அவன் சற்றும் எதிர்பாராத நேரத்திலும் இடத்திலும் அவனைத் தாக்குவதற்கும் போதிய அளவு திறன் அதற்கு இருக்கும். இன்று பெரிய நகரங்களின் தெருக்களில் ஆர்ப்பாட்டம் செய்யும் மாணவர்களுக்கு ஆதரவு கொடுக்க வேண்டுமென்ற கடமை நம்மை எதிர் நோக்கியிருக்கிறது. அது ஒப்புநோக்கில் எளிதான கடமை யாகும். நாளைக்கோ ஒரு குறிப்பிட்ட வட்டாரத்தில் உள்ள வேலையற்றவர்களின் இயக்கத்தை ஆதரிப்பது போன்ற ஒரு கடினமான கடமை நம்மை எதிர்நோக்கியிருக்கலாம். அதற்கு மறுநாள், விவசாயிகளின் எழுச்சியில் புரட்சிகர மான பங்கைக் கொள்ளும்படி நாம் தயாராய் இருக்க வேண் டிய அவசியம் ஏற்படலாம். இன்றைக்கு ஜெம்ஸ்துவோ வுக்கு[33] எதிரான அரசாங்க நடவடிக்கைகளினால் உண்டான அரசியல் நெருக்கடியை நாம் சாதகப்படுத்திக் கொள்ள வேண் டும். நாளைக்கோ வெறிகொண்ட ஒரு ஜாரிஸ்டு கொள்ளைக் கார அதிகாரிக்கு எதிரான வெகுஜனச் சீற்றத்தை ஆதரிக்க வேண்டியிருக்கும்; பகிஷ்காரம், பொதுக் கண்டனம், ஆர்ப் பாட்டங்கள் முதலியவற்றின் மூலமாக அவனை வெளிப் படையாகப் பின்வாங்கும்படி கட்டாயப்படுத்தி அவனுக்கு நல்ல பாடம் கற்பிக்க வேண்டியிருக்கும். போருக்கு இவ் வளவு தயாராயிருக்கும் நிலையை, ஒழுங்கான படையணி களது நிலையான நடவடிக்கையின் அடிப்படையில் மட்டும் தான் அடைய முடியும். பொதுவான செய்தித்தாளை நடத்தும் நோக்கத்திற்காக நம் சக்திகளை நாம் ஒன்று திரட்டினால், அந்த வேலை அதிகத் திறமை வாய்ந்த பிரசாரகர்களுக்கு மட்டு மல்லாமல், மிகவும் திறமை வாய்ந்த அமைப்பாளர்களுக்கும்

கட்சியின் அதிகத் திறன் படைத்த அரசியல் தலைவர்களுக்கும் தேவையான பயிற்சியளிக்கும், அவர்களை முன்னணிக்குக் கொண்டுவரும்; அவர்கள் தக்க தருணத்தில் தீர்மானமான போருக்காக அழைப்பு விடுக்கவும் அதற்குத் தலைமை தாங்கவும் முடியும்.

இறுதியாக, வரக் கூடிய தப்பெண்ணத்தைத் தவிர்ப்பதற்காகச் சில சொற்கள் கூறுவோம். முறையான திட்டமிட்ட தயாரிப்பைப் பற்றியே எப்போதும் பேசி வருகிறோம்; ஆனால், சரியான முற்றுகை அல்லது நன்கு ஒழுங்கமைந்த தாக்குதல் மூலமே எதேச்சாதிகாரம் வீழ்ந்து ஒழியும் என்று உட்குறிப்பாக உணர்த்துவது நம்முடைய விருப்பமல்ல. அத்தகைய கருத்து முட்டாள்தனமாகவும் புத்தகப் புழுவுக்குரியதாகவும் இருக்கும். அதற்கு மாறாக, எல்லாப் பக்கங்களிலிருந்தும் இடைவிடாமல் அச்சுறுத்தும் தன்னியல்பாகத் தோன்றும் திடீர் வெடிப்புக்களில் ஒன்றின் நிர்ப்பந்தத்தாலோ, எதிர்பாராத அரசியல் சிக்கல்களின் நிர்ப்பந்தத்தாலோ எதேச்சாதிகாரம் தகர்ந்து ஒழியும் என்பது முற்றிலும் சாத்தியமானது; வரலாற்றுப் போக்கில் அதிக வாய்ப்புள்ளது. ஆனால் யோசனையற்ற முரட்டுத் துணிச்சலான செயல்களில் வழுக்கி விழுவதைத் தவிர்க்க விரும்பும் எந்த அரசியல் கட்சியும், மேற்சொன்ன திடீர் வெடிப்புக்களையும் சிக்கல்களையும் பற்றிய நம்பிக்கையின் அடிப்படையில் தன் நடவடிக்கையை அமைத்துக் கொள்ள முடியாது. நம் வழியே நாம் போக வேண்டும்; நம்முடைய முறையான வேலையில் ஒரே விடாப்பிடியாக ஈடுபட வேண்டும்; எதிர்பாராத நிகழ்ச்சிகள் மீது எவ்வளவு குறைவாக நாம் நம்பிக்கை வைக்கிறோமோ, அவ்வளவுக்கு ''வரலாற்றுத் திருப்பங்கள்'' நம்மைத் திகைக்கச் செய்ய மாட்டா என்ற உறுதி அதிகமாகும்.

*1901 மே மாதத்தில்*
*எழுதப் பெற்றது*

*1901 மே மாதத்தில்*
*இஸ்க்ரா, இதழ் 4ல்*
*வெளிவந்தது*

நூல் திரட்டு,
தொகுதி 5,
பக்கங்கள் 1-13

# பொருளாதாரவாதத்தின் ஆதரவாளர்களுடன் ஓர் உரையாடல்

*நம் பிரதிநிதிகளில் ஒருவரிடமிருந்து கிடைத்ததை அப்படியே முழுமையாகக் கீழே தருகிறோம்:*

''ருஷ்யச் சமூக-ஜனநாயகவாதப் பத்திரிகைகளுக்கு ஒரு கடிதம்.

''இஸ்க்ராவைப் பற்றிய நம் கருத்துக்களை வெளியிடுமாறு நாடுகடத்தப்பட்டுள்ள நம் தோழர்கள் சொன்ன தற்கிணங்க அந்தப் பத்திரிகையுடன் நாம் கருத்துவேறுபாடு கொள்வதற்கான காரணங்களைக் கூறுவது என்று தீர்மானித்துள்ளோம்.

*''அரசியல் போராட்டத்தின் பிரச்சினைகளுக்கென்று தனியாக ஒரு சமூக-ஜனநாயகவாதப் பத்திரிகை வெளிவருவது முற்றிலும் காலப்பொருத்தமுள்ளது என்று நாங்கள் அங்கீகரிக்கிற அதே நேரத்தில் இப்பணியை மேற்கொண்டிருக்கும் இஸ்க்ரா அதைத் திருப்திகரமாக நிறைவேற்றியிருப்பதாக நாங்கள் கருதவில்லை. அதில் நெடுகிலும் இழையோடிக் கொண்டிருக்கும் முதன்மையான குறைபாடு—மற்ற சிறிய பெரிய குறைபாடுகளுக்கெல்லாம் மூலகாரணமாக இருப்பது—இதுவே: இயக்கத்தின் சித்தாந்தவாதிகள் அதன் பல்வேறு போக்குகள் மீது செலுத்தும் செல்வாக்குக்கு மிதமிஞ்சிய முக்கியத்துவம் கொடுக்கிறது இஸ்க்ரா. அதே நேரத்தில் இயக்கத்தின் பொருளாயத அம்சங்களிலும் பொருளாயத சூழலிலும் மிகக் குறைவான கவனமே செலுத்துகிறது. இந்த அம்சங்களுக்கும் சூழலுக்கும் இடையேயுள்ள பரஸ்பர வினை ஒரு திட்டவட்டமான வகையைச் சேர்ந்த தொழிலாளர் இயக்கத்தை உண்டாக்கித் தந்து அதன் பாதையை நிர்ணயிக்கிறது. சித்தாந்தவாதிகள் எவ்வளவுதான் முயற்சித்தாலும் சரி, மிகமிக நேர்த்தியான தத்துவங்களும் வேலைத்*

திட்டங்களும் அவர்களைத் தூண்டுவதாயிருந்தாலும் சரி, இயக்கத்தை இந்தப் பாதையை விட்டுத் திசைதிருப்ப அவர்களால் முடியாது.

''இஸ்க்ராவை யூழ்னி ரபோச்சியுடன்[34] ஒப்பிடும் போது இக்குறைபாடு எடுப்பாகத் தெரிகிறது. இஸ்க்ராவைப் போல் அதுவும் அரசியல் போராட்டப் பதாகையை உயர்த்திப் பிடிக்கிறது; ஆனால் அதை தெற்கு ருஷ்யாவின் தொழிலாளி வர்க்க இயக்கத்தின் முந்தைய கட்டத்துடன் இணைக்கிறது. பிரச்சினையை இவ்வாறு முன்வைப்பது இஸ்க்ராவுக்கு வேற்றுமைப்பட்ட ஒன்றாய் உள்ளது. தீப்பொறியை காட்டுத்தீயாக விசிறி வளர்த்துவிடுவதைப் பணியாக வைத்துக் கொண்டுள்ளது இஸ்க்ரா; ஆனால் அப்படிப்பட்ட பணிக்கு அவசியமான எரிபொருளும் சாதகமான சூழ்நிலைமைகளும் தேவையாயிருப்பதை மறக்கிறது. 'பொருளாதாரவாதிகளிடமிருந்து' இஸ்க்ரா தன்னை முற்றாக விலக்கிக் கொள்கையில், பிப்ரவரி-மார்ச்சு நிகழ்ச்சிகளில் தொழிலாளிகள் கலந்து கொள்வதற்கு அவர்களின் வேலை களம் தயாரித்துக் கொடுத்ததை அது பார்க்கத் தவறுகிறது; இந்தப் பங்கெடுப்பை இஸ்க்ரா எவ்வளவோ வலியுறுத்துகிறது, பெரிதும் மிகைப்படுத்துவதாகவும் தோன்றுகிறது. 1890களின் இறுதிக் காலத்தைச் சேர்ந்த சமூக-ஜனநாயகவாதிகளின் நடவடிக்கையின்பால் எதிர்மறை நிலை கொண்டுள்ள இஸ்க்ரா, அக்காலத்தில் சில்லரைக் கோரிக்கைகளுக்கான போராட்டத்தைத் தவிர வேறெந்த வேலை செய்வதற்கும் நிலைமைகள் இருக்கவில்லை எனும் உண்மையைப் புறக்கணிக்கிறது, அந்தப் போராட்டத்தின் மாபெரும் போதனைக் குறிபொருளையும் புறக்கணிக்கிறது. முற்றிலும் தவறாகவும் வரலாற்றுப் பார்வை நிலைக்குப் புறம்பாகவும் இந்தக் காலப் பகுதியையும், ருஷ்யச் சமூக-ஜனநாயகவாதிகளினுடைய செயற்பாட்டின் இந்தப் போக்கையும் மதிப்பீடு செய்து, இஸ்க்ரா தொழிலாளர் இயக்கத்தைப் பரவலாக்கும் ஆழப்படுத்தும் 'சில்லரைக் கோரிக்கைகளுக்கான போராட்டத்திற்கும்', எல்லாவிதப் போராட்டத்தையும் எல்லாவித இயக்கத்தையும் முடக்கும் நோக்கமுடைய 'சில்லரைச் சலுகைகளுக்கும்' இடையே உள்ள வேறுபாட்டைக் காணாது, ருஷ்யச் சமூக-ஜனநாயகவாதிகளின் போர்த்தந்திரத்தை ஸுபாத்தவ் போர்த்தந்திரங்களுடன் ஒன்றெனக் காட்டுகிறது.

''சமுதாய இயக்கங்களின் குழந்தைப் பருவத்திலான சித்தாந்தவாதிகளுக்கு இனக்குறிப்பாய் இருக்கிற குறுங்குழுவாதச் சகிப்புத்தன்மையின்மைக்கு முற்றிலும் உட்பட்டிருக்கும்

இஸ்க்ரா, தன்னிடமிருந்து வேறுபடும் கருத்து ஒவ்வொன்றையும் சமூக-ஜனநாயகவாதக் கோட்பாடுகளினின்று விலகல் என்று மட்டுமல்லாமல் எதிரி முகாமுக்குத் தாவுதல் என்றும் சூடு போடத் தயாராயிருக்கிறது. அது ரபோச்சயா மீசில் ஏட்டின் மீது தொடுத்த மிகமிகக் கீழ்த்தரமான, உறுதியுடனும் ஈவிரக்கமின்றியும் கண்டிக்கத்தக்க தாக்குதல் இத்தன்மையதேயாகும். ஸுபாத்தவ் பற்றிய கட்டுரையில் இத்தாக்குதல் உள்ளது. அக்கட்டுரையில் ஸுபாத்தவ் தொழிலாளி வர்க்கத்தின் ஒரு பகுதியினரிடையே வெற்றி பெற்றிருப்பதற்கு ரபோச்சயா மீசில்தான் காரணம் என்று கற்பிக்கப்பட்டிருக்கிறது. ருஷ்யத் தொழிலாளர் இயக்கத்தின் போக்கு, பணிகள் பற்றிய கருத்துக்களில் தன்னிடமிருந்து வேறுபடுகிற மற்ற சமூக-ஜனநாயகவாத நிறுவனங்களை இஸ்க்ராவுக்குப் பிடிக்கவில்லை; சர்ச்சையின் சூட்டிலே அது சில சமயம் உண்மையை மறக்கிறது, இங்கொன்றும் அங்கொன்றுமாக உள்ள சரியாகப் போடப்படாத வார்த்தைகளைப் பிடித்துக் கொண்டு இல்லாத கருத்துக்களை எதிராளிகள் மீது சுமத்துகிறது, அடிக்கடி சிறிதேனும் முக்கியமற்ற கருத்து வேறுபாடுள்ள அம்சங்களை வலியுறுத்துகிறது, கருத்துக்களில் ஒத்துப்போகக் கூடிய ஆயிரக் கணக்கான அம்சங்களைப் பிடிவாதத்துடன் புறக்கணிக்கிறது. ரபோச்சியே தேலோ வின்பால் இஸ்க்ரா வைத்துள்ள உறவுநிலையை மனத்தில் கொண்டு இவற்றைச் சொல்கிறோம்.

''இஸ்க்ராவுக்குச் சர்ச்சையில் மிதமிஞ்சிய விருப்பம் இருக்கிறது. இதற்கு முதன்மையான காரணம், இயக்கத்தில் 'சித்தாந்தம்' (வேலைத்திட்டங்கள், தத்துவங்கள்...) வகிக்கும் பாத்திரத்தை அது மிகைப்படுத்துகிறது. ஓரளவுக்கு மேற்கு ஐரோப்பாவிலுள்ள வெளிநாடுகளுக்குக் குடியேறிய ருஷ்யர்களிடையே மூண்டெழுந்துள்ள உள் சச்சரவுகளின் எதிரொலியுமாகும் அது. அவர்கள் இந்த உள் சச்சரவுகளைப் பல வாதச்சூடுள்ள குறுநூல்கள், கட்டுரைகள் வாயிலாக உலகுக்கு அறிவிக்க ஓடிவந்துள்ளனர். நம் அபிப்பிராயத்தில், இந்தக் கருத்து வேறுபாடுகள் ருஷ்யச் சமூக-ஜனநாயகவாத இயக்கத்தின் எதார்த்தப் போக்கின் மீது அநேகமாக—ருஷ்யாவில் பணியாற்றி வரும் தோழர்களின் மத்தியிலே விரும்பத்தகாத பிளவைக் கொண்டுவந்து ஒருக்கால் அதைச் சேதப்படுத்துவது தவிர—வேறு எந்தச் செல்வாக்கும் செலுத்துவதில்லை. இக்காரணத்தை முன்னிட்டு நாம் இஸ்க்ராவின் உணர்ச்சிமிக்க வாதச் சூட்டை—குறிப்பாக அது

கண்ணியத்தின் வரம்புகளை மீறுகிறபோது—ஏற்க மறுப்பதைத் தெரிவிக்கிறோம்.

''பல்வேறு சமுதாய வர்க்கங்கள், போக்குகள்பால் சமூக-ஜனநாயகவாதம் வைத்துக் கொள்ள வேண்டிய உறவு நிலை பற்றிய பிரச்சினையில் இஸ்க்ரா காட்டும் முரணுள்ள நிலைக்கும் இந்த அடிப்படையான குறைபாடே காரணமாகும். தத்துவார்த்த நியாயங்களைக் கொண்டு எதேச்சாதிகார முறைக்கு எதிரான போராட்டத்தை உடனடியாகத் தொடங்க வேண்டுமென்று கூறி இஸ்க்ரா பிரச்சினைக்குத் தீர்வு கண்டது. தற்கால நிலவரங்களில் தொழிலாளிகளுக்கு இந்தப் பணி எவ்வளவு கடினமானது என்று அது அநேகமாக உணர்கிறது; ஆனால் இந்தப் போராட்டத்திற்குத் தொழிலாளிகள் போதிய சக்திகளைச் சேகரித்துக் கொள்ளும் வரை காத்திருக்கும் பொறுமை அதனிடம் இல்லை; எனவே இஸ்க்ரா மிதவாதிகளின், அறிவுத்துறையினரின் அணிகளிடையே நேச சக்திகளைத் தேடிக்கொள்ளத் தொடங்கியுள்ளது. இந்தத் தேட்டத்தில் அடிக்கடி அது வர்க்கப் பார்வை நிலையிலிருந்து விலகிச் செல்கிறது, வர்க்கப் பகைமைகளை மறைக்கிறது, அரசாங்கத்தின்பாலுள்ள அதிருப்தியின் பொதுத்தன்மையை முன்னணியில் வைக்கிறது—இந்த அதிருப்திக்குரிய காரணங்களும் அதிருப்தியின் அளவும் 'நேச சக்திகளிடையே' வெகுவாக வேறுபட்டிருக்கிற போதிலுங் கூட. எடுத்துக்காட்டாக, ஜெம்ஸ்துவோ பால் இஸ்க்ரா வைத்துள்ள உறவுநிலை இப்படித்தான் இருக்கிறது. ஜெம்ஸ்துவோவின் குற்றங்கண்டுபிடித்தலை மட்டும் குறியாகக் கொண்ட தாக்குதல்களை—ஜெம்ஸ்துவோ கனவான்களின் நிலத்தொடர்பான ஆவலாதிகளை விட தொழிலுக்குக் காப்பு அளிப்பதில் அரசாங்கம் அதிகமாகக் கவனம் செலுத்துவதே ஜெம்ஸ்துவோவின் இத்தாக்குதல்களை தூண்டிவிடுகிறது—அது அரசியல் போராட்டத் தீக்கொழுந்துகளாக விசிறி வளர்க்க முயற்சிக்கிறது. அரசாங்கத்தின் கண்துடைப்புச் சலுகைகளைக் கண்டு அதிருப்தியடைந்துள்ள பிரபுக் குலத்தினருக்கு இஸ்க்ரா தொழிலாளி வர்க்கத்தின் உதவியை வழங்குவதாக வாக்களிக்கிறது, ஆனால் இந்தச் சமுதாய வர்க்கங்களிடையேயுள்ள வர்க்கப் பகைமையைப் பற்றி இஸ்க்ரா ஒரு வார்த்தையேனும் சொல்லவில்லை. ஜெம்ஸ்துவோ விழித்து எழுகிறது, அதுவும் அரசாங்கத்தை எதிர்த்துப் போராடும் ஒரு பகுதியே என்று சொல்வது அனுமதிக்கத்தக்கதே என்பதை ஒப்புக்கொள்ளக்கூடும். ஆனால் நமது கூற்று, இப்படிப்பட்ட பகுதிகளுடன் ஏற்பட வாய்ப்புடைய

உடன்பாட்டின் தன்மையைப் பற்றி எவ்வித ஐயத்திற்குமிட மற்ற வகையில் தெளிவானதாகவும் திட்டமானதாகவும் இருத்தல் வேண்டும். எனினும், நம் அபிப்பிராயத்தில் வர்க்க உணர்வை மட்டுப்படுத்தும்படியான வழியிலேதான் ஜெம்ஸ் துவோவிடம் வைத்துக் கொள்ளும் உறவுநிலை பற்றிய பிரச்சினையை இஸ்க்ரா அணுகுகிறது. ஏனெனில், மிதவாதத்தையும் பல்வேறு பண்பாடு வகைப்பட்ட முயற்சிகளையும் ஆதரித்துப் பேசுகிறவர்களைப் போலவே இஸ்க்ராவும் இவ் விஷயத்தில் சமூக-ஜனநாயகவாதஇலக்கியத்தின்அடிப்படைப் பணிக்கு எதிராகச் செல்கிறது. சமூக-ஜனநாயகவாத இலக்கியத்தின் அடிப்படைப் பணி வர்க்கப் பகைமையை மறைப்பதல்ல, முதலாளித்துவ அமைப்புமுறையை விமர்சித்து அதைப் பிரித்துவைக்கிற வர்க்க நலன்களை விளக்குவதாகும். மாணவர் இயக்கத்தின் பால் இஸ்க்ரா வைத்துள்ள உறவுநிலையும் இப்படித்தான் இருக்கிறது. இருந்தபோதிலும் வேறு பல கட்டுரைகளில் இஸ்க்ரா 'சமரசம்' அனைத்தையும் கடுமையாகக் கண்டிக்கிறது; எடுத்துக்காட்டாக, கெட்டுவாதிகளின் (Guesdists) சகிப்புத்தன்மையற்ற நடத்தையை அது தாங்கிப் பேசுகிறது.

''இஸ்க்ராவின் மற்ற சிறிய குறைபாடுகளைப் பற்றியும் பிழைகளைப் பற்றியும் கவனியாமல் விட்டு விடுவோம். ஆனால், நாம் முடிவில் சொல்லவேதென்னவென்றால், இஸ்க்ராவினால் பெறக் கூடும் முக்கியத்துவத்தை நம்முடைய விமர்சனத்தின் மூலமாகச் சிறுமைப்படுத்த நாம் கிறிதேனும் விரும்பவில்லை என்று சொல்லித்தீரவேண்டியது எங்கள் கடமை என்பதே. அதன் சிறப்புகளையும் நாம் பார்க்காமல் இல்லை. ருஷ்யாவில் உள்ள ஒரு அரசியல், சமூக-ஜனநாயகவாதப் பத்திரிகை என்கிற வகையில் அதை நாம் வரவேற்கிறோம். பயங்கரவாதப் பிரச்சினையைத் திறமையாக விளக்கியது அதன் உன்னதமான சிறப்புகளில் ஒன்று என்று நாம் கருதுகிறோம். அந்தப் பிரச்சினையைப் பற்றி காலாகாலத்தில் பல கட்டுரைகளை அது வெளியிட்டது. இறுதியாக, எடுத்துக்காட்டாக விளங்கத்தக்க இலக்கிய நடையில் இஸ்க்ரா எழுதப்பட்டு வருவதை நாம் குறிப்பிடாமல் இருக்க முடியாது. இது சட்டவிரோதமான பத்திரிகைகளில் அரிதாகவே காணக்கிடக்கிறது. இஸ்க்ரா முறையாக வெளிவந்து கொண்டிருப்பதையும், ஏராளமான புதிய, சுவைமிக்க செய்திகளை வெளியிடுவதையும் நாம் குறிப்பிடாமல் இருக்க முடியாது.

''செப்டம்பர் 1901''

''தோழர்களின் ஒரு குழு

இக்கடிதத்தை எழுதியவர்களின் நேர்மையையும் கபடின்மையையும் மனதார வரவேற்கிறோம் என்று முதற்கண் தெரிவிக்க விரும்புகிறோம். கண்ணும்பூச்சி விளையாட்டு விளையாடுவதை நிறுத்த வேண்டிய நேரம் வந்துவிட்டது; தம்முடைய ''பொருளாதாரவாத'' "credo"வை* (''அரசியல்வாதிகள்'' துறந்துவிட்டுள்ள ஒதேஸ்ஸா கமிட்டியின் ஒரு பகுதியினர் செய்துள்ளது போல்) மறைப்பதையோ அல்லது உண்மையைக் கேலி செய்வது போல் தற்சமயம் '' 'பொருளாதாரவாதம்' எனும் பாவத்தைச் செய்த குற்றவாளியாக சமூக-ஜனநாயகவாத அமைப்பு ஒன்றுகூட கிடையாது'' என்று அறிவிப்பதையோ (ரபோச்சியே தேலோ வெளியிட்ட இரண்டு காங்கிரஸ்கள் எனும் குறுநூல், பக்கம் 32) நிறுத்த வேண்டிய நேரம் வந்துவிட்டது. இனிவிஷயத்துக்கு வருவோம்.

ரபோச்சியே தேலோ (குறிப்பாக இதழ் 10ஐப் பார்க்க) செய்த அதே அடிப்படையான தவற்றைத்தான் இக்கடிதத்தை எழுதியவர்கள் செய்கிறார்கள். இயக்கத்தின் ''பொருளாயத'' (''தன்னியல்பான'' என்று ரபோச்சியே தேலோ கூறுகிறது) அம்சங்களுக்கும் சித்தாந்த (உணர்வுள்ள, ''திட்டப்படி'' செயல்படுகிற) அம்சங்களுக்கும் இடையேயுள்ள உறவுகள் பற்றிய பிரச்சினையில் அவர்கள் குழம்பிப் போயிருக்கிறார்கள். ''சித்தாந்தவாதி'' எனப்பட்டவன் தன்னியல்பான இயக்கத்தின் முன்னே போய், வழியைச் சுட்டிக் காட்டி, இயக்கத்தின் ''பொருளாயத அம்சங்கள்'' தன்னியல்பாக எதிர்கொள்ளும் தத்துவ, அரசியல், போர்த்தந்திர, அமைப்புத் துறைகளைச் சேர்ந்த எல்லாப் பிரச்சினைகளையும் மற்றெல்லோரையும் முந்திக் கொண்டு தீர்க்க வல்லானாக இருந்தால்தான் அந்தப் பெயருக்குத் தகுதியுள்ளவன் ஆகிறான் என்கிற உண்மையை அவர்கள் புரிந்து கொள்ளத் தவறுகிறார்கள். ''இயக்கத்தின் பொருளாயத அம்சங்கள் பால் கவனத்தை'' உண்மையிலே செலுத்துவதற்கு அவற்றை விமர்சனக் கண் கொண்டு பார்க்க வேண்டும், தன்னியல்

* நம்பிக்கையின் சின்னம், வேலைத்திட்டம், கண்ணோட்டத்தின் கட்டுரை.—ப-ர்.

பான இயக்கத்தின் அபாயங்களையும் குறைபாடுகளையும் சுட்டிக்காட்டத் திறம் பெற்றிருக்க வேண்டும், தன்னியல்பை உணர்வின் தரத்துக்கு உயர்த்தத் திறம் பெற்றிருக்க வேண்டும். ஆனால், சூழலின், அம்சங்களின் பரஸ்பர வினையால் நிர்ணயிக்கப்பட்ட பாதையிலிருந்து இயக்கத்தைச் சித்தாந்தவாதிகளால் (அதாவது, அரசியல் உணர்வுள்ள தலைவர்களால்) திசை திருப்பிவிட முடியாது என்று சொல்வது இந்த உணர்வு அந்தப் பரஸ்பர வினையிலும் பாதையை நிர்ணயிப்பதிலும் பங்கெடுத்துக் கொள்கிறது என்கிற அரிச்சுவடி உண்மையைப் புறக்கணிப்பதாகும். ஐரோப்பாவில் உள்ள கத்தோலிக்கத் தொழிற்சங்கங்களும் முடியரசுவாதத் தொழிற்சங்கங்களுங்கூடத்தான் சூழலின், அம்சங்களின் பரஸ்பர வினையிலிருந்து தவிர்க்கமுடியாதவாறு ஏற்பட்ட விளைவாகும்; ஆனால் இந்தப் பரஸ்பர வினையில் பங்கெடுத்துக் கொண்டது பாதிரிமார்களின், ஸுபாத்தவ்களின் உணர்வு தானே தவிர சோஷலிஸ்டுகளின் உணர்வு அல்ல. (ரபோச்சியே தேலோவைப் போலவே) இக்கடிதத்தை எழுதியவர்களின் தத்துவார்த்த கருத்துக்கள் மார்க்ஸியத்தைப் பிரதிநிதித்துவப்படுத்தவில்லை; ''விமர்சகர்களும்'' பெர்ன்ஷ்டைனியவாதிகளும் ஊட்டி வளர்த்து வரும் மார்க்ஸியத்தின் போலியையே பிரதிநிதித்துவப்படுத்துகின்றன. இந்த ''விமர்சகர்களாலும்'' பெர்ன்ஷ்டைனியவாதிகளாலும் தன்னியல்பான பரிணாம வளர்ச்சியை உணர்வு பூர்வமான புரட்சி வேலையுடன் இணைக்க முடியவில்லை.

இன்றுள்ள நிலைமைகளில் இந்த ஆழ்ந்த தத்துவார்த்த வழிப்பட்ட தப்பெண்ணம் தவிர்க்க முடியாதவாறு பெரும் போர்த்தந்திரப் பிழைக்குக் கொண்டுபோய் விடுகிறது; அது ருஷ்யச் சமூக-ஜனநாயகவாதத்துக்குக் கணக்கிடவொண்ணு சேதத்தை உண்டாக்கியுள்ளது, தொடர்ந்து உண்டாக்கி வருகிறது. திரள்திரளான தொழிலாளிகளும் (அவர்களின் செல்வாக்கின் காரணமாக) மற்ற சமுதாயப் பகுதிகளும் தன்னியல்பாக விழிப்புற்று எழுவது சென்ற சில ஆண்டுகளாகத் திகைப்பூட்டும் வேகத்திலே நிகழ்ந்து வருவது உண்மை. 1898உடன் ஒப்பிட்டாலுங்கூட,[35] இயக்கத்தின்

''பொருளாயத அம்சங்கள்'' மகத்தான அளவில் வளர்ந்துள்ளன. ஆனுல் உணர்வுள்ள தலைவர்கள் (சமூக-ஜனநாயகவாதிகள்) இந்த வளர்ச்சியினின்று பின்னடைந்து வருகிருர்கள். ருஷ்யச் சமூக-ஜனநாயகவாதம் இன்று அனுபவித்து வரும் நெருக்கடிக்கு முதன்மையான காரணம் இதுவே. ஊசலாட்டத்திற்கு இரையாகாதபடி தத்துவார்த்தரீதியிலே போதிய பயிற்சி பெற்ற ''சித்தாந்தவாதிகள்'' பொது மக்கள் (தன்னியல்பான) இயக்கத்திடம் குறைவாயிருக்கிறது; புதிய இயக்கத்தின் அடிப்படையில் ஒரு போராடும் பண்புடைய அரசியல் கட்சியைப் படைப்பதற்கான பரந்த அரசியல் பார்வையும் புரட்சிகரமான ஆற்றலும் ஒழுங்கமைக்கும் திறமையும் உள்ள தலைவர்கள் அதனிடம் குறைவாயிருக்கிறது.

எனினும், தம்மளவில் இவையனைத்தும் தீமையில் பாதியாகத்தான் இருக்கும். தத்துவார்த்த அறிவு, அரசியல் அனுபவம், ஒழுங்கமைக்கும் திறமை என்பவற்றைச் சம்பாதித்துக் கொள்ள முடியும். இந்தப் பண்புகளைப் பயின்று சம்பாதித்துக் கொள்வதற்கு விருப்பம் மட்டும் இருந்தால் போதும். ஆனுல் 1897ன் முடிவிலிருந்து, குறிப்பாக 1898 இலையுதிர் காலத்திலிருந்து, ருஷ்யச் சமூக-ஜனநாயகவாத இயக்கத்தில் சில தனிநபர்களும் பத்திரிகைகளும் முன்வந்துள்ளன. இவர்கள் இக்குறைபாட்டைப் பார்க்க மறுக்கிறது மட்டுமல்ல, அதுவே ஒரு தனிச் சிறப்பு என்று அறிவித்துள்ளனர்; தன்னியல்பைப் போற்றிக் கொள்வதையும் அதற்கு அடிபணிவதையும் ஒரு தத்துவத்தின் மட்டத்துக்கு உயர்த்திநிறுத்தியுள்ளனர்; சமூக-ஜனநாயகவாதிகள் இயக்கத்தின் முன்னே நடையிட்டுச் செல்லக் கூடாது, அதன் பின்னே வாலைப்பிடித்துக் கொண்டு போக வேண்டும் என்று பிரச்சாரம் செய்கிருர்கள். (இந்தப் பத்திரிகைகளில் ரபோச்சயா மீசில் மட்டுமல்லாமல் ரபோச்சியே தேலோவும் அடங்கும். அது ''கட்டங்கள் பற்றிய தத்துவத்திலிருந்து'' தொடங்கித் தன்னியல்பையும், ''இன்றைய தருணத்தில் இயக்கத்தின் முழு உரிமைகளையும்'' ''தொடர்நிகழ்வுப்போக்கான போர்த்தந்திரங்களையும்'' கோட்பாடு ரீதியிலே தாங்கிப் பேசுவதில் சென்று முடிந்தது.)

இது வருத்தமிக்க நிலைமைதான், உண்மை. ஒரு தனி போக்கு தோன்றியிருக்கிறது என்று இதற்கு அர்த்தம். இதைப்''பொருளாதாரவாதம்'' என்று (அதன் பரந்த பொருளில்) வழக்கமாகச் சொல்வார்கள். அதன் அடிப்படையான பண்புக்கூறு, நாம் ஏற்கெனவே விளக்கியுள்ளபடி, பெருந்திரளான மக்களின் தன்னியல்பான விழிப்பெழுச்சியினின்றும் உணர்வுள்ள தலைவர்கள் பின்தங்கியிருக்கும் நிலையைப் புரிந்து கொள்ளாமையும், ஏன் அதைத் தாங்கிப்பிடித்தலுமே ஆகும். இந்தப் போக்கின் இனக்குறிப்பான பண்புக்கூறுகள் பின்வருமாறு தம்மை வெளிப்படுத்திக் கொள்கின்றன: கோட்பாடுகள் விஷயத்தில், மார்க்ஸியத்தைக் கொச்சைப்படுத்துவது, சந்தர்ப்பவாதத்தின் கடைசிக் கொழுந்தாக முளைத்திருக்கும் இளமான நவீனகாலத்திய ''விமர்சனத்தின்'' எதிரே நிற்க இயலாமை; அரசியல் விஷயத்தில், அரசியல் கிளர்ச்சியையும் அரசியல் போராட்டத்தையும் குறுக்கித்தடுப்பது, அல்லது அற்பமான நடவடிக்கைகளாகத் தாழ்த்திவிடுவது, சமூக-ஜனநாயகவாதிகள் பொதுவான ஜனநாயக இயக்கத்தின் தலைமையைத் தங்கள் கையில் எடுத்துக் கொள்ளாவிட்டால் அவர்களால் என்றைக்கும் எதேச்சாதிகாரமுறையைத் தூக்கியெறிய முடியாது என்பதைப் புரிந்து கொள்ளத் தவறுவது; போர்த்தந்திரங்கள் விஷயத்தில், முற்றிலும் நிலையின்மை (சென்ற வசந்த காலத்தில் ரபோச்சியே தேலோ பயங்கரவாதம் எனும் ''புதிய'' பிரச்சினையின் முன்னே திகைத்து நின்றது; ஆறு மாதங்களுக்குப் பின்னர்தான், வெகுவாக ஊசலாடிய பின், எப்பொழுதும் போல் இயக்கத்தின் வாலைப்பிடித்து நடந்து ஒரு ஈரொட்டான தீர்மானத்தில் பயங்கரவாதத்தை எதிர்ப்பதாகத் தெரிவித்தது); ஒழுங்கமைப்பு விஷயத்தில், தயாரிப்பு வகைப்பட்ட போராட்டத்தையும் ஒவ்வொரு எதிர்பாராத திடீரெழுச்சியையும் இறுதியில் தீர்மானகரமான முடிவுத் தாக்குதலையும் தலைமை தாங்கி நடத்தும் திறமுள்ள புரட்சியாளர்களைக் கொண்ட ஒரு வலுவுள்ள, மையப்படுத்தப்பட்ட அமைப்பை நிறுவ வேண்டிய நமது கடமையை இயக்கத்தின் பொதுமக்கட்தன்மை குறைப்பதற்குப் பதிலாக அதிகப்படுத்தவே செய்கிறது என்பதைப் புரிந்து கொள்ளத் தவறுவது.

இந்தப் போக்கை எதிர்த்து ஒரு சமரசமற்ற போராட்டத்தை நடத்தி வந்துள்ளோம், தொடர்ந்து நடத்துவோம். இக்கடிதத்தை எழுதியவர்கள் இந்தப் போக்கைச் சேர்ந்தவர்கள் என்று தோன்றுகிறது. தொழிலாளர்கள் ஆர்ப்பாட்டங்களில் கலந்துகொள்வதற்குப் பொருளாதாரப் போராட்டங்கள் களத்தைத் தயாரித்துக் கொடுத்தன என்று அவர்கள் நம்மிடம் சொல்கிருர்கள். உண்மைதான்; ஆனுல் இந்தத் தயாரிப்பின் முக்கியத்துவத்தை மற்றெல்லோரையும்விட முன்னதாகவும் ஆழமாகவும் நாம்தான் புரிந்து கொண்டோம் —1900 டிஸம்பரிலேயே நமது முதல் இதழில் கட்டங்கள் பற்றிய தத்துவத்தை நாம் எதிர்த்தபோதும்;* பிப்ரவரியில் நம் இரண்டாவது இதழில், மாணவர்களைக் கட்டாயப்படுத்தி இராணுவத்தில் சேர்த்ததை உடனடியாகத் தொடர்ந்தும் ஆர்ப்பாட்டங்களுக்கு முன்னரும் மாணவர்களின் உதவிக்குச் செல்லுமாறு தொழிலாளிகளை நாம்அறைகூவியழைத்தோம்.** பிப்ரவரி-மார்ச்சு நிகழ்ச்சிகள் இஸ்க்ராவின் ''அச்சங்களையும் மனக் கலக்கங்களையும் மறுக்க''வில்லை (மறுத்துள்ளதாக மர்த்தினவ் நினைக்கிருர்; அதன் மூலமாக அவர் பிரச்சினையை அறவே புரிந்து கொள்ளத் தவறுகிறதைக் காட்டிக் கொள்கிருர் —ரபோச்சியே தேலோ, இதழ் 10, பக்கம் 53), அவற்றை உறுதிப்படுத்தித்தான் உள்ளன. காரணம், தலைவர்கள் மக்களின் தன்னியல்பான எழுச்சியின் பின்னே வால்பிடித்துச் சென்று தலைவர்கள் என்கிற முறையில் தங்கள் கடமைகளை நிறைவேற்ற ஆயத்தமாயிருக்கவில்லை என்று காட்டிக் கொண்டார்கள். தற்சமயத்திலுங்கூட தயாரிப்புகள் வெகுதூரத்துக்குப் போதாமலே உள்ளன. எனவே ''சித்தாந்தத்தின் பாத்திரத்தை மிகைப்படுத்துவது'' பற்றிய பேச்சனைத்தும், அல்லது தன்னியல்பான அம்சத்துடன் ஒப்புநோக்கும் போது

---

* வி.இ. லெனின் எழுதிய நமது இயக்கத்தின் உடனடிப் பணிகள் எனும் கட்டுரையைப் பார்க்கவும்.—ப-ர்.

** வி.இ. லெனின் எழுதிய 183 மாணவர்களைக் கட்டாயமாய்ப் படையில் சேர்த்தல் எனும் கட்டுரையைப் பார்க்கவும்.— ப-ர்.

உணர்வுபூர்வமான அம்சத்தை மிகைப்படுத்துகிறோம் என்றெல்லாம் பேசும் பேச்சனைத்தும் தொடர்ந்து நம் கட்சி மீது மிகவும் தீங்கான செல்வாக்கு செலுத்தி வருகிறது.

வர்க்கப் பார்வைநிலையைப் பாதுகாப்பதாகச் சொல்லிக் கொண்டு, பல்வேறு மக்கட்பகுதிகள் அரசாங்கத்திற்கு எதிராகத் தெரிவிக்கும் அதிருப்தியின் பொதுத்தன்மையை வலியுறுத்துவதைக் குறைத்துக் கொள்ள வேண்டியது அவசியம் என்று பேசும் பேச்சு செலுத்துகிற தீங்கான செல்வாக்கும் அதைவிடக் குறைந்ததல்ல. மாறாக, எல்லா மக்கட்பகுதிகளிடையேயும் இஸ்க்ரா அரசியல் அதிருப்தியைக் கிளப்பி வருவதைப் பற்றி நாங்கள் பெருமைப்படுகிறோம். அதை இன்னும் விரிவான அளவிலே செய்ய முடியாமலிருக்கிறோமே என்றுதான் வருத்தப்படுகிறோம். அதைச் செய்கையில் நாம் வர்க்கப் பார்வைநிலையை மறைக்கிறதாகக் கூறுவது உண்மையல்ல. இக்கூற்றுக்குச் சான்றாக ஓர் எடுத்துக்காட்டைக்கூட இக்கடிதத்தை எழுதியவர்கள் சுட்டிக்காட்டவில்லை, சுட்டிக் காட்டவும் முடியாது. ஜனநாயகத்திற்கான போராட்டத்தின் முன்னணிப் படை என்கிற வகையில் சமூக-ஜனநாயகவாதம் (ரபோச்சியே தேலோ, இதழ் 10, பக்கம் 41ல் என்ன கருத்து தெரிவித்திருந்தபோதிலும் சரி) எதிர்ப்புநிலை வகிக்கும் பல்வேறு மக்கட்பகுதிகளின் செயலூக்கமுள்ள நடவடிக்கைகளுக்குத் தலைமை தாங்கித் தீர வேண்டும், அரசாங்கத்துடன் நடக்கும் அவர்களின் அரைகுறையான, வேலை சம்பந்தப்பட்ட, மோதுதல்களின் பொதுவான அரசியல் குறிபொருளை அவர்களுக்கு விளக்க வேண்டும், புரட்சிக் கட்சிக்கு ஆதரவாக அவர்களைத் திரட்ட வேண்டும், எதிர்ப்புநிலை வகிக்கும் பல்வேறு வகை மக்கட்பகுதிகள் எல்லோர் மீதும் அரசியல் செல்வாக்கு செலுத்தும் திறமுள்ள தலைவர்களைத் தன் அணிகளிலிருந்தே பயிற்றுவித்தாக வேண்டும். இந்த வேலையைக் கைவிடுவது — பாட்டாளி வர்க்கத்தின் போராட்டத்துடன் நெருக்கமான, உயிர்ப்புள்ள தொடர்பு என்றெல்லாம் எவ்வளவோ பகட்டான சொற்களால் ஒப்பனை செய்து கொண்ட போதிலும் சரி—சமூக-ஜனநாயகவாதிகள் "வால்பிடித்துச் செல்வதை" புதிதாகத் தாங்கிப்

பேசுவதற்குச் சமமாகும், நாடுதழுவிய ஜனநாயக இயக்கத்தின் பின்னே அவர்கள் வால்பிடித்துச் செல்வதைத் தாங்கிப் பேசுவதற்குச் சமமாகும்; முதலாளித்துவ ஜனநாயகவாதிகளிடம் தலைமையை ஒப்படைப்பதற்குச் சமமாகும். சென்ற வசந்தகால நிகழ்ச்சிகள் சமூக-ஜனநாயகவாதத்தின் செல்வாக்கையும் பெயரையும் உயர்த்துவதற்குப் பதிலாக சமூக-ஜனநாயகவாதத்துக்குப் புறம்பான புரட்சிப் போக்குகளுக்கு ஏன் புத்துயிர் ஊட்டியது என்கிற பிரச்சினையைப்பற்றி இக்கடிதம் எழுதியவர்கள் ஆழ்ந்து சிந்தித்துப் பார்க்கட்டும்.

நாடுகடத்தப்பட்டோரிடையேயுள்ள சர்ச்சைகள், உட்பூசல்கள் சம்பந்தமாக இக்கடிதம் எழுதியவர்கள் காட்டும் திகைப்பூட்டும் கிட்டப்பார்வையைப் பற்றி நாம் ஆட்சேபிக்காமலும் இருக்க முடியாது. ஸுபாத்தவ் பற்றிய கட்டுரையை ரபோச்சயா மீசிலுக்குச் செலவழிப்பதின் ''கண்ணியமின்மையைப்'' பற்றி ஊசிப்போன முட்டாள்தனத்தைத் திருப்பிச் சொல்கின்றனர். ''பொருளாதாரவாதத்தைப்'' பரப்புவது ஸுபாத்தவ் வகைப்பட்ட கனவான்களின் வேலையை எளிதாக்குவதை அவர்கள் மறுக்க விரும்புகிறார்களா? இதை வலியுறுத்திச் சொல்லும் போது ''பொருளாதாரவாதிகளின்'' போர்த்தந்திரங்களையும் ஸுபாத்தவ்களின் போர்த்தந்திரங்களையும் நாம் சிறிதேனும் ''ஒன்றாக்கிவிடவில்லை''. ''நாடுகடத்தப்பட்டோரைப்'' பொருத்தவரை (இக்கடிதம் எழுதியவர்கள் ருஷ்யச் சமூக-ஜனநாயகவாதத்திலுள்ள கருத்துக்களின் தொடர்ச்சிநிலையைப் பற்றி மன்னிக்கவொண்ணாத கவனமின்மையைக் காட்டிக் கொள்ளாமல் இருந்திருந்தால் இந்த ''நாடுகடத்தப்பட்டோர்''—சரியாகச் சொல்வதென்றால், ''உழைப்பு விடுதலைக் குழுவினர்''[36]—''பொருளாதாரவாதத்தைப்'' பற்றி வெளியிட்ட எச்சரிக்கை எடுப்பாக உறுதிப்படுத்தப்பட்டிருக்கிற உண்மையைத் தெரிந்து கொண்டிருப்பார்கள்), 1852ல் ரைன் தொழிலாளிகளிடையே பணியாற்றி வந்த லஸ்ஸால் லண்டனிலிருந்த நாடுகடத்தப்பட்டோர்களின் சர்ச்சைகளைப் பற்றி என்ன விதமாக மதிப்பிட்டார் என்று பாருங்கள். அவர் மார்க்ஸுக்கு எழுதுகையில் கூறியதாவது:

''....'பெரும் புள்ளிகளான' கின்கெல், ரூகே முதலியவர்களை எதிர்க்கும் உங்கள் நூல்களை வெளியிடுவதில் அநேகமாகப் போலீஸிடமிருந்து தொந்தரவுகள் ஏதும் இராது.... ஏனெனில், அப்படிப்பட்ட நூல்கள் வெளிவருவது அரசாங்கத்திற்கு விருப்பமும்கூட, வெறுக்கிறதில்லை என்பது என் அபிப்பிராயம். காரணம், 'புரட்சியாளர்கள் ஒருவர் கழுத்தை மற்றவர் வெட்டிக் கொண்டு சாவார்கள்' என்று அது நினைக்கிறது. உள்கட்சிப் போராட்டங்கள்தாம் ஒரு கட்சிக்கு வலிமையும் உயிர்த்துடிப்பும் கொடுக்கின்றன; ஒரு கட்சியின் பலவீனத்தைக் காட்டுவதற்கு மிகப் பெரிய சான்றாக இருப்பது அக்கட்சியின் தொளதொளத்தன்மையும் தெளிவான கருத்து வரம்புகளை மழுப்பி மறைத்தலுமாகும்; களையெடுப்பின் மூலமாகக் கட்சி மேலும் வலுவடையும். இந்த உண்மை அரசாங்கத்தின் அதிகாரவர்க்கப் போக்கான தர்க்க அறிவுக்கு எட்டுவதுமில்லை, அதைக் கண்டு அச்சப்படுவதும் இல்லை'' (மார்க்ஸுக்கு லஸ்ஸால் எழுதிய கடிதம், 1852, ஜூன் 24).

கடுமை, சமரசமின்மை, உணர்ச்சிமிக்க வாதச்சூடு முதலியவற்றையும் எதிர்க்கும் மெத்தனமுள்ள எண்ணற்ற எதிராளிகள் இதைக் கவனிப்பார்களாக!

கடைசியாக ஒன்று சொல்வோம்: சர்ச்சையிலிருந்து வரும் பிரச்சினைகளை சுருக்கமாகத்தான் இங்கே நாம் எடுத்துக் கவனிக்க முடிந்திருக்கிறது. ஒரு தனி குறுநூலில் இப்பிரச்சினைகளைப் பகுத்தாய்வது என்று எண்ணங்கொண்டிருக்கிறோம். அடுத்த ஆறு வாரங்களில் அது வெளி வரும் என்றும் நம்புகிறோம்.

இஸ்க்ரா, இதழ் 12,
1901 டிஸம்பர் 6ல்
வெளிவந்தது

நூல் திரட்டு,
தொகுதி 5,
பக்கங்கள் 360-67

# ஜனநாயகப் புரட்சியில் சமூக-ஜனநாயகவாதத்தின் இரண்டு போர்த்தந்திரங்கள்[37]

## முகவுரை

புரட்சிகரமான காலப்பகுதியில் நிகழ்ச்சிகளோடு சம நடையிட்டுச் செல்வது மிகக் கடினம்; அந்நிகழ்ச்சிகள் புரட்சிகரமான கட்சிகளின் போர்த்தந்திரக் கோஷங்களை மதிப்பீடு செய்வதற்குத் திகைப்பூட்டும் அளவிலே புதிய விஷயாதாரங்களைக் கொடுக்கின்றன. இக்குறுநூல் ஒதேஸ்ஸா நிகழ்ச்சிகள்* நிகழுமுன் எழுதப்பட்டது. நாம் ஏற்கெனவே **புரொலிட்டாரி** எனும் பத்திரிகையில்[39] (இதழ் 9—''புரட்சி கற்றுக் கொடுக்கிறது'') சுட்டிக்காட்டியிருக்கிறோம்: அதாவது, ''புரட்சியெழுச்சி என்பது ஒரு தொடர்நிகழ்வுப்போக்கு'' எனும் தத்துவத்தைப் படைத்து ஒரு தற்காலிகப் புரட்சி அரசாங்கம் வேண்டும் என்று பிரச்சாரம் செய்வதை நிராகரித்த சமூக-ஜனநாயகவாதிகளுங்கூட தங்கள் எதிராளிகளின் பக்கம் உண்மையாகவே போய்விடவோ போகத் தொடங்கவோ இந்நிகழ்ச்சிகள் கட்டாயப்படுத்தியுள்ளன, என்று. அரசியல் வளர்ச்சி அமைதியாக நடந்து வரும் காலப் பகுதிகளில் நம்பவொண்ணாததாகத் தோன்றும் அளவுக்கு விரைவாகவும் முழுநிறைவாகவும் புரட்சி கற்றுக் கொடுக்கிறது என்பதில் ஐயமில்லை. மேலும், புரட்சி என்பது தலைவர்களுக்கு மட்டுமின்றி மக்களுக்கும் கற்றுக் கொடுக்கிறது எனும் விஷயம் குறிப்பாக முக்கியமானதாகும்.

---

* **பத்தியோம்கின்** எனும் கவசப் போர்க் கப்பலில் நடந்த எழுச்சியை இவை குறிப்பிடுகின்றன.[38] (1907 பதிப்புக்கு ஆசிரியர் எழுதிய குறிப்பு.—ப-ர்.)

ருஷ்யாவில் திரள் திரளான தொழிலாளிகளுக்கு சமூக-ஜனநாயகத்துவத்தைப் புரட்சி கற்றுக் கொடுக்கும் என்பதில் எள்ளளவும் ஐயமில்லை. சமுதாயத்தின் பல்வேறு வர்க்கங்களின் உண்மையான இயல்பையும் நம் ஜனநாயகத்தின் முதலாளி வர்க்கத் தன்மையையும் விவசாயி மக்களின் உண்மையான விருப்பங்களையும் புரட்சி வெளிப்படுத்திக் காட்டுவதின் வழியாக சமூக-ஜனநாயகவாதத்தின் வேலைத்திட்டத்தையும் போர்த்தந்திரங்களையும் நடைமுறையில் உறுதிப்படுத்தும். விவசாயி மக்கள் முதலாளி வர்க்க ஜனநாயகத்தின் அர்த்தத்தில் புரட்சிகரமானவர்களாக இருக்கிற அதே நேரத்தில் ''சமுதாயமயமாக்கல்'' எனும் இலட்சியத்தைத் தம்முள் ஏந்திச் செல்கிறவர்களாக இல்லை, விவசாயி மக்கள் முதலாளி வர்க்கத்துக்கும் கிராமப்புறத்துத் தொழிலாளி வர்க்கத்துக்கும் இடையேயுள்ள ஒரு புதிய வர்க்கப் போராட்டத்துக்குரிய விதைகளைத்தான் ஏந்திச் செல்கிறார்கள். பழைய நரோதியத்தின் பழைய பிரமைகள் அனைத்தையும்—எடுத்துக் காட்டாக, ருஷ்யாவில் முதலாளித்துவத்தின் வளர்ச்சி பற்றிய பிரச்சினை குறித்தும் நம் ''சமுதாயத்தின்'' ஜனநாயகத் தன்மை பற்றிய பிரச்சினை குறித்தும் விவசாயப் புரட்சியெழுச்சியின் முழுமையான வெற்றியின் குறிபொருள் பற்றிய பிரச்சினை குறித்தும் ''சோஷலிஸ்டு-புரட்சியாளர் கட்சியின்''[40] நகல் வேலைத்திட்டத்தில் இவை எவ்வளவோ தெளிவாகத் தெரிகின்றன—இந்தப் பிரமைகள் அனைத்தையும் புரட்சி முற்றாக ஈவிரக்கமின்றி ஒழித்துவிடும். முதல் தடவையாக, அது இந்தப் பல்வேறு வர்க்கங்களுக்கு உண்மையான அரசியல் ஞானஸ்நானத்தைச் செய்து வைக்கும். இந்த வர்க்கங்கள் புரட்சியிலிருந்து ஒரு திட்டவட்டமான அரசியல் முகத்தோற்றத்துடன் வெளிப்படும். ஏனெனில், அவை தத்தம் சித்தாந்தவாதிகளின் வேலைத்திட்டம், போர்த்தந்திரக் கோஷங்கள் ஆகியவற்றிலே மட்டுமின்றி மக்களின் பகிரங்கமான அரசியல் செய்கையிலும் தங்களை வெளிப்படுத்திக் கொண்டிருக்கும்.

புரட்சி நமக்குக் கற்றுக் கொடுக்கும், திரளான மக்களுக்கும் கற்றுக் கொடுக்கும் என்பதில் ஐயமில்லை. ஆனால் இன்று

ஒரு போராடும் அரசியல் கட்சியின் முன் நிற்கும் கேள்வி இதுதான்: புரட்சிக்கு நாம் எதையாவது கற்றுக் கொடுக்க இயலுமா? புரட்சி மீது பாட்டாளி வர்க்க முத்திரை இடுவதற்கு, சொல்லளவில் அல்லாமல் செயலில் புரட்சியை ஓர் உண்மையான, நிர்ணயமான வெற்றிக்கு இட்டுச் செல்வதற்கு, ஜனநாயகப் போக்குள்ள முதலாளி வர்க்கத்தின் நிலேப்பாடின்மையையும்அரைமனத்தன்மையையும் துரோகத் தன்மையையும் செயல் சக்தியற்றதாகச் செய்வதற்கு, நம் சமூக-ஜனநாயகப் போதனையின் தவறின்மையையும் முழுதும் புரட்சிகரமான ஒரே வர்க்கமாகத் திகழும் பாட்டாளி வர்க்கத்துடன் நமக்குள்ள பிணைப்பையும் நம்மால் பயன் படுத்திக் கொள்ள இயலுமா? என்பதே.

இக்குறிக்கோளை நோக்கியே நம் முயற்சிகள் அனைத்தையும் செலுத்த வேண்டும். ஒரு புறத்தில், அரசியல் நிலைமையைப் பற்றிய நம் மதிப்பீடு சரியாயிருப்பதையும் நம் போர்த் தந்திரக் கோஷங்கள் சரியாயிருப்பதையும் பொருத்தும், மறுபுறத்தில் திரள்திரளான தொழிலாளிகளின் உண்மையான போராடும் சக்தி இந்தக் கோஷங்களை ஆதரிக்குமா என்பதைப் பொருத்தும் இக்குறிக்கோளைச் சாதிப்பது இருக்கும். நம் கட்சியின் எல்லா அமைப்புகளின், எல்லாக் குழுக்களின் வழக்கமான, முறையான, நடைமுறை வேலையும் பிரச்சாரம், கிளர்ச்சி, ஒழுங்கமைப்பு சம்பந்தப்பட்ட வேலையும் மக்களோடுள்ள பிணைப்புகளைப் பலப்படுத்தி விரிவாக்குவதில் செலுத்தப்படுகிறது. இந்த வேலை எப்போதும் அவசியமேயாயினுங்கூட புரட்சிக் காலத்தில் இது போதும் என்று கருத முடியாது. இப்படிப்பட்ட நிலைமையில் தொழிலாளி வர்க்கம் வெளிப்படையான புரட்சிச் செய்கைக்கு உள்ளியல்பாக வேட்கை கொள்கிறது. இச்செய்கையின் குறிக்கோள்களை நாம் சரிவர வகுத்தளிக்கக் கற்றுக் கொள்ள வேண்டும், பிறகு இக்குறிக்கோள்களை முடிந்தவரை விரிவாக அறிவிக்கவும் புரிந்து கொள்ளச் செய்யவும் வேண்டும். மக்களுடன் நமக்குள்ள பிணைப்புகளைப் பற்றி இன்று நிலவும் நம்பிக்கையின்மை புரட்சியில் பாட்டாளி வர்க்கத்தின் பாத்திரத்தைப் பற்றிய முதலாளி வர்க்கப் போக்கான கருத்துக்களை மூடி-

மறைக்கத்தான் மிக அடிக்கடிப் பயன்படுகிறது என்பதை மறக்கக்கூடாது. தொழிலாளி வர்க்கத்துக்குப் போதனை அளித்து ஒழுங்கமைப்பதற்கு இன்னும் நாம் நிறைய வேலை செய்தாக வேண்டும் என்பதில் ஐயமில்லை. ஆனால் சாராம் சத்தில் இன்றுள்ள கேள்வி இதுதான்: இந்தப் பொதனை, ஒழுங்கமைப்புப் பணியில் அரசியல்ரீதியிலே முக்கியமான தாக எதை வலியுறுத்திக் காட்ட வேண்டும்? தொழிற்சங்கங் கள் மற்றும் சட்டபூர்வமான சங்கங்களையா, அல்லது ஆயுத மேந்திய புரட்சியெழுச்சியையா, புரட்சிகரமான படையை யும் புரட்சிகரமான அரசாங்கத்தையும் படைக்கும் பணி யையா? தொழிலாளி வர்க்கத்துக்குப் போதனையளித்து ஒழுங்கமைப்பதற்கு இரண்டுந்தான் பயன்படுகின்றன. உண் மையில் இரண்டும் அவசியந்தான். ஆனால் இன்றையப் புரட்சி யில் பிரச்சினை மொத்தத்தில் இதுதான்: தொழிலாளி வர்க் கத்துக்குப் போதனையளித்து ஒழுங்கமைக்கும் பணியில் எதை வலியுறுத்த வேண்டும், முந்தியதையா பிந்தியதையா?

தொழிலாளி வர்க்கம் முதலாளி வர்க்கத்துக்குத் துணை போகும் படை என்கிற பாத்திரத்தை வகிக்குமா (இந்தத் துணைபோகும் படை எதேச்சாதிகார முறையைத் தாக்கும் சக்தியில் வலிமை மிக்கதாய் இருந்தாலுங்கூட அரசியல் ரீதியிலே சக்தியற்றது), அல்லது அது மக்கள் புரட்சியில் தலை வனுகப் பாத்திரம் வகிக்குமா என்பதைப் பொருத்துத்தான் புரட்சியின் விளைவு இருக்கிறது. அரசியல் உணர்வுள்ள முதலாளி வர்க்கப் பிரதிநிதிகள் இதை நன்முக உணர்ந்து வைத்திருக்கிருர்கள். எனவேதான் **ஒஸ்வபஷ்தேனியே**[41] அக்கீமவ் வாதத்தையும், சமூக-ஜனநாயகவாத இயக்கத்தில் ''பொ ருளாதாரவாதத்தையும்'' புகழ்ந்து பேசுகிறது; இந்தப் போக்குஇன்று தொழிற்சங்கங்களையும் சட்டபூர்வமாகஇருந்து வரும் சங்கங்களையும் முன்னணியில் கொணர்ந்து நிறுத்தி வருகிறது. எனவேதான், புதிய-இஸ்க்ராவாதத்தில்[42] காணும் அக்கீமவ் வாதத்துக்குரிய கோட்பாடுரீதியான போக்கை (**ஒஸ்வபஷ்தேனியே**, இதழ் 72ல்) திரு. ஸ்துரூவே வர வேற்கிருர். எனவேதான், ருஷ்யாவின் சமூக-ஜனநாயகத் தொழிலாளர் கட்சியின் மூன்ருவது காங்கிரஸின் முடிவு

களின் வெறுப்புக்காளான புரட்சிப் பார்வையின் குறுகிய தன்மையை அவர் அவ்வளவு பலமாகத் தாக்குகிருர்.[43]

தற்சமயம் சமூக-ஜனநாயகவாதிகள் மக்களுக்குத் தலைமை தாங்கி நடத்திச் செல்வதற்குப் பிழையற்ற போர்த்தந்திரக் கோஷங்கள் பெற்றிருப்பது சிறப்பான முக்கியத்துவமுள்ள விஷயமாகும். புரட்சிக் காலப்பகுதியில் கோட்பாடு ரீதியிலே சரியான போர்த்தந்திரக் கோஷங்களின் முக்கியத்துவத்தைச் சிறுமைப்படுத்துவது போல் அபாயகரமானது வேறொன்றுமில்லை. எடுத்துக்காட்டாக, இஸ்க்ரா இதழ் 104ல் சமூக-ஜனநாயக இயக்கத்திலுள்ள தன் எதிராளிகளின் பக்கம் உண்மையிலே போய்விடுகிறது; என்ருலும், காலத்தின் முன்ஞேடுகிறவையாயும் பல தோல்விகள், தவறுகள் முதலியவற்றைக் கண்டபோதிலும் முன் சென்று கொண்டிருக்கும் இயக்கத்தின் பாதையைக் காட்டுகிறவையாயும் உள்ள கோஷங்களின், போர்த்தந்திர முடிவுகளின் முக்கியத்துவத்தை அது இழித்துப் பழித்துப் பேசுகிறது. மாருக, வெறுமே நிகழ்ச்சிகளின் வழிப் போக்கில் பின்னடைந்து நடக்காமல் உறுதியான மார்க்ஸியக் கோட்பாடுகளின் உணர்ச்சியில் பாட்டாளிவர்க்கத்தை வழிசெலுத்த விரும்பும் கட்சிக்குச் சரியான போர்த்தந்திர முடிவுகளைத் தயாரிப்பது மாபெரும் முக்கியத்துவம் வாய்ந்ததாகும். ருஷ்யாவின் சமூக-ஜனநாயகத் தொழிலாளர் கட்சியின் மூன்ருவது காங்கிரஸின் தீர்மானங்களிலும் சரி, இக்கட்சியினின்று பிரிந்து சென்றுவிட்ட பகுதியினர்* நடத்திய மாநாட்டின் தீர்மானங்

* ருஷ்யாவின் சமூக-ஜனநாயகத் தொழிலாளர் கட்சியின் மூன்ருவது காங்கிரஸுக்கு (லண்டனில் 1905 மே மாதத்தில் நடந்தது) போல்ஷிவிக்குகள் மட்டுமே வந்திருந்தனர். (அதே காலத்தில் ஜினீவாவில் நடந்த) ''மாநாட்டில்'' மென்ஷிவிக்குகள் மட்டுமே கலந்து கொண்டனர். இக்குறுநூலில் பின்சொன்ன மென்ஷிவிக்குகள் ''புதிய-இஸ்க்ரா குழுவினர்'' என்று அடிக்கடி குறிப்பிடப்படுகிருர்கள்; ஏனெனில், அவர்கள் இஸ்க்ராவைத் தொடர்ந்து வெளியிட்டு வந்தவாறே, அன்று அவர்களுடன் ஒரு கருத்துடையவஞன திரோத்ஸ்கி மூலம் பழைய இஸ்க்ராவுக்கும் புதிய இஸ்க்ராவுக்கும் இடையே அகழி இருப்பதாக அறிவித்தனர். (1907 பதிப்புக்கு ஆசிரியர் எழுதிய குறிப்பு.—ப-ர்.)

களிலும் சரி, மிகச் சரிநுட்பமான, கவனமாகச் சிந்தித்துத் தெளிந்த, முழுநிறைவாக உருப்பெற்றுள்ள போர்த்தந்திரக் கருத்துக்களைக் காண்கிறோம். இவை யாரோ தனித்தனி எழுத்தாளர்கள் போகிற போக்கிலே வெளியிட்ட கருத்துக்கள் அல்ல; சமூக-ஜனநாயகவாதத்தைச் சார்ந்த பாட்டாளி வர்க்கத்தின் பொறுப்புள்ள பிரதிநிதிகள் ஏற்றுக் கொண்டுள்ள கருத்துக்கள் இவை. நம் கட்சி மற்றெல்லாக் கட்சிகளையும் விட முன்னால் நிற்கிறது; ஏனெனில் அதனிடம் ஒரு சரிநுட்பமான, பொதுவாக ஏற்றுக் கொள்ளப்பட்ட வேலைத் திட்டம் உள்ளது. ஒஸ்வபஷ்தேனியேயைச் சேர்ந்த ஜனநாயகப் போக்குள்ள முதலாளி வர்க்கத்தின் சந்தர்ப்பவாதத்தினின்றும் சோஷலிஸ்டு-புரட்சியாளர்களின் புரட்சிகரமான சொற்சிலம்பத்தினின்றும் வேறுபட்டதாயுள்ள நிலையில் தன் போர்த்தந்திரத் தீர்மானங்களைக் கண்டிப்பாகக் கடைப்பிடிக்கும் போக்கைக் கொண்டிருப்பதில் அது மற்ற கட்சிகளுக்கு ஓர் எடுத்துக்காட்டாக விளங்க வேண்டும். புரட்சி நடந்து வரும் போதுதான் அக்கட்சிகள் ஒரு ''நகல்'' வேலைத்திட்டத்தை முன்வைப்பதைப் பற்றித் திடீரென்று சிந்திக்கத் தலைப் பட்டன, தம் கண்ணெதிரே நிகழ்ந்து கொண்டிருப்பது ஒரு முதலாளித்துவப் புரட்சிதானா என்று ஆராய்ந்தறிவது பற்றியும் முதன்முறையாகச் சிந்திக்கத் தலைப்பட்டன.

எனவேதான், ருஷ்யாவின் சமூக-ஜனநாயகத் தொழிலாளர் கட்சியின் மூன்றாவது காங்கிரஸின் போர்த்தந்திரத் தீர்மானங்களையும் மாநாட்டின் போர்த்தந்திரத் தீர்மானங்களையும் கவனமாகப் பயில்வதும், அவற்றிலேயுள்ள மார்க்ஸியக் கோட்பாடுகளினின்று வழுவிய திரிபுகள் என்று வரையறுத்துக் கொள்வதும், ஜனநாயகப் புரட்சியில் சமூக-ஜனநாயகவாதத்தைச் சார்ந்த பாட்டாளி வர்க்கத்தின் ஸ்தூலமான பணிகளைப் பற்றித் தெளிந்த ஞானம் பெறுவதும் புரட்சிகரமான சமூக-ஜனநாயகவாதிகளின் மிகமிக அவசரமான பணி என்று நாம் கருதுகிறோம். இந்தப் பணியின் நிமித்தமாகத்தான் இக்குறுநூல் எழுதப்பட்டிருக்கிறது. ருஷ்யாவின் சமூக-ஜனநாயகத் தொழிலாளர் கட்சி முழுவதும்

எதிர்காலத்தில் முற்ருக ஒன்றுபடுவதற்கு அடிப்படையாகப் போர்த்தந்திர ஒற்றுமைக்குச் சொல்லளவில் இணங்கச் செய்வதோடு நின்று கொள்ளாமல் நடைமுறையில் அதற்கு வழியைச் செப்பனிட விரும்புகிறவர்களுக்கு மார்க்ஸியக் கோட்பாடுகளின் நிலேயிலிருந்தும் புரட்சியின் படிப்பினைகளின் நிலேயிலிருந்தும் நம் போர்த்தந்திரங்களேச் சோதித்தறிவதும் அவசியம்.

*1905 ஜூலே* நி. லெனின்

## 1. ஓர் அவசரமான அரசியல் பிரச்சினை

இன்றையப் புரட்சிக் காலச் சந்தியில் அனைத்து மக்களின் அரசியல் நிர்ணய சபையைக் கூட்டும் பிரச்சினை நிகழ்ச்சி நிரலில் இடம் பெற்றுள்ளது. இப்பிரச்சினையை எப்படித் தீர்ப்பது என்பதில் அபிப்பிராயங்கள் மாறுபட்டுள்ளன. மூன்று அரசியல் போக்குகள் உருக் கொண்டு வருகின்றன. மக்களின் பிரதிநிதிகளைக் கூட்டுவதின் அவசியத்தை ஜார் அரசாங்கம் ஒப்புக் கொள்கிறது, எனினும் அவர்களின் சபை அனைத்து மக்களினுடையதாகவோ அரசியலை நிர்ணயிக்கும் தன்மையுடையதாகவோ இருப்பதை எந்த நிலைமைகளிலும் அது அனுமதிக்க விரும்பவில்லை. புலீகின் கமிஷன்[44] வேலையைப் பற்றிய பத்திரிகைச் செய்திகளை நாம் நம்புவதாயிருந்தால், கிளர்ச்சி செய்வதற்கான சுதந்தரம் இல்லாமலும் வாக்குரிமையைக் குறுக்கி வரம்பிடும் தகுதி முறையைக் கொண்டோ சில குறிப்பிட்ட சமுதாயப் படித்தரப் பகுதியினருக்கு மட்டும் வாக்குரிமை அளிக்கும் தகுதி முறையைக் கொண்டோ தேர்ந்தெடுக்கப்படும்படியான ஓர் ஆலோசனை சபைக்கு அது ஒப்புக் கொள்ள விரும்புவதாகத் தோன்றுகிறது. புரட்சிகரமான பாட்டாளி வர்க்கம் சமூக-ஜனநாயகக் கட்சியின் தலைமையில் இயங்கும் காரணத்தால் அரசதிகாரம் முழுவதும் ஓர் அரசியல் நிர்ணய சபைக்கு மாற்றப்பட வேண்டும் என்று அது கோருகிறது. இந்நோக்கத்திற்காக எல்லோருக்கும் வாக்குரிமையும் முழுமையான கிளர்ச்சி செய்வதற்கான முழுச் சுதந்தரமும் கிடைக்கச் செய்ய முயற்சிப்பதோடல்லாமல் ஜார் அரசாங்கத்தை உடனடியாகத் தூக்கியெறிந்துவிட்டு அதனிடத்தில் ஒரு தற்காலிகப் புரட்சி

அரசாங்கத்தை வைக்கவும் முயற்சிக்கிறது. இறுதியாக, ''அரசியல்சட்ட-ஜனநாயகக் கட்சி'' எனப்படுவதின் தலைவர்கள் மூலம் தம் விருப்பங்களை வெளியிடும் மிதவாத முதலாளி வர்க்கத்தினர் ஜார் அரசாங்கத்தைத் தூக்கியெறியுமாறு கோரவில்லை, தற்காலிக அரசாங்கம் வேண்டும் என்கிற கோஷத்தையும் முன்வைக்கவில்லை, தேர்தல்கள் முற்றிலும் சுதந்தரமாகவும் நேர்மையாகவும் நடப்பதற்கும் பிரதிநிதிகளின் சபை உண்மையிலேயே அனைத்து மக்களுடையதாயும் உண்மையிலேயே அரசியலை நிர்ணயிக்கிறதாயும் இருப்பதற்கும் உண்மையான உத்தரவாதங்கள் வேண்டுமென்றும் வற்புறுத்தவில்லை. உண்மை என்னவென்றால், **ஒஸ்வபஷ்தேனியே** போக்கின் முக்கியமான ஒரே சமுதாயத் தூணாக இருக்கும் மிதவாத முதலாளி வர்க்கத்தினர் ஜார் மன்னருக்கும் புரட்சிகரமான முக்களுக்கும் இடையே முடிந்தவரை ஓர் அமைதியான பேரத்தை—முதலாளி வர்க்கமாகிய தமக்கு அதிகப்பட்சமான அதிகாரத்தையும், புரட்சிகரமான மக்களாகிய பாட்டாளி வர்க்கத்துக்கும் விவசாயி மக்களுக்கும் குறைந்தபட்சமான அதிகாரத்தையும் கொடுக்கிறதாயுள்ள ஒரு பேரத்தை—நடத்தி முடிக்க முயற்சிக்கின்றனர்.

இதுவே இன்றுள்ள அரசியல் நிலைமை. இவைதாம் மூன்று முக்கியமான அரசியல் போக்குகள்; இவை தற்கால ருஷ்யாவிலுள்ள மூன்று முக்கியமான சமுதாயச் சக்திகளோடு பொருந்துவதாயுள்ளன. **ஒஸ்வபஷ்தேனியே** குழுவினர் புரட்சிபால் பின்பற்றும் தம்முடைய அரைமனதான, நேரடியாகச் சொன்னால் நயவஞ்சகமான, துரோகத்தனமான கொள்கையை மூடி மறைப்பதற்காகப் போலி ஜனநாயகச் சொற்றொடர்களைப் பயன்படுத்துகிறார்கள் என்று ஏற்கெனவே ஒரு தடவைக்கு மேலாகவே நாம் **புரொலிட்டாரியில்** (இதழ்கள் 3, 4, 5)* காட்டியிருக்கிறோம். இப்போது சமூக-ஜனநாயகவாதிகள் இன்றையப் பணிகளை எப்படி மதிப்பிடுகிறார்கள் என்று பார்ப்போம். இதற்கு ருஷ்யாவின் சமூக-ஜனநாயகத் தொழி

* புரட்சிப் போராட்டமும் மிதவாதத் தரகு வேலையும், 1905; புரட்சிகரமான பாட்டாளி வர்க்கத்தின் ஜனநாயகப் பணிகள், 1905; மற்றும், முதலாளி வர்க்கத் துரோகத்தின் முதற் படிகள், 1905. — ப-ர்.

லாளர் கட்சியின் மூன்றுவது காங்கிரஸும் இக்கட்சியிலிருந்து பிரிந்து சென்ற பகுதியினரின் ''மாநாடும்'' மிக அண்மையில் நிறைவேற்றிய இரண்டு தீர்மானங்கள் மிகச் சிறந்த விஷயாதாரம் அளிக்கின்றன. இந்தத் தீர்மானங்களில் எது அரசியல் நிலைமையை மேலும் சரியாக மதிப்பீடு செய்கிறது, புரட்சிகரமான பாட்டாளி வர்க்கத்தின் போர்த்தந்திரங்களை மேலும் சரியாக வரையறுக்கிறது எனும் பிரச்சினை மாபெரும் முக்கியத்துவம் உள்ளதாகும். பிரச்சாரகனுகவும் கிளர்ச்சியாளனுகவும் அமைப்பாளனுகவும் தன்னுடைய கடமைகளை அறிவாற்றலுடன் நிறைவேற்ற விருப்பம் கொள்ளும் ஒவ்வொரு சமூக-ஜனநாயகவாதியும் சம்பந்தமற்ற எல்லா நினைப்புகளையும் ஒதுக்கிவிட்டு இந்தப் பிரச்சினையை மிகவும் உன்னிப்பான கவனத்துடன் பயில வேண்டும்.

கட்சியின் போர்த்தந்திரங்கள் என்றுல் கட்சியின் அரசியல் நடத்தை, அல்லது கட்சியின் நடவடிக்கையின் தன்மை, திசை, மற்றும் வழிமுறைகள் என்று நாம் அர்த்தப்படுத்துகிறோம். புதிய பணிகள் சம்பந்தமாகவோ ஒரு புதிய அரசியல் நிலைமையைக் கருத்தில் கொண்டோ கட்சி முழுவதின் அரசியல் நடத்தையைச் சரிநுட்பமாக வரையறுப்பதற்காகவே கட்சி காங்கிரஸ்கள் போர்த்தந்திரத் தீர்மானங்களை நிறைவேற்றுகின்றன. ருஷ்யாவில் துவங்கியிருக்கும் புரட்சி இப்படிப்பட்ட ஒரு புதிய நிலைமையைத்தான்—அதாவது, மிகமிகப் பெரும்பான்மையான மக்களுக்கும் ஜார் அரசாங்கத்துக்கும் இடையே முற்றுன, நிர்ணயமான, பகிரங்கமான முறிவு ஏற்படுவதை—உண்டாக்கியுள்ளது. உண்மையிலேயே அனைத்து மக்களுடையதான, உண்மையிலேயே அரசியலை நிர்ணயிக்கிறதான ஒரு சபையைக் கூட்டுவதற்குரிய நடைமுறை வழிமுறைகள் பற்றியதே புதிய பிரச்சினை (இப்படிப்பட்ட சபையைப் பற்றிய பிரச்சினையைத் தத்துவார்த்த வழியில் சமூக-ஜனநாயகக் கட்சி மற்றெல்லாக் கட்சிகளுக்கும் முன்னரே, வெகுகாலத்துக்கு முன்பே தன் கட்சி வேலைத் திட்டத்தில்அதிகாரபூர்வமாகத் தீர்த்திருக்கிறது). அரசாங்கத்திடமிருந்து மக்கள் முறித்துக் கொண்டுவிட்டதாலும் ஒரு புதிய அமைப்பை நிறுவுவதின் அவசியத்தை திரள் திரளான

மக்கள் உணர்ந்திருப்பதாலும் அரசாங்கத்தைத் தூக்கியெறிவது எனும் குறிக்கோளை வைத்துக் கொண்ட ஒரு கட்சி அவசியமாகவே பழைய, அதிகாரத்திலிருந்து விலக்கப்பட்ட அரசாங்கத்தின் இடத்தில் எந்த அரசாங்கம் வர வேண்டும் என்பதைப் பற்றிச் சிந்தித்துத் தீரவேண்டும். ஒரு தற்காலிகப் புரட்சி அரசாங்கம் சம்பந்தமான ஒரு புதிய பிரச்சினை எழுகிறது. இப்பிரச்சினைக்கு முழுமையான விடை அளிப்பதற்கு வர்க்க உணர்வுள்ள பாட்டாளி வர்க்கத்தின் கட்சி பின்வருவனவற்றைத் தெளிவுபடுத்தித் தீர வேண்டும்: (1) இன்று முன்னேறிக் கொண்டிருக்கும் புரட்சியிலும் பொதுவாகப் பாட்டாளிவர்க்கத்தின் போராட்டம் முழுவதிலும் ஒரு தற்காலிகப் புரட்சி அரசாங்கத்துக்குள்ள குறிபொருள்; (2) தற்காலிகப் புரட்சி அரசாங்கத்தின் பால் அக்கட்சியின் உறவு நிலை; (3) இந்த அரசாங்கத்தில் சமூக-ஜனநாயகக் கட்சி பங்கெடுத்துக் கொள்வதற்கு உரிய சரிநுட்பமான நிபந்தனைகள்; (4) இந்த அரசாங்கத்தில் சமூக-ஜனநாயகவாதிகள் இல்லாமற் போகும் பட்சத்தில் அதன்மீது கீழிருந்து நிர்ப்பந்தம் கொண்டு வருவதற்கான நிலைமைகள். இந்தப் பிரச்சினைகள் அனைத்தையும் தெளிவுபடுத்திய பிறகுதான் இத்துறையில் கட்சியின் அரசியல் நடத்தை கோட்பாடு வழிப்பட்டதாகவும் தெளிவாகவும் உறுதியாகவும் இருக்கும்.

இந்தப் பிரச்சினைகளுக்கு ருஷ்யாவின் சமூக-ஜனநாயகத் தொழிலாளர் கட்சியின் மூன்றாவது காங்கிரஸின் தீர்மானம் எவ்வாறு விடையளிக்கிறது என்று இப்போது பார்ப்போம். தீர்மானத்தின் முழு வாசகம் பின்வருமாறு:

‘‘தற்காலிகப் புரட்சி அரசாங்கத்தைப் பற்றிய தீர்மானம்

‘‘1) பாட்டாளி வர்க்கத்தின் நேரடியான நலன்களுக்கும் சோஷலிஸத்தின் இறுதியான குறிக்கோள்களுக்காக அது நடத்தும் போராட்டத்தின் நலன்களுக்கும் ஒருங்கே முடிந்தவரை முழுவளவான அரசியல் சுதந்தரம் அவசியம், எனவே எதேச்சாதிகார வடிவமுள்ள அரசாங்கத்தை நீக்கி ஜனநாயகக் குடியரசு அதனிடத்தில் வைக்கப்படுவது அவசியம்—என்பதாலும்;

''2) ருஷ்யாவில் வெற்றிகரமான மக்கள் புரட்சியெழுச்சியின் விளைவாக மட்டுமே ஒரு ஜனநாயகக் குடியரசு நிறுவப்படுவது சாத்தியம்; இப்புரட்சியெழுச்சியின் உறுப்பாக ஒரு தற்காலிகப் புரட்சி அரசாங்கம் இருக்கும்; இது ஒன்றுதான் தேர்தல் இயக்கத்தின் போது கிளர்ச்சி செய்வதற்கு முழுச் சுதந்தரம் இருப்பதை உத்தரவாதம் செய்ய வல்லது, மக்களின் சித்தத்தை உண்மையாகவே வெளியிடக் கூடிய ஓர் அரசியல் நிர்ணய சபையை, எல்லோருக்கும் சம வாக்குரிமை, நேரடித் தேர்தல்கள், இரகசிய வாக்குப்பதிவு அடிப்படையில் தேர்ந்தெடுக்கப்பட்ட ஒரு சபையைக் கூட்டுவதற்கும் உத்தரவாதம் செய்ய வல்லது—என்பதாலும்;

''3) இன்றுள்ள சமுதாய-பொருளாதார அமைப்பின் கீழ் ருஷ்யாவில் இந்த ஜனநாயகப் புரட்சி முதலாளி வர்க்கத்தின் ஆதிக்கத்தைப் பலவீனப்படுத்துவதற்குப் பதிலாகப் பலப்படுத்தவே செய்யும்; அந்த முதலாளி வர்க்கம் ஒரு குறிப்பிட்ட காலச் சந்தியில் தவிர்க்க முடியாதவாறு பாட்டாளி வர்க்கத்திடமிருந்து புரட்சிக் காலப் பகுதியில் கிடைத்த ஆதாயங்களை முடிந்தவரை பறித்துவிடுவதற்கு எவ்வளவு தொலைவுக்காயினும் போகும்—என்பதாலும்;

''ருஷ்யாவின் சமூக-ஜனநாயகத் தொழிலாளர் கட்சியின் மூன்றாவது காங்கிரஸ் பின்வருமாறு தீர்மானிக்கிறது:

''அ) புரட்சி மிகப்பெரும்பாலும் செல்லக் கூடிய போக்கு பற்றியும், புரட்சியின் ஒரு குறிப்பிட்ட தருணத்தில் ஒரு தற்காலிகப் புரட்சி அரசாங்கம் உதிப்பதின் அவசியத்தைப் பற்றியும் ஒரு ஸ்தூலமான கருத்தைத் தொழிலாளி வர்க்கத்திடையே பரப்புவது அவசியம்; இந்த அரசாங்கம் நம் வேலைத் திட்டத்தின் உடனடியான அரசியல், பொருளாதாரக் கோரிக்கைகள் (குறைந்தபட்ச வேலைத்திட்டம்) அனைத்தையும் நிறைவேற்ற வேண்டும் என்று பாட்டாளி வர்க்கம் கோரும்;

''ஆ) நுட்பதிட்பமாக முன்கூட்டி நிர்ணயிக்கப்பட முடியாத சக்திகளின் ஒப்பு நிலையையும் பிற காரணிகளையும் பொருத்துள்ள நிலையில், எல்லா எதிர்ப்புரட்சி முயற்சிகளையும் எதிர்த்து விட்டுக்கொடாத போராட்டம் நடத்தும் நோக்கத்துக்காகவும் தொழிலாளி வர்க்கத்தின் சுதந்தரமான

நலன்களைப் பாதுகாக்கும் நோக்கத்துக்காகவும் நம் கட்சியின் பிரதிநிதிகள் தற்காலிகப் புரட்சி அரசாங்கத்தில் கலந்து கொள்ளலாம்;

''இ) இவ்வாறு கலந்து கொள்வதற்கு ஓர் இன்றியமையாத நிபந்தனை, கட்சி தன் பிரதிநிதிகள் மீது கண்டிப்புள்ள கண்காணிப்பு வைத்திருப்பதும் சமூக-ஜனநாயகவாதத்தின் சுதந்தரத்தை இடையறாது பாதுகாத்து வருவதுமாகும்; கட்சி முழுமையான சோஷலிசப் புரட்சிக்கு முயற்சிக்கிறது, எனவே அது முதலாளித்துவப் போக்கான கட்சிகள் அனைத்திற்கும் சமரசமற்ற எதிர்ப்புள்ளது;

''ஈ) தற்காலிகப் புரட்சி அரசாங்கத்தில் சமூக-ஜனநாயகவாதிகள் கலந்து கொள்வது சாத்தியமா இல்லையா என்பது எப்படியிருப்பினும், சமூக-ஜனநாயகக் கட்சியின் தலைமையின் கீழ் இருக்கும் ஆயுதமேந்திய பாட்டாளி வர்க்கம் புரட்சியின் ஆதாயங்களைப் பாதுகாக்கவும் கெட்டிப்படுத்தவும் விரிவாக்கவும் இடையறாது தற்காலிகப் புரட்சி அரசாங்கத்தின் மீது நிர்ப்பந்தம் கொண்டுவர வேண்டும் எனும் கருத்தைப் பாட்டாளி வர்க்கத்தின் மிக விரிந்த பகுதிகளிடையே நாம் பிரச்சாரம் செய்ய வேண்டும்.''

## 2.ரு.ச.ஜ.தொ. கட்சியின் மூன்றாவது காங்கிரஸ் தற்காலிகப் புரட்சி அரசாங்கம் குறித்து நிறைவேற்றிய தீர்மானத்திலிருந்து நாம் என்ன கற்றுக் கொள்ள முடியும்?

அதன் தலைப்பே தெரிவிப்பது போல், ருஷ்யாவின் சமூக-ஜனநாயகத் தொழிலாளர் கட்சியின் மூன்றாவது காங்கிரஸ் தீர்மானம் தற்காலிகப் புரட்சி அரசாங்கம் எனும் பிரச்சினையை மட்டும் முற்றாக எடுத்துக் கவனிக்கிறது. எனவே, தற்காலிகப் புரட்சி அரசாங்கத்தில் சமூக-ஜனநாயகவாதிகள் கலந்து கொள்வது அந்தப் பிரச்சினையின் பகுதியாக அமைகிறது. மறுபுறத்தில், தீர்மானம் தற்காலிகப் புரட்சி அரசாங்கத்தைப் பற்றி மட்டுமே கவனிக்கிறது, வேறெதைப் பற்றி

யுமில்லை. எனவே, பொதுப்படையான "அதிகாரத்தைக் கைப்பற்றும்" பிரச்சினை முதலியவற்றிற்கு அதில் இடம் கிடையாது. இதையும் இதுபோன்ற பிரச்சினைகளையும் காங்கிரஸ் விலக்கி வைத்தது சரியா? சரிதான் என்பதில் ஐயமே இல்லை; ஏனெனில், ருஷ்யாவிலுள்ள அரசியல் நிலைமை இப்படிப்பட்ட பிரச்சினைகளை நிகழ்ச்சி நிரலில் போடவில்லை. மாறாக, எதேச்சாதிகார முறையைத் தூக்கியெறிந்துவிட்டு ஓர் அரசியல் நிர்ணய சபையைக் கூட்டும் பிரச்சினையை இன்று மக்கள் அனைவரும் எழுப்பியுள்ளனர். யாராவது ஓர் எழுத்தாளர் சந்தர்ப்பப் பொருத்தத்துடனோ பொருத்தமில்லாமலோ சொல்ல நேரிட்ட விவகாரங்களைக் கட்சி காங்கிரஸ்கள் எடுத்துக்கொண்டு முடிவு செய்யக் கூடாது, நிலவர நிலைமைகளின் காரணத்தாலும் புறநிலை வகைப்பட்ட சமுதாய வளர்ச்சிப் போக்கின் காரணத்தாலும் உயிர்நிலையான அரசியல் முக்கியத்துவமுள்ள பிரச்சினைகளைத்தான் எடுத்துக் கொண்டு முடிவு செய்ய வேண்டும்.

இன்றையப் புரட்சியிலும் பாட்டாளி வர்க்கத்தின் பொது போராட்டத்திலும் ஒரு தற்காலிகப் புரட்சி அரசாங்கம் பெறும் குறிபொருள் என்ன? ஒருங்கே பாட்டாளி வர்க்கத்தின் உடனடி நலன்கள், "சோஷலிஸத்தின் இறுதியான குறிக்கோள்கள்" என்கிற நிலைகளிலிருந்தும் "முடிந்தவரை முழுவளவான அரசியல் சுதந்தரம்" தேவைப்படுகிறது என்று காங்கிரஸ் தீர்மானம் தொடக்கத்திலே சுட்டிக்காட்டி இதை விளக்குகிறது. மேலும், முழுமையான அரசியல் சுதந்தரத்துக்கு ஜார் எதேச்சாதிகார முறையை விலக்கி ஜனநாயகக் குடியரசை வைப்பது அவசியம்; இதை நம் கட்சியின் வேலைத் திட்டம் ஏற்கெனவே அங்கீகரித்திருக்கிறது. காங்கிரஸ் தீர்மானம் ஜனநாயகக் குடியரசு எனும் கோஷத்துக்கு அழுத்தம் கொடுப்பது தர்க்கரீதியிலும் சரி, கோட்பாடுரீதியிலும் சரி அவசியமாகும்; ஏனெனில், பாட்டாளி வர்க்கம் ஜனநாயகத்தின் முன்னணி வீரன் என்கிற முறையில் முழுமையான சுதந்தரத்தைத்தான் சாதிக்க முயன்று வருகிறது. தவிரவும், தற்சமயம் இதை வலியுறுத்திக் காட்டுவது அறிவுக்குகந்ததே; ஏனெனில் முடியரசுவாதிகள் — அதாவது, அரசியல்

சட்ட-''ஜனநாயக'' அல்லது ஒஸ்வபஷ்தேனியே கட்சியினர் எனப்பட்டவர்கள் — நம் நாட்டில் இச்சமயத்தில் ''ஜன நாயகம்'' எனும் கொடியைப் பறக்கவிட்டிருக்கிருர்கள். குடியரசை நிலைநாட்டுவதற்கு மக்களின் பிரதிநிதிகளைக் கொண்ட ஒரு சபை இன்றியமையாததாகும், அது அனைத்து மக்களுடையதாயும் (அதாவது, எல்லோருக்கும் சம வாக்குரிமை, நேரடித் தேர்தல்கள், இரகசிய வாக்குப்பதிவு ஆகியவற்றின் அடிப்படையில் தேர்ந்தெடுக்கப்பட்டதாயும்) அரசியலை நிர்ணயிக்கிறதாயும் உள்ள சபையாகவும் இருக்க வேண்டும். இதைத்தான் சற்று மேலே தள்ளிக் காங்கிரஸ் தீர்மானம் அங்கீகரிக்கிறது. என்ருலும் இத்துடன் தீர்மானம் நின்றுவிடவில்லை. ''மக்களின் சித்தத்தை உண்மையாகவே வெளியிடக் கூடிய'' ஒரு புதிய அமைப்பை நிலைநாட்டுவதற்கு ஒரு பிரதிநிதி சபையை அரசியல் நிர்ணய சபை என்று சொல்லி விட்டால் போதாது. அப்படிப்பட்ட சபைக்கு ''நிர்ணயிப்பதற்குரிய'' அதிகாரமும் பலமும் இருந்து தீரவேண்டும். இதை உணர்வில் கொண்டுதான் காங்கிரஸ் தீர்மானம் ''அரசியல் நிர்ணய சபை'' எனும் சம்பிரதாய கோஷத்துடன் நிறுத்திக் கொள்ளாமல் அப்படிப்பட்ட சபை தன்னுடைய பணியை நடைமுறையில் நிறைவேற்ற முடிவதற்கு இன்றியமையாததான பொருளாயத நிபந்தனைகளையும் சேர்த்துச் சொல்கிறது. சொல்லளவிலான அரசியல் நிர்ணய சபையை நடைமுறையில் அரசியலை நிர்ணயிக்கும் சபையாக ஆக்குவதற்கான நிபந்தனைகளை இவ்வாறு குறிப்பிட்டுச் சொல்வது இன்றியமையாத் தேவையாகும். ஏனெனில், ஏற்கெனவே நாம் ஒரு தடவைக்கு மேலாகவே சுட்டிக்காட்டியிருக்கிற வாறு, அரசியல் சட்ட-முடியரசுவாதக் கட்சி பிரதிநிதித்துவப் படுத்தும் மிதவாத முதலாளி வர்க்கத்தினர் அனைத்து மக்களுடைய அரசியல் நிர்ணய சபை எனும் கோஷத்தை வேண்டுமென்றே திரித்துப் புரட்டி வருகிருர்கள், பொருளற்ற சொற்ருெடராகத் தாழ்த்திவருகிருர்கள்.

தற்காலிகப் புரட்சி அரசாங்கம் ஒன்றுதான்—வெற்றி வாகை சூடிய மக்களின் ஆயுதமேந்திய புரட்சியெழுச்சியின் உறுப்பாக இருக்கக் கூடிய அது ஒன்றுதான் — தேர்தல்

இயக்கத்தை நடத்துவதற்கான முழுச் சுதந்தரத்தை உத்தர வாதம் செய்யமுடியும் என்றும், மக்களின் சித்தத்தை உண்மை யாகவே வெளியிடக் கூடிய ஒரு சபையைக் கூட்ட முடியும் என்றும் காங்கிரஸ் தீர்மானம் கூறுகிறது. இந்த ஆய்வுரை சரியா? இதை மறுக்க நினைப்பவர் ஜார் அரசாங்கம் பிற் போக்கின் பக்கம் சேராமலிருப்பது சாத்தியமே என்றும், தேர்தல்களின்போது அது நடுநிலை வகிக்க முடியும் என்றும், மக்களின் சித்தம் உண்மையாகவே வெளியிடப்படும்படி அது கவனித்துக் கொள்ளும் என்றும் அடித்துப் பேசியாக வேண் டும். இப்படிப்பட்ட வன்கூற்றுகள் முற்றிலும் அபத்தமான வை, எனவே அவற்றை யாரும் பகிரங்கமாகத் தாங்கிப் பேசத் துணிய மாட்டார்கள். ஆனால் நம் ஒஸ்வபஷ்தேனியே கனவான்கள் அவற்றிற்கு மிதவாதச் சாயம் பூசிக் கள்ளத்தன மாக நுழைத்து வருகிறார்கள். அரசியல் நிர்ணய சபையை யாராவது கூட்டித் தீர வேண்டும்; தேர்தல் சுதந்தரமாக வும் நேர்மையாகவும் நடப்பதை யாராவது உத்தரவாதம் செய்து தீர வேண்டும்; அப்படிப்பட்ட சபைக்கு யாராவது முழு பலமும் அதிகாரமும் அளித்துத் தீர வேண்டும். புரட்சி யெழுச்சியின் உறுப்பாகிய புரட்சி அரசாங்கந்தான் இதை முழு நேர்மையுடன் விரும்ப முடியும், இதைச் சாதிப் பதற்கு வேண்டியதனைத்தையும் அது ஒன்றுதான் செய்ய வும் முடியும். ஜார் அரசாங்கம் தவிர்க்க முடியாதவாறு இதை எதிர்க்கும். ஜாருடன் பேரம் செய்து கொண்ட ஒரு மிதவாத அரசாங்கம், மக்களின் புரட்சியெழுச்சியை முற்றும் நம்பி நிற்காத ஒரு மிதவாத அரசாங்கம், இதை நேர்மை யாக விரும்பவும் முடியாது, மிகமிக நேர்மையுடன் விரும்பினாலும் சாதிக்கவும் முடியாது. எனவே, சரியானதும் முரணற்ற ஜனநாயகவாதமானதுமான ஒரே கோஷத்தைக் காங்கிரஸ் தீர்மானம் கொடுக்கிறது.

எனினும், ஜனநாயகப் புரட்சியின் வர்க்கத் தன்மையைப் பார்க்காமல் விட்டால் தற்காலிகப் புரட்சி அரசாங்கத்தைப் பற்றிய மதிப்பீடு முழுமையற்றிருக்கும், தவறாகவும் இருக் கும். ஆகவே, புரட்சி முதலாளி வர்க்கத்தின் ஆட்சியைப் பலப்படுத்தும் என்று தீர்மானம் சேர்த்துச் சொல்கிறது.

இன்றைய முதலாளித்துவச் சமுதாய-பொருளாதார அமைப்பு முறையில் இது தவிர்க்க முடியாதது. ஓரளவுக்கு அரசியல் சுதந்தரம் பெற்றிருக்கும் பாட்டாளி வர்க்கத்தின் மீது முதலாளி வர்க்கத்தின் ஆட்சி பலப்படுவது அதிகாரத் திற்காக அவற்றிடையே கடுமையான போராட்டம் தவிர்க்க முடியாதவாறு நிகழ்வதிலும் ''பாட்டாளி வர்க்கத்திட மிருந்து புரட்சிக் காலப் பகுதியில் கிடைத்த ஆதாயங்களைப் பறித்துவிடுவதற்கு'' முதலாளி வர்க்கம் கடுமையான முயற்சி கள் செய்வதிலும் கொண்டுபோய்விடும். எனவே, ஜனநாயகத் திற்கான போராட்டத்தில் முன்னணியில் நின்று தலைமை தாங்கிச் செல்கிற பாட்டாளி வர்க்கம் முதலாளித்துவ ஜன நாயகத்தில் உள்ளார்ந்திருக்கிற புதிய பகைமைகளையோ புதிய போராட்டத்தையோ ஒரு கணமேனும் மறக்கலாகாது.

ஆகவே, ஒருங்கே சுதந்தரத்துக்காகவும் குடியரசுக்காக வும் நடக்கும் போராட்டத்துடனும், அரசியல் நிர்ணய சபையுடனும், ஒரு புதிய வர்க்கப் போராட்டத்துக்கு வழி திறக்கும் ஜனநாயகப் புரட்சியுடனும் சம்பந்தப்பட்டுள்ள நிலையில் ஒரு தற்காலிகப் புரட்சி அரசாங்கத்தின் குறி பொருளை நாம் இங்கே ஆய்ந்து பார்த்த தீர்மானத்தின் பகுதி முழுமையாக மதிப்பீடு செய்கிறது.

அடுத்த பிரச்சினை ஒரு தற்காலிகப் புரட்சி அரசாங்கத் தின்பால் பொதுப்படையாகவே பாட்டாளி வர்க்கத்தின் உறவுநிலை என்ன எனும் பிரச்சினையாகும். தற்காலிகப் புரட்சி அரசாங்கம் அவசியம் எனும் துணிபைத் தொழிலாளி வர்க் கத்திடையே பரப்ப வேண்டும் என்று கட்சிக்கு நேரடியாக அறிவுறுத்துவதின் வழியாக இப்பிரச்சினைக்குக் காங்கிரஸ் தீர்மானம் முதன்முதலில் விடையளிக்கிறது. இந்த அவசியத் தைத் தொழிலாளி வர்க்கம் உணர்ந்து தீரவேண்டும். ஜார் அரசாங்கத்தைத் தூக்கியெறியும் பிரச்சினையை ''ஜன நாயகப் போக்குள்ள'' முதலாளி வர்க்கத்தினர் பின்னணி யில் வைக்கின்றனர், ஆனால் நாம் இதை முன்னணிக்குக் கொண்டுவந்து தற்காலிகப் புரட்சி அரசாங்கத்தின் தேவையை வலியுறுத்தித் தீர வேண்டும். மேலும், இன்றையக் காலப் பகுதியின் புற நிலைமைகளோடும் பாட்டாளி வர்க்க

ஜனநாயகத்தின் குறிக்கோள்களோடும் பொருந்தும்படியான செயலுக்குரிய வேலைத்திட்டத்தை இப்படிப்பட்ட அரசாங்கத்துக்கு நாம் வரையறுத்துத் தர வேண்டும். இவ்வேலைத் திட்டம் நம் கட்சியின் மொத்தமான குறைந்தபட்ச வேலைத்திட்டமாகும். இது உடனடியான அரசியல், பொருளாதார மாற்றங்கள் பற்றிய வேலைத்திட்டம்; ஒரு புறத்தில் இவற்றை இன்றுள்ள சமுதாய, பொருளாதார உறவுமுறைகளின் அடிப்படையிலேயே முற்றுக நடைமுறையில் சாதிக்க முடியும்; மறுபுறத்தில், அடுத்து முன்னேக்கி அடி எடுத்து வைப்பதற்கு, சோஷலிஸத்தைச் சாதிப்பதற்கு, இவை தேவைப்படுகின்றன.

ஆக, தற்காலிகப் புரட்சி அரசாங்கத்தின் தன்மையையும் நோக்கத்தையும் தீர்மானம் தெளிவுடன் வரையறுக்கிறது. இப்படிப்பட்ட ஓர் அரசாங்கம் தோற்றத்திலும் சரி, அடிப்படைத் தன்மையிலும்சரி, மக்களின் புரட்சியெழுச்சியின் உறுப்பாகத்தான் இருந்து தீர வேண்டும். அதன் சம்பிரதாய நோக்கம் அனைத்து மக்களதும் அரசியல் நிர்ணய சபையைக் கூட்டுவதற்குரிய கருவியாகப் பயன்படுவதாகத்தான் இருந்து தீர வேண்டும். அவன் நடவடிக்கைகளின் உள்ளடக்கம் பாட்டாளிவர்க்க ஜனநாயகத்தின் குறைந்தபட்ச வேலைத்திட்டத்தை, எதேச்சாதிகார முறையை எதிர்த்து எழுச்சி செய்து வரும் மக்களின் நலன்களைப் பாதுகாக்க வல்ல ஒரே வேலைத்திட்டத்தை, செயல்படுத்துவதாகத்தான் இருந்து தீர வேண்டும்.

தற்காலிக அரசாங்கம் என்பது தற்காலிகமானதேயாதலால் மக்கள் முழுமையின் ஒப்புதலை இன்னமும் பெருத ஓர் ஆக்கபூர்வமான வேலைத்திட்டத்தை நிறைவேற்ற முடியாது என்று வாதிக்கக் கூடும். அப்படிப்பட்ட வாதம் பிற்போக்காளர்களின், ''வரம்பற்ற முடியாட்சிவாதிகளின்'' குதர்க்க வாதமாகத்தான் இருக்குமே தவிர வேறில்லை. ஓர் ஆக்கபூர்வமான வேலைத்திட்டத்தை நிறைவேற்றுமல் இருந்துவிடுவது ஓர் ஊழல் மலிந்த எதேச்சாதிகார முறையின் நிலப்பிரபுத்துவ ஆட்சி இருந்து வருவதைச் சகித்துக் கொள்வதாகத்தான் அர்த்தம். புரட்சி இலட்சியத்துக்குத் துரோகம் செய்கிற

வர்களைக் கொண்ட அரசாங்கம் ஒன்றுதான் இப்படிப்பட்ட ஆட்சியைச் சகித்துக் கொள்ள முடியும், மக்களின் புரட்சி யெழுச்சியின் உறுப்பாக இருக்கும் ஓர் அரசாங்கம் அதைச் சகித்துக் கொள்ள முடியாது. அரசியல் நிர்ணய சபை கூட்டம் கூடும் உரிமையை உறுதிப்படுத்தாமற் போகக் கூடும், எனவே அரசியல் நிர்ணயசபை அப்படிப்பட்ட சுதந்தரத்தை உறுதிப்படுத்துப் வரை நாம் கூட்டம் கூடும் உரிமையைக் கையாளாமல் இருந்துவர வேண்டும் என்று யாரேனும் சொன்னால் அது கேலிக்கூத்தாகத்தான் இருக்கும். தற்காலிகப் புரட்சி அரசாங்கம் குறைந்தபட்ச வேலைத்திட்டத்தை உடனடியாக நிறைவேற்றுவதை ஆட்சேபிப்பதும் அவ்வாறே கேலிக்கூத்தாகத்தான் இருக்கும்.

கடைசியாக, குறைந்தபட்ச வேலைத்திட்டத்தை நிறைவேற்றுவது தற்காலிகப் புரட்சி அரசாங்கத்தின் பணி என்று செய்திருப்பதின் வழியாக, அதிகப்பட்ச வேலைத்திட்டத்தை உடனடியாக நிறைவேற்றுவது பற்றிய, சோஷலிஸப் புரட்சிக்கு அதிகாரத்தைக் கைப்பற்றுவது பற்றிய அபத்தமான அரை-அராஜகவாதக் கருத்துக்களை இத்தீர்மானம் விலக்கி விடுகிறதையும் நாம் குறித்துக் கொள்வோம். ருஷ்யாவின் பொருளாதார வளர்ச்சியின் அளவும் (இது ஒரு புறநிலைமை) பாட்டாளி வர்க்கத் திரள்களின் வர்க்க உணர்வின் அளவும் ஒழுங்கமைப்பின் அளவும் (இது புறநிலைமையோடு பிரிக்க முடியாதபடி பிணைக்கப்பட்டுள்ள அகநிலைமை) தொழிலாளி வர்க்கத்தின் உடனடியான முழுமையான விடுதலையை அசாத்தியமாக்குகின்றன. சிறிதும் விஷயமறியாத பேர்வழிகள்தாம் இன்று நிகழ்ந்துவரும் ஜனநாயகப் புரட்சியின் முதலாளித்துவத் தனமையைப் பார்க்காமல் கண்ணை மூடிக்கொள்ளமுடியும்; திரள் திரளான தொழிலாளிகள் சோஷலிஸத்தின் குறிக்கோள்களைப் பற்றியும் அதைச் சாதிப்பதற்கான வழிமுறைகளைப் பற்றியும் இன்னமும் எவ்வளவு குறைவாக அறிந்திருக்கிறார்கள் எனும் உண்மையை மிகவும் வெகுளித்தனமான நம்பிக்கையார்வலர்கள்தாம் மறக்க முடியும். தொழிலாளிகளின் விடுதலையைத் தொழிலாளிகள்தாம் வென்று கொள்ள வேண்டும் என்று நாமனைவரும் திடமாக நம்புகிறோம்.

முதலாளி வர்க்கம் முழுவதையும் எதிர்த்து நடக்கும் ஒரு பகிரங்கமான வர்க்கப் போராட்டத்திலே அவர்கள் வர்க்க உணர்வும் ஒழுங்கமைப்பும் பயிற்சியும் போதனையும் பெருவிட்டால் சோஷலிஸப் புரட்சி எனும் பேச்சுக்கே இடமில்லை. நாம் சோஷலிஸப் புரட்சியைத் தள்ளிப் போடுகிறோம் எனும் அராஜகவாதிகளின் ஆட்சேபணைகளுக்கு நாம் சொல்வதாவது: நாங்கள் சோஷலிஸப் புரட்சியைத் தள்ளிப் போடவில்லை, ஜனநாயகக் குடியரசுக்கான பாதை என்கிற ஒரே சாத்தியமான வழியில், ஒரே சரியான பாதையில் அதை நோக்கி முதல் அடி எடுத்து வைக்கிறோம். அரசியல் ஜனநாயகமெனும் பாதையை விட்டு வேறெந்த வழியிலாயினும் சோஷலிஸத்தை அடைய விரும்புகிறவர்கள் பொருளாதார அர்த்தத்திலும் அரசியல் அர்த்தத்திலும் ஒருங்கே அபத்தமான, பிற்போக்கான முடிவுகளுக்குத்தான் தவிர்க்க முடியாதவாறு வந்து சேருவார்கள். நாம் மேலே போய் ஏன் நம் அதிகப்பட்ச வேலைத்திட்டத்தை நிறைவேற்றக் கூடாது என்று உரிய தருணத்தில் தொழிலாளிகள் யாராவது நம்மைக் கேட்டால், ஜனநாயக மனப்பான்மையுள்ள மக்கள் திரள் இன்னமும் சோஷலிஸத்திலிருந்து வெகு தூரத்தில் இருந்து வருவதையும் இன்னமும் வர்க்கப் பகைமைகள் வளர்ச்சியுறுமலேஇருந்து வருவதையும்இன்னமும்பாட்டாளிவர்க்கம் ஒழுங்கமைப்பு பெருமலே இருந்து வருவதையும் சுட்டிக் காட்டிப் பதில் அளிப்போம். ருஷ்யாவெங்கும் இலட்சக் கணக்கிலே தொழிலாளிகளை ஒன்றுதிரட்டி ஒழுங்கமையுங்கள், நம் வேலைத்திட்டத்துக்குக் கோடிக் கணக்கான மக்களின் அனுதாபத்தைப் பெறுங்கள்! படாடோபமான ஆனல் அர்த்தமற்ற அராஜகச் சொற்றொடர்களோடு நின்று கொள்ளாமல் இதைச் செய்ய முயலுங்கள் — முடிந்தவரை முழுமையான ஜனநாயக மாற்றங்களைப் பொருத்துத்தான் இந்த ஒழுங்கமைப்பைச் சாதிப்பதும் இந்த சோஷலிஸ அறிவொளியைப் பரப்புவதும் இருக்கிறது என்று உடனே பார்ப்பீர்கள்.

மேலே போவோம். தற்காலிகப் புரட்சி அரசாங்கத்தின் குறிபொருளும் அவ்வரசாங்கத்தின்பால் பாட்டாளி வர்க்கத்

தின் உறவு நிலையும் தெளிவாக்கப்பட்டவுடன் பின்வரும் கேள்வி எழுகிறது: அப்படிப்பட்ட அரசாங்கத்தில் நாம் கலந்து கொள்வது (மேலிருந்து செயல் புரிவது) அனுமதிக்கத்தக்கதா? அனுமதிக்கத்தக்கதே என்றால் எந்த நிபந்தனைகளின் கீழ் அனுமதிக்கத்தக்கது? நாம் கீழிருந்து புரியும் செயல் என்னவாக இருக்க வேண்டும்? இவ்விரு கேள்விகளுக்கும் சரிநுட்பமான விடைகளைத் தீர்மானம் கொடுக்கிறது. ஒரு தற்காலிகப் புரட்சி அரசாங்கத்தில் (ஜனநாயகப் புரட்சியின் காலப் பகுதியில், குடியரசுக்காகப் போராடி வரும் காலப்பகுதியில்) சமூக-ஜனநாயகவாதிகள் கலந்து கொள்வது கோட்பாடுரீதியில் **அனுமதிக்கத்தக்கதே** என்று தீர்மானம் அழுத்தந்திருத்தமாக அறிவிக்கிறது. கோட்பாடுரீதியிலே அனுமதிக்கத்தக்கதல்ல என்று இக்கேள்விக்கு விடையளிக்கும் அராஜகவாதிகளிடமிருந்தும் இப்படிப்பட்ட அரசாங்கத்தில் நாம் கலந்து கொள்வதை அவசியமாக்கும் ஒரு நிலைமை வாய்க்கக் கூடியதைக் காட்டி நமக்குப் **பயங்காட்ட முயற்சிக்கும்** சமூக-ஜனநாயகவாதத்தின் வாலைப்பிடிக்கும் (மர்த்தீனவ், புதிய-**இஸ்க்ரா** ஆதரவாளர்கள் போன்ற) நபர்களிடமிருந்தும் ஒருங்கே இப்பிரகடனத்தின் வழியாக இறுதியாகவும் திண்ணமாகவும் நம்மை விலக்கிக்கொள்கிறோம். புதிய-**இஸ்க்ரா** கருத்தை, அதாவது தற்காலிகப் புரட்சி அரசாங்கத்தில் சமூக-ஜனநாயகவாதிகள் கலந்து கொள்வது ஒரு வகையான மில்லிரான்வாதமாக இருக்குமென்றும் முதலாளித்துவ ஆட்சி முறையைப் புனிதப்படுத்துவது முதலிய வகையில் அது கோட்பாடுரீதியிலே அனுமதிக்கத்தக்கதல்ல என்றும் கூறும் கருத்தை, ருஷ்யாவின் சமூக-ஜனநாயகத் தொழிலாளர் கட்சியின் மூன்றாவது காங்கிரஸ் இந்தப் பிரகடனத்தின் வழியாக மாற்றவொண்ணா வகையில் நிராகரித்தது.

என்றபோதிலும், கோட்பாடுரீதியிலே அனுமதிக்கத்தக்கது எனும் பிரச்சினை நடைமுறைப் பொருத்தமுடைமை எனும் பிரச்சினையைத் தீர்க்கவில்லை என்பதே தெளிவு. எந்த நிலைமைகளின் கீழ் இந்தப் புதிய போராட்ட வடிவம்—கட்சிக் காங்கிரஸ் அங்கீகரித்திருக்கும் ''மேலிருந்து'' நடத்தும் போராட்டம்—பொருத்தமுடையது? சக்திகளின் பரஸ்

பர ஒப்புநிலை முதலியவை போன்ற ஸ்தூலமான நிலைமைகளைப் பற்றித் தற்சமயம் பேசுவது சாத்தியமில்லை என்று சொல்லாமலே விளங்கும். இயல்பாகவே, தீர்மானம் இந் நிலைமைகளை முன்கூட்டி வரையறுக்காமல் நின்று கொள்கிறது. அறிவுள்ளவன் எவனும் இவ்விஷயத்தைப் பற்றி எதையும் தற்சமயம் முன்கூட்டிச் சொல்லத் துணிய மாட்டான். நாம் செய்யக்கூடியதும் செய்யவேண்டியதும் இது தான்: நாம் கலந்து கொள்வதின் தன்மையையும் குறிக்கோளையும் நிர்ணயிப்பது. தீர்மானத்தில் இதுதான் செய்யப் பட்டுள்ளது. நாம் கலந்து கொள்வதிலுள்ள இரண்டு நோக்கங்களைத் தீர்மானம் சுட்டிக்காட்டுகிறது: 1) எதிர்ப் புரட்சி முயற்சிகளை எதிர்த்து விட்டுக்கொடாமல் போராடுவது, 2) தொழிலாளி வர்க்கத்தின் சுதந்தரமான நலன்களைப் பாதுகாப்பது, என்று. புரட்சிகரமான மக்களுக்குப் பயங் காட்டி எதேச்சாதிகார முறையிடம் இணங்கிப் போகுமாறு செய்ய முயன்று பிற்போக்கின் மனநிலை பற்றி எவ்வளவோ ஆர்வத்துடன் மிதவாத முதலாளி வர்க்கத்தினர் பேசத் துவங்கியிருக்கும் நேரத்தில் (ஒஸ்வபஷ்தேனியே, இதழ் 71ல் திரு. ஸ்துரூவேயின் மிகவும் அறிவூட்டத்தக்க ''பகிரங்கக் கடிதத்தைப்'' பார்க்க)—இப்படிப்பட்ட நேரத்தில் எதிர்ப் புரட்சிக்கு எதிராக உண்மையான போர் நடத்தும் பணியைப் பற்றிக் கவனம் செலுத்துமாறு பாட்டாளி வர்க்கத்தின் கட்சி அறைகூவியழைப்பது குறிப்பாகப் பொருத்த முடையதாகும். கடைசிப் பகுப்பாய்வில் பார்க்கும் போது, அரசியல் சுதந்தரம், வர்க்கப் போராட்டம் பற்றிய மாபெரும் பிரச்சினைகளைப் பலம் ஒன்றுதான் தீர்த்து வைக்கிறது; பாதுகாப்புக்காக மட்டுமின்றித் தாக்குதலுக்காகவும் இந்தப் பலத்தைத் தயாரித்து ஒழுங்கமைப்பதும் தீவிரமாகப் பயன் படுத்துவதும் நம் வேலையாகும். ஐரோப்பாவில் அரசியல் பிற்போக்கு நீண்டகாலமாக நடத்தி வரும் ஆட்சி—இது பாரிஸ் கம்யூன் நடந்த நாட்களிலிருந்து இடையறுது நீடித்து வருகிறது—செய்கை என்பது ''கீழிருந்து'' மட்டுமே நடந்தேற முடியும் எனும் கருத்துக்கு நம்மை மிதமிஞ்சிப் பழக்கப் படுத்தியுள்ளது, தற்காப்புப் போராட்டங்களை மட்டுமே

பார்ப்பதற்கு நம்மை மிதமிஞ்சிப் பழக்கப்படுத்தியுள்ளது. ஐயமின்றி ஒரு புதிய சகாப்தத்தில் நாம் நுழைந்திருக்கிறோம்—அரசியல் எழுச்சிகளும் புரட்சிகளும் நடக்கும் காலப் பகுதி தொடங்கி விட்டது. இன்று ருஷ்யா கடந்து வரும் இப்படிப்பட்ட காலப்பகுதியில் நாம் பழைய, மாறுதலற்ற சூத்திரங்களோடு நிறுத்திக் கொள்வது அனுமதிக்கத்தக்கதல்ல. மேலிருந்து செயல் புரிவது எனும் கருத்தை நாம் பிரச்சாரம் செய்ய வேண்டும்; மிகவும் வலுவான, தாக்குச் செயலுக்குத் தயாரிப்பு செய்ய வேண்டும்; அப்படிப்பட்ட செயலுக்குரிய நிலைமைகளையும் வடிவங்களையும் பயில வேண்டும். இந்நிலைமைகள் இரண்டையும் காங்கிரஸ் தீர்மானம் முன்னணியில் கொணர்ந்து நிறுத்துகிறது: ஒன்று, தற்காலிகப் புரட்சி அரசாங்கத்தில் சமூக-ஜனநாயகவாதிகள் கலந்து கொள்வதைப் பற்றிய சம்பிரதாய அம்சத்தைக் குறிப்பிடுகிறது (கட்சி தன்னுடைய பிரதிநிதிகளைக் கண்டிப்புடன் கண்காணிப்பது); இரண்டாவது, இப்படிக் கலந்து கொள்வதின் தன்மையை(முழுமையான சோஷலிஸப் புரட்சியைச் செய்து முடிக்கும் குறிக்கோளைக் கணமேனும் மறந்துவிடாமல் இருப்பது) குறிப்பிடுகிறது.

''மேலிருந்து'' செயல் புரிவது—இந்தப் புதிய, இதுவரை அநேகமாக முன்னுதாரணமற்ற போராட்ட வழிமுறை—சம்பந்தமாகக் கட்சிக் கொள்கையின் எல்லா அம்சங்களையும் இவ்வாறு விளக்கியபின் நாம் மேலிருந்து செயல் புரிய முடியாமற்போகிற நிலைமைக்கும் தீர்மானம் ஏற்பாடு செய்கிறது. எப்படி இருந்தபோதிலும், தற்காலிகப் புரட்சி அரசாங்கத்தின் மீது நாம் கீழிருந்து நிர்ப்பந்தம் கொண்டுவர வேண்டும். கீழிருந்து இந்த நிர்ப்பந்தத்தைச் செயல்படுத்த முடிவதற்குப் பாட்டாளி வர்க்கம் ஆயுதமேந்தி இருக்க வேண்டும்—ஏனெனில், புரட்சிகரமான நிலைமையில் விவகாரங்கள் அசாதாரணமான வேகத்துடன் பகிரங்கமான உள்நாட்டுப் போர்க் கட்டத்துக்கு வளர்கின்றன—, மற்றும் சமூக-ஜனநாயகக் கட்சி பாட்டாளிவர்க்கத்திற்குத் தலைமை வகித்திருக்கவும் வேண்டும். அது ஆயுதமேந்திச் செலுத்தும் நிர்ப்பந்தத்தின் நோக்கம் ''புரட்சியின் ஆதாயங்களைப்

பாதுகாப்பது, கெட்டிப்படுத்துவது, விரிவுபடுத்துவது''— அதாவது, பாட்டாளி வர்க்க நலன்களின் நிலேயிலிருந்து பார்க்கும் போது அந்த ஆதாயங்கள் நம் குறைந்தபட்ச வேலேத்திட்டம் முழுவதையும் நிறைவேற்றுவதாக அமைந் திருக்க வேண்டும்.

இத்துடன் தற்காலிகப் புரட்சி அரசாங்கம் பற்றிய மூன் ருவது காங்கிரஸ் தீர்மானத்தைப் பற்றிய நம்முடைய சுருக்கமான பகுப்பாய்வை முடிக்கிருேம். வாசகர் பார்க்க லாம்: இத்தீர்மானம் இந்தப் புதிய பிரச்சினேயின் முக்கியத் துவத்தை விளக்குகிறது, அதன்பாலுள்ள பாட்டாளி வர்க்கக் கட்சியின் உறவு நிலேயையும் விளக்குகிறது, தற்காலிகப் புரட்சி அரசாங்கத்திற்குள்ளிருந்தும் வெளியிலிருந்தும் ஒருங்கே கட்சி பின்பற்ற வேண்டிய கொள்கையையும் விளக் குகிறது.

இனி இதே பிரச்சினேயைப் பற்றி ''மாநாடு'' நிறை வேற்றிய தீர்மானத்தைக் கவனிப்போம்.

## 3. “ஜார் ஆட்சி மீது புரட்சியின் நிர்ணயமான வெற்றி” என்பதின் பொருள் என்ன?

''மாநாட்டின்'' தீர்மானம் ''அரசதிகாரத்தைக் கைப்பற்று வதும் தற்காலிக அரசாங்கத்தில் கலந்து கொள்வதும்''* எனும் விஷயத்தில் கவனம் செலுத்துகிறது. நாம் ஏற்கெனவே சுட்டிக்காட்டியுள்ளபடி, பிரச்சினேயை முன்வைத்துள்ள முறையிலேயே குழப்பம் உள்ளது. ஒரு

---

* இத்தீர்மானத்தின் முழு வாசகத்தைக் குறுநூலின் பக்கங்கள் 400, 403-404, 407, 431, 433-434ல் கொடுக் கப்பட்டுள்ள மேற்கோள்களிலிருந்து வாசகர் மறுநிர்மாணம் செய்து கொள்ளலாம். (1907 பதிப்புக்கு ஆசிரியர் எழுதிய குறிப்பு. இந்நூலின் பக்கங்கள் 110, 119-120, 128, 184, 190-191ஐப் பார்க்க.—ப-ர்.)

புறத்தில், பிரச்சினை குறுகிய முறையில் முன்வைக்கப்படுகிறது: தற்காலிக அரசாங்கத்தில் நாம் கலந்த கொள்வதைப் பற்றி மட்டுமே தீர்மானம் கவனிக்கிறது, பொதுவாகத் தற்காலிகப் புரட்சி அரசாங்கம் சம்பந்தமாகக் கட்சியின் பணிகளைப்பற்றி அல்ல. மறுபுறத்தில், முற்றிலும் வெவ்வேறான இரண்டு பிரச்சினைகள்—அதாவது, **ஜனநாயகப்** புரட்சியின் கட்டங்களில் ஒன்றில் நாம் கலந்து கொள்வது பற்றிய பிரச்சினையும் **சோஷலிஸப்** புரட்சியைப் பற்றிய பிரச்சினையும்—குழுப்பபப்படுகின்றன. உண்மையாகப் பார்த்தால், சமூக-ஜனநாயகவாதம் ''அரசதிகாரத்தைக் கைப்பற்றுவது'' என்பது சோஷலிஸப் புரட்சியேயாகும்; அச்சொற்களை அவற்றின் நேரடியான, வழக்கமான அர்த்தத்தில் நாம் பயன்படுத்தினால் அதைத் தவிர வேறொன்றாக இருக்க முடியாது. ஆனால், இச்சொற்களின் அர்த்தம் ஜனநாயகப் புரட்சிக்காக —சோஷலிஸப் புரட்சிக்காக அல்ல—அதிகாரத்தைக் கைப்பற்றுவது என்று நாம் புரிந்து கொள்ள வேண்டுமெனில், தற்காலிகப் புரட்சி அரசாங்கத்தில் கலந்து கொள்வதைப் பற்றிப் பேசுவதோடு மட்டுமின்றிப் **பொதுவாக** ''அரசதிகாரத்தைக் கைப்பற்றுவது'' பற்றியும் பேசுவதில் அர்த்தம் என்ன? ஜனநாயகப்புரட்சியைப்பற்றிப் பேசுவதா சோஷலிஸப் புரட்சியைப் பற்றிப் பேசுவதா என்று தெரியாமல் நம் ''மாநாட்டுக்காரர்கள்'' நிச்சயமற்று இருந்தனர் என்பது வெளிப்படை. தோழர் மர்த்தீனவ் தம்முடைய **இரண்டு சர்வாதிகார முறைகள்** எனும் பழிகேடான நூலில் இந்தக் குழப்பத்தைத் தொடங்கி வைத்தார் என்பதை இப்பிரச்சினையைப் பற்றிய இலக்கியத்தைப் படித்து வந்திருப்பவர்கள் அறிவார்கள்; வால்பிடிக்கும் போக்கின் இலக்கியத்துக்கு முன்மாதிரியாயுள்ள அந்நூலில் (ஜனவரி 9க்கு[45] முன்பே) இப்பிரச்சினையை முன்வைத்த முறையை புதிய-**இஸ்க்ரா**வாதிகள் நினைவுபடுத்திக் கொள்ள விரும்பவில்லை. என்றபோதிலும், அது மாநாட்டின் மீது சித்தாந்தச் செல்வாக்கு செலுத்தியதில் ஐயம் இருக்க முடியாது.

நிற்க, தீர்மானத்தின் தலைப்பு பற்றிச் சொன்னது போதும். ஒப்பிடமுடியாத அளவிலே இதைவிட மேலும் கடுமை

யான, ஆழமான தவறுகளைத் தீர்மானத்தின் உள்ளடக்கம் வெளிப்படுத்துகிறது. அதன் முதற்பகுதி பின்வருமாறு:

''ஜாராட்சி மேல் புரட்சி நிர்ணயமான வெற்றி பெறுவதை ஒரு வெற்றிகரமான மக்கள் புரட்சியெழுச்சியிலிருந்து தோன்றும் தற்காலிக அரசாங்கம் நிலைநாட்டப்படுவது குறிக்கக் கூடும், அல்லது ஏதாவது ஒரு வகையான பிரதிநிதித்துவ நிறுவனத்தின் புரட்சிகரமான முன்முயற்சி குறிக்கக் கூடும், இது மக்களின் நேரடியான புரட்சிகரமான நிர்ப்பந்தத்தின் கீழ் அனைத்து மக்களுடைய அரசியல் நிர்ணய சபையை ஏற்படுத்துவதென்று முடிவு செய்யலாம்.''

ஆக, ஜாராட்சி மேல் புரட்சி நிர்ணயமான வெற்றி பெறுவதை வெற்றிகரமான மக்கள் புரட்சியெழுச்சி குறிக்கக் கூடும் அல்லது... அரசியல் நிர்ணய சபையை ஏற்படுத்துவதென்று ஒரு பிரதிநிதித்துவ நிறுவனம் எடுக்கிற முடிவும் குறிக்கக் கூடும்! அதன் பொருள் என்ன? அதை நாம் எப்படிப் புரிந்து கொள்வது? அரசியல் நிர்ணய சபையை ஏற்படுத்துவது என்கிற ''முடிவு'' நிர்ணயமான வெற்றியைக் குறிக்கக் கூடுமா?? இப்படிப்பட்ட ''வெற்றி'' என்பது ''வெற்றிகரமான மக்கள் புரட்சியெழுச்சியிலிருந்து தோன்றும்'' தற்காலிக அரசாங்கத்தை நிலைநாட்டுவது என்பதுடன் அருகே வைக்கப்படுகிறது!! ஒரு வெற்றிகரமான மக்கள் புரட்சியெழுச்சியும் தற்காலிக அரசாங்கத்தை நிலைநாட்டுவதும் புரட்சி நடைமுறையில் உண்மையாக வெற்றி பெறுவதைக் குறிக்கும், ஆனால் அரசியல் நிர்ணய சபையை ஏற்படுத்துவதென்று எடுக்கும் ''முடிவு'' புரட்சி சொல்லளவில் வெற்றி பெறுவதை மட்டுமே குறிக்கும் என்கிற விஷயத்தை மாநாடு கவனிக்கத் தவறிவிட்டது.

ஒஸ்வபஷ்தேனியே குழுவின் மிதவாதிகள் விடாமல் செய்து வருகிற அதே பிழையைத்தான் புதிய-இஸ்க்ரா மென்ஷிவிக்குகளின் மாநாடு செய்திருக்கிறது. பலமும் அரசதிகாரமும் ஜாரிடம் நீடித்திருந்து வருகிற உண்மையைப் பார்க்காமல் நாணத்துடன் கண்ணை மூடிக் கொண்டும், ''நிர்ணயிக்க'' வேண்டுமென்றால் அவ்வாறு செய்வதற்கான பலம் பெற்றிருக்க வேண்டும் என்பதை மறந்துவிட்டும் ஒஸ்வபஷ்தேனியே குழுவினர் ''அரசியல் நிர்ணய'' சபையைப் பற்றிப் பிதற்று

கிறார்கள். பிரதிநிதிகள்—அவர்கள் யாராக இருந்த போதிலும் சரி — எடுத்த ''முடிவு'' என்பதற்கும் அந்த முடிவு நிறை வேற்றப்படுவது என்பதற்கும் வெகு தூரம் உள்ளது; ஜார் மன்னனிடம் அரசதிகாரம் இருந்து வரும் வரை, எந்தப் பிரதிநிதிகளாயினும் சரி, அவர்கள் எடுக்கிற அத்தனை முடிவு களும் பொருளற்ற, இரங்கத்தக்க பிதற்றலாகவே இருந்து வரும் —1848ன் ஜெர்மன் புரட்சி வரலாற்றில் பெயர் பெற்ற ஃபிராங்ஃபுர்ட் நாடாளுமன்றத்தின்[46] ''முடிவுகள்'' போல் இருக்கும்—என்கிற உண்மையையும் மாநாடு மறந்து விட்டது. புரட்சிகரமான பாட்டாளி வர்க்கத்தின் பிரதிநிதி யான மார்க்ஸ் தம்முடைய **புதிய ரைன் பத்திரிகையில்**[47] **ஓஸ்வபஷ்தேனியே** மாதிரியான ஃபிராங்ஃபுர்ட் மிதவாதி களைக் கொடிய ஏளனத்துடன் தாக்கிக் கண்டித்தார்; ஏனெ னில், அவர்கள் நேர்த்தியான வார்த்தைகளைப் பேசி வந்தனர், எல்லா வகைப்பட்ட ஜனநாயக ''முடிவுகளும்'' எடுத்துவந்தனர், எல்லா விதமான சுதந்தரங்களையும் ''நிர்ண யித்து'' வந்தனர், ஆனால் நடைமுறையில் அரசதிகாரத்தை அரசனிடமே விட்டு வைத்தனர், அரசன் வசமிருக்கும் இராணுவ பலத்தை எதிர்த்து ஆயுதமேந்திய போராட் டத்தை ஒழுங்கமைக்கத் தவறினர். ஃபிராங்ஃபுர்ட் **ஓஸ்வபஷ் தேனியே** மிதவாதிகள் இவ்வாறு பிதற்றிக் கொண்டிருக்கை யில் அரசன் தருணம் பார்த்திருந்தபடியே தன் இராணுவ பலத்தைக் கெட்டிப்படுத்திக் கொண்டிருந்தான்; எதிர்ப் புரட்சி அசல் பலத்தை ஆதாரமாகக் கொண்டு ஜனநாயக வாதிகளை அவர்களின் நேர்த்தியான ''முடிவுகள்'' அனைத் துடனும் சேர்த்து அடியோடு தோற்கடித்துவிட்டது.

வெற்றிக்கு இன்றியமையாத நிபந்தனை இல்லாமலிருக் கிற ஒன்றை நிர்ணயமான வெற்றிக்குச் சமமாக மாநாடு வைத்தது. நம் கட்சியின் குடியரசுப் போக்கான வேலைத் திட்டத்தை அங்கீகரிக்கும் சமூக-ஜனநாயகவாதிகள் இப்படி பட்ட தவறு செய்யச் சாத்தியமானது எப்படி? இந்த வேடிக்கையானநிகழ்வுத்தோற்றத்தைப்புரிந்துகொள்வதற்கு கட்சியினின்று பிரிந்து சென்ற பகுதியினரைப்பற்றி மூன் றாவது காங்கிரஸ் எடுத்த தீர்மானத்தைத் திரும்பிப் பார்க்க

வேண்டும்.* இத்தீர்மானம் '' 'பொருளாதாரவாதத்தை' ஒத்திருக்கும்'' பல்வேறு போக்குகள் நம் கட்சியில் இருந்து வருகிற உண்மையைக் குறிப்பிடுகிறது. அரசியல் போராட்

---

* இத்தீர்மானம் முழுவதையும் தருகிறோம். '' 'பொருளாதாரவாதத்தை' எதிர்த்துக் கட்சி போராட்டம் நடத்திய காலந்தொட்டு ரு.ச.ஜ.தொ. கட்சியில் சில சாயல்கள் தப்பிப் பிழைத்து வந்துள்ளன; இவை வேறுபடும் அளவுகளிலும் விஷயங்களிலும் 'பொருளாதாரவாதத்தை' ஒத்துள்ளன, பாட்டாளி வர்க்கத்தின் போராட்டத்தில் வர்க்க உணர்வுக்குரிய அம்சங்களின் முக்கியத்துவத்தைச் சிறுமைப்படுத்துவதும் அவற்றை தன்னியல்புப் போக்கான அம்சங்களுக்குக் கீழ்ப்படுத்துவதுமான ஒரு பொதுவான போக்கைக் காட்டிக் கொள்கின்றன. ஒழுங்கமைப்பு பற்றிய பிரச்சினை விஷயத்தில் இந்தச் சாயல்களின் பிரதிநிதிகள் தத்துவரீதியிலே ஒழுங்கமைப்பு என்பது ஒரு தொடர்நிகழ்வுப்போக்கு எனும் கோட்பாட்டை முன்வைத்தனர்; இது முறையாக நடத்தப்படும் கட்சி வேலையுடன் இசைவிணக்கம் உள்ளதல்ல; நடைமுறையிலே பார்த்தால் இச்சாயல்களின் பிரதிநிதிகள் பல வழக்குகளில் முறைமையுடன் கட்சிக் கட்டுப்பாட்டினின்று விலகிச் செல்கின்றனர்; மற்ற வழக்குகளில், இவர்கள் ருஷ்ய வாழ்க்கையின் புறநிலைமைகளைக் கவனத்தில் கொள்ளாமல் தேர்தல் கோட்பாட்டின் விரிவான செயல்படுத்தல் பற்றிய கருத்தைக் கட்சியின் மிகவும் தெளிவுக் குறைவுள்ள பகுதியிடையே பிரச்சாரம் செய்கின்றனர், எனவே தற்சமயம் கட்சியின் பிணைப்புகளுக்குரிய சாத்தியமான ஒரே அடிப்படையைப் பலவீனப்படுத்த முயல்கின்றனர். போர்த்தந்திரப் பிரச்சினைகள் விஷயத்தில், மிதவாத-முதலாளி வர்க்கக் கட்சிகள் சம்பந்தமாக முற்றிலும் சுதந்தரமான போர்த்தந்திரங்களைக் கட்சி பின்பற்றுவதற்குத் தங்களுடைய எதிர்ப்பைப் பிரகடனப்படுத்தியும், மக்கள் புரட்சியெழுச்சியில் அமைப்பாளனின் பாத்திரத்தை நம் கட்சி எடுத்துக் கொள்வது சாத்தியமில்லை, விரும்பத்தக்கதுமல்ல என்று மறுத்தும், எந்த விதமான நிலைமைகளின் கீழும் தற்காலிக ஜனநாயக-புரட்சி அரசாங்கத்தில் கட்சி கலந்து கொள்வதை எதிர்த்தும் கட்சி வேலையின் செயல் பரப்பைக் குறுக்கிவிடும் முயற்சியை இவர்கள் காட்டிக் கொள்கின்றனர்.

''புரட்சிகரமான சமூக-ஜனநாயகவாதத்தின் கோட்பாடுகளினின்று விலகும் இப்படிப்பட்ட அரைகுறைத் திரிபுகளை எதிர்த்து ஒரு வலுமிக்க சித்தாந்தப் போராட்டம் நடத்தும்

டத்தைப் பற்றியோ எட்டு மணி நேர வேலைநாள் பற்றியோ ''பொருளாதாரவாதிகள்'' பேசிய மாதிரியே நம்முடைய ''மாநாட்டுக்காரர்களும்'' புரட்சியைப் பற்றிப் பேசுகிறார்கள் (இவர்கள் மர்த்தீனவின் சித்தாந்த வழிகாட்டுதலின் கீழ் இருப்பது தற்செயலானதல்ல). ''பொருளாதாரவாதிகள்'' ''கட்டங்கள் பற்றிய தத்துவத்தை'' உடனே முன் வைத்தார்கள்: 1) உரிமைகளுக்காகப் போராட்டம், 2) அரசியல் கிளர்ச்சி, 3) அரசியல் போராட்டம், அல்லது, 1) பத்து மணி நேர வேலைநாள், 2) ஒன்பது மணி நேர வேலைநாள், 3) எட்டு மணி நேர வேலைநாள், என்று. இந்த ''போர்த்தந்திரங்கள் என்பவை ஒரு தொடர்நிகழ்வுப்போக்கின்'' விளைவுகளை எல்லோரும் போதிய அளவுக்கு அறிவார்கள். இப்போது முன்கூட்டியே புரட்சியையும் பின்வரும் கட்டங்களாக ஒழுங்காகப் பிரிவு செய்யும்படி நம்மை அழைக்கிறார்கள்: 1) ஜார் மன்னன் ஒரு பிரதிநிதித்துவ நிறுவனத்தைக் கூட்டுகிறான்; 2) ''மக்களின்'' நிர்ப்பந்தத்தின் கீழ் இந்த ''நிறுவனம்'' ஓர் அரசியல் நிர்ணய சபையை ஏற்படுத்த ''முடிவு செய்கிறது''; 3)... மூன்றும் கட்டத்தைப் பற்றி மென்ஷிவிக்குகளிடையே இன்னமும் கருத்தொற்றுமை ஏற்படவில்லை; மக்களின் புரட்சிகரமான நிர்ப்பந்தம் ஜாராட்சியின் எதிர்ப்புரட்சி வகைப்பட்ட நிர்ப்பந்தத்தை எதிர்கொள்ளும், எனவே ''முடிவு'' நிறைவேற்றப்படாமலே இருந்துவிடும் அல்லது மக்கள்புரட்சியெழுச்சியின் வெற்றியோ தோல்வியோ தான் இறுதியிலே விவகாரத்தை முடிவு செய்யும் என்பதை அவர்கள் மறந்துவிட்டார்கள். புரட்சிகரமான வழியில் எட்டு மணி நேர வேலைநாளைச் செயல்படுத்துவதோ, அல்லது

---

படி எல்லாவிடங்களிலும் உள்ள கட்சி உறுப்பினர்கள் அனைவருக்கும் காங்கிரஸ் ஆணையிடுகிறது; எனினும், அதே நேரத்தில் எந்த அளவுக்காயினும் இவ்வகைக் கருத்துக்களை வைத்திருப்பவர்கள் கட்சி அமைப்புகளில் இருந்து வரலாம் என்று அது கருதுகிறது, ஆனால் இதற்கு ஓர் இன்றியமையாத நிபந்தனையாகஅவர்கள் கட்சி காங்கிரஸ்களையும்கட்சி விதிகளையும் அங்கீகரித்து கட்சிக் கட்டுப்பாட்டிற்கு முற்றிலும் கீழ்ப்படிந்து நடக்க வேண்டும்.'' (1907 பதிப்புக்கு ஆசிரியர் எழுதிய குறிப்பு.—ப-ர்.)

பத்து மணி நேர வேலைநாளை வழங்கி ஒன்பது மணி நேர வேலைநாளுக்கு மாறிச்செல்வதென்று ''முடிவு'' செய்வதோ தொழிலாளிகளின் நிர்ணயமான வெற்றியைக் குறிக்கக் கூடும் எனும் ''பொருளாதாரவாதிகளின்'' வாதத்தை மாநாட்டுத் தீர்மானம் அப்படியே ஒத்துள்ளது.... பிரதியெடுப்பும் நிறைநேர்த்தியாயுள்ளது.

அத்தீர்மானத்தை எழுதியவர்கள் புரட்சியெழுச்சியின் வெற்றியை ஜார் மன்னனுல் கூட்டப்பட்ட ஒரு பிரதிநிதித்துவ நிறுவனத்தின் ''முடிவுக்கு'' சமமாக வைக்க எண்ணங்கொள்ளவில்லையென்றும் அவ்விரு வழக்குகளில் எது நேர்ந்தாலும் அதற்கான கட்சிப் போர்த்தந்திரங்களைக் கொடுக்க மட்டுமே விரும்பினர் என்றும் நம்மிடம் ஆட்சேபணை தெரிவிக்கலாம். இதற்கு நாம் அளிக்கும் பதில் இதுதான்: 1) ஒரு பிரதிநிதித்துவ நிறுவனத்தின் முடிவை ''ஜாராட்சி மேல் புரட்சி நிர்ணயமான வெற்றி பெறுவது'' என்று நேரிடையாக, ஐயந்திரிபுக்கு இடமின்றித் தீர்மானத்தின் வாசகம் கூறுகிறது. ஒருக்கால் இது கவனமின்றி எழுதியதின் விளைவாக இருக்கலாம்; ஒருக்கால் மாநாட்டுக் குறிப்பேட்டைத் திருப்பிப் பார்த்தபின் அதைத் திருத்திக் கொள்ள முடியும். ஆனுல் அப்படித் திருத்தப்படும்வரை, தற்போதைய வாசகத்துக்கு ஒரேயொரு பொருள்தான் இருக்க முடியும், அந்தப் பொருள் **ஒஸ்வபஷ்தேனியே** வாதப்போக்குடன் முற்றுகப் பொருந்தி நிற்கிறது. 2) தீர்மானத்தை எழுதியவர்கள் வழிவிலகிப் பற்றியிருக்கும் **ஒஸ்வபஷ்தேனியே** வாதப்போக்கு புதிய-**இஸ்க்ரா** குழுவினரின் பிற பிரசுரங்களில் மேலும் எவ்வளவோ தெளிவாகவும் எடுப்பாகவும் தெரிகிறது. எடுத்துக்காட்டாக, டிஃப்ளிஸ் கமிட்டியின் பத்திரிகையான **சொத்ஸியால்-டெமக்ராட்**[48] (ஜார்ஜிய மொழியில் வெளியிடப்படுவது; **இஸ்க்ரா** இதழ் 100ல் இதைப் புகழ்ந்திருக்கிறது) ''ஜெம்ஸ்கி ஸபோரும்* நம்முடைய போர்த்தந்திரங்களும்'' எனும் கட்டுரையில், ஆயுதமேந்திய புரட்சியெழுச்சி என்கிற, தற்காலிகப் புரட்சி அரசாங்கத்தை ஏற்படுத்துவது என்கிற

* தேசிய சட்டமன்றம்.—ப-ர்.

''போர்த்தந்திரங்களையும்'' விட ''ஜெம்ஸ்கி ஸபோரை நம் செய்கைக்குரிய மையமாகச் செய்யக் கூடிய போர்த்தந்திரங்கள்'' (இந்த ஜெம்ஸ்கி ஸபோரைக் கூட்டுவதைப் பற்றி எதுவும் திட்டவட்டமாக இதுவரை தெரியவில்லை என்பதையும் நாம் சொல்லி வைப்போம்!) ''நமக்கு அனுகூலமானவை'' என்று கூறும் அளவுக்குப் போகிறது. இந்தக் கட்டுரையைப் பின்னால் மீண்டும் குறிப்பிட்டுப் பேசுவோம். 3) புரட்சி வெற்றி பெற நேர்கிற போதும் தோல்வியடைய நேர்கிற போதும், வெற்றிகரமான புரட்சியெழுச்சி ஏற்படுகிற போதும் புரட்சியெழுச்சி பலமான சக்தியாக வளரத் தவறுகிற போதும் கட்சி பின்பற்றவேண்டிய போர்த்தந்திரங்களை முன்கூட்டியே விவாதிப்பதை யாரும் ஆட்சேபிக்க முடியாது. மிதவாத முதலாளி வர்க்கத்தாருடன் பேரம் நடத்தி முடிக்கும் நோக்குடன் ஜார் அரசாங்கம் ஒரு பிரதிநிதித்துவ சபையைக் கூட்டுவதில் வெற்றி பெறுவது சாத்தியமே; அப்படி நேரிடுவதை உத்தேசித்து, ''பாசாங்குத்தனமான கொள்கை'', ''போலி ஜனநாயகம்'', ''ஜெம்ஸ்கி ஸபோர் எனப்படுவது போன்ற கேலியான மக்கள் பிரதிநிதித்துவம்'' பற்றி மூன்றுவது காங்கிரஸ் தீர்மானம் தெளிவாகப் பேசுகிறது.* ஆனால் விஷயம்

---

* புரட்சி நிகழவிருக்கும் காலத்தில் அரசாங்கத்தின் போர்த்தந்திரங்கள் பற்றிய கண்ணோட்டம் சம்பந்தப்பட்ட இத்தீர்மானத்தின் வாசகம் பின்வருமாறு:

''இன்றையப் புரட்சிக் காலகட்டத்தில் அரசாங்கம் தன்னைப் பாதுகாத்துக் கொள்ளும் நோக்கங்களை வைத்து முக்கியமாகப் பாட்டாளி வர்க்கத்தின் வர்க்க உணர்வுள்ள பகுதிகளை எதிர்த்து வழக்கமான அடக்குமுறை நடவடிக்கைகளைத் தீவிரப்படுத்திவரும் அதே நேரத்தில் அது 1) சலுகைகளைக் கொடுத்தும் சீர்திருத்தம் பற்றிய வாக்குறுதிகளைக் கொடுத்தும் தொழிலாளி வர்க்கத்தை அரசியல் ரீதியிலே கெடுக்கவும் அதன் விளைவாக அதைப் புரட்சிப் போராட்டத்தினின்று திசை திருப்பி விடவும் முயல்கிறது; 2) அதே நோக்கத்தை வைத்துத் தன்னுடைய பாசாங்குள்ள சலுகையளிக்கும் கொள்கையைப் போலி ஜனநாயக வடிவங்களிலே போர்த்தி வருகிறது—கமிஷன்களுக்கும் மாநாடுகளுக்கும் தங்களுடைய பிரதிநிதிகளைத் தேர்ந்தெடுக்கும்படி தொழிலாளிகளை அழைப்பது முதல் ஜெம்ஸ்கி ஸபோர்

முழுவதும் இதுதான்: தற்காலிகப் புரட்சி அரசாங்கம் பற்றிய தீர்மானத்தில் இது சொல்லப்படவில்லை, ஏனெனில் இதற்கும் தற்காலிகப் புரட்சி அரசாங்கத்துக்கும் ஒரு சம்பந்தமும்

---

எனப்படுவது போன்ற கேலியான மக்கள் பிரதிநிதித்துவத்தை ஏற்படுத்துவது வரை இவ்வடிவங்கள் உள்ளன; 3) கறுப்பு நூற்றுவர்[49] எனப்படும் கும்பலை அது அமைக்கிறது, மக்களிடையே பொதுவாகப் பிற்போக்கானவர்களாகவும், அரசியல் உணர்வு பெறாதவர்களாகவும், இனவெறியாலோ மதவெறியாலோ கண்மூடிப்போனவர்களாகவும் இருக்கும் எல்லாப் பகுதிகளையும் புரட்சிக்கு எதிராகத் தூண்டிவிடுகிறது;

''இக்காரணங்களை வைத்து ரு.ச.ஜ.தொ. கட்சியின் மூன்றாவது காங்கிரஸ் கட்சி அமைப்புகள் அனைத்தையும் பின்வருமாறு பணித்திடத் தீர்மானிக்கிறது:

''அ) அரசாங்கத்தின் சலுகைகளின் பிற்போக்கான நோக்கத்தை அம்பலப்படுத்தி வரும் அதே நேரத்தில், ஒரு புறத்தில் இந்தச் சலுகைகள் பலவந்தத்தின் மூலமாகப் பறிக்கப்பட்டவை எனும் உண்மையையும், மறுபுறத்தில் பாட்டாளி வர்க்கத்தைத் திருப்திப்படுத்தக் கூடிய சீர்திருத்தங்களை எதேச்சாதிகார ஆட்சியால் அறவே கொடுக்க இயலாது எனும் உண்மையையும் தங்களுடைய பிரச்சாரத்திலும் கிளர்ச்சியிலும் வலியுறுத்த வேண்டும்;

''ஆ) தேர்தல் இயக்கத்தைப் பயன்படுத்திக் கொண்டு இந்த அரசாங்க நடவடிக்கைகளின் உண்மையான குறிபொருளைத் தொழிலாளிகளுக்கு விளக்க வேண்டும், மற்றும் எல்லோருக்கும் சம வாக்குரிமை, நேர்முகத் தேர்தல்கள், இரகசிய வாக்குப் பதிவு ஆகியவற்றின் அடிப்படையில் அமைந்த ஓர் அரசியல் நிர்ணய சபையைப் புரட்சிகரமான வழியிலே கூட்டுவது பாட்டாளி வர்க்கத்துக்கு அவசியம் என்று நிரூபிக்க வேண்டும்;

''இ) புரட்சிகரமான வழியிலே எட்டு மணி நேர வேலை நாளையும் தொழிலாளி வர்க்கத்தின் உடனடியான மற்ற கோரிக்கைகளையும் தாமதமின்றிச் செயல்படுத்துவதற்குப் பாட்டாளி வர்க்கத்தை ஒழுங்கமைக்க வேண்டும்;

''ஈ) கறுப்பு நூற்றுவரின், பொதுவாகவே அரசாங்கத்தின் தலைமையிலுள்ள எல்லாப் பிற்போக்கான பகுதிகளின் செய்கைகளை எதிர்த்து ஆயுதமேந்திய எதிர்ப்பை ஒழுங்கமைக்க வேண்டும்.'' (1907 பதிப்புக்கு ஆசிரியர் எழுதிய குறிப்பு.—ப-ர்.)

கிடையாது. இந்தச் சாத்திய நிகழ்ச்சி புரட்சியெழுச்சிப் பிரச்சினையையும் தற்காலிகப் புரட்சி அரசாங்கத்தை நிறுவும் பிரச்சினையையும் தள்ளிப் போடுகிறது; இந்தப் பிரச்சினையை மாற்றி அமைத்து விடுகிறது. இன்று விவகாரத்திலிருக்கும் விஷயம் எல்லா வகையான சேர்க்கைகளும் சாத்தியம், ஒருங்கே வெற்றியும் தோல்வியும் சாத்தியம், நேரான பாதையோ சுற்றுப் பாதையோ இருக்கக் கூடும், என்பதல்ல; எது உண்மையில் புரட்சிகரமான பாதை என்பதைப் பற்றித் தொழிலாளிகளின் மனத்தில் ஒரு சமூக-ஜனநாயகவாதி குழப்பம் உண்டாக்குவது அனுமதிக்கக் கூடியதல்ல என்பதே விஷயம்; வெற்றிக்குரிய அடிப்படையான நிபந்தனை இல்லாத ஒன்றை—ஒஸ்வபஷ்தேனியே செய்வது போல்—நிர்ணயமான வெற்றியாக வர்ணிப்பது அனுமதிக்கத்தக்கதல்ல என்பதே விஷயம். எட்டு மணி நேர வேலைநாளையுங் கூட நாம் ஒரேயடியில் அல்லாமல் ஒரு நீண்ட, சுற்றுப் பாதையிலே மட்டுமே பெறுவோம் என்பது சாத்தியமே. ஆனால், தள்ளிப்போட்டு வருவதையும், தாமதப்படுத்துவதையும், பேரம் பேசுவதையும், துரோகத்தையும், பிற்போக்கையும் குறித்திடப் பாட்டாளி வர்க்கம் சக்தியற்றுப் போகுமாறு செய்கிற இப்படிப்பட்ட செயல்திறமின்மையை, இப்படிப்பட்ட பலவீனத்தைத் தொழிலாளிகளுக்கு ஒரு வெற்றியாக வர்ணிக்கிறவனைப் பற்றி நீங்கள் என்ன சொல்வீர்கள்? **வ்பெரியோத்** * பத்திர்கையில் ஒரு சமயம் சொன்னது போல்,

---

* **வ்பெரியோத்** [முன்னேக்கி] பத்திரிகை கட்சியின் போல்ஷிவிக் பகுதியின் பத்திரிகையாக 1905 ஜனவரியிலிருந்து வெளிவரத் தொடங்கியது; ஜினீவாவில் பிரசுரிக்கப்பட்டது. ஜனவரி முதல் மே வரை மொத்தம் பதினெட்டு இதழ்கள் வெளியாயின. மே மாதத்தில் ருஷ்யாவின் சமூக-ஜனநாயகத் தொழிலாளர் கட்சியின் மூன்ருவது காங்கிரஸின் முடிவுப்படி **வ்பொரியோது**க்குப் பதிலாக **புரொலிட்டாரி** எனும் பத்திரிகை ரு.ச.ஜ.தொ. கட்சியின் மையப் பத்திரிகையாக ஆயிற்று. (இந்தக் காங்கிரஸ் லண்டனில் மே மாதத்தில் நடந்தது; இதில் மென்ஷிவிக்குகள் கலந்து கொள்ளாமல் தங்களுடைய சொந்த ''மாநாட்டை'' ஜினீவாவில் நடத்தினர்.) (1907 பதிப்புக்கு ஆசிரியர் எழுதிய குறிப்பு.—**ப-ர்.**)

ருஷ்யப் புரட்சி ஒரு ''குறைப் பிரசவமான அரசியல் சட்டத்தைப் பெற்று'' முடியலாம் என்பது சாத்தியமே. ஆனால், நிர்ணயமான போராட்டம் நடக்கவிருக்கும் காலத்தில் இந்தக் குறைப் பிரசவத்தை ''ஜாராட்சி மீது பெற்ற நிர்ணயமான வெற்றி'' என்று ஒரு சமூக-ஜனநாயகவாதி வர்ணிக்க இணங்குவதை இது நியாயப்படுத்த முடியுமா? மிகவும் மோசமாகப் போனால் நாம் ஒரு குடியரசை பெருமற் போகக் கூடும் என்பதோடல்லாமல் அரசியல் சட்டமுங்கூட பொய்யானதாக, ''ஷீப்பவ் பாணியில் அமைந்த''[50] அரசியல் சட்டமாக இருக்க நேரிடலாம், ஆனால் அதற்காக ஒரு சமூக-ஜனநாயகவாதி நம்முடைய குடியரசுக் கோஷத்தை மட்டுப் படுத்துவது மன்னிக்கத்தகுமா?

உண்மைதான், புதிய-இஸ்க்ராவாதிகள் அதை மட்டுப் படுத்தும் அளவுக்கு இன்னும் போகவில்லை. எனினும் எந்த அளவுக்குப் புரட்சி உணர்ச்சி அவர்களிடமிருந்து அகன்று விட்டது என்பதையும், எந்த அளவுக்கு இன்றைய போர்த் துடிப்புள்ள பணிகளைப் பார்க்க முடியாதபடி உயிரற்ற ஏட்டறிவுவாதம் அவர்களின் கண்களை மூடிவிட்டது என்பதையும் அவர்களின் தீர்மானத்தில் அவர்கள் குடியரசைப் பற்றி ஒரு வார்த்தையேனும் சொல்ல **மறந்துவிட்டார்கள்** எனும் உண்மை எடுப்பாகப் புலப்படுத்துகிறது. நம்பவொண்ணுததாயினும் இதுவே உண்மை. மாநாட்டின் பல்வேறு தீர்மானங்களில் சமூக-ஜனநாயகவாதத்தின் எல்லா முழக்கங்களும் உறுதிப்படுத்தப்பட்டன, திருப்பிச் சொல்லப்பட்டன, விளக்கப்பட்டன, விபரமாக முன்வைக்கப்பட்டன—தொழிற்சாலை ஸ்டீவர்டுகளையும் பிரதிநிதிகளையும் தொழிலாளர்கள் தேர்ந்தெடுக்கும் விஷயங்கூட மறக்கப்படவில்லை—, ஆனால் ஒரு தற்காலிகப் புரட்சி அரசாங்கம் பற்றிய தீர்மானத்தில் குடியரசைப்பற்றிக் குறிப்பிடுவதற்குச் சிறிதேனும் அவர்களுக்குச் சந்தர்ப்பம் கிடைக்கவில்லை. மக்கள் புரட்சியெழுச்சியின் ''வெற்றி'' பற்றியும் தற்காலிகப் புரட்சி அரசாங்கத்தை நிறுவுவது பற்றியும் பேசிவிட்டு இந்த ''நடவடிக்கைகள்'', செயல்கள் ஆகியவற்றுக்கும் குடியரசைப் பெறுவதற்கும் உள்ள தொடர்பு பற்றி பேசாமல் இருப்பது பாட்டாளி

வர்க்கத்தின் போராட்டத்துக்கு வழிகாட்டும் நோக்கமின்றிப் பாட்டாளி வர்க்க இயக்கத்தின் பின்னல் ஊர்ந்துவரும் நோக்கத்துடன் தீர்மானத்தை எழுதுவதற்குச் சமமாகும்.

சுருக்கிச் சொல்வோம்: தீர்மானத்தின் முதற்பகுதி 1) குடியரசுக்கான போராட்டத்தின் நிலையிலிருந்தும் உண்மையாகவே அனைத்து மக்களுடைய, உண்மையாகவே அரசியலை நிர்ணயிக்கக் கூடிய சபையைப் பெறுவதின் நிலையிலிருந்தும் தற்காலிகப் புரட்சி அரசாங்கத்தின் குறிபொருளைப் பற்றி விளக்கம் ஒன்றும் தரவில்லை; 2) ஜாராட்சி மீது பெறும் நிர்ணயமான வெற்றியை உண்மையான வெற்றிக்கு வேண்டிய அடிப்படையான நிபந்தனை இல்லாத நிலவரத்துடன் சமமாக வைத்துப் பாட்டாளி வர்க்கத்தின் ஜனநாயக உணர்வை முற்றிலும் குழப்பிவிட்டது.

## 4. முடியரசை ஒழித்தல். குடியரசு

தீர்மானத்தின் அடுத்த பகுதியைப் பார்ப்போம்:

''...இரண்டு வழக்குகளிலும் இப்படிப்பட்ட வெற்றி புரட்சி சகாப்தத்தில் ஒரு புதிய கட்டத்தைத் துவக்கி வைக்கும்.

''அரசியல் ரீதியிலே விடுதலை பெற்ற முதலாளித்துவச் சமுதாயத்தின் பகுதிகளிடையே நடக்கும் பரஸ்பரப் போராட்டத்தின் நிகழ்வுப்போக்கிலே அவற்றின் சமுதாய நலன்களை நிறைவாக்குவதற்கும் நேரடியாக அரசதிகாரத்தைப் பெறுவதற்கும் சமுதாயப் படிநிலைகளைக் கொண்டுள்ள முடியரசு அமைப்பு முறை முழுவதையும் இறுதியாக ஒழித்தல்—சமுதாய வளர்ச்சியின் புறநிலைமைகள் தன்னியல்பாகத் தோற்றுவிக்கும் இந்தப் புதிய கட்டத்தில் உள்ள பணி இதுவே.

''ஆகவே, வரலாற்றுத் தன்மையில் முதலாளித்துவ வழிப்பட்ட இந்தப் புரட்சியின் பணிகளை நிறைவேற்ற முன்வரும் ஒரு தற்காலிக அரசாங்கம் விடுதலை பெறும் போக்கிலுள்ள ஒரு தேசத்தைச் சேர்ந்த பகையான வர்க்கங்களிடையே நடக்கும் பரஸ்பரப் போராட்டத்தை ஒழுங்கு முறைப்படுத்தி, புரட்சிகரமான வளர்ச்சியை முன்னேற்ற

வேண்டும் என்பது மட்டுமல்ல, அந்த வளர்ச்சியில் முதலாளித்துவ அமைப்பு முறையின் அடித்தளங்களை அச்சுறுத்தும் காரணிகளை எதிர்த்தும் போராட வேண்டும்.''

தீர்மானத்தில் ஒரு சுதந்தரமான பகுதியாக இருக்கும் இப்பிரிவைப் பரிசீலிப்போம். மேலே மேற்கோள் காட்டிய வாதங்களில் உள்ள அடிப்படைக் கருத்து காங்கிரஸ் தீர்மானத்தின் மூன்ரும் பிரிவுக் கூற்றில் விவரிக்கப்பட்டுள்ளதோடு பொருந்துகிறது. என்றபோதிலும், இரண்டு தீர்மானங்களின் இந்தப் பகுதிகளை விபரமாக ஒப்புநோக்கினுல் அவற்றிடையே பின்வரும் அடிப்படையான வேற்றுமை இருக்கிறதை உடனே காட்டிவிடும். புரட்சியின் சமுதாய-பொருளாதார அடிப்படையைச் சுருக்கமாக வர்ணிக்கும் காங்கிரஸ் தீர்மானம் திட்டவட்டமான ஆதாயங்களுக்காக வர்க்கங்கள் நடத்தும் நன்கு வரையறுக்கப்பட்ட போராட்டத்தின் மீதே கவனம் முழுவதையும் செலுத்திப் பாட்டாளி வர்க்கத்தின் போராட்டப் பணிகளை முன்னணியில் நிறுத்துகிறது. புரட்சியின் சமுதாய-பொருளாதார அடிப்படையைப் பற்றி ஒரு நீளமான, உருத்தெளிவில்லாத, குழப்பமான வர்ணனையைக் கொண்டிருக்கும் மாநாட்டுத் தீர்மானம் திட்டவட்டமான ஆதாயங்களுக்குரிய போராட்டத்தைப் பற்றிப் பிடிகொடுக்காமல் பேசுகிறது, பாட்டாளி வர்க்கத்தின் போராட்டப் பணிகளை அப்படியே பின்னணியில் விட்டுவைக்கிறது. சமுதாயத்தின் பல்வேறு பகுதிகளிடையே பரஸ்பரப் போராட்டம் நிகழ்ந்துவரும் போக்கில் பழைய அமைப்பு முறையை ஒழிப்பதைப் பற்றி மாநாட்டுத் தீர்மானம் பேசுகிறது. பாட்டாளி வர்க்கக் கட்சியாகிய நாம் இந்த ஒழிப்புப் பணியைச் செய்து முடிக்கவேண்டும்என்று காங்கிரஸ் தீர்மானம் சொல்கிறது; ஜனநாயகக் குடியரசு நிறுவுவது ஒன்றுதான் உண்மையாகவே பழைய அமைப்பு முறையை ஒழிப்பதைக் குறிக்கிறது என்றும் சொல்கிறது; அந்தக் குடியரசை நாம் வென்று தீர வேண்டும் என்றும் சொல்கிறது; அதற்காகவும் முழுமையான சுதந்தரத்துக்காகவும் நாம் போராடுவோம், எதேச்சாதிகார முறையை எதிர்த்து மட்டுமல்ல, நம் ஆதாயங்களை நம்மிடமிருந்து முதலாளி வர்க்கம்

பறிக்க முயற்சிக்கும் போதும் (நிச்சயமாகப் பறிக்கத்தான் முயற்சி செய்யும்) அதையும் எதிர்த்துப் போராடுவோம் என்றும் சொல்கிறது. காங்கிரஸ் தீர்மானம் சரிநுட்பமாக வரையறுத்த உடனடிக் குறிக்கோளுக்காக ஒரு திட்டவட்டமான வர்க்கத்தைப் போராட்டத்துக்கு அறைகூவியழைக்கிறது. மாநாட்டுத் தீர்மானமோ பல்வேறு சக்திகளின் பரஸ்பரப் போராட்டத்தைப்பற்றி நீட்டிப் பேசுகிறது. ஒரு தீர்மானம் செயலூக்கமுள்ள போராட்டத்துக்குரிய மனநிலையை வெளியிடுகிறது, மற்ற தீர்மானம் செயலற்ற பார்வையாளனின் மனநிலையை வெளியிடுகிறது; ஒன்று உயிர்ப்புள்ள செயலுக்கு அழைக்கும் அறைகூவலை முழங்குகிறது, மற்றது உயிரற்ற ஏட்டறிவுவாதத்தில் ஊறிப்போயிருக்கிறது. இன்றையப் புரட்சி நம் முதற்படி மட்டுந்தான், அதைத் தொடர்ந்து இரண்டாவது படி வரும் என்று இரு தீர்மானங்களும் கூறுகின்றன; எனினும் இதிலிருந்து ஒரு தீர்மானம் நாம் இந்த முதற்படியை முடிந்தவரை விரைவிலே கடந்து, முடிந்தவரை விரைவிலே ஒழித்து, குடியரசை வென்று, ஈவிரக்கமின்றி எதிர்ப்புரட்சியை நசுக்கி, இரண்டாவது படிக்குத் தயார் செய்ய வேண்டும் எனும் முடிவுக்கு வருகிறது. ஆனால் மற்ற தீர்மானம் முதற்படியைப் பற்றிய சொற்பெருக்குள்ள வர்ணனைகளைக் கொட்டுகிறது, அதைப் பற்றி அசைபோட்டவாறிருக்கிறது (நயமற்ற சொல்லுக்கு மன்னிக்க). பழையதாக இருப்பினும் எக்காலத்துக்கும் புதுமைப் பொலிவுடன் விளங்கும் மார்க்ஸியத்தின் கருத்துக்களை (ஜனநாயகப் புரட்சியின் முதலாளித்துவத் தன்மையை) ஒரு முன்னுரையாக அல்லது முதல் மெய்க்கோளாகக் காங்கிரஸ் தீர்மானம்எடுத்துக்கொள்கிறது; ஜனநாயகப் புரட்சிக்காகவும் சோஷலிஸப் புரட்சிக்காகவும் ஒருங்கே போராடும் முற்போக்கான வர்க்கத்தின் முற்போக்கான பணிகளைப் பற்றி அதிலிருந்து முடிவுகள் எடுக்கிறது. மாநாட்டுத் தீர்மானம் அந்த முன்னுரையைத் தாண்டிப் போகவில்லை, அதைவாயில் வைத்து அசைபோட்டவாறு இருக்கிறது, அதைக் கொண்டு தனது கெட்டிக்காரத் தனத்தைக் காட்டிக் கொள்ளவும் முயல்கிறது.

இதே வேறுபாடுதான் வெகு காலமாக ருஷ்ய மார்க்ஸிய வாதிகளை இரு பிரிவுகளாகப் பிரித்திருக்கிறது: ''சட்டபூர்வ மான மார்க்ஸியம்''[51] நிலவிய பழைய நாட்களில் ஏட்டறிவு வாதப் பிரிவு என்றும் போர்த்துடிப்புள்ள பிரிவு என்றும் இருந்தன, துவக்க நிலையிலிருந்த மக்கள்திரளின் இயக்கக் காலத்தில் பொருளாதாரப் பிரிவு என்றும் அரசியல் பிரிவு என்றும் இருந்தன. பொதுவாக வர்க்கப் போராட்டத்துக் கும் குறிப்பாக அரசியல் போராட்டத்துக்கும் உள்ள ஆழ மான பொருளாதார வேர்கள் சம்பந்தப்பட்ட சரியான மார்க் ஸிய மெய்க்கோளிலிருந்து நாம் அரசியல் போராட்டத்தின் பால் முதுகைத் திருப்பிக் கொண்டு அதன் வளர்ச்சியைத் தடுக்க வேண்டுமென்றும் அதன் செயல் பரப்பைக் குறுக்க வேண்டுமென்றும் அதன் குறிக்கோள்களைத் தாழ்த்த வேண்டு மென்றும் ''பொருளாதாரவாதிகள்'' வேடிக்கையான முடி வுக்கு வந்தனர். அதற்கு மாறாக அரசியல் பிரிவினர் இதே மெய்க்கோள்களிலிருந்து வேறொரு முடிவுக்கு வந்தனர்: அதாவது, இன்றைய நம் போராட்டத்தின் வேர்கள் எவ்வள வுக்கெவ்வளவு ஆழமாக உள்ளனவோ அவ்வளவுக்கவ்வளவு விரிவாகவும் துணிவுடனும் மன உறுதியுடனும் அதிக முன் முயற்சியுடனும் இந்தப் போராட்டத்தை நாம் நடத்த வேண்டும் என்று. இதே சர்ச்சைதான் இப்போதும் நம் முன் உள்ளது, ஆனால் நிலைமைகளும் வடிவமும் மட்டுமே மாறி யுள்ளன. ஜனநாயகப் புரட்சி என்பது சோஷலிஸப் புரட்சியி லிருந்து மிகவும் வேறுபட்டது, ஜனநாயகப் புரட்சியில் ''அக் கறை'' கொண்டவர்கள் ஏழைகள் மட்டுமல்ல, முதலாளித் துவச் சமுதாயம் முழுவதின் தவிர்க்க முடியாத அவசியமான தேவைகளில் ஆழமாக வேரூன்றியிருக்கிறது எனும் இந்த மெய்க்கோள்களிலிருந்து நாம் எடுக்கும் முடிவு இதுதான்: முன்னணியிலுள்ள வர்க்கம் தன்னுடைய ஜனநாயகக் குறிக் கோள்களை மேலும் தைரியமாக வகுத்துக் கொள்ள வேண் டும், அவற்றை மேலும் கூராகவும் முழுமையாகவும் வெளி யிட வேண்டும், குடியரசு வேண்டும் எனும் உடனடியான கோஷத்தை முன்வைக்க வேண்டும், ஒரு தற்காலிகப் புரட்சி அரசாங்கத்தை நிறுவுவது தேவை, எதிர்ப்புரட்சியை ஈவிரக்

கமின்றி நசுக்குவது தேவை எனும் கருத்தை மக்களிடையே பரப்ப வேண்டும், என்று. ஆனுல், நம் எதிர்ப்பாளர்களாகிய புதிய-இஸ்க்ரா குழுவினர் இதே மெய்க்கோள்களிலிருந்து எடுக்கும் முடிவு இவ்வாறு: ஜனநாயக முடிவுகளை முழுமையாக வெளியிடக் கூடாது, நடைமுறை கோஷங்களிலிருந்து குடியரசு வேண்டும் எனும் கோஷத்தை விலக்கிவிடலாம், தற்காலிகப் புரட்சி அரசாங்கம் தேவை எனும் கருத்தை மக்களிடையே நாம் பரப்பாமல் இருந்து விட முடியும், அரசியல் நிர்ணய சபையைக் கூட்டுவது எனும் வெறும் முடிவையே ஒரு நிர்ணயமான வெற்றியாகச் சொல்ல முடியும், எதிர்ப்புரட்சியை எதிர்த்துப் போராடும் பணியை நம்முடைய செயலுக்குரிய குறிக்கோளாக முன்னிறுத்தத் தேவையில்லை, இதனுல் ''பரஸ்பரப் போராட்டத்தின் நிகழ்வுப் போக்கு'' எனும் ஓர் உருத்தெளிவற்ற (தவருக வரையறுக்கப்பட்டது என்பதையும் கீழே பார்க்கப் போகிறோம்) சுட்டுக்குறிப்பில் அதை அமிழ்த்துவிடலாம், என்று. இது அரசியல் தலைவர்கள் பேசும் மொழியல்ல, ஆயப்புரையில் அடைந்து கிடக்கும் பழைய பேர்வழிகள் பேசும் மொழி.

புதிய-இஸ்க்ரா குழுவினரின் தீர்மானத்திலுள்ள பல்வேறு வரையறுப்புகளை எவ்வளவுக்கெவ்வளவு நெருங்கிப் பரிசீலிக்கிறோமோ அவ்வளவுக்கவ்வளவு தெளிவாக மேலே சொன்ன அதன் அடிப்படையான முனைப்புக் கூறுகள் தெரிகின்றன. எடுத்துக் காட்டாக, ''அரசியல் ரீதியிலே விடுதலை பெற்ற முதலாளித்துவச் சமுதாயத்தின் பகுதிகளிடையே நடக்கும் பரஸ்பரப் போராட்டத்தின் நிகழ்வுப் போக்கு'' என்று சொல்கிருர்கள். இந்தத் தீர்மானம் எடுத்துக் கவனிக்கும் (தற்காலிகப் புரட்சி அரசாங்கம் எனும்) விஷயப்பொருளை நினைவில் கொண்டு பரஸ்பரப் போராட்டத்தின் நிகழ்வுப் போக்கை நீங்கள் குறிப்பிடுகிறதாயிருந்தால்அரசியல்ரீதியிலே முதலாளித்துவச் சமுதாயத்தை அடிமைப்படுத்துகிற பகுதிகளைப் பற்றி எப்படி நீங்கள் மௌனம் சாதிக்க முடியும்? புரட்சி வெற்றி பெறும் என்று மாநாட்டுக்காரர்கள் அனுமானித்துக் கொண்டிருப்பதால் இப்பகுதிகள் ஏற்கெனவே மறைந்து போய்விட்டதாக உண்மையாகவே நினைக்

கிறார்களா? என்று வியப்புடன் வினவுகிறோம். பொதுவாகச் சொன்னால் இப்படிப்பட்ட கருத்து அபத்தமானது, குறிப்பாகச் சொன்னால் அது மாபெரும் அரசியல் வெகுளித் தனமும் அரசியல் கிட்டப் பார்வையும் வெளியிடுவதாகும். எதிர்ப் புரட்சியை எதிர்த்துப் புரட்சி வெற்றி பெற்றபின் எதிர்ப் புரட்சி மறைந்துவிடாது; மாறாக, தவிர்க்க முடியாதபடி அது ஒரு புதிய, மேலும் கடுமையான போராட்டத்தைத் தொடங்கும். புரட்சி வெற்றிபெறும் போது நம் முன் எழும் பணிகளை ஆராய்வதே நம்முடைய தீர்மானத்தின் நோக்கம், எனவே எதிர்ப்புரட்சித் தாக்குதல்களை முறியடிப்பதற்கான பணிகளில் (காங்கிரஸ் தீர்மானத்தில் செய்துள்ளது போல்) மாபெரும் கவனம் செலுத்துவது நம் கடமையாகும்; இன்றையப் புரட்சிக் காலப் பகுதிக்குப்பின் என்ன நடக்கும், அல்லது ''அரசியல் ரீதியிலே விடுதலை பெற்ற சமுதாயம்'' ஏற்கெனவே இருக்கையில் என்ன நடக்கும் என்பதைப் பற்றிய பொதுப்படையான விவாதங்களிலே போர்த்துடிப் புள்ள கட்சியின் இந்த உடனடியான, அவசரமான, உயிர்நிலை யான அரசியல் பணிகளை மூழ்கடிப்பதல்ல நம் கடமைதாகும். பொருளாதாரத்துக்குக் கீழ்ப்படுத்தப்பட்டதே அரசியல் எனும் பொது உண்மையைத் திருப்பிச் சொல்வதின் வழியே ''பொருளாதாரவாதிகள்'' அவசரமான அரசியல் பணி களைப் புரிந்து கொள்ளத் தமக்குத் திறமை இல்லாததை மூடிமறைத்தார்களோ அது போல், அரசியல்ரீதியிலே விடுதலை பெற்ற சமுதாயத்தில் போராட்டங்கள் நடக்கும் எனும் பொது உண்மையைத் திருப்பிச் சொல்வதின் வழியே புதிய-இஸ்க்ரா குழுவினர் அந்தச் சமுதாயத்தின் அரசியல் விடுதலை பற்றிய அவசரமான புரட்சிப் பணிகளைப் புரிந்து கொள்ளத் தமக்குத் திறமை இல்லாததை மூடிமறைக்கிறார்கள்.

''சமுதாயப் படிநிலைகளைக் கொண்டுள்ள முடியரசு அமைப்பு முறை முழுவதையும் இறுதியாக ஒழித்தல்'' எனும் சொற்றொடரை வேண்டுமெனில் எடுத்துக் கொள்ளுங்கள். முடியரசு அமைப்பு முறையை இறுதியாக ஒழித்தல் என் பதற்குப் பொருள் ஒரு ஜனநாயகக் குடியரசை அமைப்பது என்பதாகும். ஆனால், நல்லவரான நம்முடைய மார்த்தீனவும்

அவரை மெச்சிப் போற்றுகிறவர்களும் இந்தச் சொற்ருெடர் மிதமிஞ்சிய தெளிவும் எளிமையும் கொண்டுள்ளது என்று கருதுகிருர்கள். அதை மேலும் ''பொருளாழமுள்ளதாக'' ஆக்க வேண்டும், மேலும் ''கெட்டிக்காரத்தனமாகச்'' சொல்ல வேண்டும் என்று மிகவும் விரும்புகிருர்கள். அதன் விளைவாக, அறிவாழமிக்கவர்களாகக் காட்டிக் கொள்ள முயலும் கேலிக்கிடமான வீண் முயற்சிகள் ஒருபுறம் கிடைக்கின்றன; மறுபுறம் கோஷத்துக்குப் பதிலாக வர்ணனையும், முன்னேறுமாறுஅழைக்கும் கிளர்ச்சியூட்டும் அறைகூவலுக்குப் பதிலாக ஒரு விதமான வாட்டத்தோடு பின்னேக்கிச் சிந்திக்கும் போக்கும் கிடைக்கிறது. இன்றே இப்பொழுதே குடியரசுக்காகப் போராட ஆர்வம் காட்டும் உயிர்ப்புள்ள மனிதர்களைப் பார்ப்பதாக நமக்குப் படவில்லை, sub specie aeternitatis* plusquamperfectum** எனும் பார்வை நிலையிலிருந்து பிரச்சினையைக் கவனிக்கும் வதங்கிய பிணங்கள் போலத்தான் அத்தனை பேரும் நமக்குப் படுகின்றனர்.

மேலே போவோம்: ''...முதலாளித்துவ வழிப்பட்ட இந்தப் புரட்சியின் பணிகளை நிறைவேற்ற முன்வரும் ஒரு தற்காலிக அரசாங்கம்...''. பாட்டாளி வர்க்கத்தின் அரசியல் தலைவர்களை எதிர்நோக்கியுள்ள ஒரு ஸ்தூலமான பிரச்சினையை நம்முடைய மாநாட்டுக்காரர்கள் பார்க்கத் தவறியிருப்பதின் விளைவை இங்கே உடனே பார்க்கிருேம். பொதுவாக முதலாளித்துவப் புரட்சியின் குறிக்கோள்களை நிறைவேற்றவிருக்கும் எதிர்கால அரசாங்கங்களின் வரிசைத்தொடர் பற்றிய பிரச்சினையானது அவர்களின் பார்வைப் புலத்திலிருந்து தற்காலிகப் புரட்சி அரசாங்கம் பற்றிய ஸ்தூலமான பிரச்சினையை மறைக்கிறது. ''வரலாற்று வழியில்'' நீங்கள் பிரச்சினையைப் பார்க்க விரும்பினுல், ''தற்காலிகமானவையாக'' அறவே இல்லாத அரசாங்கங்களின் வரிசைத்தொடர் தான் முதலாளித்துவப் புரட்சியின் வரலாற்று ரீதியான குறிக்கோள்களை நிறைவேற்றியுள்ளதையும், புரட்சியை

* காலமுடிவற்ற பார்வை நிலையிலிருந்து (லத்தீன்).—ப-ர்.

** நெடு நாளைக்குமுன் சென்ற காலம் (ஜெர்மன்). —ப-ர்.

முறியடித்த அரசாங்கங்களுங்கூட அப்படி முறியடிக்கப்பட்ட புரட்சியின் வரலாற்று ரீதியான குறிக்கோள்களைக் கட்டாயத்தின் பேரில் நிறைவேற்ற வேண்டியிருந்ததையும் எந்த ஐரோப்பிய நாட்டின் எடுத்துக்காட்டும் உங்களுக்குப் புலப்படுத்தும். ஆனால் நீங்கள் குறிப்பிடுவதைத் ''தற்காலிகப் புரட்சி அரசாங்கம்'' என்று அழைக்கிறதில்லை. அது புரட்சி சகாப்தத்தின் அரசாங்கத்துக்கு, தூக்கியெறியப்பட்ட அரசாங்கத்தின் இடத்தில் அமர்ந்து மக்களின் புரட்சியெழுச்சியின்அடிப்படையில் செயல்படுகிற அரசாங்கத்துக்குக் கொடுக்கப்படுகிற பெயராகும்; இந்த அரசாங்கம் மக்களிடமிருந்து தோன்றிய ஏதாவதொரு வகையான பிரதிநிதித்துவ நிறுவனத்தின் மீது ஆதாரப்பட்டிருப்பதல்ல. தற்காலிகப் புரட்சி அரசாங்கம் என்பது புரட்சியின் உடனடியான வெற்றிக்காகவும் எதிர்ப்புரட்சி முயற்சிகளை உடனடியாக முறியடிப்பதற்காகவும் இருக்கிற போராட்ட உறுப்பாகும், பொதுப்படையாக முதலாளித்துவக் புரட்சியின் வரலாற்று ரீதியான குறிக்கோள்களை நிறைவேற்றுவதற்குரிய உறுப்பு அல்லவே அல்ல. நாமோ வேறெதாவதோர் அரசாங்கமோ முதலாளித்துவப் புரட்சிக்குரிய பணிகளில் என்னென்னவற்றை நிறைவேற்றியுள்ளோம் என்று சரிநுட்பமாக நிர்ணயிப்பதை ஒரு எதிர்காலத்திய ரூஸ்கயா ஸ்தரினாவின்[52] எதிர்கால வரலாற்றாசிரியர்களிடம் விட்டுவிடுவோம். அடுத்த முப்பதாண்டுகளுக்குப் பின் அதைச் செய்வதற்குப் போதிய நேரம் இருக்கிறது. தற்சமயம் குடியரசுக்கான போராட்டத்துக்கும் அந்தப் போராட்டத்தில் பாட்டாளி வர்க்கம் மிகத் தீவிரமாகக் கலந்து கொள்வதற்கும் நாம் கோஷங்களை முன் வைக்க வேண்டும், நடைமுறைக்குரிய வழிகாட்டிக் கட்டளைகள் கொடுக்க வேண்டும்.

மேலே சொன்ன காரணங்களுக்காக, தீர்மானத்தின் மேலே மேற்கோள் காட்டிய பகுதியிலுள்ள இறுதியான கருத்துரைகளும் திருப்திகரமாயில்லை. பகையான வர்க்கங்களிடையே நடக்கும் பரஸ்பரப் போராட்டத்தைத் தற்காலிகஅரசாங்கம்''ஒழுங்குமுறைப்படுத்த''வேண்டியிருக்கும் எனும் சொற்றொடர் மிகவும் பொருத்தமற்றது, அல்லது

எப்படிப் பார்த்தாலும் தடுமாற்றமுள்ள வகையில் சொல்லப்படுகிறது. இவ்விதமான மிதவாத, ஓஸ்வபஷ்தேனியே வழிப்பட்ட சூத்திரங்களை மார்க்ஸியவாதிகள் பயன்படுத்தக் கூடாது; வர்க்கப் போராட்டத்திற்குரிய உறுப்பாகச் செயல்படாமல் அதை ''ஒழுங்குமுறைப்படுத்தும் சாதனமாகச்'' செயல்படுகிற அரசாங்கங்கள் இருப்பது சாத்தியமே என்று அச்சூத்திரங்கள் நம்மை நம்பச் செய்யப் பார்க்கின்றன.... அரசாங்கமானது ''புரட்சிகரமான வளர்ச்சியை முன்னேற்ற வேண்டும் என்பது மட்டுமல்ல, அந்த வளர்ச்சியில் முதலாளித்துவ அமைப்பு முறையின் அடித்தளங்களை அச்சுறுத்தும் காரணிகளை எதிர்த்தும் போராட வேண்டும்''. ஆனால், பாட்டாளி வர்க்கமல்லவா (இதன் பெயரில்தான் தீர்மானம் பேசுகிறது) இந்தக் ''காரணியாக'' இருக்கிறது! தற்காலத்தில் எப்படிப் பாட்டாளி வர்க்கம் ''புரட்சிகரமான வளர்ச்சியை முன்னேற்ற வேண்டும்'' (அரசியல்சட்டவாத முதலாளி வர்க்கத்தினர் முன்னேற்ற வேண்டுமென்று காட்டும் விருப்பத்தைவிட வெகுதூரத்துக்கு முன்னேற்ற வேண்டும்) என்று சுட்டிக் காட்டுவதற்குப் பதிலாக, புரட்சியின் ஆதாயங்களுக்கு எதிராக முதலாளி வர்க்கம் திரும்புகிற போது அதை எதிர்த்துப் போராடுவதற்குத் திட்டவட்டமான தயாரிப்புகளைப் பற்றி அறிவுரை அளிப்பதற்குப் பதிலாக, தொடர்நிகழ்வுப் போக்கு பற்றிய பொதுவான வர்ணனை—நம்முடைய நடவடிக்கையின் ஸ்தூலமான குறிக்கோள்களைப் பற்றி ஒன்றும் சொல்லாத ஒரு வர்ணனை—நமக்குத் தரப்படுகிறது. புதிய-இஸ்க்ரா பாணியில் தன்னுடைய கருத்துக்களைச் சொல்வது, இயக்க இயலின் கருத்துக்களுக்குப் புறம்பான பழைய பொருள்முதல்வாதத்தைப் பற்றி மார்க்ஸ் (ஃபாயர்பாக் பற்றிய தமது புகழ் பெற்ற ''ஆய்வுரைகளில்''[53]) கூறிய கருத்தை நினைவூட்டுகிறது. தத்துவஞானிகள் உலகத்தைப் பற்றிப் பல்வேறு வழிகளில் வியாக்கியானந்தான் செய்தார்கள், ஆனால் அந்த உலகத்தை மாற்ற வேண்டும் என்பது தான் விஷயம் என்று கூறினார் மார்க்ஸ். அது போல புதிய-இஸ்க்ரா குழுவினருக்குத் தங்கள் கண்ணெதிரே நிகழும் போராட்ட நிகழ்வுப்போக்கைப் பற்றிப் பரவாயில்லை என்று

சொல்லத்தக்க ஒரு வர்ணனையும் விளக்கமும் கொடுக்க முடியும், ஆனால் இந்தப் போராட்டத்துக்கு ஒரு சரியான கோஷம் அளிக்கும் திறமை அவர்களுக்குச் சிறிதேனும் கிடையாது. அவர்கள் நல்ல வழிநடைக்காரர்கள்தாம், ஆனால் மோசமான தலைவர்கள்; புரட்சியின் பொருளாயத முன்தேவைகளைப் பற்றி உணர்ந்து கொண்டு முற்போக்கான வர்க்கங்களுக்குத் தலைமை தாங்கும் நிலை எடுத்துக் கொண்டுள்ள கட்சிகள் வரலாற்றில் வகிக்க முடிகிற, வகித்துத் தீரவேண்டிய, செயல்பூர்வமானதும் தலைமையானதும் வழிகாட்டுந் தன்மையுள்ளதுமான பாத்திரத்தைப் புறக்கணிப்பதின் வழியே அவர்கள் வரலாற்றைப் பற்றிய பொருள்முதல்வாதக் கருத்தோட்டத்தை இழிவுபடுத்துகின்றனர்.

## 5. எப்படிப் "புரட்சியை முன்னேற்றுவது"?

தீர்மானத்தின் அடுத்த பகுதியை மேற்கோள் காட்டுவோம்:

"இப்படிப்பட்ட நிலைமைகளில், சமூக-ஜனநாயகவாதம் புரட்சி நெடுகிலும் ஒரு நிலை எடுத்து நிலைநிறுத்த முயன்று வரவேண்டும்; அந்த நிலை புரட்சியை முன்னேற்றி வருவதற்கான சாத்தியப்பாட்டை அதற்கு மிகச் சிறப்பாக உறுதிப்படுத்துவதாயிருக்க வேண்டும், முதலாளித்துவக் கட்சிகளின் முரணான, தன்னலமுள்ள கொள்கையை எதிர்த்துத் தான் நடத்தும் போராட்டத்தில் சமூக-ஜனநாயகவாதத்தின் கையைக் கட்டிப் போடாததாய் இருக்க வேண்டும், முதலாளித்துவ ஜனநாயகத்தில் கலந்து மறைந்துவிடாமல் பாதுகாக்கிறதாய் இருக்க வேண்டும்.

"எனவே, சமூக-ஜனநாயகவாதம் அரசதிகாரத்தைக் கைப்பற்றும் குறிக்கோளையோ தற்காலிக அரசாங்கத்தில் அதிகாரத்தைப் பங்கு போட்டுக் கொள்ளும் குறிக்கோளையோ வகுத்துக் கொள்ளக் கூடாது, மிகத் தீவிரமான புரட்சிகர எதிர்க்கட்சியாக இருந்து வரவேண்டும்."

புரட்சியை முன்னேற்றுவதற்கான சாத்தியப்பாட்டை மிகச் சிறப்பாக உறுதிப்படுத்துகிறதாயுள்ள நிலையை எடுத்துக்

கொள்ளச் சொல்லும் அறிவுரை நமக்கு உண்மையாகவே மகிழ்ச்சி அளிக்கிறது. எனினும், இந்த நல்ல அறிவுரை யோடு கூடவே, இன்றைய அரசியல் நிலைமையில், மக்களின் பிரதிநிதிகளைக்கூட்டுவதைப் பற்றிய வதந்திகளும் ஊகங்களும் பேச்சும் திட்டங்களும் நிலவும் காலத்தில், சமூக-ஜனநாயக வாதம் எப்படிப் புரட்சியை முன்னேற்ற வேண்டும் என்று நேரடியாகக் குறித்துக் காட்ட வேண்டும் என்றுதான் விரும்பு வோம். மக்களுக்கும் ஜார் மன்னனுக்கும் இடையே ''சமர சம்'' பற்றிய ஒஸ்வபஷ்தேனியேயின் தத்துவத்திலுள்ள அபா யத்தைப் புரிந்து கொள்ளத் தவறுகிறவர்கள், அரசியல் நிர்ணய சபையைக் கூட்டுவது எனும் வெறும் ''முடிவை யே'' ஒரு வெற்றியாகக் கூறுகிறவர்கள், தற்காலிகப் புரட்சி அரசாங்கம் தேவை எனும் கருத்தைத் தீவிரமாகப் பிரச்சா ரம் செய்யும் பணியை வகுத்துக் கொள்ளாதவர்கள், அல்லது ஜனநாயகக் குடியரசு வேண்டும் எனும் கோஷத்தைப் பின் னணியில் விட்டு வைக்கிறவர்கள்—இவர்களால் புரட்சியை மேலும் முன்னேற்றி வைக்க முடியுமா? இப்படிப்பட்டவர்கள் உண்மையிலே புரட்சியைப் பின்னுக்கு இழுத்துச் செல்கிறார் கள்; காரணம், நடைமுறை அரசியலைப் பொருத்தவரை, அவர்கள் ஒஸ்வபஷ்தேனியே நிலையின் மட்டத்துடன் நின்று விட்டார்கள். புரட்சிக் காலகட்டத்தில் கட்சியின் இன்றைய உடனடியான பணிகளை வரையறுத்துக் கொடுக்கும் போர்த் தந்திரத் தீர்மானத்தில் குடியரசுக்காகப் போராட வேண் டும் எனும் கோஷத்தை அவர்கள் விட்டு விடுவார்களேயா ஞல், எதேச்சாதிகார முறைக்குப் பதிலாகக் குடியரசை வைக்கக் கோருகிற வேலைத்திட்டத்தை அவர்கள் அங்கீகரிப் பதில் என்ன பயன்? அனைத்து மக்களின் அரசியல் நிர்ணய சபையைக் கூட்டுவது பற்றிய முடிவையே ஒரு நிர்ணயமான வெற்றியாகக் கருதுவதும், தற்காலிகப் புரட்சி அரசாங்கம், குடியரசு ஆகியவற்றின் விஷயத்தில் முன்புத்தியோடு கூடிய மௌனம் சாதிப்பதும் ஒஸ்வபஷ்தேனியேயின் நிலையை, அர சியல் சட்டவாத முதலாளி வர்க்கத்தாரின் நிலையைத்தான் இன்று உண்மையிலே இனங்காட்டுகிறது! புரட்சியை முன் னேற்றுவதற்கு, முடியரசுவாத முதலாளி வர்க்கத்தினர்

அதை முன்னேற்றும் எல்லைக்கும் அப்பால் அதை எடுத்துச் செல்வதற்கு, முதலாளித்துவ ஜனநாயகத்தின் ''முரணற்ற தன்மையை'' விலக்கிவைக்கிற கோஷங்களை முயற்சியுடன் உருவாக்கித் தருவதும் வலியுறுத்துவதும் முன்னணிக்குக் கொணர்வதும் அவசியம். தற்சமயம் இவ்வகைப்பட்ட கோஷங்கள் இரண்டுதான் உள்ளன: 1) தற்காலிகப் புரட்சி அரசாங்கம், 2) குடியரசு, என்று. ஏனெனில், அனைத்து மக்களின் அரசியல் நிர்ணய சபை எனும் கோஷத்தை முடியரசுவாத முதலாளி வர்க்கத்தினர் ஏற்றுக் கொண்டுள்ளனர் (ஒஸ்வபஷ்தேனியே சங்கத்தின் வேலைத்திட்டத்தைப் பார்க்க), புரட்சியைப் பயன்படுத்திக் கொண்டு ஏமாற்றுதல், அது முழு வெற்றி பெறுமல் தடுப்பது, ஜாராட்சியுடன் பெரு முதலாளி வர்க்கத்தினர் பேரம் முடித்துக் கொள்ளச் செய்வது எனும் ஒரே நோக்குடன் ஏற்றுக் கொண்டுள்ளனர். ஆக, இப்போது பார்க்கிறோம்: புரட்சியை முன்னேற்றவல்ல இரண்டே இரண்டு கோஷங்களில் குடியரசு வேண்டும்' எனும் கோஷத்தை மாநாடு முற்றுக மறந்துவிட்டது, தற்காலிகப் புரட்சி அரசாங்கம் வேண்டும் என்கிற கோஷமும் அனைத்து மக்களின் அரசியல் நிர்ணய சபை பற்றிய ஒஸ்வபஷ்தேனியே கோஷமும் சமம் என்று வெளிப்படையாக வைத்து அதுவும் இதுவும் ஒருங்கே ''புரட்சியின் நிர்ணயமான வெற்றி'' என்று வர்ணித்தது!!

உண்மை, இதுதான் விஷயம் என்பதில் ஐயமில்லை. ருஷ்ய சமூக-ஜனநாயகவாதத்தின் எதிர்கால வரலாற்றாசிரியருக்கு இது ஒரு எல்லைக்கல்லாக விளங்கும் என்று உறுதியாக நம்புகிறோம். 1905 மே மாதத்தில் நடந்த சமூக-ஜனநாயகவாதிகளின் மாநாடு ஒரு தீர்மானத்தை நிறைவேற்றியது; அதில் ஜனநாயகப் புரட்சியை முன்னேற்றுவதின் அவசியத்தைப் பற்றி நேர்த்தியான வார்த்தைகள் இருந்த போதிலும் உண்மையிலே அப்புரட்சியைப் பின்னுக்கு இழுக்கிறது, முடியரசுவாத முதலாளி வர்க்கத்தினரின் ஜனநாயகக் கோஷங்களுக்கு அப்பால் போகவில்லை.

முதலாளித்துவ ஜனநாயகத்தில் பாட்டாளி வர்க்கம் கலந்து கரைந்துவிடக் கூடிய அபாயத்தை நாம் புறக்கணிக்

கிறோம் என்று புதிய-இஸ்க்ரா குழுவினர் நம்மைக் குற்றஞ் சாட்ட விரும்புகின்றனர். ருஷ்யாவின் சமூக-ஜனநாயகத் தொழிலாளர் கட்சியின் மூன்றாவது காங்கிரஸ் நிறைவேற்றிய தீர்மானத்தின் வாசகத்தின் அடிப்படையில் இந்தக் குற்றச்சாட்டை நிரூபிக்க யாராவது முன்வரட்டும், பார்ப் போம். நம் எதிர்ப்பாளர்களுக்கு நாம் கொடுக்கும் பதில் இதுதான்: முதலாளித்துவச் சமுதாயத்தில் வேலை செய்து வரும் ஒரு சமூக-ஜனநாயகக் கட்சி சில வழக்குகளில் முத லாளித்துவ ஜனநாயகத்துடன் அக்கம் பக்கமாக வழிநடை யிடாமல் அரசியலில் கலந்து கொள்ள முடியாது. இவ் விஷயத்தில் உங்களுக்கும் எங்களுக்கும் இருக்கும் வேற்றுமை இதுதான்: நாங்கள் புரட்சிகரமான, குடியரசு வழிப்பட்ட முதலாளி வர்க்கத்தினருடன் ஒன்று கலந்துவிடாமல் அக்கம் பக்கமாக வழிநடையிடுகிறோம், ஆனால் நீங்கள் மிதவாத, முடியரசு வழிப்பட்ட முதலாளி வர்க்கத்தினருடன் ஒன்று கலந்து விடாமல் அக்கம் பக்கமாக வழிநடையிடுகிறீர்கள். அதுதான் விவகாரம்.

மாநாட்டின் பேரால் நீங்கள் வரையறுத்துள்ள போர்த் தந்திரக் கோஷங்கள் ''அரசியல்சட்ட-ஜனநாயகக்'' கட்சி யின் — அதாவது, முடியரசுவாத முதலாளி வர்க்கத்தினரின் கட்சியின் — கோஷங்களுடன் பொருந்துகின்றன. மேலும் இப்படிப் பொருந்தி நிற்பதை நீங்கள் பார்க்கவோ உணரவோ கூட இல்லை, எனவே உண்மையில் நீங்கள் ஒஸ்வபஷ்தேனியே கூட்டத்தாரை வால்பிடித்துச் செல்கிறீர்கள்.

ருஷ்யாவின் சமூக-ஜனநாயகத் தொழிலாளர் கட்சியின் மூன்றாவது காங்கிரஸின் பேரால் நாங்கள் வரையறுத்துள்ள போர்த்தந்திரக் கோஷங்கள் ஜனநாயகப் போக்கான, புரட்சி கரமான, குடியரசுவாத முதலாளி வர்க்கத்தினரின் கோ ஷங்களுடன் பொருந்துகின்றன. ருஷ்யாவில் இந்த முதலாளி வர்க்கத்தினரும் சிறுமுதலாளி வர்க்கத்தினரும் தங்களை ஒரு பெரிய, மக்கள் கட்சியாக இன்னும் அமைத்துக் கொள்ள வில்லை.* என்றபோதிலும், இன்று ருஷ்யாவில் நடந்து

* ''சோஷலிஸ்டு-புரட்சியாளர்களை'' இப்படிப்பட்ட கட்சியின் கரு என்று சொல்வதைவிட அறிவுஜீவிகளின் பயங்

வருவதைப் பற்றி ஒன்றுமேயறியாத ஒருவர்தான் இவ்வகைப்பட்ட கட்சிக்குரிய அம்சங்கள் இருக்கிறதைப் பற்றிச் சந்தேகப்பட முடியும். (மாபெரும் ருஷ்யப் புரட்சி முன்னேறுமேயானுல்) நாங்கள் சமூக-ஜனநாயகக் கட்சியால் ஒழுங்கமைக்கப் பெற்ற பாட்டாளி வர்க்கத்தை மட்டுமின்றி எங்களுடன் அக்கம் பக்கமாக வழிநடையிட திறமைபடைத்த இந்தச் சிறுமுதலாளி வர்க்கத்தினரையும் வழிகாட்டி நடத்திச் செல்வதென்று எண்ணங் கொண்டிருக்கிரும்.

மாநாடு தன்னுடைய தீர்மானத்தின் வழியாக மிதவாத, முடியரசுவாத முதலாளி வர்க்கத்தினரின் தரத்துக்குத் தன்னையறியாமலே தாழ்ந்துவிடுகிறது. கட்சிக் காங்கிரஸ் தன்னுடைய தீர்மானத்தின் வழியாகப் புரட்சிகரமான ஜனநாயகத்தின் தரகர்களாக வேலை செய்யாமல் போராடும் திறமையுள்ள பகுதிகளை உணர்வுபூர்வமாகத் தன்னுடைய தரத்துக்கு உயர்த்துகிறது.

பெரும்பாலும் விவசாயிகளிடையே இப்படிப்பட்ட பகுதிகளைக் கண்டு கொள்ளலாம். பெரும் சமுதாயக் குழுக்களை அவற்றின் அரசியல் போக்குகளின்படி வகைப்படுத்துவதில் பெருந்தவறு செய்யும் அபாயம் இல்லாமல் புரட்சிகரமான, குடியரசு வழிப்பட்ட ஜனநாயகம் என்பது திரளான விவசாயி மக்களே என்று இனங்கண்டு கொள்ள முடியும்—சமூக-ஜனநாயகம் என்பது தொழிலாளிவர்க்கம் என்று நாம் இனங்கண்டு கொள்ள முடிகிற அதே பொருளில், அதே வில்லங்கங்களோடு, அதே உட்கிடையான நிபந்தனைகளோடு செய்ய முடியும். வேறு விதமாகச் சொல்வதென்ருல், பின்வரும் சொற்களிலும் நம்முடைய முடிவுகளை வரையறுக்க முடியும்: புரட்சிக் காலத்தில் மாநாடு தன்னுடைய நாடு தழுவிய* அரசியல்

---

கரவாதக் குழு என்று சொல்லலாம்; என்றபோதிலும், இந்தக் குழுவின் நடவடிக்கைகளின் புறநிலைக் குறிபொருள் புரட்சிகரமான, குடியரசுவாத முதலாளி வர்க்கத்தினரின் குறிக்கோள்களைச் சாதிக்கும் பணி என்று வடித்துச் சொல்லிவிட முடியும்.

* சிறப்பான விவசாயி கோஷங்களை நாம் இங்கே குறிப்பிடவில்லை; இவை தனித் தீர்மானங்களில் எடுத்துக் கொள்ளப் பட்டுள்ளன.

கோஷங்கள் வழியாகத் திரளான நிலப்பிரபுக்களின் தரத்துக்குத் தன்னையறியாமல் தாழ்ந்துவிடுகிறது. கட்சிக் காங்கிரஸ் தன்னுடைய நாடுதழுவிய அரசியல் கோஷங்கள் வழியாகத் திரளான விவசாயிகளைப் புரட்சிகரமான தரத்துக்கு உயர்த்துகிறது. இந்த முடிவுகளைக் கொண்டு நமக்கு முரணுண்மைகளின் மீது விருப்பம் இருப்பதாக யாராவது குற்றஞ்சாட்டுவார்களேயானால் அவருக்கு நாம் சவால் விடுகிறோம்: புரட்சியை வெற்றிகரமான முடிவுக்குக் கொண்டு வருவதற்கு நம்மிடம் போதிய வலிமை இல்லாமற் போனால், ஒஸ்வபஷ்தேனியே அர்த்தத்தில் — அதாவது, ஜார் மன்னனால் கூட்டப்படும் பிரதிநிதித்துவ சபை (கேலியாகத்தான் இதை அரசியல் நிர்ணய சபை என்று அழைக்க முடியும்) எனும் வடிவத்தில் மட்டுமே — ஒரு ''நிர்ணயமான வெற்றியில்'' புரட்சி முடிகிறது என்றால், அது நிலப்பிரபு, பெருமுதலாளி அம்சமே மிகுந்திருக்கும் புரட்சியாகத்தான் இருக்கும் எனும் முன்கூற்றை அவர் பொய் என்று காட்டட்டும். மறுபுறம், நம் வாழ்நாளில் உண்மையிலேயே மகத்தான புரட்சியைக் கண்டு அனுபவிக்க இருப்போமேயானால், இந்தத் தடவை ஒரு ''குறைப் பிரசவத்தை'' வரலாறுஅனுமதிக்கவில்லையானால், புரட்சியை வெற்றிகரமான முடிவுக்குக் கொண்டுவரும் வலிமை போதிய அளவுக்கு நம்மிடம் இருக்குமேயானால், ஒஸ்வபஷ்தேனியே அர்த்தத்திலோ புதிய-இஸ்க்ரா அர்த்தத்திலோ இல்லாத நிர்ணயமான வெற்றிக்குக் கொண்டு வர முடியுமேயானால், அது விவசாயி பாட்டாளி வர்க்க அம்சம் மிகுந்திருக்கும் புரட்சியாயிருக்கும்.

இவ்வாறு மிகுந்திருப்பது சாத்தியமே என்று நாம் ஒப்புக்கொள்வதை வைத்து வரப்போகும் புரட்சி முதலாளித்துவத் தன்மை கொண்டதாயிருக்கும் எனும் கருத்தை நாம் கைவிட்டுவிட்டதாகச் சிலர் ஒருக்கால் வியாக்கியானம் செய்யக் கூடும். இஸ்க்ராவில் இந்தச் சொல் கேடாகப் பயன்படுத்தப்படுவதைப் பார்க்கும் போது இவ்வாறு நடக்கவுங் கூடும். எனவே இப்பிரச்சினையைக் கவனிப்பது தேவையற்றதல்ல.

## 6. முரணான போக்குள்ள முதலாளி வர்க்கத்தை எதிர்க்கும் போராட்டத்தில் பாட்டாளி வர்க்கத்தின் கைகள் கட்டுண்டு போகும் அபாயம் எங்கிருந்து வருகிறது?

ருஷ்யப் புரட்சி முதலாளித்துவத் தன்மை கொண்டதாகும் என்பது மார்க்ஸியவாதிகளின் முடிவான துணிபு. இதன் பொருள் என்ன? ருஷ்யாவுக்கு அத்தியாவசியமாகியிருக்கும் அரசியல் அமைப்பு முறையைச் சேர்ந்த ஜனநாயக மாற்றங்களும் சமுதாய-பொருளாதார மாற்றங்களும் தம்மளவில் முதலாளித்துவத்தை அரிப்பதையோ முதலாளி வர்க்க ஆட்சியை அரிப்பதையோ குறிக்கவில்லை. மாறாக, முதல் தடவையாக அவை ஐரோப்பிய வழிப்பட்ட (ஆசியா வழிப்பட்டதல்ல) முதலாளித்துவ வளர்ச்சிக்கு விரிவாகவும் விரைவாகவும் உண்மையிலே களத்தைத் துப்புரவாக்கும். அவை முதல் தடவையாக முதலாளி வர்க்கம் ஒரு வர்க்கம் எனும் வகையில் ஆட்சி புரிவதைச் சாத்தியமாக்கும். சோஷலிஸ்டு-புரட்சியாளர்களால் இக்கருத்தைப் புரிந்து கொள்ள முடியாது; ஏனெனில், பண்ட, முதலாளித்துவ உற்பத்தி முறையின் வளர்ச்சி விதிகளைப் பற்றிய அரிச்சுவடிகூட அவர்களுக்குத் தெரியாது. விவசாயிகளின் புரட்சியெழுச்சி முற்றாக வெற்றி பெற்றாலுங்கூட, விவசாயிகளுக்குச் சாதகமாகவும் விவசாயிகளின் விருப்பப்படியும் நிலத்தை முழுவதாக மறுவினியோகம் ("பொதுவான மறுவினியோகம்"[54] அல்லது அதைப் போல் ஏதாவதொன்று) செய்தாலுங்கூட, அது முதலாளித்துவத்தை அழிக்காது, அதற்கு மாறாக அதன் வளர்ச்சியைத் தூண்டிவிட்டு விவசாயிகளின் வர்க்கச் சிதைவைத் துரிதப்படுத்திவிடும் என்பதை அவர்கள் பார்க்கத் தவறுகிறார்கள். சோஷலிஸ்டு-புரட்சியாளர்கள் இந்த உண்மையைப் புரிந்து கொள்ளத் தவறுகிறதினால் அவர்கள் சிறு முதலாளி வர்க்கத்தாரின் உணர்வு பெறாத சித்தாந்திகளாகி விடுகிறார்கள். இந்த உண்மையை வலியுறுத்துவது சமூக-ஜனநாயகவாதத்துக்குத் தத்துவார்த்த பொருளிலும் சரி, நடைமுறை-அரசியல் பொருளிலும் சரி மாபெரும் முக்கி

யத்துவம் உள்ளதாகும்; ஏனெனில், தற்காலத்திய ''பொது வான ஜனநாயக'' இயக்கத்தில் பாட்டாளி வர்க்கக் கட்சியின் முழுமையான வர்க்க சுதந்தரம் ஓர் இன்றியமையாத நிபந் தனை என்று இதிலிருந்து தொடர்கிறது.

ஆனால், ஜனநாயகப் புரட்சி (சமுதாய-பொருளாதார உள்ளடக்கத்தில் முதலாளித்துவத் தன்மையுடையது ) பாட் டாளி வர்க்கத்தின் மாபெரும் அக்கறைக்கு உரியதாயிராது என்று இதிலிருந்து தொடர்கிறதில்லை. ஒருங்கே பெரிய முதலாளிக்கும் நிதியதிபருக்கும் ''அறிவொளி படைத்த'' நிலப்பிரபுவுக்கும் முக்கியமாக அனுகூலமாயுள்ள வடிவத் திலும் விவசாயிக்கும் தொழிலாளிக்கும் அனுகூலமாயுள்ள வடிவத்திலும் ஜனநாயகப் புரட்சி நடக்க முடியாது என்றும் தொடர்கிறதில்லை.

ஒரு வகையினம் என்கிற முறையில் முதலாளித்துவப் புரட்சியின் அர்த்தத்தையும் குறிபொருளையும் புதிய-இஸ்க்ரா குழுவினர் முற்றாகத் தவறாகப் புரிந்து கொள்கின்றனர். முதலாளித்துவப் புரட்சி என்பது முதலாளி வர்க்கத்துக்கு மட்டுமே அனுகூலமாயிருக்க முடியும் எனும் கருத்து அவர் களின் வாதங்களிலே எப்போதும் இழையோடிக் கொண் டிருக்கிறது. எனினும் இதைவிட தவறான கருத்து வேறொன்று இருக்கமுடியாது. முதலாளித்துவப் புரட்சி என்பது பூர்ஷ்வா — அதாவது, முதலாளித்துவ — சமுதாய-பொருளாதார அமைப்பு முறையின் கட்டுக்கோப்பை விட்டு விலகாத ஒன் றாகும். முதலாளித்துவப் புரட்சி முதலாளித்துவ வளர்ச்சி யின் தேவைகளை வெளியிடுகிறது, அது முதலாளித்துவத் தின் அடித்தளங்களை அழிப்பதற்குப் பதிலாக அவற்றை விரிவாக்குகிறது, ஆழப்படுத்துகிறது. எனவே, இந்தப் புரட்சி தொழிலாளி வர்க்கத்தின் நலன்களை மட்டுமின்றி முதலாளி வர்க்கம் முழுவதின் நலன்களையும் வெளியிடு கிறது. முதலாளித்துவத்தின் கீழ் தொழிலாளி வர்க்கத்தின் மேல் முதலாளி வர்க்கம் ஆட்சி செலுத்துவது தவிர்க்க முடியாது, ஆகையால் முதலாளித்துவப் புரட்சி பாட்டாளி வர்க்கத்தின் நலன்களைவிட அதிகமாக முதலாளி வர்க்கத்தின் நலன்களையே வெளியிடுகிறது என்று முழு உரிமையுடன்

சொல்ல முடியும். ஆனால் முதலாளித்துவப் புரட்சி பாட்டாளி வர்க்கத்தின் நலன்களை அறவே வெளியிடுகிறதில்லை என்று நினைப்பது சுத்த அபத்தமாகும். முதலாளித்துவப் புரட்சி பாட்டாளி வர்க்கத்தின் நலன்களுக்கு எதிரானது, எனவே முதலாளித்துவ அரசியல் சுதந்தரம் நமக்குத் தேவையில்லை என்கிற பழைய நரோதியத் தத்துவத்துக்கோ அல்லது முதலாளித்துவ அரசியலிலும் முதலாளித்துவப் புரட்சியிலும் முதலாளித்துவ நாடாளுமன்ற முறையிலும் பாட்டாளிவர்க்கம் பங்கெடுப்பதை மறுக்கும் அராஜகவாதத்துக்கோ இந்த அபத்தமான கருத்து வந்து சேருகிறது. தத்துவத்தின் நிலையிலிருந்து பார்த்தால், பண்ட உற்பத்தி அடிப்படையில் முதலாளித்துவ வளர்ச்சியின் தவிர்க்கவியலாத் தன்மைபற்றிய மார்க்ஸியத்தின் 'சாதாரணமான முன்கூற்றுகளை இக்கருத்து புறக்கணிக்கிறது. பண்ட உற்பத்தியை அடிப்படையாகக் கொண்டும் நாகரிகமடைந்த முதலாளித்துவ நாடுகளோடு வர்த்தகத் தொடர்பு வைத்துக் கொண்டும் இருக்கும்படியான ஒரு சமுதாயம் தன்னுடைய வளர்ச்சியின் ஒரு குறிப்பிட்ட கட்டத்தில் தவிர்க்க முடியாதபடி முதலாளித்துவப் பாதையில் சென்று தீரவேண்டும் என்று மார்க்ஸியம் நமக்குப் போதிக்கிறது. எடுத்துக்காட்டாக, முதலாளித்துவத்தின் அடிப்படையிலும் கட்டுக்கோப்புக்குள்ளும் இருந்தபடியே ருஷ்யா முதலாளித்துவ வளர்ச்சியை விட்டு விலகிச் செல்ல முடியும் என்றும் முதலாளித்துவத்தினின்று தப்பிக்க முடியும் என்றும் அல்லது வர்க்கப் போராட்ட வழி அல்லாத வேறெதாவதொரு வழியில் முதலாளித்துவ வளர்ச்சியைத் தாண்டிச் செல்ல முடியும் என்றும் கூறும் நரோதிய, அராஜகவாதப் பிதற்றலிலிருந்து முறித்துக் கொண்டு மார்க்ஸியம் மாற்றவொண்ணு வகையிலே பிரிந்துவிட்டுள்ளது.

பொதுவாகவும் சரி, குறிப்பாக ருஷ்யா சம்பந்தமாகவும் சரி, இந்த மார்க்ஸியக் கோட்பாடுகள் அனைத்தும் நுண்ணிய விபரத்தோடு நிரூபிக்கப்பட்டும் விளக்கப்பட்டும் உள்ளன. மேலும் முன்னேறுகிற முதலாளித்துவ வளர்ச்சியைத் தவிர வேறெதிலாவது தொழிலாளி வர்க்கத்தின் விமோசனத்தைத் தேடுவது எனும் கருத்து பிற்போக்கானது என்று இந்தக்

கோட்பாடுகளிலிருந்து தொடர்கிறது. ருஷ்யா போன்ற நாடுகளில் முதலாளித்துவத்தால் தொழிலாளி வர்க்கம் துன்பப்படுகிறதைவிட போதாக் குறையான முதலாளித்துவ வளர்ச்சியாலேதான் அதிகமாகத் துன்பப்படுகிறது. எனவே, மிகமிக விரிவான, சுதந்தரமான, விரைவான முதலாளித்துவ வளர்ச்சியிலே தொழிலாளி வர்க்கம் மிகமிக நிச்சயமாக அக்கறை கொண்டிருக்கிறது. முதலாளித்துவத்தின் விரிவான, சுதந்தரமான, விரைவான வளர்ச்சியைத் தடங்கல் செய்யும் பழைய அமைப்பு முறையின் மிச்சசொச்சங்கள் அனைத்தையும் அகற்றிவிடுவது தொழிலாளி வர்க்கத்துக்கு முற்றிலும் அனுகூலமானதாகும். முதலாளித்துவப் புரட்சி என்பது பழங்காலத்தின் மீதமிச்சங்களை, பண்ணையடிமைகளைச் சொந்தமாக வைத்திருக்கும் அமைப்பு முறையின் (இதில் எதேச்சாதிகார முறை மட்டுமின்றி முடியரசு முறையும் அடங்கும்) மீதமிச்சங்களை மிகவும் உறுதியாகத் துடைத்தெறிந்து விட்டு முதலாளித்துவத்தின் மிகவும் விரிவான, சுதந்தரமான, விரைவான வளர்ச்சிக்கு மிக முழுமையாக உத்தரவாதம் செய்கிற புரட்சியெழுச்சியாகும்.

எனவேதான், முதலாளித்துவப் புரட்சி பாட்டாளி வர்க்கத்துக்கு மிக உயர்ந்த அளவிலே அனுகூலமானதாகும். பாட்டாளி வர்க்கத்தின் நலன்களுக்கு முதலாளித்துவப் புரட்சி முற்றிலும் அவசியமாகும். எவ்வளவுக்கெவ்வளவு முழுமையானதாகவும் உறுதியானதாகவும் முரணற்றதாகவும் முதலாளித்துவப் புரட்சி இருக்கிறதோ அவ்வளவுக்கவ்வளவு பாட்டாளி வர்க்கம் முதலாளி வர்க்கத்தை எதிர்த்தும் சோஷலிஸத்துக்காகவும் நடத்துகிற போராட்டம் மிகவும் உறுதிப்படுத்தப்பட்டதாயிருக்கும். விஞ்ஞான சோஷலிஸத்தின் அரிச்சுவடியை அறியாதவர்கள்தாம் இந்த முடிவு புதுமையானது, வேடிக்கையானது, முரணுண்மையாயுள்ளது என்று நினைக்க முடியும். மற்றவை ஒரு புறமிருக்க, இந்த முடிவிலிருந்து ஒரு முன்கூற்று தொடர்கிறது: அதாவது, ஒரு குறிப்பிட்ட அர்த்தத்தில் முதலாளித்துவப் புரட்சி முதலாளி வர்க்கத்தைவிட பாட்டாளி வர்க்கத்துக்கு அதிக அனுகூலமானது, என்று. பின்வரும் அர்த்தத்தில்தான் இந்த

முன்கூற்று சரி: பாட்டாளி வர்க்கத்துக்கு எதிராகச் சில பழங்கால மிச்சசொச்சங்களை (எடுத்துக்காட்டாக, முடியரசு, நிரந்தர இராணுவம், முதலியவை) நம்பிப் பற்றி நிற்பது முதலாளி வர்க்கத்துக்கு அனுகூலமானது. முதலாளித்துவப் புரட்சி மிதமிஞ்சிய உறுதியுடன் பழங்காலத்தின் மிச்ச சொச்சங்கள் அனைத்தையும் துடைத்தெறியாமல் சிலவற்றை நீடித்து வைத்திருப்பது—அதாவது, இந்தப் புரட்சி முற்றிலும் முரணெழித்ததாக இல்லாமலிருப்பது, முழுமையாயில்லாமலிருப்பது, உறுதியானதாய், விட்டுக் கொடாததாய் இல்லாமலிருப்பது—முதலாளி வர்க்கத்துக்கு அனுகூலமானது. இக்கருத்தை சமூக-ஜனநாயகவாதிகள் அடிக்கடி சற்று வேறு விதமாகவும் வெளியிடுகிறார்கள்: அதாவது, முதலாளி வர்க்கம் தனக்குத் தானே துரோகம் செய்து கொள்கிறது, சுதந்தர இலட்சியத்துக்குத் துரோகம் செய்கிறது, முரணற்ற ஜனநாயகப் போக்கிலே போகும் திறம் முதலாளி வர்க்கத்துக்குக் கிடையாது, என்று. முதலாளித்துவ ஜனநாயகத்தை நோக்கிப் போகும் அவசியமான மாற்றங்கள் மேலும் மெதுவாக, மேலும் படிப்படியாக, மேலும் எச்சரிக்கையாக நடப்பது, குறைந்த உறுதியுடன் நடப்பது, புரட்சி வழியேயல்லாமல் சீர்திருத்தங்களின் வழியே நடப்பது முதலாளி வர்க்கத்துக்கு அதிக அனுகூலமானது. பண்ணையடிமை முறையின் ''நன்மதிப்புக்குரிய'' நிறுவனங்களை (முடியரசு போன்றவற்றை) இந்த மாற்றங்கள் முடிந்தவரை அப்படியே விட்டு வைப்பது, இந்த மாற்றங்கள் சாதாரண மக்களின்—அதாவது விவசாயிகளின், குறிப்பாகத் தொழிலாளிகளின்—சுதந்தரமான புரட்சிகரமான நடவடிக்கையையும் முன்முயற்சியையும் ஆற்றலையும் முடிந்தவரை குறைவாக வளர்க்கிறவையாக இருப்பது முதலாளி வர்க்கத்துக்கு அதிக அனுகூலமானது. காரணம், பிரெஞ்சுக்காரர்கள் சொல்கிற மாதிரி ''துப்பாக்கியை ஒரு தோளிலிருந்து மற்றொரு தோளுக்கு மாற்றுவது'' தொழிலாளிகளுக்கு மேலும் சுளுவாயிருக்கும்—அதாவது, அவர்களுக்கு முதலாளித்துவப் புரட்சி கொடுக்கும் ஆயுதங்களையும் புரட்சி கொணர்ந்து தரும் சுதந்தரத்தையும் பண்ணையடிமை முறையை ஒழித்துச் சுத்தப்

படுத்திய களத்தில் தோன்றுகிற ஜனநாயக நிறுவனங்களை யும் முதலாளி வர்க்கத்துக்கு எதிராகத் தொழிலாளிகள் திருப்புவது மேலும் சுலுவாயிருக்கும்.

மறுபுறத்தில், முதலாளித்துவ ஜனநாயகத்தை நோக்கிச் செல்லும் அவசியமான மாற்றங்கள் சீர்திருத்தங்கள் வழியேயல்லாமல் புரட்சி வழியே நிகழ்வது தொழிலாளி வர்க்கத்துக்கு அதிக அனுகூலமானதாகும். ஏனெனில் சீர் திருத்தத்தின் வழி தாமதப்படுத்தும் வழி, தள்ளிப்போடும் வழி, நாட்டின் உடம்பிலுள்ள அழுகிப்போன பகுதிகள் வேதனைமிக்க நிதானத்துடன் இற்றுச்சிதையும் வழியாகும். பாட்டாளி வர்க்கமும் விவசாயிகளுந்தான் அந்த அழுகலி னால் முதன்மையாகவும் மிகுதியாகவும் துன்பப்படுகிறார்கள். புரட்சி வழி விரைவாக வெட்டியகற்றும் வழி, பாட்டாளி வர்க்கத்துக்கு மிகவும் குறைந்த வலி கொடுக்கும் வழி, அழுகி விட்டதை உடனடியாக அகற்றும் வழி, முடியரசிடமும் அதைச் சேர்ந்த வெறுக்கத்தக்க, இழிந்த, அழுகலான, நாற்றமெடுக்கும் நிறுவனங்களிடமும் மிகக் குறைவான இணக்கமும் எச்சரிக்கையும் காட்டும் வழியாகும்.

எனவே, நம் நாட்டு முதலாளித்துவ-மிதவாதப் பத்திரி கைகள் புரட்சிப் பாதையின் சாத்தியப்பாடு குறித்து வருத்தம் தெரிவிப்பதும் புரட்சிக்கு அஞ்சுவதும் புரட்சிப் பூச்சாண்டி காட்டி ஜார் மன்னனைப் பயமுறுத்த முயல்வதும் புரட்சியைத் தவிர்க்க முயல்வதும் சீர்திருத்த வழிக்கு அடிப் படை என்கிற முறையிலே அற்பச் சீர்திருத்தங்களுக்காக முண்டியிடுவதும் கெஞ்சிக் குழைவதும்—இவற்றிற்கெல்லாம் காரணம் பத்திரிகைத் தணிக்கை முறையும் ''யூதர் களுக்குரிய அச்சமும்'' மட்டுமல்ல. ரூஸ்கியே வேதமஸ்தி, வீன் ஒத்தேச்செஸ்துவா, நாஷா ஷீஸ்ன், நாஷீ தினி[55] எனும் பத்திரிகைகள் மட்டுமல்லாமல் சட்டவிரோதமான சுதந்திரமான ஒஸ்வபஷ்தேனியே பத்திரிகையுங்கூட இந்த நிலை எடுத்துக் கொண்டுள்ளன. முதலாளித்துவச் சமுதாயத் தில் ஒரு வர்க்கம் என்கிற வகையில் முதலாளி வர்க்கம் வகிக்கும் நிலையின் காரணமாக அது தவிர்க்க முடியாதபடி ஜனநாயகப் புரட்சியில் முரணான நிலையை வகிப்பதில் கொண்டு

போய் விடுகிறது. ஒரு வர்க்கம் என்கிற முறையில் பாட்டாளி வர்க்கம் வகிக்கும் நிலேயின் காரணமாக அது முரணற்ற ஜன நாயகப் போக்கைப் பின்பற்றும்படி கட்டாயப்படுத்தப்படு கிறது. ஜனநாயகத்தின் முன்னேற்றம் பாட்டாளி வர்க்கத் தைப் பலப்படுத்தும் அபாயத்தைக் கண்டு பயந்து முதலாளி வர்க்கம் திரும்பிப் பின்னேக்குகிறது. இழப்பதற்குத் தன்னு டைய விலங்குகளைத் தவிர பாட்டாளி வர்க்கத்திடம் வேருென்றுமில்லே, ஆனல் ஜனநாயகத்தின் துணை கொண்டு வெல்வதற்கு உலகு முழுவதும் இருக்கிறது. எனவேதான் ஜனநாயக மாற்றங்களேச் சாதிப்பதில் முதலாளித்துவப் புரட்சி எவ்வளவுக்கெவ்வளவு முரணின்றி இருக்கிறதோ அவ்வளவுக்கவ்வளவு முதலாளி வர்க்கத்துக்கு மட்டும் அனு கூலமானவையாக இருக்கிறவைகளுடன் நிறுத்திக் கொள்வ தும் குறையும். முதலாளித்துவப் புரட்சி எவ்வளவுக்கெவ் வளவு முரணின்றி இருக்கிறதோ அவ்வளவுக்கவ்வளவு ஜனநாயகப் புரட்சியால் கிடைக்கும் ஆதாயங்களேப் பாட்டாளி வர்க்கத்துக்கும் விவசாயிகளுக்கும் உத்தரவாதம் செய்யும்.

முதலாளித்துவப் புரட்சியிலிருந்து பாட்டாளி வர்க்கம் விலகி நிற்கக் கூடாது, அதன்பால் அசிரத்தையாயிருக்கக் கூடாது, புரட்சித் தலேமையை முதலாளி வர்க்கம் எடுத்துக் கொள்வதை அனுமதிக்கக் கூடாது, அதற்கு மாருகப் புரட்சி யைச் சாதித்து முடிவுக்குக் கொண்டுவருவதற்கு அதில் தானே சக்திமிக்க பங்காற்ற வேண்டும், முரணற்ற பாட் டாளி வர்க்க ஜனநாயகத்துவத்துக்கு மிகுந்த உறுதியுடன் போராட வேண்டும் என்று பாட்டாளி வர்க்கத்துக்கு மார்க் ஸியம் போதிக்கிறது. ருஷ்யப் புரட்சியின் முதலாளித்துவ-ஜனநாயக எல்லேகளேத் தாண்டி நாம் போக முடியாது, ஆனல் இந்த எல்லேகளே நாம் மிகப் பெரிதாக விரிவாக்க முடியும், இந்த எல்லேகளுக்குள்ளே நாம் பாட்டாளி வர்க்கத்தின் நலன்களுக்காகவும் உடனடித் தேவைகளுக்காகவும் எதிர் காலத்திய முழுமையான வெற்றிக்கு அதனுடைய சக்திகளேத் தயாரிப்பதைச் சாத்தியமாக்கும் நிலேமைகளுக்காகவும் போ ராட முடியும், போராடவும் வேண்டும். முதலாளித்துவ ஜன

நாயகம் பல வகைப்பட்டது. வாலறுத்த அரசியல் சட்டத்துக்காக இரகசியத்தில் ஜாராட்சியோடு பேரம் பேசி முடித்தவாறே மேல் சட்டசபை வேண்டும் என்றும் எல்லோருக்கும் வாக்குரிமை வேண்டுமென்றும் ''கேட்டுக் கொண்டும்'' இருக்கிற ஜெம்ஸ்துவோ முடியரசுவாதிகூட ஒரு முதலாளித்துவ ஜனநாயகவாதிதான். நிலப்பிரபுக்களையும் அரசாங்க அலுவலர்களையும் எதிர்த்து ஆயுதமேந்திப் போராடும் — ஒரு ''அப்பாவித்தனமான குடியரசுவாதத்துடன்'' ''ஜார் மன்னனை வெளியேறச் செய்வோம்''* என்று முன்மொழியும் —விவசாயியுங்கூட முதலாளித்துவ ஜனநாயகவாதிதான். முதலாளித்துவ-ஜனநாயக அரசமைப்புகள் ஜெர்மனியில் இருப்பது போலவும் பிரிட்டனில் இருப்பது போலவும் உண்டு, ஆஸ்திரியாவில் இருப்பது போலவும் உண்டு, அமெரிக்காவிலும் ஸ்விட்ஸர்லாந்திலும் இருப்பது போலவும் உண்டு. ஜனநாயகப் புரட்சிக் காலத்தில், ஜனநாயகத்துவத்தின் அளவுகளிடையேயுள்ள இந்த வேற்றுமையையும் அதன் வடிவங்களிடையேயுள்ள வேற்றுமையையும் பார்க்கத் தவறிவிட்டு என்ன இருந்தாலும் இது ''ஒரு முதலாளித்துவப் புரட்சிதானே'',''முதலாளித்துவப் புரட்சியின்'' பலன்தானே என்கிறபடி ''கெட்டிக்காரத் தனமான'' குறிப்புரைகளோடு நிறுத்திக் கொள்ளும் மார்க்ஸியவாதி நேர்த்தியான மார்க்ஸியவாதிதான், போங்கள்.

நம்முடைய புதிய-இஸ்க்ராவாதிகளும் இப்படிப்பட்ட கெட்டிக்காரப் பேர்வழிகள்தாம், இவர்கள் தம்முடைய கிட்டப் பார்வை குறித்துப் பெருமையடித்துக் கொள்ளவும் செய்கிறார்கள். குடியரசுவாத-புரட்சிகரமான முதலாளித்துவ ஜனநாயகத்துக்கும் முடியரசுவாத-மிதவாத முதலாளித்துவ ஜனநாயகத்துக்கும் இடையே வேறுபாடு கண்டு கொள்ள முடிவது (முரணுள்ள முதலாளித்துவ ஜனநாயகத்துக்கும் முரணற்ற பாட்டாளி வர்க்க ஜனநாயகத்துக்கும் இடையே வேறுபாடு கண்டு கொள்வதைப் பற்றிச் சொல்ல வேண்டியதில்லை) அவசியமாயிருக்கிற இந்த நேரத்திலும்

* பார்க்க: ஒஸ்வபஷ்தேனியே, இதழ் 71, பக்கம் 337, அடிக்குறிப்பு 2.

இடத்திலும் இவர்கள் புரட்சியின் முதலாளித்துவத் தன்மையைப் பற்றி உரைகள் ஆற்றுவதோடு நிறுத்திக் கொள்கிறார்கள். தற்காலப் புரட்சியில் ஜனநாயகத் தலைமை அளிப்பதும் திருவாளர் ஸ்துருவே கூட்டத்தாரின் துரோகத்தனமான கோஷங்களினின்று வேறுபடுத்திக் கொண்டு முற்போக்கான ஜனநாயக கோஷங்களை வலியுறுத்துவதும் பிரச்சினையாக இருக்கும் நேரத்தில், நிலப்பிரபுக்கள், முதலாளிகள் ஆகியோரின் மிதவாதப் பேரப் பேச்சுகளினின்று வேறுபடுத்திக் கொண்டு பாட்டாளி வர்க்கம், விவசாயிகள் ஆகியோரின் உண்மையிலேயே புரட்சிகரமான போராட்டத்துக்குரிய உடனடிக் குறிக்கோள்களை ஒளிவு மறைவின்றி நேராகவும் உறுதியுடனும் கூற வேண்டியது பிரச்சினையாக இருக்கும் நேரத்தில் ''பகையான வர்க்கங்களிடையே நடக்கும் பரஸ்பரப் போராட்டத்தின் தொடர்நிகழ்வுப்போக்கு'' குறித்துப் பேசுவதோடு (''கூட்டில் அடைந்த மனிதர்''[56] போல் உண்மையிலே ஆகிவிட்டவர்கள் மாதிரி), துயரமிக்க பேச்சு பேசுவதோடு திருப்தியடைகிறார்கள். கனவான்களே, நீங்கள் கவனிக்கத் தவறிய விஷயத்தின் சாராம்சம் இதுதான்: அதாவது, நம்முடைய புரட்சி ஓர் உண்மையான, மாபெரும் வெற்றியிலே முடிவடையுமா அல்லது வெறுமே ஒரு படுமோசமான பேரத்தில் முடிவடையுமா? பாட்டாளி வர்க்கத்தின், விவசாயி மக்களின் புரட்சிகரமான ஜனநாயக சர்வாதிகாரத்தை எட்டும் தூரத்துக்குப் புரட்சி செல்லுமா அல்லது ஷீப்பவ் பாணியில் அமைந்த மிதவாத அரசியல் சட்டத்திலே ''சக்தியை இழந்துவிடுமா''?

இந்தப் பிரச்சினையை எழுப்புவதன் மூலம் நாம் விஷயப் பொருளை விட்டு அறவே விலகிச்செல்வதாக முதற்பார்வைக்கு தோன்றலாம். ஆனால் முதற்பார்வைக்குத்தான் அப்படித் தோன்றக் கூடும். உண்மையாகச் சொன்னால், ருஷ்யாவின் சமூக-ஜனநாயகத் தொழிலாளர் கட்சியின் மூன்றாவது காங்கிரஸின் சமூக-ஜனநாயகவாதப் போர்த்தந்திரங்களுக்கும் புதிய-இஸ்க்ரா ஆதரவாளர்களின் மாநாடு தொடங்கி வைத்த போர்த்தந்திரங்களுக்கும் இடையே கோட்பாடு விஷயத்தில் தெளிவாகத் தெரிகிற வேற்றுமைக்கு இந்தப் பிரச்சினைதான் வேராக இருக்கிறது. ஒப்பிட முடியாத

வகையில் தொழிலாளி வர்க்கக் கட்சிக்கு மேலும் சிக்கலான வையாகவும் முக்கியமானவையாகவும் உயிர்நிலேயானவை யாகவும் உள்ள பிரச்சினேகளே—அதாவது, புரட்சிக் காலத் தில் அதன் போர்த்தந்திரங்கள் பற்றிய பிரச்சினேகளே— தீர்த்து வைப்பதில் அந்த மாநாடு ''பொருளாதாரவாதத் தின்'' தவறுகளே மீண்டும் உயிர்ப்பித்து இரண்டு அடி அல்ல, மூன்று அடி ஏற்கெனவே பின்னேக்கி வைத்துள்ளது. எனவே தான் நாம் எழுப்பியிருக்கும் பிரச்சினேயைத் தக்க கவனத் துடன் பகுத்தாய்ந்திட வேண்டும்.

முதலாளிவர்க்கத்தின்முரணுள்ளகொள்கையைஎதிர்க்கும் போராட்டத்தில் சமூக-ஜனநாயகவாதம் தன் கைகளேயே கட்டிப் போட்டுக் கொள்ளும் அபாயத்தை, முதலாளித்துவ ஜனநாயகத்தில் அது கலந்து கரைந்து போகிற அபாயத்தைப் புதிய-இஸ்க்ரா தீர்மானத்தின் மேலே மேற்கோள் காட்டிய பகுதி சுட்டிக்காட்டுகிறது. இந்த அபாயத்தைப் பற்றிய கருத்து புதிய-இஸ்க்ரா தன்மைக்குரிய இலக்கியம் முழு வதிலும் பரவி நிற்கிறது. நம் கட்சி பிளவில் கோட் பாடு ரீதியான நிலேக்கு (''பொருளாதாரவாதத்தை'' நோக்கித் திரும்பிய திருப்பம் பிளவில் விளேந்த சச்சரவை முற்றுக மறைத்துவிட்ட காலத்திலிருந்து) இதுவே இதயம் போல் உள்ளது. ஐயந்திரிபுக்கிடமின்றி ஒப்புக் கொள்கிறேம்: இப்படிப்பட்ட அபாயம் இருக்கத்தான் செய்கிறது, ருஷ்யப் புரட்சி உச்ச கட்டத்தில் இருக்கிற இந்த நேரத்திலேதான் இந்த அபாயம் குறிப்பாகக் கடுமையாகியுள்ளது. சமூக-ஜனநாயகவாதத்தின் தத்துவாசிரியர்களாகிய, அல்லது (என்னேப் பொறுத்தவரை சொல்லிக் கொள்ள விரும்புவது போல்) சமூக-ஜனநாயகப் பிரச்சினேகளேப் பற்றி எழுதும் பத்திரிகையாளர்களாகிய நம் மீது விழுந்திருக்கும் மிகவும் அவசர அவசியமான, பொறுப்புள்ள கடமை உண்மையிலே இந்த அபாயம் எந்தத் திசையிலிருந்து வருகிறது என்று கண்டுபிடிப்பதுதான். ஏனெனில், நம் கருத்து வேற்றுமைக்குத் தோற்றுவாயாக இருப்பது இவ்வகை அபாயம் இருக்கிறதா இல்லேயா எனும் சர்ச்சையல்ல, ''சிறுபான்மையினரின்'' வால்பிடிக்கும் போக்கு எனப்படுவது இந்த அபாயத்தை

உண்டாக்குகிறதா அல்லது ''பெரும்பான்மையினரின்'' புரட்சிவாதம் எனப்படுவது இந்த அபாயத்தை உண்டாக்கு கிறதா எனும் சர்ச்சையேயாகும்.

தவருன வியாக்கியானங்களையும் தப்பெண்ணங்களையும் விலக்கும்பொருட்டு, முதலில் நாம் குறித்துக் கொள்ள வேண்டியது இதுதான்: நாம் குறிப்பிடுகிற அபாயம் விவகாரத்தின் புறநிலை அம்சத்தில் குடி கொண்டிருக்கிறதே தவிர அகநிலையம்சத்தில் அல்ல, தற்காலப் புரட்சிப் போராட்டம் முழுவதின் பொருளாயத விளைவில் குடி கொண்டிருக்கிறதே தவிர இந்தப் போராட்டத்தில் சமூக-ஜனநாயகவாதம் எடுத்துக் கொள்ளவிருக்கும் சம்பிரதாயமான நிலையில் அல்ல. ஏதாவதொரு சமூக-ஜனநாயகக் குழு முதலாளித்துவ ஜனநாயகத்தில் கலந்து கரைந்துவிட விரும்பிப் போகிறதா அல்லது அவ்வாறு கலந்து கரைந்து வருவதை உணர்கிறதா என்பதல்ல பிரச்சினை. அப்படி யாரும் சொல்லவில்லை. அப்படிப்பட்ட விருப்பத்தை எந்தச் சமூக-ஜனநாயகவாதியும் வைத்திருப்பதாக நாம் சந்தேகிக்கவில்லை; அது விருப்பம் சம்பந்தப்பட்ட விவகாரமும் அல்ல. இன்னொன்று: ஏதாவதொரு சமூக-ஜனநாயகக் குழு புரட்சிப் போக்கின் நெடுகிலும் தன்னுடைய தனியடையாளத்தையும் தனித்தன்மையையும் முதலாளித்துவ ஜனநாயகத்தைச் சாராத சுதந்தரத்தையும் சம்பிரதாய வகையிலே நீடித்து வைத்திருக்குமா என்பதல்ல பிரச்சினை. இவ்வகைச் ''சுதந்தரத்தை'' அவை வெறுமே பிரகடனம் செய்வதோடல்லாமல் சம்பிரதாய வகையிலே நீடித்து வைத்துக் கொண்டும் இருக்கலாம்; என்ற போதிலும், முதலாளி வர்க்கத்தின் முரணுன போக்கை எதிர்த்து நடக்கும் போராட்டத்தில் அவற்றின் கைகள் கட்டுண்டு போகிற நிலையும் ஏற்படக் கூடும். சமூக-ஜனநாயகவாதம் சம்பிரதாய வகையிலே ''சுதந்தரமாக'' இருந்துங்கூட, தனிக் கட்சி எனும் வகையில் அது முழுமையான அமைப்புத் தனித்தன்மை பெற்றிருந்துங்கூட நடைமுறையுண்மையிலே அது சுதந்தரமானதாக இராது என்று புரட்சியின் இறுதியான அரசியல் விளைவாக நிரூபிக்கப்பட்டுப் போகலாம்; அது நிகழ்ச்சிகளின் போக்கு மீது தன்னுடைய பாட்டாளி

வர்க்கச் சுதந்தரத்தின் முத்திரையைப் பதிய வைக்க முடியாமற் போய்விடும்; மொத்தத்தில் பார்க்கும் போது, கடைசிப் பரிசீலனையின்படி பார்க்கும் போது, அது முதலாளித்துவ ஜனநாயகத்தில் ''கலந்து கரைந்துவிட்டிருப்பது'' ஒரு வரலாற்று உண்மையாகிவிடும் அளவுக்கு அது பலவீனமாயுள்ளதாக நிருபித்துக் கொண்டுவிடும்.

உண்மையான அபாயம் இதிலேதான் இருக்கிறது. இனி இந்த அபாயம் எந்தத் திசையிலிருந்து வருகிறது என்று பார்ப்போம்—நாங்கள் நம்புகிறபடி புதிய-இஸ்க்ரா பிரதிநிதித்துவப்படுத்தும் சமூக-ஜனநாயகவாதத்தின் வலதுசாரித் திரிபிலிருந்து வருகிறதா, அல்லது புதிய-இஸ்க்ரா நம்புகிறபடி உள்ள ''பெரும்பான்மையினர்'', வ்பெரியோத் பத்திரிகை முதலானோர் பிரதிநிதித்துவப்படுத்தும் சமூக-ஜனநாயகவாதத்தின் இடதுசாரித் திரிபிலிருந்து வருகிறதா, என்று.

நாம் சுட்டிக்காட்டியுள்ளபடி, பல்வேறு சமுதாயச் சக்திகள் வேலை செய்வதின் புறநிலைச் சேர்க்கை இப்பிரச்சினைக்குரிய தீர்வை நிர்ணயிக்கிறது. ருஷ்ய வாழ்க்கையைப் பற்றிய மார்க்ஸியப் பகுப்பாய்வு இச்சக்திகளின் தன்மையைத் தத்துவ ரீதியிலே வரையறுத்திருக்கிறது; தற்சமயம் குழுக்களின், வர்க்கங்களின் பகிரங்கமான செய்கை புரட்சியின் போக்கிலே இதை நடைமுறையில் நிர்ணயித்து வருகிறது. இன்று நாம் கடந்து வரும் காலத்துக்கு மிக முன்னதாகவே மார்க்ஸியவாதிகள் செய்துள்ள தத்துவப் பகுப்பாய்வு முழுவதும் சரி, புரட்சிகரமான நிகழ்ச்சிகளின் வளர்ச்சியைப் பற்றிய நடைமுறை நோக்குரைகள் முழுவதும் சரி, இன்று காட்டுவதாவது: புறநிலைமைகளை வைத்துப் பார்க்கும் போது ருஷ்யாவில் புரட்சிக்கு இரண்டு போக்குகளும் இரண்டு விளைவுகளும் சாத்தியம், என்று. ருஷ்யாவில் முதலாளித்துவ-ஜனநாயக வழியில் பொருளாதார, அரசியல் அமைப்பு முறை மாற்றம் பெறுவது தவிர்க்கவியலாதது, தப்பிக்கவியலாதது. இவ்வகை மாற்றத்தை எந்தச் சக்தியாலும் தடுக்க முடியாது; எனினும் அதைச் செய்து வரும் இன்றையச் சக்திகளின் ஒன்றுபட்ட செய்கை இரண்டில் ஏதாவது ஒன்ருக முடியக் கூடும், அம்மாற்றத்தின் இரண்டு வடிவங்களில் ஏதாவது

ஒன்றை உண்டாக்கி வைக்கக் கூடும். ஒன்று: விவகாரங்கள் ''ஜாராட்சி மீது புரட்சி நிர்ணயமான வெற்றி பெறுவதில்'' போய் முடியலாம்; அல்லது: நிர்ணயமான வெற்றிக்குப் போதிய பலம் இராது விவகாரங்கள் ஜாராட்சிக்கும் முதலாளி வர்க்கத்தினரின் மிகவும் ''முரணுள்ள'', மிகவும் ''தன்னலமுள்ள'' பகுதியினருக்கும் இடையே பேரம் செய்து கொள்வதிலே போய் முடியலாம். மொத்தத்தில் சொன்னால், யாராலும் முன்கூட்டி அறிய முடியாமல் முடிவற்ற வகையில் உள்ள பல்வேறு விபரங்களும் சேர்க்கைகளும் இரண்டில் ஏதாவதொரு விளைவுக்குக் கொண்டு போய்விடுகின்றன.

இந்தச் சாத்தியப்பாடுகளை முதலில் அவற்றின் சமுதாயக் குறிபொருளின் பார்வை நிலையிலிருந்தும், இரண்டாவதாக இரண்டு விளைவுகளில் சமூக-ஜனநாயகவாதம் வகிக்கும் நிலையின் (அது ''கலந்து கரைவது'' அல்லது ''கைகள் கட்டுண்டு போவது'' எனும் நிலையின்) பார்வை நிலையிலிருந்தும் இப்போது கவனிப்போம்.

''ஜாராட்சி மீது புரட்சி நிர்ணயமான வெற்றி பெறுவது'' என்கிறதின் பொருள் என்ன? இந்தச் சொற்றொடரைப் பயன்படுத்துவதில் அதன் உடனடி அரசியல் குறிபொருளைக் கூட புதிய-இஸ்க்ரா குழுவினர் புரிந்துகொள்ளத் தவறுகிறதை நாம் ஏற்கெனவே பார்த்தோம். இந்தக் கருத்துருவத்தின் வர்க்கக் குறிபொருளை இவர்கள் புரிந்து கொண்டிருப்பது அதைவிடக் குறைவே என்று தெரிகிறது. (கப்போன் மாதிரியான) பல புரட்சிகரமான ஜனநாயகவாதிகள் செய்வது போல் ''புரட்சி'', ''மாபெரும் ருஷ்யப் புரட்சி'' போன்ற சொற்களைக் கேட்டு எந்த நிலைமைகளிலும் மார்க்ஸியவாதிகளாகிய நாம் மயங்கிவிடக் கூடாது என்பது உறுதி. (எல்லோருக்கும் தெரிந்திருக்கும் உண்மையான சக்தியாகிய) ''ஜாராட்சியை'' எதிர்த்து, அதன் மீது ''நிர்ணயமான வெற்றி'' பெறும் திறமுள்ள உண்மையான சமுதாயச் சக்திகள் எவை என்பதில் நாம் முற்றாகத் தெளிவு பெற்றிருக்க வேண்டும். பெரு முதலாளி வர்க்கத்தினர், நிலப்பிரபுக்கள், தொழிற்சாலைச் சொந்தக்காரர்கள், ஒஸ்வபஷ்தேனியே தலைமையைப் பின்பற்றும் ''வகுப்பினர்'' ஆகியோர் இப்

படிப்பட்ட சக்தியாக இருக்க முடியாது. அவர்களுக்கு நிர்ணயமான வெற்றியில் விருப்பங்கூட இல்லாததை நாம் பார்க்கிறோம். அவர்களுடைய வர்க்க நிலையின் காரணமாக அவர்கள் ஜாராட்சியை எதிர்த்து நிர்ணயமான போராட்டம் நடத்தும் திறமற்றவர்கள் என்பதை நாமறிவோம். அவர்கள் தனிச்சொத்துடைமையால், மூலதனத்தால், நிலவுடைமையால் மிதமிஞ்சிய அளவில் பலமாக விலங்கிடப்பட்டிருப்பவர்கள், எனவே அவர்கள் நிர்ணயமான போராட்டத்தில் இறங்க முடியாது. பாட்டாளி வர்க்கத்துக்கும் விவசாயி மக்களுக்கும் எதிராகப் பயன்படுத்துவதற்கு அதிகார வர்க்க-போலீஸ், இராணுவச் சக்திகளும் வைத்துக் கொண்டுள்ள ஜாராட்சி அவர்களுக்கு மிகவும் தேவை, எனவே அதை அழிப்பதில் அவர்களுக்கு விருப்பமில்லை. ''ஜாராட்சி மீது நிர்ணயமான வெற்றியைச்'' சாதிக்கவல்ல ஒரே சக்தி மக்களே—அதாவது, முக்கியமான பெரிய சக்திகளாக எடுத்துக் கொண்டால் பாட்டாளி வர்க்கமும் விவசாயி மக்களும் ஆவர், இவற்றிற்கு இடையே கிராமத்தையும் நகரத்தையும் சேர்ந்த சிறுமுதலாளி வர்க்கத்தினரை (இவர்களும் ''மக்களின்'' ஒரு பகுதிதான்) வைக்க வேண்டும். ''ஜாராட்சி மீது புரட்சி நிர்ணயமான வெற்றி பெறுவது'' என்பதற்குப் பொருள் **பாட்டாளி வர்க்கம், விவசாயி மக்கள் ஆகியோரின் புரட்சிகரமான ஜனநாயகச் சர்வாதிகாரத்தை** நிலைநாட்டுவதாகும். நெடுங்காலத்துக்கு முன்பே வ்பெரியோத் குறிப்பிட்டிருந்த இந்த முடிவிலிருந்து புதிய-இஸ்க்ரா குழுவினர் தப்பிக்க முடியாது. வேறெந்த சக்திக்கும் ஜாராட்சி மீது நிர்ணயமான வெற்றி பெறும் திறமை கிடையாது.

அப்படிப்பட்ட வெற்றி ஒரு சர்வாதிகாரமாகத்தான் இருக்கும்; அதாவது, அது ''சட்டபூர்வமான'' அல்லது ''சமாதானபூர்வமான'' வழியில் ஏற்படுத்தப்பட்ட ஏதாவதொரு வகையான நிறுவனங்களை நம்பி நில்லாமல் தவிர்க்க முடியாதபடி இராணுவச் சக்தியை, மக்களை ஆயுதமேந்தி நிற்கச் செய்வதை, புரட்சியெழுச்சியை நம்பி நிற்க வேண்டும். அது ஒரு சர்வாதிகாரமாகத்தான் இருக்க முடியும்; ஏனெனில் பாட்டாளி வர்க்கத்துக்கும் விவசாயி மக்களுக்

கும் இன்றியமையாத அவசரத் தேவையான மாற்றங்களைச் சாதிப்பது, நிலப்பிரபுக்களின், பெருமுதலாளி வர்க்கத்தினரின் ஜாராட்சியின் கடுமையான எதிர்ப்பைக் கிளப்பிவிடும். ஒரு சர்வாதிகாரம் இல்லாமல் இந்த எதிர்ப்பை உடைத்தெறிய முடியாது, எதிர்ப்புரட்சி முயற்சிகளை முறியடிக்க முடியாது. உண்மைதான், இது ஜனநாயகச் சர்வாதிகாரமாகவே இருக்கும், சோஷலிஸச் சர்வாதிகாரமாக இராது. இது (புரட்சிகரமான வளர்ச்சியின் வரிசைத் தொடரான இடைநிலைக் கட்டங்கள் இல்லாமல்) முதலாளித்துவத்தின் அடித்தளங்களைப் பாதிக்க வல்லதாய் இராது. அதிகப்பட்சமாகப் போனால், இது விவசாயி மக்களுக்குச் சாதகமான வகையில் நிலச் சொத்துடைமையில் அடிப்படையான மறுவினியோகத்தைச் செய்து முடிக்கலாம், ஒரு குடியரசை நிறுவுவது உள்ளிட்டு முழுமையான முரணற்ற ஜனநாயகத்தையும் நிலைநாட்டலாம், கிராமப்புற வாழ்க்கையிலிருந்து மட்டுமின்றித் தொழிற்சாலை வாழ்க்கையிலிருந்தும் ஆசிய வகைப்பட்ட அடிமைத்தனத்துக்குரிய உள்ளடக்கக் கூறுகள் அனைத்தையும் துடைத்தெறியலாம், தொழிலாளர் நிலைமைகளை நிறைவாக மேம்படுத்துவதற்கும் அவர்களுடைய வாழ்க்கைத் தரத்தை உயர்த்துவதற்கும் வேண்டிய அடித்தளத்தையும் நிறுவலாம், last but not least,* புரட்சிப் பெருந்தீயை ஐரோப்பாவுக்கும் பரவச் செய்யலாம். என்றாலும், அப்படிப்பட்ட வெற்றி நம் முதலாளித்துவப் புரட்சியை சோஷலிஸப் புரட்சியாக மாற்றிவிடாது; ஜனநாயகப் புரட்சி முதலாளித்துவச் சமுதாய-பொருளாதார உறவுமுறைகளின் எல்லைகளை நேரடியாகத் தாண்டிச் செல்லாது. என்ற போதிலும், இப்படிப்பட்ட வெற்றி ருஷ்யாவின் எதிர்கால வளர்ச்சிக்கும் உலக முழுவதின் எதிர்கால வளர்ச்சிக்கும் மாபெரும் முக்கியத்துவமுள்ளதாயிருக்கும். இன்று ருஷ்யாவில் துவங்கியிருக்கும் புரட்சியின் நிர்ணயமான வெற்றி செய்வது போல் வேறெதுவும் உலகப் பாட்டாளி வர்க்கத்தின் புரட்சிகரமான ஆற்றலை இவ்வளவு அதிகமாக உயர்த்தாது, அதன்

* கடைசியாக, ஆனால் முக்கியமற்றதல்ல.

முழுமையான வெற்றிக்குக் கொண்டு போய் விடும் பாதையை இந்த அளவுக்கு வேறெதுவும் குறுக்கிவிடாது.

எவ்வளவு தூரத்துக்கு இந்த வெற்றி சாத்தியம் என்பது வேறு பிரச்சினை. இவ்விஷயத்தில் அறிவுக்கொவ்வா முறையில் நம்பிக்கை கொள்வதற்கு நாம் சிறிதும் விரும்பவில்லை. இப்பணியிலுள்ள மாபெரும் கஷ்டங்களை நாம் ஒரு கணமேனும் மறக்கவில்லை. ஆனால், நாம் போராடக் கிளம்பியிருப்பதால் வெற்றியை விரும்பித் தீரவேண்டும், அதற்குச் சரியான பாதையைக் காட்டவும் முடிய வேண்டும். இப்படிப்பட்ட வெற்றிக்கு இட்டுச் செல்லும் திறமையுள்ள போக்குகள் இருக்கத்தான் செய்கின்றன, இதில் ஐயமேயில்லை. திரளான பாட்டாளிகள் மீது நமக்குள்ள சமூக-ஜனநாயகவாதச் செல்வாக்கு இன்னும் மிகவும் போதாக்குறையாகவே உள்ளது உண்மை; திரளான விவசாயி மக்கள் மீதுள்ள புரட்சிகரமான செல்வாக்கும் அற்பமாகத்தான் இருக்கிறது; பாட்டாளிகள், குறிப்பாக விவசாயிகள், இன்னமும் மிகவும் ஒற்றுமையின்றியுள்ளனர், பிற்பட்ட நிலையிலுள்ளனர், அறியாமையில் மூழ்கியுள்ளனர். ஆனால் புரட்சி விரைவில் ஒன்றுபடுத்துகிறது, விரைவில் அறிவூட்டுகிறது. அதன் வளர்ச்சியின் ஒவ்வொரு படியும் மக்களைத் தட்டியெழுப்பி எதிர்க்கவொண்ணுச் சக்தியுடன் புரட்சிகரமான வேலைத்திட்டத்திடம்—மக்களின் உண்மையான, உயிர்நிலையான நலன்களை முழுமையுடனும் முரணின்றியும் வெளியிடும் ஒரே வேலைத்திட்டத்திடம்—ஈர்க்கிறது.

ஒரு இயந்திரவியல் விதிப்படி வினையும் எதிர்வினையும் எப்போதும் சமம். வரலாற்றிலுங்கூட, புரட்சியின் நாசகரமான சக்தியானது விடுதலைக்கான முயற்சி எவ்வளவு பலமாக, எத்தனைக் காலமாக ஒடுக்கப்பட்டு வந்திருக்கிறது என்பதையும் காலாவதியாகிவிட்ட ''மேற்கட்டுமானத்துக்கும்'' நம் காலத்தின் உயிர்ப்புள்ள சக்திகளுக்கும் இடையேயுள்ள முரண்பாடு எவ்வளவு ஆழமாயிருக்கிறது என்பதையும் சார்ந்திருக்கிறது. சர்வதேச அரசியல் நிலைமையுங்கூட பல அம்சங்களில் ருஷ்யப் புரட்சிக்கு மிகவும் அனுகூலமான வழியில் உருப் பெற்று வருகிறது. தொழி

லாளர்களின், விவசாயிகளின் புரட்சியெழுச்சி ஏற்கெனவே தொடங்கிவிட்டுள்ளது; விட்டு விட்டு நடக்கும் சிதறலான நிலையிலும் தன்னியல்பாகவும் பலவீனமாகவும் இருந்தாலுங் கூட நிர்ணயமான போராட்டத்தை நடத்தி நிர்ணயமான வெற்றியை நோக்கி நடையிடத் திறமுள்ள சக்திகள் இருந்து வருவதைச் சந்தேகத்திற்கிடமின்றி, கேள்விக்கிடமின்றி அது நிரூபிக்கிறது.

இச்சக்திகள் போதா என்று காட்டிக் கொண்டால் ஜார் ஆட்சிக்குப் பேரம் செய்து கொள்வதற்கு நேரம் கிடைக்கும், ஏற்கெனவே இரு கோடிகளிலிருந்து புலீகின் வகையறுவும் ஸ்துரூவே வகையறுவும் இதற்குத் தயார் செய்து வருகிறார்கள். அப்புறம் விவகாரம் அனைத்தும் ஒரு வாலறுந்த அரசியல் சட்டத்திலே—அல்லது, மிகவும் மோசமாகப் போனால், கேலிக்கூத்தான அரசியல் சட்டத்திலேகூட—போய் முடியும். இதுவுங்கூட ''முதலாளித்துவப் புரட்சியாகவே'' இருக்கும், ஆனால் அது ஒரு சாப்பிறவியாக, குறைப் பிரசவமாக, கருச்சிதைவாக இருக்கும். இவ்விஷயத்தில் சமூக-ஜனநாயகவாதத்துக்குப் பிரமைகள் எதுவும் இல்லை; அது முதலாளி வர்க்கத்தின் துரோகத் தன்மையை அறிந்துதான் இருக்கிறது; முதலாளி வர்க்க-அரசியல்சட்ட வழிப்பட்ட ''ஷீப்பவ்'' பாணி பேரின்பம் நிலவுகையில் மிகவும் சுவையற்ற சலிப்பான நாட்களிலுங்கூட அது மனமுடைந்து போகாது, அல்லது பாட்டாளி வர்க்கத்துக்கு வர்க்கப் பயிற்சி அளிக்கும் தன்னுடைய விடாப்பிடியான, பொறுமைமிக்க, இடைவிடாத வேலையைக் கைவிடாது. அப்படிப்பட்ட முடிவு ஐரோப்பாவில் பத்தொன்பதாம் நூற்றாண்டில் கண்ட அநேகமாக எல்லா ஜனநாயகப் புரட்சிகளுக்கும் ஏற்பட்ட முடிவைப் போலவே ஏறக்குறைய இருக்கும், பிறகு நம்முடைய கட்சியின் வளர்ச்சியும் கடினமான, நீளமான, ஆனால் பழக்கமான தேய்ந்த பாதையிலே சென்று கொண்டிருக்கும்.

இனி ஒரு கேள்வி எழுகிறது: சாத்தியமான இவ்விரண்டு முடிவுகளில் எதில் சமூக-ஜனநாயகவாதம் முரணுள்ள, தன்னலமுள்ள முதலாளி வர்க்கத்தை எதிர்த்து நடத்தும் போராட்டத்தில் தன்னுடைய கைகள் உண்மையிலே கட்டுண்டு

கிடக்கக் காணும், முதலாளித்துவ ஜனநாயகத்தில் முற்றுக வோ அநேகமாகவோ ''கலந்து கரைந்து விட்டிருக்கக்'' காணும்?

இக்கேள்வியைத் தெளிவாகக் கேட்டால் போதும், உடனே விடை கிடைத்துவிடும்.

முதலாளி வர்க்கம் ஜாராட்சியுடன் பேரம் செய்து கொண்டு ருஷ்யப் புரட்சியை முறியடிப்பதில் வெற்றிபெறுமே யானுல் முரணுள்ள முதலாளி வர்க்கத்தை எதிர்த்து நடத்தும் போராட்டத்தில் சமூக-ஜனநாயகவாதம் தன் னுடைய கைகள் உண்மையில் கட்டுண்டு கிடக்கக் காணும்; பாட்டாளி வர்க்கம் தன் முத்திரையைப் புரட்சி மீது பதிய வைப்பதில் வெற்றி பெருது, பாட்டாளி வர்க்க வழியில்—மார்க்ஸ் ஒரு சமயத்தில் சொன்னபடி ''கீழ்த்தட்டு மக்கள் வழியில்''—ஜாராட்சியுடன் கணக்குத் தீர்த்துக் கொள்வதில் பாட்டாளி வர்க்கம் வெற்றி பெருது என்கிற அர்த்தத்தில் சமூக-ஜனநாயகவாதம் முதலாளித்துவ ஜனநாயகத்தில் ''கலந்து கரைந்துவிடக்'' காணும்.

புரட்சி நிர்ணயமான வெற்றியைப் பெறுமேயானுல்—அப்போது நாம் ஜாராட்சியுடன் ஜாக்கொபின்வாத வழியில், அல்லது (அப்படிச் சொல்ல விரும்பினுல்) கீழ்த்தட்டு மக்கள் வழியில், கணக்குத் தீர்ப்போம். 1848ல் புகழ்பெற்ற **புதிய ரைன் பத்திரிகையில்** மார்க்ஸ் எழுதியதாவது: ''பிரெஞ்சுப் பயங்கர முறை என்பதெல்லாம் முதலாளி வர்க்கத்தின் எதிரிகளோடு, எதேச்சாதிகார முறையோடு, நிலப்பிரபுத் துவத்தோடு, சிறு முதலாளித்துவத் தன்னலப் போக்கோடு கீழ்த்தட்டு மக்கள் வழியில் கணக்குத் தீர்த்துக் கொள் வதைத் தவிர வேறென்றுமில்லை'' (பார்க்க: Marx' *Nachlass*, மேரிங் பதிப்பு, தொகுதி 3, பக்கம் 211).[57] ஜனநாயகப் புரட்சிக் காலத்தில் ''ஜாக்கொபின்வாத வழி'' எனும் பூச்சாண்டியைக் காட்டி ருஷ்யாவில் சமூக-ஜனநாயக வாதத்தைப் பின்பற்றும் தொழிலாளிகளைப் பயங்காட்டப் பார்க்கும் நபர்கள் மார்க்ஸின் இவ்வார்த்தைகளின் குறிபொருளைப் பற்றி என்றைக்காவது சிந்தித்துப் பார்த்த துண்டா?

தற்கால ருஷ்யச் சமூக-ஜனநாயகவாதத்தில் ஜிராண்டு வாதிகளான[58] புதிய-இஸ்க்ரா குழுவினர் ஒஸ்வபஷ்தேனியே குழுவில் கலந்துவிடவில்லை; எனினும் தம்முடைய கோஷங்களின் தன்மை காரணத்தால் அவர்கள் ஒஸ்வபஷ் தேனியே குழுவின் வால்பிடித்துப் போய்க் கொண்டிருக்கி ருர்கள். ஒஸ்வபஷ்தேனியே குழுவினர், அதாவது, மிதவாத முதலாளி வர்க்கத்தினரின் பிரதிநிதிகள், சீர்திருத்தவாத வழியிலே—உயர்குடி மக்களின், பிரபுக்களின், ஜார் பரிவாரத் தினரின் மனம் நோகாதபடி நயமாகவும் இணக்கமாகவும் —எதையும் உடைக்காதபடி எச்சரிக்கையாகவும்—வெள்ளைக் கையுறைகள் (இரத்தக்கறை படிந்த ஜார் நிக்க லாய் ''மக்கள் பிரதிநிதிகளுக்கு'' [?] அளித்த வரவேற்பில்[59] கலந்து கொள்வதற்காக ஒரு பஷி-புஜுக் கும்பலைச் சேர்ந் தவரிடமிருந்து திரு. பெத்ருன்கேவிச் இரவல் வாங்கியதைப் போன்றவை—பார்க்க: புரொலிட்டாரி, இதழ் 5*) அணிந்த கண்ணியமான கனவான்களுக்கு ஏற்ற முறையில் அன்பாக வும் பணிவாகவும்—எதேச்சாதிகார முறையுடன் கணக்குத் தீர்த்துக் கொள்ள விரும்புகிருர்கள்.

தற்காலச் சமூக-ஜனநாயகவாதத்திலுள்ள ஜாக்கொபின் வாதிகள்—போல்ஷிவிக்குகள், வ்பெரியோத் ஆதரவாளர்கள், காங்கிரஸ் குழுவினர், புரொலிட்டாரி ஆதரவாளர்கள், அல்லது அவர்களை வேறு எப்படி அழைத்தாலும் சரி—தங்க ளுடைய கோஷங்களின் வழியே புரட்சிகரமான, குடியரசு வழிப்பட்ட சிறுமுதலாளிவர்க்கத்தினரை, குறிப்பாக விவசாயி மக்களை, ஒரு வர்க்கம் என்கிற வகையில் தன்னுடைய தனித்தன்மையை நீடித்துக் கொண்டிருக்கும் பாட்டாளி வர்க்கத்தின் முரணற்ற ஜனநாயகத்துவத்தின் தரத்துக்கு உயர்த்த விரும்புகிருர்கள். மக்கள்—அதாவது, பாட்டாளி வர்க்கமும் விவசாயி மக்களும்—முடியரசுடனும் உயர்குடி வகுப்பினருடனும் ''கீழ்த்தட்டு மக்கள் வழியில்''—சுதந் தரத்தின் எதிரிகளை ஈவிரக்கமின்றி ஒழித்தும், பலத்தைக்

* வி.இ. லெனின், வெள்ளைக் கையுறை அணிந்துள்ள ''புரட்சி யாளர்கள்''.—ப-ர்.

கொண்டு அவர்களின் எதிர்ப்பை நசுக்கியும், பண்ணையடிமை முறையும் ஆசிய வகைப்பட்ட அநாகரிகமும் மானுட இழிநிலேயும் விட்டுச் சென்ற சாபக்கேடான மரபுரிமைக்கு எந்தச் சலுகையும் கொடுக்காமலும்—கணக்குத் தீர்க்க வேண்டும் என்று அவர்கள் விரும்புகிறுர்கள்.

உண்மை, இதற்குப் பொருள் நாம் 1793ம் ஆண்டைச் சேர்ந்த ஜாக்கொபின்வாதிகளேக் கட்டாயமாகக் காப்பியடிக்க வேண்டுமென்றும் அவர்களின் கருத்துக்களேயும் வேலேத்திட்டத்தையும் கோஷங்களேயும் செய்கை முறைகளேயும் இரவல் வாங்க வேண்டுமென்றும் ஆகாது. அப்படி எதுவும் கிடையாது. நம் வேலேத்திட்டம் பழையதல்ல, புதியது—ருஷ்யாவின் சமூக-ஜனநாயகத் தொழிலாளர் கட்சியின் குறைந்த பட்ச வேலேத்திட்டம்.[60] நமக்கு ஒரு புதிய கோஷமும் உண்டு: பாட்டாளி வர்க்கத்தின், விவசாயி மக்களின் புரட்சிகரமான, ஜனநாயக பூர்வமான சர்வாதிகாரம், என்று. புரட்சியின் உண்மையான வெற்றியை நம் ஆயுட்காலத்தில் காண முடியுமேயாஞல் ஒரு முழுமையான சோஷலிஸப் புரட்சிக்காக முயன்றுவரும் தொழிலாளி வர்க்கக் கட்சியின் தன்மைக்கும் குறிக்கோள்களுக்கும் பொருத்தமான புதிய செய்கைமுறைகளும் நமக்குக் கிடைக்கும். நம் உவமையைக் கொண்டு நாம் விளக்க விரும்புவது என்னவெனில் பதினெட்டாம் நூற்ருண்டின் முற்போக்கான வர்க்கமான முதலாளி வர்க்கத்தின் பிரதிநிதிகள் ஜிராண்டுவாதிகள் என்றும் ஜாக்கொபின்வாதிகள் என்றும் இரண்டு பிரிவுகளாகப் பிரிந்திருந்தது போலவே பத்தொன்பதாம் நூற்ருண்டின் முற்போக்கான வர்க்கமாகிய பாட்டாளி வர்க்கத்தின் பிரதிநிதிகள்—அதாவது, சமூக-ஜனநாயகவாதிகள்—(சந்தர்ப்பவாதிகள் என்றும் புரட்சி வழிப்பட்டவர்கள் என்றும்) இரண்டு பிரிவுகளாகப் பிரிந்துள்ளனர்.

ஜனநாயகப் புரட்சி முழு வெற்றி பெறும் போதுதான் முரணுள்ள முதலாளி வர்க்கத்தை எதிர்க்கும் போராட்டத்தில் பாட்டாளி வர்க்கத்தின் கைகள் கட்டுண்டு போகாமல் விடுபட்டு இருக்கும்; அப்போது மட்டுமே அது முதலாளித்துவ ஜனநாயகத்தில் ''கலந்து கரைந்து'' போகாமல் புரட்சி

முழுவதின் மீதும் தன்னுடைய பாட்டாளி வர்க்க முத்திரையை, சொல்லப்போனல் பாட்டாளி வர்க்க-விவசாயி மக்களின் முத்திரையைப் பதிய வைக்கும்.

சுருங்கச் சொன்னல், முரணுள்ள முதலாளித்துவ ஜனநாயகத்தை எதிர்க்கும் போராட்டத்தில் பாட்டாளி வர்க்கத்தின் கைகள் கட்டுண்டு போவதைத் தவிர்க்க வேண்டுமானல் விவசாயிமக்களுக்குப் புரட்சி உணர்வூட்டியெழுப்புவதற்கும், அதன் தாக்குதலுக்கு வழிகாட்டிச் செலுத்துவதற்கும், அதன் வழியே முரணற்ற பாட்டாளி வர்க்க ஜனநாயகத்துவத்தை நிலைநாட்டுவதற்கும் போதிய வர்க்க உணர்வும் வலிமையும் பாட்டாளி வர்க்கம் பெற்றிருக்க வேண்டும்.

முரணுள்ள முதலாளி வர்க்கத்தை எதிர்க்கும் போராட்டத்தில் நம் கைகள் கட்டுண்டு போகும் அபாயத்தைப் பற்றிய பிரச்சினையிலுள்ள விவகாரம் இதுவே. இந்தப் பிரச்சினையைப் புதிய-இஸ்க்ரா குழுவினர் மிகவும் பொருத்தமற்ற முறையில் தீர்த்து வைத்துள்ளனர். முதலாளி வர்க்கம் என்றென்றும் முரணுள்ளதாகவே இருக்கும். நிபந்தனைகளும் நோக்கங்களும் போடுவதும்* அவற்றை நிறைவேற்றினல் முதலாளித்துவ ஜனநாயகவாதியை மக்களின் உளப்பூர்வமான நண்பனுகக் கருத இடமிருக்கும் என்பதும் போல வெகுளித்தனமான, பயனற்ற விஷயம் வேறென்று கிடையாது. பாட்டாளி வர்க்கம் ஒன்றுதான் ஜனநாயகத்துவத்துக்கு முரணின்றிப் போராடும் போராளியாக இருக்கமுடியும். அதன் புரட்சிப் போராட்டத்தில் திரளான விவசாயி மக்கள் கலந்து கொண்டால்தான் அது ஜனநாயகத்துவத்துக்கு வெற்றிகரமாகப் போராடும் போராளியாக முடியும். இதற்குப் பாட்டாளி வர்க்கம் போதிய வலிமை பெற்றிராவிட்டால் முதலாளி வர்க்கம் ஜனநாயகப் புரட்சியின் தலைமையில் இருக்கும்,

---

* இப்படித்தான் ஸ்தரவேர் தம் தீர்மானத்தில் செய்ய முயன்ருர்;[61] இத்தீர்மானத்தை மூன்ருவது காங்கிரஸ் அடித்து விட்டது. மாநாடு இதே போன்ற ஒரு பலனற்ற தீர்மானத்தில் செய்ய முயல்கிறது.

அந்தப் புரட்சிக்கு ஒரு முரணுள்ள, தன்னலமுள்ள தன்மை யைக் கொடுக்கும். பாட்டாளி வர்க்க-விவசாயி மக்களின் புரட்சிகரமான-ஜனநாயக சர்வாதிகாரம் ஒன்றுதான் இதைத் தடுக்க முடியும்.

எனவே, புதிய-இஸ்க்ரா போர்த்தந்திரங்கள்தாம் அவற் றின் புறநிலைக் குறிபொருளின் மூலமாக முதலாளித்துவ ஜனநாயகவாதத்துக்குச் சாதகமாக வேலை செய்கிறது எனும் ஐயத்திற்கிடமற்ற முடிவுக்கு நாம் வந்து சேருகிறோம். பொதுக்கருத்து அறிவிப்பு எனும் அளவுக்கும் சமரசக் கோட் பாடு எனும் அளவுக்கும் கட்சி இலக்கியத்தைக் கட்சியிலிருந்து பிரித்தல் எனும் அளவுக்கும் நிறுவன ஒழுங்கமைப்பில் தெளி வற்ற நிலையைப் பற்றி பிரச்சாரம் செய்வது; ஆயுதமேந்திய எழுச்சியின் குறிக்கோள்களைச் சிறுமைப்படுத்துவது; புரட்சி கரமான பாட்டாளி வர்க்கத்தின், மற்றும் முடியரசு வழிப் பட்ட முதலாளி வர்க்கத்தினரின் அனைத்து மக்களுக்கான அரசியல் கோஷங்களை ஒன்று கலந்து குழப்புவது; ''ஜாராட்சி மீது புரட்சி நிர்ணயமான வெற்றி பெறுவதற்குரிய'' முன்தேவைகளைப் புரட்டிக் கூறுவது—மொத்தத்தில் இவை யனைத்தும் புரட்சிக் காலத்தில் வால்பிடிக்கும் கொள்கையை உண்டு பண்ணுகின்றன; இந்த வால்பிடிக்கும் கொள்கை வெற்றிக்குரிய ஒரே பாதையைச் சுட்டிக்காட்டி நாட்டு மக்களின் புரட்சிகரமான, குடியரசு வழிப்பட்ட பகுதிகள் அனைத்தையும் பாட்டாளி வர்க்கத்தின் கோஷத்தைப் பற்றி நிற்குமாறு செய்வதற்குப் பதிலாகப் பாட்டாளி வர்க்கத் தைத் தடுமாறச் செய்கிறது, அணிசிதறச் செய்கிறது, அதன் சிந்தனையைக் குழப்பிவிடுகிறது, சமூக-ஜனநாயகவாதப் போர்த்தந்திரங்களைச் சிறுமைப்படுத்துகிறது.

---

தீர்மானத்தைப் பகுத்தாய்ந்ததிலிருந்து நாம் வந்தடைந்த இந்த முடிவை மெய்ப்பிப்பதற்கு இதே பிரச்சினையை வேறு கோணங்களிலிருந்து அணுகிப் பார்ப்போம். முதலில்

சொத்ஸியால்-டெமக்ராட் எனும் ஜார்ஜியப் பத்திரிகையில் வெகுளித்தனமாகவும் வெளிப்படையாகவும் பேசும் ஒரு மென்ஷிவிக் புதிய-இஸ்க்ரா போர்த்தந்திரங்களைச் சித்திரித்து விளக்குவதைப் பார்ப்போம். இரண்டாவதாக, இன்றைய அரசியல் நிலைமையில் புதிய-இஸ்க்ரா கோஷங்களை யார் உண்மையில் பயன்படுத்தி வருகிறார்கள் என்றும் பார்ப்போம்.

## 7. "அரசாங்கத்திலிருந்து நடப்புக் காப்புவாதிகளை அகற்றுவது" பற்றிய போர்த்தந்திரங்கள்

டிஃப்ளிஸ் மென்ஷிவிக் கமிட்டிப் பத்திரிகையில் (சொத்ஸியால்-டெமக்ராட், இதழ் 1) வெளிவந்ததாக நாம் சற்றுமுன் குறிப்பிட்ட கட்டுரையின் தலைப்பு "ஜெம்ஸ்கி ஸபோரும் நம் போர்த்தந்திரங்களும்" என்பதாகும். அதை எழுதியவர் இன்னமும் நம் வேலைத்திட்டத்தை முழுக்க மறந்து விடவில்லை; அவர் குடியரசு பற்றிய கோஷத்தை முன்வைக்கிறார், ஆனால் போர்த்தந்திரங்களைப் பற்றி அவர் விவாதிப்பது பின்வருமாறு:

"இந்தக் குறிக்கோளை (குடியரசை) சாதிப்பதற்கு இரண்டு வழிகளைச் சுட்டிக் காட்டுவது சாத்தியம்: ஒன்று, அரசாங்கம் கூட்டி வரும் ஜெம்ஸ்கி ஸபோரை முற்றாகப் புறக்கணித்துவிட்டு, ஆயுதச் சக்தியைக் கொண்டு அரசாங்கத்தைத் தோற்கடித்து ஒரு புரட்சிகரமான அரசாங்கத்தை அமைத்து அரசியல் நிர்ணய சபையைக் கூட்டுவது; அல்லது, ஜெம்ஸ்கி ஸபோர் நம் செய்கைக்குரிய மையமாக அறிவிப்பது, ஆயுதச் சக்தியைக் கொண்டு அதன் அமைவு மீதும் நடவடிக்கைகள் மீதும் செல்வாக்கு செலுத்துவது, தன்னையே அரசியல் நிர்ணய சபையாகப் பிரகடனப்படுத்திக் கொள்ளும்படியோ அதன் மூலமாக அரசியல் நிர்ணய சபையைக் கூட்டும்படியோ அதைப் பலவந்தமாகக் கட்டாயப்படுத்துவது. இவ்விரு போர்த்தந்திரங்கள் ஒன்றுக்கொன்று தீவிரமாக வேறுபட்டவை. இவற்றில் எது நமக்கு மேலும் அனுகூலமானது என்று பார்ப்போம்."

இப்படித்தான் ருஷ்யப் புதிய-இஸ்க்ராவாதிகள் தம் கருத்துக்களை வைக்கின்றனர், நாம் பகுத்தாய்ந்த தீர்மானத்தில் இக்கருத்துக்களைப் பின்னுல் இணைத்துவிட்டிருக்கிறுர்கள். இது ஸுஷிமா[62] போருக்கு முன், புலீகின் ''திட்டம்'' வெளிவருவதற்குமுன் எழுதப்பட்டது என்பதைக் கவனியுங்கள். மிதவாதிகள்கூட பொறுமை இழந்தவர்களாய் சட்டபூர்வமான பத்திரிகைகளில் தம்முடைய அவநம்பிக்கையை வெளிப்படுத்தி வந்தனர். ஆனுல் புதிய-இஸ்க்ரா வகைப்பட்ட சமூக-ஜனநாயகவாதி மிதவாதிகளைவிட ஏமாளி என்று காட்டிக் கொண்டிருக்கிறுர். ஜெம்ஸ்கி ஸபோர் ''கூட்டப்பட்டுவருகிறது'' என்று அறிவிக்கிறுர், இன்னமும் பிறக்காமலேயிருக்கும் இந்த ஜெம்ஸ்கி ஸபோரை (அல்லது, ''அரசாங்க டூமாவாகவோ'', ''ஆலோசனை கூறும் பொறுப்பு மட்டுமுள்ள சட்ட மன்றமாகவோ'' இருக்கக் கூடுமா?) நம் செய்கைக்குரிய மையமாக வைத்துக் கொள்ளலாம் என்று முன்மொழிகிற அளவுக்கு ஜார் மன்னனை நம்பிக் கொண்டிருக்கிறுர். மாநாட்டில் நிறைவேற்றப்பட்ட தீர்மானத்தை எழுதியவர்களைவிட இவர் வெளிப்படையாகவும் நேராகவும் பேசுகிறவராக இருக்கிறதினுல் நம் டிஃப்ளிஸ்வாசி இரண்டு ''போர்த்தந்திரங்களையும்''(அவற்றை ஈடிணையற்ற வெகுளித்தனத்துடன் விளக்கவும் செய்கிறுர்) சமநிலையில் வைக்காமல் அவற்றில் இரண்டாவது போர்த்தந்திரம் ''மேலும் அனுகூலமானது'' என்று கூறுகிறுர். சற்றுக் கேளுங்கள்:

''முதல் போர்த்தந்திரம். வரப்போகும் புரட்சி ஒரு முதலாளித்துவப் புரட்சி என்பதை நீங்கள் அறிவீர்கள்; அதாவது, பாட்டாளி வர்க்கம் மட்டுமின்றி முதலாளித்துவச் சமுதாயம் முழுவதும் அக்கறை கொண்டுள்ள மாற்றங்களை இந்த அமைப்பு முறையில் செய்து முடிப்பதே அதன் நோக்கம். முதலாளிகள் உட்பட எல்லா வர்க்கங்களும் அரசாங்கத்துக்கு எதிராக உள்ளன. ஓர் அர்த்தத்தில், போராடும் பாட்டாளி வர்க்கமும் போராடும் முதலாளி வர்க்கமும் சம நடை போட்டுச் செல்கின்றன, வெவ்வேறு பக்கங்களிலிருந்து கூட்டாக எதேச்சாதிகார முறையைத் தாக்கி வருகின்றன. அரசாங்கம் அறவே தனிமைப்பட்டிருக்கிறது, மக்களின் அனுதாபம் இன்றி நிற்கிறது. எனவே அதை ஒழிப்

பது மிகவும் சுலபம். மொத்தத்தில் பார்த்தால் ருஷ்யாவிலுள்ள பாட்டாளி வர்க்கம் தன் பலத்தைக் கொண்டு மட்டும் புரட்சியைச் செய்து முடிப்பதற்குப் போதிய வர்க்க உணர்வும் நிறுவன அமைப்பும் இன்னமும் பெற்றிருக்கவில்லே. அப்படிச் செய்ய முடிகிறதாக வைத்துக் கொண்டாலுங்கூட அது ஒரு பாட்டாளி வர்க்க (சோஷலிஸப்) புரட்சியைத்தான் செய்து முடிக்குமே தவிர முதலாளித்துவப் புரட்சியைச் செய்து முடிக்காது. எனவே, அரசாங்கம் நேச சக்திகள் இன்றி நிற்பதும், எதிர்த்தரப்பைப் பிரித்துவிட்டு முதலாளி வர்க்கத்தோடு கைகோத்துக் கொண்டு பாட்டாளி வர்க்கத்தைத் தனிமையில் விட்டுவிட முடியாத நிலேயில் இருப்பதும் நம் நலனுக்குகந்ததாகும்....''

ஆக, முதலாளி வர்க்கத்தையும் பாட்டாளி வர்க்கத்தையும் ஜார் அரசாங்கம் பிரிக்க முடியாமலிருப்பது பாட்டாளி வர்க்கத்தின் நலன்களுக்கு உகந்தது! இந்த ஜார்ஜியப் பத்திரிகையை ஒஸ்வபஷ்தேனியே என்று அழைக்காமல் தவறுதலாகத்தான் சொத்ஸியால்-டெமக்ராட் என்று அழைக்கிறார்கள், இல்லேயா? ஜனநாயகப் புரட்சியைப் பற்றிய அதன் நிகரற்ற தத்துவஞானத்தையும் கவனியுங்கள்! ''முதலாளித்துவப் புரட்சி'' எனும் வகையினத்தின் ஏட்டுப் புலமை வகைப்பட்ட, வால்பிடிக்கும் போக்குள்ள வியாக்கியானத்திலே இந்த அப்பாவி டிஃப்ளிஸ்வாசி அப்படியே குழம்பிப் போயிருக்கிறார் என்பது வெளிப்படையல்லவா? ஜனநாயகப் புரட்சியில் பாட்டாளி வர்க்கம் தனிமைப்பட்டுவிடுவதின் சாத்தியப்பாடு பற்றிய பிரச்சினேயைக் குறித்து இவர் விவாதிக்கையில் ஒரு அற்ப விஷயத்தை... விவசாயி மக்கள் எனும் அற்ப விஷயத்தை... மறந்துவிட்டு விவாதிக்கிறார்! பாட்டாளி வர்க்கத்துக்குக் கிடைக்க வாய்ப்புள்ள நேச சக்திகளில் அவருக்குத் தெரிந்திருப்பதும் அவர் விரும்புவதும் ஜெம்ஸ்துவோ நிலப்பிரபுக்களே, விவசாயிகள் இருப்பதாக அவருக்குத் தெரியவில்லே. அதுவும் காக்கஸஸில் இருந்துகொண்டு இப்படிச் செய்கிறார்! இருக்கட்டும், புரட்சிகரமான விவசாயி மக்களேத் தம் நேச சக்தி எனும் தரத்துக்கு உயர்த்துவதற்குப் பதிலாக முடியரசுவாத முதலாளி வர்க்கத்தினரின் தரத்துக்குப் புதிய-இஸ்க்ரா தன் வாதத்தில் தாழ்ந்து வருகிறது என்று நாம் சொன்னது சரிதானே?

''...இல்லையேல் பாட்டாளி வர்க்கத்தின் தோல்வியும் அரசாங்கத்தின் வெற்றியும் தவிர்க்க முடியாததாகும். இதற்குத்தான் எதேச்சாதிகார ஆட்சி முயன்று வருகிறது. அது தன்னுடைய ஜெம்ஸ்கி ஸபோரில் பிரபுவம்சத்தினரை யும், ஜெம்ஸ்துவோக்கள், நகரங்கள், பல்கலைக்கழகங்கள், இன்னும் இவைபோன்ற முதலாளி வர்க்க நிறுவனங்களின் பிரதிநிதிகளையும் தன் பக்கம் ஈர்த்துக் கொள்வதில் ஐய மில்லை. அற்பச் சலுகைகளைக் கொடுத்து அவர்களைத் திருப் திப்படுத்தி அதன் வழியே தன்னோடு சமரசமாகப் போய்விடும் படி செய்ய முயற்சிக்கும். இவ்வாறு தன்னைப் பலப்படுத்திக் கொண்டபின், தனிமைப்படுத்தப்பட்டுவிட்ட உழைப்பாளி மக்கள் மீது தன்னுடைய தாக்குதல்கள் அனைத்தையும் செலுத்தும். இந்தத் துரதிர்ஷ்டமான முடிவைத் தவிர்ப்பது நம் கடமை. ஆனால் முதல் வழியில் இதைச் செய்ய முடியுமா? ஜெம்ஸ்கி ஸபோர் மீது நாம் சிறிதும் கவனம் செலுத்தாமல் நாமாகவே புரட்சியெழுச்சிக்குத் தயாரிக்கத் தொடங்கிவிட்டு ஒரு நல்ல நாளில் ஆயுதமேந்திப் போருக் குத் தயாராகித் தெருக்களில் இறங்கிவிட்டோம் என்று வைத்துக் கொள்வோம். விளைவு என்னவாகும் என்றால், ஒரு பகைவனுக்குப் பதிலாக அரசாங்கம், ஜெம்ஸ்கி ஸபோர் எனும் இரண்டு பகைவர்கள் நம் எதிரே நிற்பார்கள். நாம் தயார்படுத்திக் கொண்டிருந்த காலத்தில் அவர்கள் தம் மிடையே பேரம் பேசி முடித்துக் கொள்ளவும் ஒருவரோடு ஒருவர் உடன்பாடு செய்து கொள்ளவும் தங்களுக்குச் சாதக மான அரசியல் சட்டத்தைத் தயாரித்துக் கொள்ளவும் தம் மிடையே அதிகாரத்தைப் பங்கிட்டுக் கொள்ளவும் முடியும். இந்தப் போர்த்தந்திரம் அரசாங்கத்துக்கு நேரடியாக அனுகூலம் அளிப்பதாக இருக்கிறது, இதை நாம் மிகவும் உறுதியாக நிராகரிக்க வேண்டும்...''

இது நேரடியான பேச்சுதான்! ஆக நாம் புரட்சியெழுச் சிக்குத் தயாரிக்கும் ''போர்த்தந்திரங்களை'' உறுதியாக நிராகரிக்க வேண்டும், ஏனெனில் ''அதற்கிடையில்'' அர சாங்கம் முதலாளி வர்க்கத்தோடு பேரம் பேசி முடித்து விடுமாம். புரட்சிகரமான சமூக-ஜனநாயகவாதத்துக்கு இதைப் போல் ஓர் அவமானத்தை மிகமிக வெறித்தனமான ''பொருளாதாரவாதத்தின்'' பழைய இலக்கியத்தில் காண முடியுமா? தொழிலாளிகளின், விவசாயிகளின் புரட்சி யெழுச்சிகளும் கலகங்களும் இங்கு ஒரு சமயமும் அங்கு ஒரு

சமயமுமாக நடந்து வருவது உண்மை. ஆனால் ஜெம்ஸ்கி ஸபோர் என்பது புலீகின் கொடுத்த ஒரு வீண் வாக்குறுதியே. அப்படியிருக்க, புரட்சியெழுச்சியைத் தயாரிக்கும் போர்த்தந்திரத்தை நிராகரிக்க வேண்டும், ஜெம்ஸ்கிஸபோர் எனும் ''செய்கைக்குரிய மையத்துக்காகக்'' காத்திருக்க வேண்டும் என்று டிஃப்ளிஸ் நகரத்து சொத்ஸியால்-டெமக்ராட் தீர்மானிக்கிறது....

''....இதற்கு மாறாக, இரண்டாம் போர்த்தந்திரம் என்பது ஜெம்ஸ்கி ஸபோரை நம் மேற்பார்வையின் கீழ் கொண்டுவருவதாகும், அது தன் சித்தப்படி செயலாற்றவும் அரசாங்கத்தோடு உடன்பாடு செய்து கொள்ளவும் வாய்ப்பளிக்காமல் இருப்பதாகும்.*

''ஜெம்ஸ்கி ஸபோர் எந்த அளவுக்கு எதேச்சாதிகார முறையை எதிர்த்துப் போராடுகிறதோ அந்த அளவுக்கு அதை நாம் ஆதரிக்கிறோம், அது எதேச்சாதிகார முறையுடன் சமரசப்பட்டுப் போகும் போதெல்லாம் அதை எதிர்த்து நாம் போராடுகிறோம். உறுதியான குறுக்கீடு மூலமாகவும் பலத்தின் மூலமாகவும் நாம் பிரதிநிதிகளிடையே பிளவு உண்டாக்குவோம்,** தீவிரவாதிகளை நம் பக்கம் கொண்டு வந்துவிடுவோம், அரசாங்கத்திலிருந்து நடப்புக் காப்புவாதிகளை நீக்கிவிடுவோம், இவ்வாறு ஜெம்ஸ்கி ஸபோர் முழுவதையும் புரட்சிப் பாதையில் செலுத்திவிடுவோம். இப்படிப்பட்ட போர்த்தந்திரங்களின் விளைவாக, அரசாங்கம் என்றென்றும் தனிமைப்பட்டு நிற்கும், எதிர்த்தரப்பு வலுவோடு இருக்கும், இதன் வழியாக ஒரு ஜனநாயக அமைப்பு முறையை நிறுவுவதற்கும் வசதி கிடைத்ததாயிருக்கும்.''

---

* ஜெம்ஸ்துவோ நபர்களின் சித்தத்தை அவர்களிடமிருந்து அகற்றுவதற்குரிய சாதனம் என்ன? ஒருவேளை, தனி வகைப்பட்ட ஒரு லிட்மஸ் காகிதத்தைப் பயன்படுத்தியா?

** அட கடவுளே, இது உண்மையிலே போர்த்தந்திரங்களை ''ஆழ்ந்தபொருள்'' உள்ளதாகச் செய்வதாகும்! தெருக்களில் போராட்டம் நடத்துவதற்கு ஆளோ வசதிகளோ கிடையாதாம், ஆனால் ''பலத்தின் மூலமாகப்'' ''பிரதிநிதிகளிடையே பிளவு உண்டாக்குவது'' சாத்தியமாம். டிஃப்ளிஸ் தோழரே, சற்றுக் கேளும்: புளுகித் தீரவேண்டுமானால் புளுகுங்கள், ஆனால் அதற்கும் ஒரு வரம்பு இருக்கிறது....

சரி, சரி! புதிய-இஸ்க்ராவாதிகள் ''பொருளாதாரவாதத்தின்'' மிகக் கொச்சையான சாயலின் பக்கம் திரும்பியிருப்பதை நாம் மிகைப்படுத்துவதாக இப்போது யாராவது சொல்லட்டும், பார்க்கலாம்! ஈவைக் கொல்வதற்கான பிரசித்தி பெற்ற பொடி ஒன்று உண்டே, அதுபோலத்தான் இது. முதலில் ஈயைப் பிடிக்க வேண்டியது, பிறகு அதன் மீது பொடியைப் போடவேண்டியது, அப்புறம் ஈ செத்துவிடுமாம். பலத்தைக் கொண்டு ஜெம்ஸ்கி ஸபோர் உறுப்பினர்களிடையே பிளவு உண்டாக்குவதாம், ''அரசாங்கத்திலிருந்து நடப்புக்காப்புவாதிகளை நீக்கிவிடுவதாம்'' — ஜெம்ஸ்கி ஸபோர் முழுவதும் புரட்சிப் பாதையில் இறங்கிவிடுமாம்.... ''ஜாக்கொபின்'' வழிப்பட்ட எந்த விதமான புரட்சியெழுச்சியும் தேவையில்லை. நயமாக, அநேகமாக நாடாளுமன்ற பாணியிலே, ஜெம்ஸ்கி ஸபோர் உறுப்பினர்களை ''வசப்படுத்துவது'', அவ்வளவேதான்.

பாவம், ருஷ்யா! ஐரோப்பா எடுத்தெறிந்துவிட்ட பழைய பாணி குல்லாய்களைத்தான் எப்போதும் ருஷ்யா அணிகிறதாகச் சொல்வதுண்டு. நம்மிடம் இன்னும் நாடாளுமன்றம் எதுவும் கிடையாது, அப்படி எதையும் கொடுக்கப் போவதாக இன்னும் புலீகின்கூட வாக்களிக்கவில்லை. அதற்குள் நாடாளுமன்ற மூடத்தனத்துக்கு[63] நம்மிடையே குறைச்சலில்லை.

''...இந்தத் தலையீட்டை எப்படி நிகழ்த்துவது? முதலில் சமநிலையில் எல்லோருக்கும் வாக்குரிமை, இரகசிய வாக்குப் பதிவு மூலமாக நேரடியான தேர்தல்கள் எனும் அடிப்படையில் ஜெம்ஸ்கி ஸபோர் கூட்டப்பட வேண்டும் என்று நாம் கோருவோம். இந்தத் தேர்தல் செயல்முறையை அறிவிக்கிற* அதே நேரத்தில் தேர்தல் இயக்கத்தை நடத்துவதற்கான முழுச் சுதந்தரமும் — அதாவது, கூட்டம் கூடும் உரிமை, பேச்சுரிமை, எழுத்துரிமை, வாக்காளர்களின், வேட்பாளர்களின் சட்டப் பாதுகாப்பு, அரசியல் கைதிகள் அனைவருக்கும் விடுதலை—சட்டமாக்கப்பட வேண்டும்.** மக்களுக்கு

* இஸ்க்ரா பத்திரிகையிலா?
** யார் செய்வது, நிக்கலாய் மன்னனு?

விஷயங்களைச் சொல்லித் தயார்படுத்துவதற்கு நமக்குப் போதியநேரம் கிடைப்பதற்காகத் தேர்தல் நாளைக் கூடுமான வரை தள்ளி நிர்ணயிக்க வேண்டும். ஸபோரைக் கூட்டுவதற்கான விதிமுறைகளைத் தயாரிப்பது உள்துறை அமைச்சர் புலீகின் தலைமையிலுள்ள கமிஷனிடம் ஒப்படைக்கப் பட்டிருப்பதால் நாமும் அந்தக் கமிஷன் மீதும் அதன் உறுப்பினர்கள் மீதும் நிர்ப்பந்தம் கொண்டுவர வேண்டும்.* புலீகின் கமிஷன் நம்கோரிக்கைகளை நிறைவேற்ற மறுக்குமேயானால்,** சொத்து உடைமையாளர்களுக்கு மட்டும் வாக்குரிமை அளிக்குமேயானல், நாம் இந்தத் தேர்தல்களில் தலையிட்டுப் புரட்சிகரமான சாதனங்களின் மூலமாக முற்போக்கான வேட்பாளர்களை மக்கள் தேர்ந்தெடுக்குமாறு செய்து ஜெம்ஸ்கி ஸபோரில் ஓர் அரசியல் நிர்ணய சபையைக் கூட்டும்படி கோர வேண்டும். கடைசியாக, சாத்தியமான எல்லா நடவடிக்கைகளின் மூலமாக — ஆர்ப்பாட்டங்கள், வேலைநிறுத்தங்கள், அவசியப்பட்டால் புரட்சியெழுச்சி மூலமாகக்கூட—அரசியல் நிர்ணய சபையைக் கூட்டும்படியோ தன்னையே அரசியல் நிர்ணய சபையாகப் பிரகடனப்படுத்திக் கொள்ளும்படியோ நாம் ஜெம்ஸ்கி ஸபோரை நிர்ப்பந்திக்க வேண்டும். ஆயுதமேந்திய பாட்டாளி வர்க்கம் அந்த அரசியல் நிர்ணய சபைக்குப் பாதுகாப்பாளனுக இருந்து, அவை இரண்டும் சேர்ந்து*** ஒரு ஜனநாயகக் குடியரசை நோக்கி முன்னேறும்.

''இதுவே சமூக-ஜனநாயகப் போர்த்தந்திரம், இது ஒன்றே நமக்கு வெற்றி தரும்.''

புதிய-இஸ்க்ராவின் யாரோ ஒரு கற்றுக்குட்டி எழுத்தாளர், பொறுப்போ செல்வாக்கோ இல்லாத ஆசாமி, இந்த நம்பவொண்ணுத முட்டாள்தனத்தை எழுதுகிறதாக வாசகர் நினைக்க வேண்டாம். இல்லை, புதிய-இஸ்க்ரா குழுவினரின் ஒரு முழுக் கமிட்டியின், டிஃப்ளிஸ் கமிட்டியின், பத்திரிகையில் இது சொல்லப்படுகிறது. இது மட்டுமல்ல. இந்த முட்டாள்

* அப்படியா, ''அரசாங்கத்திலிருந்து நடப்புக்காப்புவாதிகளை நீக்குவது'' எனும் போர்த்தந்திரத்தின் அர்த்தம் இது தானு?

** இந்தப் பொருளாழமுள்ள, சரியான போர்த்தந்திரத்தை நாம் பின்பற்றினுல் நிச்சயமாக இப்படியொன்றும் நடக்க முடியாதே!

*** ஆயுதமேந்திய பாட்டாளி வர்க்கமும் ''அரசாங்கத்திலிருந்து நீக்கப்பட்ட'' நடப்புக்காப்புவாதிகளும் சேர்ந்தா?

தனத்தை ''இஸ்க்ரா'' பகிரங்கமாக ஆதரித்து உறுதிப்படுத்தியிருக்கிறது. அதன் இதழ் 100ல் சொத்ஸியால்-டெமக்ராட் பத்திரிகையின் அந்த இதழைப் பற்றிப் பின்வருமாறு எழுதப்பட்டிருக்கிறது:

''துடிப்பும் ஆற்றலும் உள்ள முறையில் முதல் இதழ் சரி பார்க்கப்பட்டுள்ளது. திறமையுள்ள ஆசிரியரின், எழுத்தாளரின் அனுபவமிக்க கைவேலை செய்வது தெரிகிறது.... இந்தப் பத்திரிகை தான் எடுத்துக் கொண்ட பணியைச் சிறப்பாகச் செய்து முடிக்கும் என்று முழு நம்பிக்கையோடு சொல்லலாம்.''

உண்மைதான்! புதிய-இஸ்க்ரா போக்கின் முழுச் சித்தாந்தச் சீரழிவை எல்லோருக்கும் தெளிவாகப் புலப்படுத்துவதுதான் பணி என்றால் அந்தப் பணியை அது ''சிறப்பாகத்தான்'' செய்து முடித்திருக்கிறது. மிதவாத-முதலாளித்துவச் சந்தர்ப்பவாதத்துக்குப் புதிய-இஸ்க்ரா தாழ்ந்துவிட்டுள்ள நிலையை இதைவிட மேலான ''துடிப்பும் ஆற்றலும் திறமையும்'' உள்ள முறையில் யாராலும் வெளியிட்டிருக்க முடியாதுதான்.

## 8. ''ஒஸ்வபஷ்தேனியே'' போக்கும் புதிய-''இஸ்க்ரா'' போக்கும்

புதிய-இஸ்க்ரா போக்கின் அரசியல் குறிபொருளை எடுப்பாக உறுதிப்படுத்தும் மற்றொன்றை இப்போது கவனிப்போம்.

''தன்னைக் கண்டு கொள்வது எப்படி?'' என்று தலைப்புள்ள ஒரு நேர்த்தியான, குறிப்பிடத்தக்க, மிகவும் அறிவூட்டத்தக்க கட்டுரையில் (ஒஸ்வபஷ்தேனியே, இதழ் 71) திரு. ஸ்துரூவே நம்முடைய தீவிரமான கட்சிகளின் ''வேலைத் திட்டப் புரட்சிவாதத்தை'' எதிர்த்துப் போர் புரிகிறார். திரு. ஸ்துரூவேயுக்கு என் மீது குறிப்பாகக் கோபம்.* என்னைப் பொருத்தவரை, இதற்குமேல் திரு. ஸ்துரூவே எனக்கு

* ''திரு. லெனினுடைய, அவரது கூட்டாளிகளுடைய புரட்சிவாதத்தோடு ஒப்புநோக்கும் போது பெபெலையும், காவுத்ஸ்கியையுங்கூடச் சேர்ந்த மேற்கு ஐரோப்பிய சமூக-ஜனநாயகவாதத்தின் புரட்சிவாதம் சந்தர்ப்பவாதமேயாகும்.

மகிழ்ச்சியளித்திருக்க முடியாது. புதிய-இஸ்க்ரா குழுவினரின் மறுவுயிர்ப்பு கொண்ட ''பொருளாதாரவாதத்தையும்'' ''சோஷலிஸ்டு-புரட்சியாளர்கள்'' வெளிப்படுத்தும் கோட்

---

எனினும் ஏற்கெனவே மட்டுப்படுத்தப்பட்டுள்ள இந்தப் புரட்சிவாதத்தின் அடித்தளங்களையுங்கூட வரலாறு அரித்து அடித்துச் சென்றுவிட்டது''. கடுங்கோபமான தாக்கு இது. ஆனால் ஒன்று: இறந்தவர் மீது பழி சுமத்துவது போல் என் மீதும் எல்லாப் பழியையும் சுமத்த முடியும் என்று திரு. ஸ்து ரூவே நினைப்பது வீணாகும். பின்வரும் கேள்விகளுக்குப் பதில் கொடுக்கும்படி மட்டும் திரு. ஸ்துரூவேயுக்குச் சவால் விடு கிறேன் (அப்படிப்பட்ட சவாலை அவர் ஏற்கவே மாட்டார் என்பது உறுதி).''பெபெலுடைய, காவுத்ஸ்கியுடைய புரட்சி வாதம்'' சந்தர்ப்பவாதமே என்று நான் எப்போது எங்கே சொன்னேன்? பெபெல், காவுத்ஸ்கி போக்குடன் முற்றொரு மைப்பட்டிராத எவ்விதமான தனிப் போக்கையும் நான் சர்வதேசச் சமூக-ஜனநாயகவாதத்திலே படைத்துள்ளதாக எப்போது எங்கே சொல்லியிருக்கிறேன்? பிரெஸ்லாவில் நிலப் பிரச்சினையில் (எடுத்துக்காட்டுக்காகச் சொல்கிறேன்) பெபெலுக்கும் காவுத்ஸ்கிக்கும் இடையே எழுந்த தீவிரமான கருத்து வேற்றுமைகளுக்குச்[64] சிறிதேனும் இணையாக எனக்கும் பெபெல் காவுத்ஸ்கி தரப்புக்கும் இடையே கருத்து வேற்றுமைகள் எப்போது எங்கே வெளிப்படுத்தப்பட்டன? இந்த மூன்று கேள்விகளுக்கும் திரு. ஸ்துரூவே பதிலளிக்க முயற்சிக்கட்டும்.

வாசகர்களுக்குச் சொல்கிறோம்: மிதவாத முதலாளி வர்க்கத்தினர் ஒரு நாட்டைச் சேர்ந்த தன்னுடைய ஆதர வாளர்களிடம் அந்த நாட்டுச் சமூக-ஜனநாயகவாதிகள் அறிவில்லாதவர்கள் என்றும் அண்டை நாட்டிலுள்ள அவர் களின் தோழர்கள் ''நல்ல பிள்ளைகள்'' என்றும் உறுதி கூறும் வழிமுறையை எங்கும் எப்போதும் கைக்கொள்கின்ற னர். நூற்றுக் கணக்கான தடவைகளில் ஜெர்மன் முதலாளி வர்க்கம் ''நல்ல பிள்ளைகளான'' பிரெஞ்சு சோஷலிஸ்டுகளை முன்மாதிரியாக பெபெல் காவுத்ஸ்கி கூட்டத்தாருக்கு உயர்த்திக் காட்டியிருக்கிறது. மிக அண்மையில் பிரெஞ்சு முதலாளி வர்க்கம் ''நல்ல பிள்ளையான'' பெபெலை பிரெஞ்சு சோஷலிஸ்டுகளுக்கு முன்மாதிரியாகக் காட்டியிருக்கிறது. திரு.ஸ்துரூவே, இது ஒரு பழைய தந்திரம்! இப்படிப்பட்ட தூண்டிலில் குழந்தைகளும் அறிவிலிகளும் மட்டுமே விழக் காண்பீர்கள். வேலைத்திட்டம், போர்த்தந்திரங்கள் சம்பந்தப்

பாடின்மையையும் எதிர்த்து நடக்கும் போராட்டத்தில் அவரைவிட மேலான நேச சக்தியை நான் விரும்பியிருக்கவும் முடியாது. வேறு ஒரு சந்தர்ப்பத்தில் திரு. ஸ்துருவேயும் ஒஸ்வபஷ்தேனியேயும் சோஷலிஸ்டு-புரட்சியாளர்களின் நகல் வேலைத்திட்டத்தில் மார்க்ஸியத்திற்குச் செய்துள்ள ''திருத்தங்கள்'' முற்றிலும் பிற்போக்கானவை என்று நடைமுறையில் நிரூபித்திருப்பதைப் பற்றிச் சொல்வோம். திரு. ஸ்துருவே புதிய-இஸ்க்ராவின் போக்கைக் கோட்பாடு ரீதியிலே அங்கீகரிக்கிற போதெல்லாம் அவர் எனக்குச் செய்துள்ள நேர்மையான, விசுவாசமிக்க, உண்மையான சேவையைப் பற்றி நாம் ஏற்கெனவே அடிக்கடி பேசியிருக்கிறோம்,* அதைப் பற்றி மீண்டும் ஒரு தடவை இப்போது பேசுவோம்.

---

பட்ட எல்லா முக்கியமான பிரச்சினைகளிலும் சர்வதேசப் புரட்சிகர சமூக-ஜனநாயகவாதம் முற்றாக ஒருமனப்பட்டு நிற்பது சிறிதும் மறுக்க முடியாத உண்மையாகும்.

* **என்ன செய்யக் கூடாது** எனும் (**இஸ்க்ரா**, இதழ் 52) கட்டுரையைச் சந்தர்ப்பவாதிகளுக்குச் சலுகைகள் அளிக்கும் திசையில் ஒரு ''குறிக்கத்தக்க திருப்பம்'' என்று **ஒஸ்வபஷ்தேனியே** ஆரவாரத்துடன் போற்றி வரவேற்றதை வாசகருக்கு நினைவூட்டுகிறோம். ருஷ்யாவின் சமூக-ஜனநாயகவாதிகளிடையேயுள்ள பிளவு பற்றிய ஒரு கட்டுரையில் புதிய-**இஸ்க்ரா** கருத்துக்களுக்கு அடிப்படையாயுள்ள கோட்பாடுகளை **ஒஸ்வபஷ்தேனியே** குறிப்பாகப் புகழ்ந்தது. **நம் அரசியல் பணிகள்** எனும் திரோத்ஸ்கியின் குறுநூலைப் பற்றி **ஒஸ்வபஷ்தேனியே** அந்த ஆசிரியரின் கருத்துக்களுக்கும் கிரிச்சேவ்ஸ்கி, மர்த்தீனவ், அக்கீமவ் ஆகிய **ரபோச்சியே தேலோ** ஆதரவாளர்கள் ஒரு காலத்தில் எழுதியும் பேசியும் வந்த கருத்துக்களுக்கும் இடையேயுள்ள ஒற்றுமையைக் குறித்துக் காட்டியது (**வ்பெரியோத்** வெளியிட்ட **உதவப்பிரியமுள்ள மிதவாதி** என்று தலைப்பிட்ட துண்டுப்பிரசுரத்தைப் பார்க்க). இரண்டு சர்வாதிகாரங்களைப் பற்றி மர்த்தீனவ் எழுதிய குறுநூலை **ஒஸ்வபஷ்தைனியே** வரவேற்றது (**வ்பெரியோத்**, இதழ் 9ல் வெளியான கட்டுரையைப் பார்க்க). கடைசியாக, ''வேறுபடுத்திக் காட்டும் எல்லைக் கோட்டை முதலில் போட்டுவிட்டுப் பிறகு ஒன்றுபடுவோம்'' என்கிற பழைய **இஸ்க்ரா**வின் பழைய கோஷத்தைப் பற்றி ஸ்தரவேர் காலங்கடந்து தெரிவித்த முறையீடுகளுக்கு **ஒஸ்வபஷ்தேனியே**யிடமிருந்து குறிப்பான அனுதாபம் கிடைத்தது.

திரு. ஸ்துரூவே கட்டுரையில் மிகவும் சுவையான பல கருத்துரைகள் உள்ளன; அவற்றைப் போகிற போக்கிலே தான் இங்கே நாம் குறிக்க முடியும். அவர் ''வர்க்கப் போராட்டத்தின் அடிப்படையில் அல்லாமல் வர்க்க ஒத்துழைப்பு அடிப்படையில் ருஷ்ய ஜனநாயகத்தைப் படைக்க'' எண்ணங் கொண்டிருக்கிறார், அப்படி நேர்ந்தால் ''சமுதாயரீதியிலே சிறப்புரிமை பெற்ற படிப்பாளிப் பகுதி'' (உண்மையான உயர்குடி.... ஏவலாளின் ஒயிலுடன் திரு. ஸ்துரூவே மண்டியிட்டு வணங்கும் ''அறிவொளி படைத்த பிரபு வம்சம்'' போன்றது இது) இந்த ''வர்க்கச் சார்பற்ற'' கட்சிக்குத் ''தன்னுடைய சமுதாய நிலையின் செல்வாக்கை'' (தன்னுடைய பணமூட்டைகளின் செல்வாக்கை) கொணர்ந்து கொடுக்குமாம். ''முதலாளி வர்க்கம் பயந்துபோயிருக்கிறது, பாட்டாளி வர்க்கத்தையும் சுதந்தர இலட்சியத்தையும் காட்டிக் கொடுத்துவிட்டது எனும் பழக்கத்தால் நலிந்த தீவிரவாதக் கருத்தின்'' பயனின்மையைத் திரு. ஸ்துரூவே இளைஞர்களுக்குத் தெரிவிக்க விரும்புகிறாராம். (இந்த விருப்பத்தை மனதார வரவேற்கிறோம். மார்க்ஸியத்தின் இந்தப் ''பழக்கத்தால் நலிந்த கருத்து'' சரி என்பதை அதை எதிர்த்து திரு. ஸ்துரூவே நடத்தும் போராட்டத்தைப் போல் வேறு எதுவும் நேர்த்தியாக உறுதிப்படுத்த முடியாது. திரு. ஸ்துரூவே, தயை செய்து உங்களுடைய இந்த அருமையான திட்டத்தை ஒத்திப்போடாதீர்கள்!)

ருஷ்யாவின் முதலாளி வர்க்கத்தின் இந்த அரசியல் உணர்வு நுட்பமிக்க பிரதிநிதி (வெப்பதட்ப நிலையில் அற்பமான மாற்றத்தையும்கூட அறிந்து நடக்கிறவர் இவர்) இன்று எதிர்த்துப் போராடும் நடைமுறைக் கோஷங்களைக் குறித்துக் கொள்வது நாம் எடுத்துக் கொண்டுள்ள விஷயத்தின் நோக்கங்களுக்கு முக்கியமாகும். முதன்முதலாக, குடியரசுவாதக் கோஷத்தை எதிர்த்து அவர் போராடிக் கொண்டிருக்கிறார். இந்தக் கோஷம் ''திரளான மக்களுக்குப் புரியாதது, புறம்பானது'' என்று திரு. ஸ்துரூவே திடமாக நம்புகிறார் (முதலாளி வர்க்கத்துக்குப் புரியக் கூடியதுதான், ஆனால் அனுகூலமானதல்ல என்று சேர்த்துச் சொல்ல மறந்து விட்டார்).

நம்முடைய வட்டங்களுக்கும் பொதுக் கூட்டங்களுக்கும் வரும் தொழிலாளிகளிடமிருந்து திரு. ஸ்துரூவேயுக்கு என்ன பதில் கிடைக்கும் என்று பார்க்க விரும்புகிறோம். அல்லது, ஒருக்கால் தொழிலாளிகள் மக்களல்லவோ? மேலும், விவசாயிகளின் சங்கதி என்ன? திரு. ஸ்துரூவே சொல்லும் ''வெகுளித்தனமான குடியரசுவாதத்துக்கு'' (''ஜார் மன்னனை வெளியேற்றுவது'') அவர்கள் சில சமயம் ஆட்படுகிறார்கள்—என்றபோதிலும், **வெகுளித்தனமான** குடியரசுவாதத்துக்குப் பதிலாக உணர்வு பூர்வமான குடியரசுவாதம் வரும் என்று நினைக்காமல் உணர்வு பூர்வமான முடியரசுவாதம் வரும் என்று மிதவாத முதலாளி வர்க்கத்தினர் நம்புகிறார்கள்! Ça dépend, அது சூழ்நிலைமைகளைப் பொருத்திருக்கும், ஸ்துரூவே அவர்களே! நிலப்பிரபுக்களின் நிலங்கள் பாதிக்கப்படும் வழியில் விவசாயிகளின் நிலையில் தீவிரமான மேம்பாடு ஏற்படுத்துவதை ஒருங்கே ஜாராட்சியும் முதலாளி வர்க்கமும் எதிர்க்காமல் இருக்க முடியாது, ஆனால் இவ்விஷயத்தில் தொழிலாளி வர்க்கம் விவசாயிகளுக்கு உதவியளிக்காமல் இருக்க முடியாது.

இரண்டாவதாக, ''உள்நாட்டுப் போரில் தாக்குகிறவனே எப்போதும் குற்றவாளி'' என்று திரு. ஸ்துரூவே அடித்துப் பேசுகிறார். இந்தக் கருத்து மேலே சொன்ன புதிய-இஸ்க்ரா போக்குகளை நெருங்கிச் சார்ந்திருக்கிறது. உண்மைதான், உள்நாட்டுப் போரில் தாக்குவது எப்போதுமே அனுகூலமானது என்று நாம் கூற மாட்டோம். இல்லை, சில சமயம் தற்காப்புப் போர்த்தந்திரங்கள் தற்காலிகமாகக் கட்டாயமாகின்றன. ஆனால் திரு. ஸ்துரூவே சொல்வது போன்ற கூற்றை 1905ம் ஆண்டைச் சேர்ந்த ருஷ்யாவுக்குப் பொருத்திச் செயல்படுத்துவது ''பழக்கத்தால் நலிந்த தீவிரவாதக் கருத்தை'' (''முதலாளி வர்க்கம் பயப்படுகிறது, சுதந்தர இலட்சியத்துக்குத் துரோகம் செய்கிறது'') ஓரளவுக்கு வெளிக்காட்டுகிறது என்றுதான் அர்த்தம். இன்று எதேச்சாதிகார முறையையும் பிற்போக்கையும் தாக்க மறுக்கிறவனுக்கு, இப்படிப்பட்ட தாக்குதலுக்குத் தயாரிப்பு செய்யத் தவறுகிறவனுக்கு, அதை ஆதரித்துப் பேசாதிருக்

கிறவனுக்கு, புரட்சியாதரவாளன் என்று தன்னை அழைத்துக் கொள்ள உரிமை கிடையாது.

''இரகசிய முறைகள்'', ''கலகம் செய்தல்'' (கலகம் என்பது ''சிற்றளவான புரட்சியெழுச்சி''யாம்) எனும் கோஷங்களைத் திரு. ஸ்துரூவே கண்டிக்கிறார். இவ்விரண்டையும் வெறுக்கிறார்—''மக்களை அணுகும் முறை'' எனும் பார்வை நிலையிலிருந்து வெறுக்கிறாராம். எடுத்துக்காட்டுக்காக என்ன செய்ய வேண்டும்? எனும் நூலை எடுத்துக் கொண்டு (அவர் பார்வைநிலையில் ஒரு மிகத் தீவிரமான புரட்சியாளனின் நூல் இது) கலகம் செய்வதை ஆதரித்துப் பேசும் பகுதி எதையாவது அதில் காட்ட முடியுமா என்று திரு. ஸ்துரூவே அவர்களைக் கேட்க விரும்புகிறோம். ''இரகசிய முறைகள்'' பொறுத்தவரை நமக்கும் திரு. ஸ்துரூவேயுக்கும் இடையே (எடுத்துக்காட்டாகச் சொல்கிறோம்) உண்மையிலே நிறைய வேற்றுமை இருக்கிறதா? ''இரகசிய முறையில்'' ருஷ்யாவுக்குக் கொண்டுவரப்பட்டு ஒஸ்வபஷ்தேனியே சங்கத்தின் ''இரகசியக்'' குழுக்களுக்கோ ரு.ச.ஜ.தொ. கட்சியின் ''இரகசியக்'' குழுக்களுக்கோ பயன்பட்டு வரும் ''சட்ட விரோதமான'' பத்திரிகைகளில் நாம் இருவரும் பணியாற்றி வரவில்லையா? நாம் நடத்தி வரும் தொழிலாளர் பொதுக் கூட்டங்கள் அடிக்கடி ''இரகசியமாக'' நடக்கின்றன—அந்தப் பாவத்தைச் செய்யத்தான் செய்கிறோம். அப்படியானால் ஒஸ்வபஷ்தேனியே சங்கக் கனவான்கள் நடத்தும் கூட்டங்களின் சங்கதி என்ன? திரு. ஸ்துரூ**வே** அவர்களே, நீங்கள் பெருமையடித்துக் கொள்வதற்கும் வெறுக்கத்தக்க இரகசிய முறைகளின் வெறுக்கத்தக்க ஆதரவாளர்களை இளக்காரமாகப் பார்ப்பதற்கும் நியாயம் ஏதாவதுண்டா?

உண்மை, தொழிலாளிகளுக்கு ஆயுதங்கள் கொண்டுவருவதற்குக் கண்டிப்புள்ள இரகசிய முறைகள் அவசியந்தான். இவ்விஷயத்தில் திரு. ஸ்துரூவே கொஞ்சம் அதிகமாகவே வெளிப்படையாகப் பேசுகிறார். சற்றுக் கேளுங்கள்: ''புரட்சியெழுச்சியைப் பொறுத்தவரை, அல்லது செயல் முறை அர்த்தத்தில் ஒரு புரட்சியைப் பொறுத்தவரை ஜனநாயக வேலைத் திட்டத்தை ஆதரிக்கும் வெகுஜனப் பிரச்சாரம் ஒன்றுதான்

ஒரு பொதுவான ஆயுதமேந்திய புரட்சியெழுச்சிக்குரிய சமுதாய, மனநிலை வழிப்பட்ட நிலைமைகளை உண்டாக்கித் தரமுடியும். எனவே, புரட்சியெழுச்சியானது இன்றைய விடுதலைப் போராட்டத்தின் தவிர்க்க முடியாத நிறைமுடிவு எனும் பார்வைநிலையிலிருந்து பார்த்தாலுங்கூட—இந்தக் கருத்தை நான் ஏற்கவில்லை—ஜனநாயகச் சீர்திருத்தம் பற்றிய கருத்துக்களை மக்களுக்கு ஊட்டுவது ஒன்றே முக்கியமான, அவசியமான பணியாகும்.''

திரு. ஸ்துரூவே பிரச்சினையைத் தட்டிக்கழிக்கிறார். புரட்சியெழுச்சியின் தவிர்க்க முடியாத் தன்மையைப் பற்றிப் பேசுகிறார், புரட்சியின் வெற்றிக்கு அது அவசியமாயிருப்பது பற்றிப் பேசுவதற்குப் பதிலாக. ஒரு புரட்சியெழுச்சி—தயாரிப்பற்ற, தன்னியல்பான, இங்குமங்குமாகச் சிதறிய நிலையில் உள்ள ஒரு புரட்சியெழுச்சி—ஏற்கெனவே நடக்கத் தொடங்கிவிட்டிருக்கிறது. அது மக்களின் ஒரு முழுவளவான உள்ளொற்றுமையுள்ள ஆயுதமேந்திய புரட்சியெழுச்சியாக வளரும் என்று யாரும் உறுதியாகச் சொல்ல முடியாது. ஏனெனில் அது புரட்சி சக்திகளின் நிலையையும் (போராட்டத்தின் போக்கிலேதான் இதை முழுமையாக அளந்தறிய முடியும்), அரசாங்கத்தின், முதலாளி வர்க்கத்தின் நடத்தையையும் சரிநுட்பமாக மதிப்பிட முடியாத பிற பல சூழ்நிலைமைகளையும் பொறுத்திருக்கிறது. விஷயத்தைத் திரு. ஸ்துரூவே தாழ்த்த விரும்புகிற மாதிரி, ஏதாவதொரு ஸ்தூலமான நிகழ்ச்சி சம்பந்தமாக முற்றுறுதியாகச் சொல்லும் அர்த்தத்தில் தவிர்க்க முடியாத் தன்மையைப் பற்றிப் பேசுவதில் பொருளில்லை. நீங்கள் புரட்சியின் ஆதரவாளராக இருக்க விரும்பினால் புரட்சியின் வெற்றிக்குப் புரட்சியெழுச்சி அவசியந்தானா, அதை வீறுடன் பிரகடனப்படுத்துவது அவசியந்தானா, அதை ஆதரித்துப் பேசி உடனடியான, சுறுசுறுப்பான தயாரிப்புகள் செய்வது அவசியந்தானா என்பது பற்றித்தான் நீங்கள் பேச வேண்டும். இந்த வேற்றுமையைத் திரு. ஸ்துரூவே புரிந்து கொள்ளாமல் இருக்க முடியாது. எடுத்துக் காட்டாக, எல்லோருக்கும் வாக்குரிமை இருப்பதின் தேவையைப் பற்றிய பிரச்சினையை—இது ஜனநாயகவாதிக்குச்

சர்ச்சைக்கிடமற்றது—இன்றைய புரட்சி நிகழும் போக்கிலே அதைச் சாதித்துக் கொள்வதின் தவிர்க்க முடியாத் தன்மையைக் கேள்விக்கிடமாக்குவதின் மூலமாக—இது அரசியல் நடவடிக்கையில் ஈடுபட்டுள்ளவர்களுக்குச் சர்ச்சைக்குரியது, இன்றியமையாததாயில்லையுங்கூட அவர் மழுங்கடிக்கவில்லை. புரட்சியெழுச்சியின் தேவை பற்றிய பிரச்சினையைத் தட்டிக் கழிப்பதின் வழியாக மிதவாத முதலாளி வர்க்கத்தாரின் அரசியல் நிலையின் மிகவும் உள்ளாழ்ந்த சாராம்சத்தைத் திரு. ஸ்துருவே வெளிக்காட்டுகிறார். முதலாவதாக, முதலாளி வர்க்கம் எதேச்சாதிகார முறையை நசுக்குவதைவிட அத்துடன் பேரம் பேசி முடித்துக் கொள்வதையே விரும்பும்; இரண்டாவதாக, எல்லா வழக்குகளிலும் முதலாளிவர்க்கம் ஆயுதமேந்திய போராட்டத்தைத் தொழிலாளிகளின் மேல் சுமத்திவிடுகிறது. திரு. ஸ்துருவே தட்டிக்கழிப்பதின் உண்மையான அர்த்தம் இதுவே. எனவேதான், புரட்சியெழுச்சியின் தேவை பற்றிய பிரச்சினையிலிருந்து அதன் ''சமுதாய-மனநிலை வழிப்பட்ட நிலைமைகள்'' பற்றிய பிரச்சினைக்கு, பூர்வாங்கப் பிரச்சாரம் பற்றிய பிரச்சினைக்கு அவர் பின்வாங்குகிறார். அரசாங்கத்தின் துருப்புகளை முறியடிப்பதே விஷயமாயிருந்த நேரத்தில், இயக்கமானது ஆயுதமேந்திய போராட்டத்தின் ''அவசியத்துக்குக் கொண்டு போய் விட்டிருந்த'' நேரத்தில், பேசி ஒப்புக் கொள்ளும்படி செய்வதொன்றோடு நிறுத்திக் கொள்வது (தயாரிப்பு செய்து வரும் காலத்தில் இது நூறு மடங்கு அவசியமாகும்) முதலாளி வர்க்கத்தாருக்குரிய இழிநிலையான செயலின்மையாகவும் பயந்தாங்கொள்ளித்தனமாகவும் ஆகிவிட்டிருந்த நேரத்தில், 1848ம் வருடத்திய ஃபிராங்ஃபுர்ட் நாடாளுமன்றத்தில் முதலாளி வர்க்க வாய்ச்சொல் வீரர்கள் தீர்மானங்களையும் பிரகடனங்களையும் முடிவுகளையும் தயாரிப்பதிலும் ''வெகுஜனப் பிரச்சாரம்'' நடத்துவதிலும் ''சமுதாய-மனநிலை வழிப்பட்ட நிலைமைகளைத்'' தயாரிப்பதிலும் மும்முரமாக ஈடுபட்டிருந்ததைப் போலவே திரு. ஸ்துருவே அவர்களும் புரட்சியெழுச்சி பற்றிய பிரச்சினையைத் தட்டிக் கழித்துவிட்டுச் சொற்றொடர்களின் பின்னே ஒளிந்து கொள்

கிறார். வரலாற்றில் புரட்சிக் காலப்பகுதிக்கும் சாதாரண மான, அன்றாட, தயாரிப்புக் காலப்பகுதிக்கும் உள்ள வேறு பாடு புரட்சிக் காலப்பகுதியில் மக்களின் மனநிலையும் படைப்பும் துணிபுகளும் செய்கையில் வெளிப்படுத்திக் கொள்ள வேண்டும், வெளிப்படுத்திக் கொள்ளத்தான் செய்கின்றன என்கிற உண்மையை நிதர்சனமாகக் காட்டுகிறார் திரு. ஸ்துருவே, இதைப் பல சமூக-ஜனநாயகவாதிகள் பிடிவாதமாகப் பார்க்க மறுக்கிறார்கள்.

சொற்களும் செய்கைதான் என்பதைக் கொச்சையான புரட்சிவாதம் பார்க்கத் தவறுகிறது; பொதுப்படையாக வரலாற்றுடன் பொருத்திச் செயல்படுத்தும் போது இந்த முன்கூற்று சர்ச்சைக்கிடமற்றது, பகிரங்கமான வெகுஜன அரசியல் செய்கை நிகழாத வரலாற்றுக் காலப்பகுதிகளோடு பொருத்திச் செயல்படுத்தும் போதும் சர்ச்சைக்கிடமற்றது. எவ்விதமான சதிக்குழுப் புரட்சிகளும் இப்படிப்பட்ட செய்கைக்குப் பதிலாக வைக்கப்பட முடியாது, இதைச் செயற்கையாக உண்டாக்கவும் முடியாது. ஒரு புரட்சிகரமான காலப்பகுதி தொடங்கிவிட்ட நேரத்தில், பழைய ''மேற்கட்டுமானம்'' அடிமுதல் முடிவரை உடைவு கண்டிருக்கும் நேரத்தில், தங்களுக்கென்று ஒரு புதிய மேற்கட்டுமானத்தைப் படைத்து வரும் வர்க்கங்களின், மக்களின் பகிரங்கமான அரசியல் செய்கை ஓர் உண்மையாகிவிட்டிருக்கும் நேரத்தில், உள்நாட்டுப் போர் தொடங்கியிருக்கும் நேரத்தில், ''செய்கைக்கு'' மாறிச் செல்ல வேண்டிய தேவை பற்றிய நேரடியான கோஷத்தை முன்வைக்காமல் பழைய வழியிலே ''சொற்களோடு'' நிறுத்திக்கொள்வதும் ''மனநிலைவழிப்பட்ட நிலைமைகளும்'' பொதுப்படையான ''பிரச்சாரமும்'' தேவை என்று சாக்குச் சொல்லிச் செய்கையைத் தவிர்க்க முயல்வதும் அக்கறையின்மையாகும், உயிரற்ற தன்மையாகும், ஏட்டுப்புலமை வாதமாகும், அல்லது புரட்சிக்குத் துரோகம் செய்து வஞ்சிப்பதாகும் என்பதை வால்பிடிக்கும் போக்குள்ள புரட்சியாளர்கள் புரிந்து கொள்ளத் தவறுகிறார்கள். ஜனநாயகப் போக்குள்ள முதலாளி வர்க்கத்தினரின் ஃபிராங்ஃபுர்ட் வாய்ச்சொல் வீரர்கள் இப்படிப்பட்ட

துரோகத்துக்கோ இப்படிப்பட்ட ஏட்டுப்புலமைவாத முட்டாள்தனத்துக்கோ நினைவில் நிறுத்தத்தக்க வரலாற்று எடுத்துக்காட்டாவர்.

கொச்சையான புரட்சிவாதத்துக்கும் புரட்சியாளர்களிடமுள்ள வால்பிடிக்கும் போக்குக்கும் இடையேயுள்ள இந்த வேற்றுமையை விளக்குவதற்கு ருஷ்யாவின் சமூக-ஜனநாயகவாத இயக்கத்தின் வரலாறு கொடுத்திருக்கும் ஓர் எடுத்துக்காட்டைக் காண விரும்புகிறீர்களா? அவ்வகை விளக்கமும் தருகிறோம். 1901-02ம் ஆண்டுகளை நினைத்துப் பாருங்கள். அவை மிகவும் அண்மையானவை என்றாலும் ஏற்கெனவே பழங்கால வரலாறு போல் இன்று நமக்குத் தோன்றுகிறது. ஆர்ப்பாட்டங்கள் தொடங்கிவிட்டிருந்தன. கொச்சையான புரட்சிவாதம் ''தாக்கும் போர்த்தந்திரங்கள்'' பற்றி ஓலமிட்டது (ரபோச்சியே தேலோ), ''இரத்தவெறி பிடித்த துண்டுப் பிரசுரங்கள்'' வெளியிடப்பட்டு வந்தன (பெர்லினில் பிரசுரமானவை என்று நினைக்கிறேன்), பத்திரிகை மூலமாக நாடுதழுவிய முறையில் கிளர்ச்சி நடத்துவது எனும் கருத்தின் ''இலக்கியப் பகட்டுத்தனத்தையும்'' செயல் தொடர்பற்ற தன்மையையும் எதிர்த்துத் தாக்குதல்கள் நடத்தப்பட்டன (நதேழ்தின்). இவற்றிற்கு மாறாக, ''அரசியல் கிளர்ச்சிக்குப் பொருளாதாரப் போராட்டமே மிகச் சிறப்பான சாதனம்'' என்று பேசி அக்காலத்தில் புரட்சியாளர்களின் வால்பிடிக்கும் போக்கு பிரச்சாரம் செய்தது. புரட்சிகரமான சமூக-ஜனநாயகவாதிகள் எப்படி நடந்து கொண்டார்கள்? அவர்கள் இவ்விரு போக்குகளையும் தாக்கினர். அரசியல் வாணவேடிக்கை முறைகளையும் தாக்குதல் போர்த்தந்திரங்களைப் பற்றிய கூக்குரலையும் கண்டித்தனர். ஏனெனில் பகிரங்கமான வெகுஜனச் செய்கை என்பது எதிர்கால விவகாரம் என்று எல்லோருக்கும் தெரியும், தெரிந்திருக்க வேண்டும். வால்பிடிக்கும் போக்கை அவர்கள் கண்டித்து மக்கள் அனைத்தையும் தழுவிய ஆயுதமேந்திய புரட்சியெழுச்சி பற்றிய கோஷத்தையும்கூட பகிரங்கமாக வெளியிட்டனர்—நேரடியான வேண்டுகோள் எனும் அர்த்தத்தில் அல்ல (அக்காலத்தில் நம்மிடம் ''கலகம்'' செய்வதற்கான

வேண்டுகோள் எதையும் திரு. ஸ்துரூவே கண்டுபிடிக்க மாட்டார்), ஓர் அவசியமான முடிவு எனும் அர்த்தத்தில், ''பிரச்சாரம்'' என்கிற அர்த்தத்தில் (பிரச்சாரத்தைப் பற்றி இப்போதுதான் திரு.ஸ்துரூவேசிந்திக்கத் தொடங்கியிருக்கிருர்—நம் மதிப்பிற்குரிய திரு. ஸ்துரூவே எப்போதுமே பல வருடம் பின்தங்கியிருப்பவர்), ''சமுதாய-மனநிலை வழிப்பட்ட நிலைமைகளைத்'' தயாரிக்கும் அர்த்தத்தில் (தடுமாறிக் கொண்டும் பேரமாடிக் கொண்டும் இருக்கும் முதலாளி வர்க்கத்தின் பிரதிநிதிகள் இன்று இந்நிலைமைகளைப் பற்றித்தான் ''துயரத்தோடும் பொருத்தமில்லாமலும்'' வாயளந்து வருகின்றனர்). அந்தக் காலத்தில் கிளர்ச்சியையும் பிரச்சாரத்தையும், பிரச்சாரத்தையும் கிளர்ச்சியையும் புற விவகார நிலை உண்மையிலே முன்னணிக்குக் கொண்டுவந்தது. அந்தக் காலத்தில் ஓர் அனைத்து ருஷ்ய அரசியல் பத்திரிகைக்காகப் பணியாற்றுவது—அதை வாரப் பத்திரிகையாக்குவது ஓர் இலட்சியமாகத் தோன்றியது—புரட்சியெழுச்சிக்குத் தயாரிக்கும் பணிக்கு உரைகல்லாக முன்வைக்க முடிந்தது (என்ன செய்ய வேண்டும்? எனும் நூலில் அப்படித்தான் முன்வைக்கப்பட்டது). அந்தக் காலத்தில் நேரடியான ஆயுதமேந்திய செய்கைக்குப் பதிலாக வெகுஜனக் கிளர்ச்சியை ஆதரித்துப் பேசும் கோஷம் அரசியல் வாணவேடிக்கை முறைகளுக்குப் பதிலாகப் புரட்சியெழுச்சிக்கான சமுதாய-மனநிலை வழிப்பட்ட நிலைமைகளைத் தயாரிக்க வேண்டுமெனும் கோஷந்தான் புரட்சிகரமான சமூக-ஜனநாயகவாதத்தின் சரியான கோஷங்களாகும். இக்காலத்தில் இந்தக் கோஷங்களை நிகழ்ச்சிகள் முந்திக் கொண்டுள்ளன; இயக்கம் அவற்றைப் பின்னே விட்டுவிட்டு வந்துள்ளது; அவை கிழிசல்களாகிவிட்டன, ஒஸ்வபஷ்தேனியேயின் பாசாங்கையும் புதிய-இஸ்க்ராவின் வால்பிடிக்கும் போக்கையும் மூடிமறைக்க இலாயக்கான கந்தல்களாகிவிட்டன!

அல்லது ஒருக்கால் நான்தான் தவது செய்கிறேனு? ஒருக்கால் இன்னும் புரட்சி தொடங்கவில்லையோ? ஒருக்கால் வர்க்கங்களின் பகிரங்கமான அரசியல் செய்கைக்குக் காலம் இன்னும் வரவில்லையோ? ஒருக்கால் உள்நாட்டுப் போர்

இன்னும் இல்லையோ, விமர்சன ஆயுதத்தின் அவசியமான, கட்டாயமான பின்தோன்றலாக, வாரிசாக, பொறுப்பாளனுக, நிறைவேற்றிக் கொடுப்போனுக ஆயுதங்களின் விமர்சனம் இன்னும் ஆகக் கூடாதோ என்னவோ?

படிப்பறையை விட்டு வெளியே வந்து சுற்றுமுற்றும் பாருங்கள், உங்கள் விடைகளைத் தெருக்களிலே தேடுங்கள். அமைதியான, ஆயுதமற்ற மக்கள் கூட்டங்களை எங்கு பார்த்தாலும் சுட்டுத்தள்ளி அரசாங்கமே உள்நாட்டுப் போரைத் தொடங்கிவிடவில்லையா? ஆயுதமேந்திய கறுப்பு நூற்றுவர்கள் எதேச்சாதிகார முறையின் ''வாதமாக'' செயல்படவில்லையா? மக்கள் காவல் படையின் தேவையை முதலாளி வர்க்கம்—முதலாளி வர்க்கம்கூட—அங்கீகரிக்கவில்லையா? இலட்சிய மிதவாதியும் ஆசார நுணுக்கமுள்ளவருமான திரு. ஸ்துரூவேகூட ''புரட்சிகரமான செய்கையின் பகிரங்கமான தன்மை'' (அதுபோலத்தான் நாங்கள் இன்று இருக்கிறோம்!) ''தற்போது மக்கள்திரளின் மேல் அறிவளிக்கத்தக்க செல்வாக்கைச் செலுத்துவதற்கான மிக முக்கியமான நிபந்தனைகளில் ஒன்றுயுள்ளது'' என்று சொல்லவில்லையா (அந்தோ, பிரச்சினையைத் தட்டிக்கழிக்கத்தான் அப்படிச் சொல்கிறார்!)?

புரட்சியின் ஆதரவாளர்கள் ஆயுதமேந்திய புரட்சியெழுச்சிப் பிரச்சினையை இன்று எப்படி முன்வைக்க வேண்டும் என்பதில் காணக் கண் இருப்பவர்களுக்கு ஐயம் எதுவும் இருக்க முடியாது. சிறிதேனும் மக்கள் மேல் செல்வாக்கு செலுத்தும் திறமையுள்ள சுதந்தரமான பத்திரிகைகளில் கொடுக்கப்பட்டுள்ள இப்பிரச்சினையின் மூன்று முன்வைப்புகளைப் பரிசீலியுங்கள்.

முதல் முன்வைப்பு. ருஷ்யாவின் சமூக-ஜனநாயகத் தொழிலாளர் கட்சியின் மூன்றுவது காங்கிரஸின் தீர்மானம்.*

---

* முழு வாசகம் பின்வருமாறு:

''1) பாட்டாளி வர்க்கம் தன்னுடைய நிலையின் காரணமாக முன்னணியில் நிற்கும் ஒரேயொரு முரணற்ற புரட்சிகரமான வர்க்கமாக இருப்பதினால் ருஷ்யாவில் பொதுவான ஜனநாயகப் புரட்சி இயக்கத்தில் தலைமைப் பாத்திரம் வகிக்க அறைகூவியழைக்கப்படுகிறது;

பொதுவான ஜனநாயகப் புரட்சி இயக்கம் ஏற்கெனவே புரட்சியெழுச்சியின் அவசியத்தை ஏற்படுத்திவிட்டது என்று பகிரங்கமாக ஏற்கப்பட்டுப் பிரகடனப்படுத்தப்படுகிறது.

---

*''2) தற்சமயம் இவ்வியக்கம் ஆயுதமேந்திய புரட்சியெழுச்சியின் அவசியத்துக்கு ஏற்கெனவே கொண்டுபோய் விட்டிருக்கிறது;*

*''3) இந்தப் புரட்சியெழுச்சியில் பாட்டாளி வர்க்கம் தவிர்க்க முடியாதபடி மிக வலுவான பங்கு எடுக்கும், இப்படிப் பங்கெடுப்பது ருஷ்யாவில் புரட்சியின் தலைவிதியை நிர்ணயிப்பதாயிருக்கும்;*

*''4) சித்தாந்த வழியிலும் நடைமுறை வழியிலும் ஒருங்கே தன்னுடைய போராட்டத்தை இயக்கிச் செலுத்தி வரும் சமூக-ஜனநாயகத் தொழிலாளர் கட்சிக் கொடியின் கீழ் தனியொரு சுதந்தரமான அரசியல் சக்தியாக ஒன்றுபட்டிருந்தால் மட்டுமே பாட்டாளி வர்க்கம் இந்தப் புரட்சியில் தலைமைப் பாத்திரத்தை வகிக்க முடியும்;*

*''5) பாட்டாளி வர்க்கம் இப்பாத்திரத்தை வகித்து முடித்தால்தான்முதலாளித்துவ-ஜனநாயக ருஷ்யாவின் சொத்துள்ள வர்க்கங்களை எதிர்த்து சோஷலிஸத்திற்காக நடக்கும் போராட்டத்தில் பாட்டாளி வர்க்கத்துக்கு மிகவும் அனுகூலமான நிலைமைகளை உறுதிப்படுத்திக் கொடுக்கும்—*

*''எனவே, ஆயுதமேந்திய புரட்சியெழுச்சி மூலமாக எதேச்சாதிகார முறையை எதிர்க்கும் நேரடியான போராட்டத்துக்குப் பாட்டாளி வர்க்கத்தை ஒழுங்கமைத்திடும் பணி இன்றைய புரட்சி தருணத்தில் கட்சியின் முக்கியமான, மிக அவசரமான பணிகளில் ஒன்று என்று ரு.ச.ஜ.தொ. கட்சியின் மூன்றாவது காங்கிரஸ் கருதுகிறது.*

*''அதற்கேற்ப எல்லாக் கட்சி நிறுவனங்களையும் காங்கிரஸ் பின்வருமாறு பணிக்கிறது:*

*''அ) நிகழவிருக்கும் ஆயுதமேந்திய புரட்சியெழுச்சியின் அரசியல் குறிபொருளை மட்டுமின்றி நடைமுறைக்குரிய அமைப்புத்துறை அம்சத்தையும் பாட்டாளி வர்க்கத்துக்குப் பிரச்சாரத்தின் மூலமாகவும் கிளர்ச்சியின் மூலமாகவும் விளக்க வேண்டும்;*

*''ஆ) அந்தப் பிரச்சாரத்திலும் கிளர்ச்சியிலும் வெகுஜன அரசியல் வேலைநிறுத்தங்களின் பாத்திரத்தை விளக்க வேண்டும்; புரட்சியெழுச்சியின் துவக்கத்திலும் அது முன்னேறிவரும் காலத்திலும் அவை மிக முக்கியமானவையாக இருக்கக் கூடும்; மற்றும்*

புரட்சியெழுச்சிக்குப் பாட்டாளி வர்க்கத்தை ஒழுங்கமைப்பது கட்சியின் முக்கியமான, முதன்மையான, இன்றியமையாத பணிகளில் ஒன்ருக நிகழ்ச்சி நிரலில் போடப்பட்டுள்ளது. பாட்டாளி வர்க்கத்தை ஆயுதபாணியாக்குவதற்கும் புரட்சியெழுச்சிக்கு நேரடித் தலைமை வகிக்கும் சாத்தியப்பாட்டை உறுதிப்படுத்துவதற்கும் மிகவும் வலுவுள்ள நடவடிக்கைகள் எடுத்துக் கொள்ள வேண்டும் என்று கட்டளைகள் பிறப்பிக்கப்பட்டுள்ளன.

இரண்டாம் முன்வைப்பு. ஒஸ்வபஷ்தேனியேயில் வெளிவந்த கோட்பாடுரீதியான ஒரு கட்டுரை; "ருஷ்ய அரசியல் சட்டவாதிகளின் தலைவர்" (ஐரோப்பிய முதலாளி வர்க்கத்தாரின் மிகச் செல்வாக்கு வாய்ந்த ஃபிராங்ஃபுர்ட் பத்திரிகை[65] இப்படித்தான் அண்மையில் திரு. ஸ்துருவேயை வர்ணித்தது) அல்லது ருஷ்யாவின் முற்போக்கான முதலாளி வர்க்கத்தாரின் தலைவர் எழுதியது. புரட்சியெழுச்சி தவிர்க்கமுடியாதது எனும் கருத்தை அவர் ஏற்கவில்லை. இரகசிய நடவடிக்கையும் கலகம் செய்வதும் நியாயப் புத்தியற்ற புரட்சிவாதத்தின் குறிப்பான வழிமுறைகள். குடியரசுவாதம் மயங்கி விழச் செய்யும் வழிமுறை. ஆயுதமேந்திய புரட்சியெழுச்சி உண்மையில் வெறுமே செயல்முறை பற்றிய பிரச்சினையே, ஆனல் வெகுஜனப் பிரச்சாரம் நடத்தி வருவதும் சமுதாய-மனநிலை வழிப்பட்ட நிலைமைகளைத் தயாரித்து வருவதுந்தான் "அடிப்படையான, மிக அவசியமான மணி".

மூன்ரும் முன்வைப்பு. புதிய-இஸ்க்ரா மாநாட்டின் தீர்மானம். புரட்சியெழுச்சியைத் தயாரிப்பது நம் பணி. திட்டமிட்ட புரட்சியெழுச்சி சாத்தியமில்லை. அரசாங்கம் சீர்குலைந்து

"இ) பாட்டாளி வர்க்கத்தை ஆயுதபாணியாக்குவதை நோக்கியும் ஆயுதமேந்திய புரட்சிக்கும் அதற்கு நேரடியாகத் தலைமை வகிப்பதற்கும் உரிய திட்டத்தைத் தயாரிப்பதை நோக்கியும் வலுவான நடவடிக்கைகள் எடுத்துக்கொள்ள வேண்டும்; இக்காரியத்துக்காகக் கட்சி ஊழியர்களைக்கொண்டு தனிக்குழுக்கள் தேவைப்படுகிற போது அமைக்கப்பட வேண்டும்". (1907 பதிப்புக்கு ஆசிரியர் எழுதிய குறிப்பு.—ப-ர்.)

போவது, நம் கிளர்ச்சி, நம் அமைப்பு ஆகியவை புரட்சி யெழுச்சிக்குச் சாதகமான நிலைமைகளை உண்டாக்கித் தரு கின்றன. அப்போதுதான் ''செயல்முறை-போர்த் தயாரிப்பு கள் ஏறக்குறைய முக்கியமான குறிபொருளைப் பெற முடி யும்''.

இவ்வளவுதானா? ஆம், இவ்வளவேதான். புரட்சியெழுச்சி அவசியமாகி விட்டிருக்கிறதா எனும் விஷயம் புதிய-இஸ்க்ராவின் பாட்டாளி வர்க்கத் தலைவர்கள் இன்னமும் அறியாத ஒன்று. நேரடியான போராட்டத்துக்குப் பாட்டாளி வர்க்கத்தை ஒழுங்கமைக்கும் பணி அவசரமானதா எனும் விஷயம் அவர்களுக்கு இன்னும் தெளிவாகவில்லை. மிகவும் வலுவான நடவடிக்கைகளைக் கைக்கொள்ளுமாறு வற்புறுத்து வது அவசியமில்லையாம்; எந்த நிலைமைகளில் இந்நட வடிக்கைகள் ''ஏறக்குறைய முக்கியமான'' குறிபொருளைப் பெறக் ''கூடும்'' என்று பொது வரையுருவில் விளக்குவது அதைவிட எவ்வளவோ முக்கியமாம் (1902ல் அல்ல, 1905ல்)....

புதிய-இஸ்க்ரா தோழர்களே, நீங்கள் மர்த்தீனவ் போக் கின் பக்கம் திரும்பியது உங்களை எங்கே கொண்டு போய் விட்டிருக்கிறது என்று இப்போதாவது பார்க்கிறீர்களா? ஒஸ்வபஷ்தேனியே தத்துவஞானத்தைச் சற்று மாற்றிச் சொல்வதே உங்கள் அரசியல் தத்துவஞானம் என்று நிரூபித்துக்கொண்டுள்ளதைஉணர்கிறீர்களா?(உங்கள்சித்தத் தையும் மீறி, உங்களை அறியாமலே) நீங்கள் முடியரசுவாத முதலாளி வர்க்கத்தாரின் பின்னே போய்க் கொண்டிருப் பதை உணர்கிறீர்களா? ஊசிப்போன உண்மைகளை நீங்கள் திருப்பிச் சொல்லிக் கொண்டும் குதர்க்கவாதத்தில் நிபுணர் களாகிக் கொண்டும் இருந்தபடியே(பியோத்தர் ஸ்துருவேயின் நினைவில் நிறுத்தத்தக்க கட்டுரையின் நினைவில் நிறுத்தத்தக்க சொற்களில் சொல்வதென்றால்) ''புரட்சிகரமான செய்கையின் பகிரங்கமான தன்மை மக்கள்திரளின் மீது அறிவூட்டும் செல் வாக்கு செலுத்துவதற்குரிய மிகவும் முக்கியமான நிபந்தனை களில் ஒன்றாக இன்று உள்ளது'' எனும் உண்மையை நீங்கள் பார்க்கத் தவறியிருப்பது தெளிவாகவில்லையா?

## 9. புரட்சிக் காலத்தில் தீவிரமான எதிர்க்கட்சியாக இருப்பதின் பொருள் என்ன?

தற்காலிக அரசாங்கத்தைப் பற்றிய தீர்மானத்துக்குத் திரும்புவோம். புதிய-இஸ்க்ரா போர்த்தந்திரங்கள் புரட்சியை முன்னுக்குத் தள்ளாமல் — இதன் சாத்தியப்பாட்டைத் தங்களுடைய தீர்மானத்தின் மூலமாக உறுதிப்படுத்தவே விரும்புகிறார்கள்—பின்னுக்கு இழுக்கின்றன என்று காட்டினோம். முரணுள்ள முதலாளி வர்க்கத்தை எதிர்க்கும் போராட்டத்தில் இந்தப் போர்த்தந்திரங்கள்தாம் சமூக-ஜனநாயகவாதத்தின் கைகளைக் கட்டிப் போடுகின்றன, அது முதலாளித்துவ ஜனநாயகத்தில் கலந்து கரைந்துவிடாதபடி தடுக்கவுமில்லை என்றும் காட்டினோம். தீர்மானத்தின் பொய்யான முற்கோள்கள் இயல்பாகவே பின்வரும் பொய்யான முடிவுக்குக் கொண்டுவந்துவிடுகின்றன:''எனவே, சமூக-ஜனநாயகவாதம் அரசதிகாரத்தைக் கைப்பற்றும் குறிக்கோளையோ தற்காலிக அரசாங்கத்தில் அதிகாரத்தைப் பங்கு போட்டுக் கொள்ளும் குறிக்கோளையோ வகுத்துக் கொள்ளக் கூடாது, மிகத் தீவிரமான புரட்சி எதிர்க்கட்சியாக இருந்து வரவேண்டும்''. இம்முடிவில் குறிக்கோள்களைப் பற்றிக் கூறும் முதற்பகுதியைக் கவனியுங்கள். ஜாராட்சி மீது புரட்சி நிர்ணயமான வெற்றி பெறுவது சமூக-ஜனநாயகவாத நடவடிக்கையின் குறிக்கோள் என்று புதிய-இஸ்க்ராவாதிகள் அறிவிக்கிறார்களா? ஆம், அறிவிக்கிறார்கள். நிர்ணயமான வெற்றிக்குரிய நிலைமைகளை அவர்களால் சரியாக வரையறுக்க முடியவில்லை, ஒஸ்வபஷ்தேனியேயின் வரையறுப்புக்கு நழுவிவிடுகிறார்கள். என்றபோதிலும் இந்தக் குறிக்கோளை வைத்துக் கொள்ளத்தான் செய்கிறார்கள். மேலும், தற்காலிக அரசாங்கத்தைப் புரட்சியெழுச்சியுடன் சம்பந்தப்படுத்துகிறார்களா? ஆம், தற்காலிக அரசாங்கம் ''வெற்றிகரமான மக்கள் புரட்சியெழுச்சியிலிருந்து தோன்றும்'' என்று நேரடியாகக் கூறிச் சம்பந்தப்படுத்துகிறார்கள். கடைசியாக, புரட்சியெழுச்சிக்கு வழிகாட்டுவது எனும் குறிக்கோளை வைத்துக் கொள்கிறார்களா?

ஆம், வைத்துக் கொள்கிறார்கள். திரு. ஸ்துரூவே போல் அவர்களும் புரட்சியெழுச்சி அவசர அவசியம் என்பதை ஒப்புக் கொள்வதைத் தட்டிக்கழிக்கிறார்கள், என்றாலும் அதே நேரத்தில் திரு. ஸ்துரூவே போல் அல்லாமல் ''அதை'' (புரட்சியெழுச்சியை) ''சமூக-ஜனநாயகவாதம் தன்னுடைய செல்வாக்குக்கும் தலைமைக்கும் உட்படுத்தவும், அதைத் தொழிலாளி வர்க்கத்தின் நலன்களுக்காகப் பயன்படுத்தவும் முயல்கிறது'' என்று சொல்கிறார்கள்.

இது எவ்வளவு நயமாக இணைகிறது, பார்த்தீர்களா? ஒருங்கே பாட்டாளி வர்க்கத் திரளும் **பாட்டாளி வர்க்கம் அல்லாத** மக்கள் திரளும் நடத்தும் புரட்சியெழுச்சியை நம் செல்வாக்குக்கும் தலைமைக்கும் உட்படுத்தி அதை நம் நலன்களுக்காகப் பயன்படுத்தும் குறிக்கோளை நாம் வைத்துக் கொள்கிறோமாம். ஆகவே, புரட்சியெழுச்சியில் ஒருங்கே பாட்டாளி வர்க்கத்துக்கும் புரட்சிகரமான முதலாளி வர்க்கத்துக்கும் சிறுமுதலாளி வர்க்கத்தினருக்கும் (''பாட்டாளி வர்க்கமல்லாத குழுக்கள்'') தலைமை வகிக்கும்—அதாவது, புரட்சியெழுச்சிக்குத் தலைமை வகிப்பதைச் சமூக-ஜனநாயகவாதத்துக்கும் புரட்சிகரமான முதலாளி வர்க்கத்தினருக்கும் இடையே **''பங்கிட்டுக் கொள்ளும்''** — குறிக்கோளை வைத்துக் கொள்கிறோமாம். புரட்சியெழுச்சிக்கு **வெற்றி** தேடிக் கொடுக்கும் குறிக்கோளையும் வைத்துக் கொள்கிறோமாம், அது ஒரு தற்காலிக அரசாங்கத்தை நிறுவுவதில் கொண்டு போய்விட வேண்டுமாம் (''அது ஒரு வெற்றிகரமான மக்கள் புரட்சியெழுச்சியிலிருந்து தோன்றும்''). **எனவே,...** எனவே ஒரு தற்காலிகப் புரட்சி அரசாங்கத்தில் நாம் அரசதிகாரத்தைக் கைப்பற்றுவதையோ அரசதிகாரத்தைப் பங்கிட்டுக் கொள்வதையோ குறிக்கோளாக வைத்துக் கொள்ளக் கூடாதாம்!!

நம் நண்பர்கள் தங்களுடைய வாதங்களை ஒன்றோடொன்று பொருத்திக் காட்ட முடியாது. புரட்சியெழுச்சிப் பிரச்சினையைத் தட்டிக்கழிக்கும் திரு. ஸ்துரூவேயின் பார்வை நிலைக்கும் இந்த அவசரமான பணியை மேற்கொள்ளுமாறு நம்மை அறைகூவியழைக்கும் புரட்சிகரமான சமூக-

ஜனநாயகவாதத்தின் பார்வைநிலைக்கும் இடையே அவர்கள் ஊசலாடுகிறார்கள். ஒரு தற்காலிகப் புரட்சி அரசாங்கத்தில் கலந்து கொள்வதனைத்தும் பாட்டாளி வர்க்கத்துக்குத் துரோகம் செய்வதாகும் என்று கோட்பாடுரீதியிலே கண்டிக்கும் அராஜகவாதத்துக்கும், புரட்சியெழுச்சியில் தலையாய செல்வாக்கு சமூக-ஜனநாயகவாதத்துக்கு இருக்கும் நிலையில் அவ்வாறு பங்கெடுத்துக்கொள்வதைக் கோரும் மார்க்ஸியத்துக்கும் இடையே அவர்கள் ஊசலாடுகிறார்கள்.* அவர்களுக்குச் சுதந்தரமான நிலை எதுவும் கிடையாது: ஜாராட்சியுடன் பேரம் பேசி முடிக்க விரும்பி அதன் காரணமாகப் புரட்சியெழுச்சிப் பிரச்சினையைத் தட்டிக்கழிப்பதிலும் சாகசங்களிலும் புகலிடம் தேடும் நிர்ப்பந்தத்திலிருக்கும் திரு. ஸ்துரூவேயின் நிலையும் இல்லை, ''மேலிருந்து'' செய்கை புரிவதனைத்தையும் முதலாளித்துவப் புரட்சியில் கலந்து கொள்வதனைத்தையும் கண்டிக்கும் அராஜகவாதிகளின் நிலையுமில்லை. ஜாராட்சியுடன் செய்து கொள்ளும் பேரத்தையும் ஜாராட்சி மீது பெறும் வெற்றியையும் புதிய-இஸ்க்ரா குழு குழப்பிவிடுகிறது. முதலாளித்துவப் புரட்சியில் அவர்கள் கலந்து கொள்ள விரும்புகிறார்கள். அவர்கள் மர்த்தீனவின் இரண்டு சர்வாதிகார முறைகளைச் சற்றுத் தாண்டிச் சென்றிருக்கிறார்கள். அவர்கள் மக்களின் புரட்சியெழுச்சிக்குத் தலைமை தாங்கவும் ஒப்புக் கொள்கிறார்கள் — வெற்றி பெற்றதும்உடனே (அல்லது, ஒருக்கால் வெற்றி பெறுவதற்குச் சற்று முன்னே?) அந்தத் தலைமையைக் கைவிடுவதற்காக, அதாவது வெற்றியின் பலன்களைத் தாங்கள் பயன்படுத்திக் கொள்வதற்காக அல்லாமல் அவற்றை மொத்தமாக முதலாளி வர்க்கத்திடம் கொடுத்துவிடுவதற்காக. இதைத்தான் அவர்கள் ''தொழிலாளி வர்க்கத்தின் நலன்களுக்காகப் புரட்சியெழுச்சியைப் பயன்படுத்துவது'' என்று அழைக்கிறார்கள்....

இந்தக் குளறுபடியை இனிமேலும் கவனிக்கத் தேவையில்லை. ''மிகத் தீவிரமான புரட்சிகர எதிர்க்கட்சியாக இருந்து வருவது'' என்றுள்ள வரையறுப்பில் இந்தக் குளறு

---

* பார்க்க: புரொலிட்டாரி, இதழ் 3, தற்காலிகப் புரட்சி அரசாங்கத்தைப் பற்றி, இரண்டாவது கட்டுரை,

படி எப்படி உதித்தது என்று பரிசீலிப்பது அதைவிட பய னுள்ளதாயிருக்கும்.

இது புரட்சிகரமான சர்வதேசச் சமூக-ஜனநாயகவாதத் தின் பழக்கமான வரையறுப்புகளில் ஒன்று. இது முற்றிலும் சரியான கருத்துரை. நாடாளுமன்ற முறையுள்ள நாடுகளில் திருத்தல்வாதத்தையும் சந்தர்ப்பவாதத்தையும் எதிர்க்கும் எதிர்ப்பாளர்களுக்கு இது சகஜமாகிவிட்ட ஒன்ருகும். ''நா டாளுமன்ற மூடத்தனத்துக்கும்'' மில்லிரான் போக்குக்கும் பெர்ன்ஷ்டைன்வாதத்துக்கும் டுராட்டி வகைப்பட்ட இத்தா லியச் சீர்திருத்தவாதத்துக்கும் நியாயமாகவும் அவசியமாக வும் வாய்த்த மறுப்பாக இது பொதுவாக ஏற்கப்பட்டது. நல்லவர்களான நம் புதிய-இஸ்க்ராவாதிகள் இந்த நேர்த்தி யான கருத்துரையை மனப்பாடம் செய்து கொண்டு ஆர்வத் துடன் செயல்படுத்தி வருகிருர்கள்... சிறிதும் பொருத்த மில்லாமல். நாடாளுமன்றமே இல்லாத நிலைமைகளுக்காக எழுதப்பட்ட தீர்மானங்களில் நாடாளுமன்றப் போராட்டத் துக்குரிய வகையினங்கள் புகுத்தப்படுகின்றன. ''எதிர்க்கட்சி'' எனும் கருத்துருவம் புரட்சியெழுச்சியைப் பற்றி எவரும் காரியப் பற்ருேடு பேசாத ஓர் அரசியல் நிலைமையின் பிரதி பலிப்பும் வெளியீடும் ஆகும், புரட்சியெழுச்சி தொடங்கி விட்டு புரட்சியின் ஆதரவாளர்கள் அனைவரும் அதற்குத் தலைமை தாங்குவது பற்றிச் சிந்தித்தும் பேசியும் வருகிற ஒரு நிலைமையுடன் பொருத்தி அக்கருத்துருவம் அர்த்தமில் லாமல் செயல்படுத்தப் படுகிறது. புரட்சியெழுச்சி வெற்றி பெறுமேயாஞல் மேலிருந்து செயலாற்ற வேண்டியதின் அவ சியத்தை நம்முன் புரட்சி நிறுத்தியிருக்கும் நேரத்திலேதான் பழைய வழிமுறைகளோடு—அதாவது, ''கீழிருந்து'' மட்டும் செய்கை புரிவது—''நீடித்திருந்து வருவதற்கான'' விருப் பத்தை ஆதம்பரத்துடனும் ஆரவாரத்துடனும் தெரிவிக் கிருர்கள்.

உண்மை, நம் புதிய-இஸ்க்ரா குழுவினர் நிச்சயமாக அதிர்ஷ்டம் கெட்டவர்களே! அவர்கள் ஒரு சரியான சமூக-ஜனநாயகவாதக் கருத்துரையை வரையறுக்கும் போதுங் கூட அதை எப்படிச் சரியாகச் செயல்படுத்துவது என்று

தெரியாமல் இருக்கிறூர்கள். புரட்சி நடக்கத் தொடங்கிய பின், நாடாளுமன்றம் இன்னும் இல்லாத நிலேயில், உள் நாட்டுப் போரும் புரட்சியெழுச்சியின் வெடிப்புகளும் இருந்து வரும் போது நாடாளுமன்ற போராட்டத்துக்குரிய கருத் துருவங்களும் கருத்தினங்களும் உருமாற்றம் பெற்று எதிர் மறைகளாக மாறிவிடுகின்றன என்பதை அவர்கள் புரிந்து கொள்ளத் தவறியுள்ளனர். இன்று பரிசீலனேயின் கீழிருக்கும் நிலேமைகளில் தெரு ஆர்ப்பாட்டங்கள் மூலமாகத் திருத்தங் கள் கொண்டுவரப்படுகின்றன, ஆயுதமேந்திய மக்களின் ஏறித்தாக்கும் செய்கையின் மூலமாகக் கேள்விகள் எழுப்பப் படுகின்றன, அரசாங்கத்தைப் பலவந்தமாகத் தூக்கியெறி கிறதின் மூலமாக அரசாங்கத்தின்பாலுள்ள எதிர்ப்பு நிகழ்த் தப்படுகிறது என்பதை அவர்கள் உணரவில்லே.

நம்முடைய நாடோடிக் கதையில் வரும் பிரபல கதா நாயகன் நல்ல அறிவுரையைப் பொருத்தமற்ற காலத்தில் திருப்பிச் சொன்னது போல் மர்த்தீனவை மெச்சிக்கொள் ளும் நம்மவர்கள் தாங்களே சொல்கிறபடி அசல் போர் நடவடிக்கைகள் துவங்கிவிட்ட நேரத்தில் அமைதியான நாடாளுமன்றவாதத்தின் படிப்பினேகளேத் திருப்பிச்சொல்லிக் கொண்டிருக்கிறூர்கள். ''புரட்சியின் நிர்ணயமான வெற்றி யையும்'' ''மக்கள் புரட்சியெழுச்சியையும்'' குறிப்பிட்டுத் தொடங்கும் ஒரு தீர்மானத்தில் ''தீவிரமான எதிர்க்கட்சி'' எனும் கோஷத்தை இவ்வாறு பகட்டாக முன்வைப்பதைப் போல் கேலிக்குரியது வேறெுன்றுமில்லே! கனவான்களே, புரட்சியெழுச்சி நடக்கிற காலத்தில் ''தீவிரமான எதிர்க் கட்சியாக'' இருப்பதின் பொருள் என்ன என்று சிந்தித்துப் பார்க்க முயற்சி செய்யுங்கள். அரசாங்கத்தை அம்பலப் படுத்துவது அல்லது அகற்றுவது என்பதா அதன் பொருள்? அரசாங்கத்துக்கு எதிராக வாக்களிப்பது அல்லது அதன் இரா ணுவத்தைப் பகிரங்கமான போரில் முறியடிப்பது என்பதா அதன் பொருள்? அரசாங்கக் கஜாஞவை மீண்டும் நிரப்ப மறுப்பது அல்லது புரட்சியெழுச்சியின் தேவைகளுக்காகவும் தொழிலாளிகளுக்கும் விவசாயிகளுக்கும் ஆயுதமளிக்கவும் அரசியல் நிர்ணய சபையைக் கூட்டுவதற்காகவும் அந்தக்

கஜானுவைப் புரட்சிகரமான முறையிலே கைப்பற்றுவது என்பதா அதன் பொருள்? கனவான்களே, அம்பலப்படுத்துவது, எதிர்த்து வாக்களிப்பது, மறுப்பது என்கிற மறுநிலைச் செய்கைகளைத்தான் ''தீவிரமான எதிர்க்கட்சி'' எனும் கருத்துருவம் வெளியிடுகிறது என்று உங்களுக்குப் புரியத் தொடங்கவில்லையா? அது ஏன் அப்படி? ஏனென்றால், இந்தக் கருத்துருவம் நாடாளுமன்றப் போராட்டத்துக்கு மட்டுமே பொருந்துகிறது; மேலும், ''நிர்ணயமான வெற்றியை'' உடனடியான போராட்டக் குறிக்கோளாக எவரும் வைக்காதிருக்கிற காலத்தில் இந்தக் கருத்துருவம் நாடாளுமன்றப் போராட்டத்துக்கு மட்டுமே பொருந்துகிறது. அரசியல் ரீதியிலே ஒடுக்கப்பட்டுள்ள மக்கள் வெற்றிக்கான கொடிய போராட்டத்தில் எல்லா முனைகளிலும் உறுதிமிக்க தாக்குதலைத் தொடங்குகிற தருணத்திலிருந்து இவ்விஷயத்தில் விவகாரங்கள் தீவிரமாக மாறி வருகிறதை நீங்கள் புரிந்து கொள்ளத் தொடங்கவில்லையா?

தொழிலாளிகள் நம்மைக் கேட்கிறார்கள்: புரட்சியெழுச்சியின் அவசரமான காரியத்தை மிகுந்த ஆற்றலுடன் தொடங்க வேண்டுமா? துவக்க நிலையிலுள்ள புரட்சியெழுச்சி வெற்றிவாகை சூடுவதற்கு என்ன செய்ய வேண்டும்? வெற்றியை எப்படிப் பயன்படுத்துவது? என்ன வேலைத்திட்டத்தைப்பிறகு செயல்படுத்த முடியும், செயல்படுத்த வேண்டும்? மார்க்ஸியத்தின் பொருளை மேலும் ஆழ்ந்ததாகச் செய்துகொண்டிருக்கும் புதிய-இஸ்க்ராவாதிகள் விடையளிக்கிறார்கள்: நாம் தீவிரப் புரட்சிகரமானஎதிர்க்கட்சியாகஇருந்துவரவேண்டும், என்று.... நல்லது,இந்த வீரர்களைப் போலிப்பண்புவாதத்தில் கைதேர்ந்தவர்கள் என்று நாம் அழைத்தது சரிதானே?

## 10. "புரட்சிகரமான கம்யூன்களும்" பாட்டாளி வர்க்கத்தின், விவசாயி மக்களின் புரட்சிகரமான ஜனநாயகச் சர்வாதிகாரமுறையும்

புதிய-இஸ்க்ரா கைக்கொண்ட அராஜகவாத நிலையில் (''கீழிருந்து'' செய்கை புரிவது மட்டுந்தான், ''கீழிருந்தும் மேலிருந்தும்'' செய்கை புரிவது அல்ல) புதிய-இஸ்க்ரா

மாநாடு நிற்க முடியாது. புரட்சியெழுச்சியின் சாத்தியப் பாட்டை ஒப்புக்கொண்டு வெற்றியின் சாத்தியப்பாட்டையும் தற்காலிகப் புரட்சி அரசாங்கத்தில் கலந்து கொள்வதின் சாத்தியப்பாட்டையும் ஒப்புக்கொள்ளாமலிருப்பதின் அபத்தம் மிகவும் எடுப்பாகத் தெரியும். ஆகவே, பிரச்சினைக்கு மர்த்தீனவ்-மார்த்தவ் அளித்த தீர்வில் அந்தத் தீர்மானம் சில வில்லங்கங்களையும் வரையறைகளையும் புகுத்தியது. இந்த வில்லங்கங்களைக் கவனிப்போம்; இவை இவ்வாறு தீர்மானத்தின் பின்வரும் பிரிவில் கூறப்பட்டுள்ளன:

''புரட்சியெழுச்சியைப் பரவச் செய்வதற்கும் அரசாங்கத்தைச் சீர்குலைப்பதற்கும் உதவும் ஒரே குறிக்கோளுக்காக ஒரு பகுதியளவுக்கான, சமயாசமயங்களில் ஏற்படக் கூடிய அரசதிகாரக் கைப்பற்றுதலின், ஏதாவதொரு நகரத்திலோ வட்டாரத்திலோ புரட்சிகரமான கம்யூன்களை நிலைநாட்டுதலின் சூழ்தகுதியை இந்தப் போர்த்தந்திரம் (''மிகத் தீவிரமான புரட்சிகர எதிர்க்கட்சியாக இருந்து வருவது'') நிச்சயமாக எவ்வகையிலும் விலக்கவில்லை.''

அப்படியானல், கீழிருந்து மட்டுமின்றி மேலிருந்தும் செய்கை புரிவதைக் கோட்பாடுரீதியிலே ஒப்புக்கொள்வதே அதற்குப் பொருள். இஸ்க்ராவில் (இதழ் 93) லெ. மார்த்தவின் பேர்போன கட்டுரையில் வகுக்கப்பட்ட கருத்துரை கைவிடப் பட்டு வ்பெரியோத் பத்திரிகையின் போர்த்தந்திரங்கள்—அதாவது, ''கீழிருந்து'' மட்டுமின்றி ''மேலிருந்தும்'' செய்கை புரிவது—சரி என்று ஏற்றுக் கொள்வதாக அதற்குப் பொருளாகும்.

மேலும், அரசதிகாரக் கைப்பற்றுதலுக்குச் (அது பகுதியளவுக்கானதாகவும், சமயாசமயங்களில் ஏற்படக் கூடியதாயும் மற்றபடியும் இருந்தாலுங்கூட) சமூக-ஜனநாயகவாதிகள் பங்கு கொள்வது மட்டும், பாட்டாளி வர்க்கம் பங்கு கொள்வது மட்டும் முன்னனுமானிக்கப்படவில்லை. ஜனநாயகப் புரட்சியில் அக்கறை கொண்டு தீவிரமாகப் பங்கெடுத்துக் கொள்வது பாட்டாளி வர்க்கம் மட்டுமல்ல என்கிற உண்மையிலிருந்து இது பின்தொடர்கிறது. பரிசீலனையில் இருக்கும் தீர்மானத்தின் துவக்கத்தில் கூறியுள்ள படி

''பாட்டாளி வர்க்கம் அல்லாத குழுக்களும்''(புரட்சியெழுச்சி பற்றிய மாநாட்டுத் தீர்மானத்தில் பயன்படுத்தப்பட்டுள்ள சொற்கள் இவை), அதாவது முதலாளி வர்க்கமும் அதில் பங்கெடுத்துக் கொள்கிற நிலையில் புரட்சியெழுச்சி ''மக்களுடையதாக'' இருக்கிறதிலிருந்து இது பின்தொடர்கிறது. எனவே, சிறுமுதலாளி வர்க்கத்தாருடன் கூட்டாக சோஷலிஸ்டுகள் ஒரு தற்காலிகப் புரட்சி அரசாங்கத்தில் எவ்விதப் பங்கெடுப்பும் தொழிலாளி வர்க்கத்துக்குத் துரோகம் செய்வதாகும் எனும் கோட்பாட்டை மாநாடு தூக்கியெறிந்து விட்டது, அதைத்தான் வ்பெரியோத் சாதிக்க முயன்றது. ''துரோகச் செய்கை'' பகுதியளவுக்கானது, சமயாசமயங்களில் ஏற்படக் கூடியது, ஓரிடத்துக்குரியது என்பதனுலெல்லாம் துரோகமற்றதாகிவிடாது. எனவே, தற்காலிகப் புரட்சி அரசாங்கத்தில் பங்கெடுத்துக் கொள்வது கொச்சையான ழொரேஸ்வாதத்துக்குச் சமம் எனும் கருத்தை மாநாடு தூக்கியெறிந்துவிட்டது, அதைத்தான் வ்பெரியோத் சாதிக்க முயன்றது. ஓர் அரசாங்கத்தின் அதிகாரம் பல நகரங்களுக்குப் பரவச் செய்யாமல் ஒரு நகரத்துடன் இருந்துவிடுகிறதினுலோ, பல வட்டாரங்களுக்குப் பரவச் செய்யாமல் ஒரு வட்டாரத்துடன் இருந்துவிடுகிறதினுலோ, அல்லது அது தாங்கியிருக்கும் பெயரின் காரணத்தாலோ அரசாங்கமில்லை என்ருகிவிடாது. எனவே புதிய-இஸ்க்ரா முயன்றபடி இந்தப் பிரச்சினையின் கோட்பாடுரீதியான முன்வைப்பை மாநாடு கைவிட்டுவிட்டது.

புரட்சி அரசாங்கங்களை அமைப்பதின் மீதும் அவற்றில் பங்கெடுத்துக் கொள்வதின் மீதும் (இவை இன்று கோட்பாடு ரீதியிலே ஒப்புக் கொள்ளப்படுகின்றன) மாநாடு விதித்த வரையறைகள் நியாயமானவையா என்று பார்ப்போம். ''சமயாசமயங்களில் ஏற்படக் கூடியது'' என்பதற்கும் ''தற்காலிகமானது'' என்பதற்கும் வேறுபாடு இருப்பதாக நமக்குத் தெரியவில்லை. முதலில் சொன்ன சொல் ''புதியது'', திசைச் சொல்லும் ஆகும், தெளிவான சிந்தனையின்மையை மறைப்பதற்கான வெறும் திரையே என்று அஞ்சுகிருேம். அது ''பொருளாழம் உள்ளதாகத்'' தோன்றுகிறது, ஆனுல்

உண்மையில் மேலும் புரியாத, குழப்பமான சொல்லாகும். ஒரு நகரத்திலோ வட்டாரத்திலோ பகுதியளவுக்கான ''அரசதிகாரக் கைப்பற்றுதலின்'' ''சூழ்தகுதிக்கும்'' அரசு முழுவதையும் சேர்ந்த ஒரு தற்காலிகப் புரட்சி அரசாங்கத்தில் கலந்து கொள்வதற்கும் இடையே என்ன வேற்றுமை? ''நகரங்கள்'' என்பதில் ஜனவரி 9ன் நிகழ்ச்சிகள் நடந்த செயின்ட் பீட்டர்ஸ்பர்க் போன்ற நகரமும் அடங்கவில்லையா? வட்டாரங்கள் என்பதில் பல அரசுகளை விடப் பெரிதான காக்கஸஸ் அடங்கவில்லையா? வட்டாரத்தை விடுங்கள், தனியொரு நகரத்திலேகூட நாம் ''அரசதிகாரத்தைக் கைப்பற்றிய'' உடனே சிறைச்சாலைகள், போலீஸ், கஜானு முதலியவற்றை என்ன செய்வது எனும் பிரச்சினைகள் (இவை ஒரு காலத்தில் புதிய-இஸ்க்ராவைச் சங்கடப்படுத்தியதுண்டு) நம்மை எதிர்கொள்ளாமலிருக்குமா? நம்மிடம் போதிய சக்திகள் இல்லாமற்போனுல், புரட்சியெழுச்சி முற்றும் வெற்றி பெறவில்லையானுல், அல்லது வெற்றி நிர்ணயமானதாக இல்லாவிட்டால் தனித்தனி உள்ளூர்கள், தனித்தனி நகரங்கள் போன்றவற்றில் தற்காலிகப் புரட்சி அரசாங்கங்கள் ஒருக்கால் நிறுவப்பெறக் கூடும் என்பதை எவரும் மறுக்க மாட்டார்கள் என்பது உண்மை. ஆனுல், கனவான்களே, விவகாரத்திலிருக்கும் விஷயத்துக்கும் அதற்கும் என்ன சம்பந்தம்? தீர்மானத்தின் துவக்கத்தில் ''புரட்சியின் நிர்ணயமான வெற்றி'' பற்றியும் ''வெற்றிகரமான மக்கள் புரட்சியெழுச்சி'' பற்றியும் நீங்களே பேசவில்லையா?? பாட்டாளி வர்க்கத்தின் கவனத்தையும் குறிக்கோள்களையும் பிளவுபடுத்தி, அதன் கவனத்தைப் பொதுவானதின் மீது, ஒற்றையின் மீது, உள்ளிணக்க முள்ளதின் மீது, முழுமையின் மீது செலுத்துவதற்குப் பதிலாக ''ஒரு பகுதியானதின்'' மீது செலுத்தும் அராஜகவாதிகளின் வேலையை என்றிருந்து சமூக-ஜனநாயகவாதிகள் எடுத்துக் கொண்டிருக்கிருர்கள்? ஒரு நகரத்தில் ''அரசதிகாரத்தைக் கைப்பற்றுவதை'' முன்னனுமானித்துக் கொண்டபடியே ''புரட்சியெழுச்சியைப் பரவச் செய்வது'' பற்றி நீங்களே பேசுகிறீர்கள்—மற்ருெரு நகரத்துக்கு என்று நினைக்கலாமா?—எல்லா நகரங்களுக்கும் என்று நம்பலாமா?

கனவான்களே, உங்கள் மூலவாசகங்களைப் போலவே உங்கள் முடிவுகளும் பிழையாகவும் ஒழுங்கின்றியும் முரணுகவும் குழப்பமாகவும் உள்ளன. பொதுப்படையாகத் தற்காலிகப் புரட்சி அரசாங்கத்தைப் பற்றிய பிரச்சினைக்கு ரு.ச.ஜ.தொ. கட்சியின் மூன்ருவது காங்கிரஸ் முழுமையான, தெளிவான விடை அளித்தது. இந்த விடை பகுதியளவுக்கான தற்காலிக அரசாங்கங்கள் பற்றிய எல்லா வழக்குகளுக்கும்கூடப் பொருந்தும். ஆனுல், பிரச்சினையின் ஒரு பகுதியைச் செயற்கையாகவும் தான்தோன்றித்தனமாகவும் தனிமைப்படுத்துவதின் வழியாக மாநாட்டின் விடை மொத்தத்தில் பிரச்சினையை வெறுமே தட்டிக்கழிக்கிறது (அதில் வெற்றிபெறவும் இல்லை), குழப்பம் உண்டாக்குகிறது.

''புரட்சிகரமான கம்யூன்கள்'' என்பதின் பொருள் என்ன? இந்தக் கருத்துருவம் ''ஒரு தற்காலிகப் புரட்சி அரசாங்கம்'' என்பதினின்று வேறுபட்டதா? அப்படியானுல், எந்த அம்சத்தில் வேறுபடுகிறது? மாநாட்டின் கனவான்களுக்கே இது தெரியாது. மிக அடிக்கடி நடக்கிறபடி, புரட்சிகரமான சிந்தனையிலுள்ள குழப்பம் அவர்களைப் புரட்சிகரமான பகட்டுப் பேச்சுக்குக் கொண்டுபோய்விடுகிறது. பார்க்கப் போனுல், சமூக-ஜனநாயகவாதத்தின் பிரதிநிதிகள் நிறைவேற்றிய ஒரு தீர்மானத்தில் ''புரட்சிகரமான கம்யூன்'' எனும் சொற்களைப் பயன்படுத்தியது புரட்சிகரமான பகட்டுப் பேச்சு தவிர வேருென்றுமில்லை. எதிர்காலப் பணிகளை மூடிமறைப்பதற்காகத் தேய்ந்தொழிந்து போன பழங்காலத்தைச் சேர்ந்த ''கவர்ச்சிகரமான'' சொற்களைப் பயன்படுத்தும் இப்படிப்பட்ட பகட்டுப் பேச்சை மார்க்ஸ் அடிக்கடி கண்டித்தார். இவ்வகை வழக்குகளில் ஏற்கெனவே வரலாற்றில் தன் பாத்திரத்தை வகித்து முடித்த ஒரு சொல்லின் கவர்ச்சி அத்தனையும் பயனில்லாத, தீங்கான பொய்ப் பகட்டாகும், குழந்தையின் கிலுகிலுப்பையாகும். நாம் ஏன் ஒரு தற்காலிகப் புரட்சி அரசாங்கத்தை ஏற்படுத்த விரும்புகிறேம், ஏற்கெனவே தொடங்கிவிட்டிருக்கும் மக்கள் புரட்சியெழுச்சி வெற்றியைத் தொடர்ந்த மறுநாளே அரசாங்கத்தின் மேல் நாம் நிர்ணயமான செல்வாக்குச் செலுத்துவதானுல் திட்டமாக

என்ன மாற்றங்களைக் கொண்டுவருவோம் என்பதைப் பற்றி தொழிலாளிகளுக்கும் மக்களுக்கும் ஒரு தெளிவான, ஐயந் திரிபுக்கிடமற்ற கருத்தைக் கொடுக்க வேண்டும். அரசியல் தலைவர்களை எதிர்கொண்டிருக்கும் பிரச்சினைகள் இவை.

ரு.ச.ஜ.தொ. கட்சியின் மூன்றாவது காங்கிரஸ் இந்தப் பிரச்சினைகளுக்கு முழுத்தெளிவுடன் விடையளித்தது, இந்த மாற்றங்களுக்கான ஒரு முழுமையான வேலைத்திட்டத்தை—நம் கட்சியின் குறைந்தபட்ச வேலைத்திட்டத்தை—தயாரித்தது. ஆனால்' ''கம்யூன்'' எனும் சொல் ஒரு விடையும் அளிக்கிறதாயில்லை. கேட்பதற்கு இனிமையான சொற்றொடரின் அல்லது பொருளற்ற சொற்பெருக்கின் தொலைவான எதிரொலியைக் கொண்டு வெறுமே மக்களின் மனத்தைக் குழப்பி விடுகிறது. எடுத்துக்காட்டாக, 1871ன் பாரிஸ் கம்யூனின் நினைவை எவ்வளவுக்கெவ்வளவு போற்றிக் கொள்கிறோமோ அவ்வளவுக்கவ்வளவு அதன் தவறுகளையும் அதனைச் சூழ்ந்திருந்த தனி நிலைமைகளையும் பகுத்தாய்ந்திடாமல் போகிற போக்கில் மேம்போக்காகக் குறிப்பிடுவது அனுமதிக்கத்தக்கதல்ல. அவ்வாறு செய்வது கம்யூனின் ஒவ்வொரு செயலையும் 1874ல் தங்கள் அறிக்கையில் போற்றி வணங்கிய பிளாங்கிவாதிகளின் (இவர்களை எங்கெல்ஸ் கேலி செய்தார்) அபத்தமான உதாரணத்தைத் திருப்பிச் செய்வதாகும்.[66] தீர்மானத்தில் சொல்லப்பட்டுள்ள இந்தப் ''புரட்சிகரமான கம்யூனைப்'' பற்றி ஒரு தொழிலாளி கேட்டால் மாநாட்டுக்காரர் என்ன பதில் அளிப்பார்? வரலாறு கண்ட ஒரு குறிப்பிட்ட தொழிலாளர் அரசாங்கத்தின் பெயர் இது, இந்த அரசாங்கம் ஜனநாயகப் புரட்சியின், சோஷலிஸப் புரட்சியின் அம்சங்களுக்கிடையே வேறுபடுத்திப் பார்க்கத் திறனற்றிருந்தது, அக்காலத்தில் இவ்வாறு பார்த்திருக்கவும் முடியாது, அந்த அரசாங்கம் குடியரசுக்காகப் போராடும் பணிகளை சோஷலிஸத்துக்காகப் போராடும் பணிகளோடு போட்டுக் குழப்பிக் கொண்டது, அது வெர்சேயை[67] எதிர்த்து வலுவான இராணுவத் தாக்குதலைத் தொடங்கச் சக்தியற்றிருந்தது, பிரெஞ்சு தேசிய வங்கியைக் கைப்பற்றிக் கொள்ளாமல் விட்டதில் தவறு செய்தது முதலியவாறுதான் அவர் அந்தத் தொழி

லாளிக்குக் கூறியிருக்க முடியும். சுருங்கச்சொன்னல், உங்கள் விடையில் பாரிஸ் கம்யூனேக் குறிப்பிட்டாலும் சரி, வேறெந்த கம்யூனேக் குறிப்பிட்டாலும் சரி, உங்கள் விடை இப்படித் தான் இருக்கும்: நம் அரசாங்கம் இருக்கக்கூடாத மாதிரி அமைந்த ஓர் அரசாங்கம், என்று. அருமையான பதில், உண்மைதான்! கட்சியின் நடைமுறை வேலேத்திட்டத்தைப் பற்றித் தீர்மானம் ஒன்றும் சொல்லாமல் பொருத்தமின்றி வரலாற்றிலிருந்து பாடங்களேக் கொடுக்கத் தொடங்கும் போது இது புரட்சியாளனின் ஏட்டுப் புலமையைச் சார்ந்த உபதேசம் செய்யும் போக்கையும் செயல்திறமின்மையையும் காட்டவில்லேயா? நம் மீது வெற்றியின்றிச் சுமத்திய அதே தவற்றை—அதாவது, ''கம்யூன்கள்'' எவையும் வேறுபடுத்திப் பார்க்க முடியாமற்போன ஜனநாயகப் புரட்சியையும் சோஷலிஸப் புரட்சியையும் குழப்பிக் கொள்வதை—இது வெளிப்படுத்தவில்லேயா?

புரட்சியெழுச்சியைப் பரவச் செய்வதும் அரசாங்கத் தைச் சீர்குலேப்பதும் ஒரு தற்காலிக அரசாங்கத்தின் (இது மிகவும் பொருத்தமின்றி ''கம்யூன்'' என்று வர்ணிக்கப் படுகிறது) ''ஒரே குறிக்கோளாக'' முன்வைக்கப்படுகிறது. ''ஒரே'' என்கிற சொல்லே அதன் அசல் அர்த்தத்தில் எடுத்துப் பார்த்தால் அது மற்றெல்லாக் குறிக்கோள்களேயும் அகற்றிவிடுகிறது; ''கீழிருந்து மட்டுமே'' எனும் அபத்த மான தத்துவத்தின் எதிரொலியே அது. இவ்வாறு மற்ற குறிக்கோள்களே அகற்றுவது கிட்டப் பார்வைக்கும் சிந்தனேயின்மைக்கும் மற்ருெரு எடுத்துக்காட்டாகும். ஒரு ''புரட்சிகரமான கம்யூன்'', அதாவது ஒரு புரட்சிகரமான அரசாங்கம் ஒரு நகரத்தில் மட்டும் இருந்தால்கூட எல்லா அரசு விவகாரங்களேயும் தவிர்க்க முடியாதபடி நிர்வகிக்க வேண்டும் (தற்காலிகமாயிருந்தாலுங்கூட, ''பகுதியளவுக் காகவும் சமயாசமயங்களில் ஏற்படுவதாகவும் இருந்தாலுங் கூட''); சிறகுக்குள் தலேயை மறைத்துக் கொண்டு இதைப் பார்க்க மறுப்பது அடி முட்டாள்தனமாகும். இந்த அரசதி காரம் எட்டு மணிநேர வேலேநாளேச் சட்டமாக்க வேண்டி யிருக்கும், தொழிற்சாலேகள் மீது தொழிலாளிகளின்

கண்காணிப்பை ஏற்படுத்த வேண்டியிருக்கும், எல்லோருக்கும் இலவசக் கலவியை ஏற்படுத்த வேண்டியிருக்கும், நீதிபதிகளைத் தேர்ந்தெடுப்பதைப் புகுத்த வேண்டியிருக்கும், விவசாயிகளின் கமிட்டிகளை அமைக்க வேண்டியிருக்கும்.... சுருங்கச் சொல்லப் போனால், அது பல சீர்திருத்தங்களை நிச்சயமாக நிறைவேற்ற வேண்டியிருக்கும். இந்தச் சீர்திருத்தங்களைப் ''புரட்சியெழுச்சியைப் பரவச் செய்வதற்கு... உதவுகிறவை'' என்று பெயரிட்டு அழைப்பது சொற்களோடு விளையாடுவதாகும், முழுத்தெளிவு இருந்து தீரவேண்டிய ஒரு விஷயத்தில் வேண்டுமென்றே மேலும் அதிகக் குழப்பம் உண்டாக்குவதாகும்.

---

நம் கட்சியில் மறுவுயிர்ப்பு பெற்றுள்ள ''பொருளாதார வாதத்தின்'' கோட்பாடு ரீதியான போக்குகளை விமர்சிப்பதற்குப் புதிய-இஸ்க்ரா மாநாட்டுத் தீர்மானத்தின் இறுதிப் பகுதி புதிய விஷயாதாரம் எதுவும் கொடுக்கவில்லை; எனினும், மேலே சொன்னதை ஓரளவுக்கு வேறொரு கோணத்திலிருந்து அது விளக்கிக் காட்டுகிறது.

அந்த இறுதிப் பகுதி பின்வருமாறு:

''ஒரேயொரு சந்தர்ப்பத்தில் மட்டுந்தான்—அதாவது, சோஷலிஸத்தைச் சாதிப்பதற்கான நிலைமைகள் ஏற்கெனவே ஓரளவுக்குப் (?) பக்குவப்பட்டிருக்கும்படியான முன்னேறிய மேலைய ஐரோப்பிய நாடுகளுக்குப் புரட்சி பரவுகிற சந்தர்ப்பத்தில்தான்—சமூக-ஜனநாயகவாதம் சொந்தத்தில் முன்கையெடுத்து அரசதிகாரத்தைக் கைப்பற்றி முடிந்த வரை நெடுங்காலத்துக்கு வைத்திருக்கும் திசையில் முயற்சிகளைச் செலுத்த வேண்டும். அந்தச் சந்தர்ப்பத்தில் ருஷ்யப் புரட்சியின் குறுகிய வரலாற்று வரம்புகளைக் கணிசமாக விரிவாக்க முடியும், சோஷலிஸ மாற்றங்கள் செய்யும் பாதையில் இறங்குவதற்கான சாத்தியப்பாடும் உதிக்கும்.

''புரட்சியின் போக்கில் ஒன்றையொன்று தொடர்ந்து வரக்கூடிய எல்லா அரசாங்கங்கள்பாலும் சமூக-ஜனநாயகவாதம் தன்னுடைய தீவிரப் புரட்சிகரமான எதிர்க்கட்சி நிலையைப் புரட்சிக் காலப்பகுதி முழுவதிலும் நீடித்து வைத்திருக்கும் என்று எதிர்பார்த்து அந்த எதிர்பார்ப்பைத்

தன்னுடைய போர்த்தந்திரங்களுக்கு அடிப்படையாகக் கொள்வதின் மூலமாகச் சமூக-ஜனநாயகவாதம் அரசாங்க அதிகாரம் தன் கையில் விழுமேயானுல் (??) அதைப் பயன் படுத்துவதற்குத் தன்னைச் சிறப்பாகத் தயார்படுத்திக்கொள்ள முடியும்.''

இங்கேயுள்ள அடிப்படைக் கருத்து வ்பெரியோத் பல தடவை வரையறுத்து வைத்த ஒன்றுதான். ஒரு ஜனநாயகப் புரட்சியில் சமூக-ஜனநாயகவாதம் முழுவெற்றி பெறுவதைப் பற்றி—அதாவது, பாட்டாளி வர்க்கத்தின், விவசாயி மக்களின் புரட்சிகரமான-ஜனநாயகச் சர்வாதிகாரத்தைப் பற்றி—நாம் (மர்த்தீனவ் பயப்படுவது போல்) பயப்படக் கூடாது என்று வ்பெரியோத் கூறியிருக்கிறது; ஏனெனில் நாம் ஐரோப்பாவைத் தட்டியெழுப்புவதற்கு இவ்வகை வெற்றி உதவும்; முதலாளி வர்க்க நுகத்தடியைத் தூக்கியெறிந்துவிட்டபின் ஐரோப்பாவின் சோஷலிஸ்டுப் பாட்டாளி வர்க்கம் தன் முறைக்கு நாம் சோஷலிஸப் புரட்சியைச் செய்து முடிக்க உதவும். ஆனுல் புதிய-இஸ்க்ராவின் வியாக்கியானம் இக் கருத்தை எப்படிக் கெடுக்கிறது என்று பாருங்கள். விபரங்களில் நாம் இறங்கப் போவதில்லை. அதிகாரத்தைக் கைப் பற்றுவது தீங்கான போர்த்தந்திரங்கள் என்று கருதும் ஒரு வர்க்க உணர்வுள்ள கட்சியின் கையில் அதிகாரம் ''விழ'' முடியும் எனும் அபத்தமான அனுமானம்; ஐரோப்பாவில் சோஷலிஸத்துக்கான நிலைமைகள் ஓரளவுக்கல்லாமல் பொதுவாகவே பக்குவப்பட்டிருக்கும் எனும் அனுமானம்; நம் கட்சி வேலைத்திட்டத்தில் கண்டிருப்பது சோஷலிஸப் புரட்சியே தவிர சோஷலிஸ மாற்றங்கள் அல்ல என்கிற அனுமானம் ஆகிய விபரங்களில் நாம் இறங்கப்போவதில்லை. வ்பெரியோத் பத்திரிகையின் கருத்துக்கும் தீர்மானத்தில் முன்வைக்கப்பட்டிருக்கும் கருத்துக்கும் இடையேயுள்ள முதன்மையான, அடிப்படையான வேற்றுமையை எடுத்துக் கொள்வோம். ஜனநாயகத்திற்கான போராட்டத்தில் வெற்றி பெற்று, ஐரோப்பாவினுள் புரட்சியைக் கொண்டுவருவதற்கு இந்த வெற்றியைப் பயன்படுத்துவது என்கிற செயல்பூர்வமான பணியை ருஷ்யாவின் புரட்சிகரமான பாட்டாளி

வர்க்கத்திற்கு வ்பெரியோத் அளித்தது. நம்முடைய ''நிர்ணயமான வெற்றிக்கும்'' (புதிய-இஸ்க்ரா அர்த்தத்தில் அல்ல) ஐரோப்பாவில் புரட்சிக்கும் இடையேயுள்ள இந்த இணைப்பைத் தீர்மானம் புரிந்து கொள்ளத் தவறுகிறது; எனவே, அது பாட்டாளி வர்க்கத்தின் பணிகளைப் பற்றியோ அதன் வெற்றிக்குரிய வாய்ப்பு நிலைகளைப்பற்றியோ பேசாமல் பொதுப்படையாகச் சாத்தியப்பாடுகளில் ஒன்றைப் பற்றித் தான் பேசுகிறது: அதாவது, ''புரட்சி பரவுகிற சந்தர்ப்பத்தில்'' என்பதைப் பற்றித்தான் பேசுகிறது.... சமுதாய வளர்ச்சியின் ஒரு குறிப்பிட்ட கட்டத்தில் உடனடியாகச் சாதிக்க முடிகிறதை மனத்திற்கொண்டும் சோஷலிஸத்திற்கான போராட்டத்திற்கு ஜனநாயக வகைப்பட்ட முன்தேவையாக முதலில் சாதித்துத் தீரவேண்டியிருக்கிறதை மனத்திற் கொண்டும் பாட்டாளிவர்க்கத்தின் நலன்களுக்காக ''அரசாங்க அதிகாரத்தை'' எப்படிப் ''பயன்படுத்த'' முடியும், ''பயன்படுத்த'' வேண்டும் என்பதை வ்பெரியோத் நேராகவும் திட்டமாகவும் குறிப்பிட்டது—இது ருஷ்யாவின் சமூக-ஜனநாயகத் தொழிலாளர் கட்சியின் மூன்றுவது காங்கிரஸ் தீர்மானத்தில் சேர்க்கப்பட்டிருக்கிறது. இங்கேயும் (மாநாட்டுத்) தீர்மானம் ''பயன்படுத்துவதற்குத் தன்னைத் தயார் படுத்திக் கொள்ள முடியும்'' என்று சொல்லும் போது எப்படித் தன்னுல் முடியும், எப்படித் தன்னைத் தயார்படுத்திக் கொள்வது, எந்த நோக்கத்திற்காகப் பயன்படுத்துவது என்பதைச் சொல்லத் தவறி எட்டிவர முடியாத அளவுக்குப் பின்தங்கியிருக்கிறது. எடுத்துக்காட்டாக, புதிய-இஸ்க்ரா வாதிகள் கட்சியில் தங்களுடைய தலைமை நிலையைப் ''பயன்படுத்துவதற்குத் தங்களைத் தயார் செய்து கொள்ள முடியும்'' என்பதில் நமக்கு ஐயமில்லை, ஆனுல் விஷயம் என்னவென்றுல் அப்படிப் பயன்படுத்திக் கொள்வதில் அவர்களுக்குள்ள அனுபவமும் அவர்களுடைய தயாரிப்பும் சாத்தியப்பாடு எதார்த்தமாவதற்கான நம்பிக்கையை அவ்வளவாக அளிப்பதாயில்லை....

''அரசதிகாரத்தை நீடித்து வைத்திருப்பதற்கான உண்மையான சாத்தியப்பாடு'' எங்குள்ளது என்று வ்பெரியோத்

மிகத் திட்டத்துடன் கூறியது—அதாவது, பாட்டாளி வர்க்கத்தின், விவசாயி மக்களின் புரட்சிகரமான-ஜனநாயகச் சர்வாதிகாரத்திலே உள்ளது என்று, எதிர்ப்புரட்சியின் எல்லாச் சக்திகளேயும் மிஞ்சும் திறமுள்ள அவற்றின் கூட்டு சக்தியிலே உள்ளது என்று, ஜனநாயக மாற்றங்கள் பற்றிய அவற்றின் நலன்கள் தவிர்க்க முடியாதபடி ஒத்துப்போவதிலே உள்ளது என்று. இங்கேயும் மாநாட்டுத் தீர்மானம் நமக்கு உருப்படியாக எதையும் கொடுக்கவில்லை, வெறுமே பிரச்சினையைத் தட்டிக்கழிக்கிறது. ருஷ்யாவில் அரசதிகாரத்தை நீடித்து வைத்திருக்கும் சாத்தியப்பாடு ருஷ்யாவிலேயேயுள்ள சமுதாயச் சக்திகளின் அமைவைக் கொண்டும் நம் நாட்டில் இன்று நிகழ்ந்து வரும் ஜனநாயகப் புரட்சியின் சூழ்நிலைமைகளேக் கொண்டும் நிர்ணயிக்கப்பட வேண்டும் என்பது உறுதி. ஐரோப்பாவில் பாட்டாளி வர்க்கத்தின் வெற்றி (ஐரோப்பாவுக்குப் புரட்சி பரவுவதற்கும் பாட்டாளி வர்க்கத்தின் வெற்றிக்கும் இன்னும் வெகு தூரம் இருக்கிறது) ருஷ்ய முதலாளி வர்க்கத்தின் கடுமையான எதிர்ப்புரட்சிப் போராட்டத்தை எழச் செய்யும்—அப்படியிருந்தும் புதிய-இஸ்க்ராவாதிகளின் தீர்மானம் இந்த எதிர்ப்புரட்சிச் சக்தியைப்பற்றி (ரு.ச.ஜ.தொ. கட்சியின் மூன்ருவது காங்கிரஸ் தீர்மானத்தில் இதன் குறிபொருள் மதிப்பீடு செய்யப்பட்டது) ஒரு வார்த்தை சொல்லவில்லை. குடியரசுக்காகவும் ஜனநாயகத்துக்காகவும் நாம் நடத்தும் போராட்டத்தில் நாம் பாட்டாளி வர்க்கத்தை மட்டுமின்றி விவசாயி மக்களேயும் நம்பி நிற்க முடியாவிட்டால் நாம் ''அரசதிகாரத்தை நீடித்து வைத்திருக்கும்'' வாய்ப்புநிலை நம்பிக்கைக்கிடமற்றதாயிருக்கும். ஆனுல் அது நம்பிக்கைக்கிடமற்றதல்லாததாயிருக்கும் பட்சத்தில், ''ஜாராட்சி மீது புரட்சியின் நிர்ணயமான வெற்றி'' அப்படிப்பட்ட சாத்தியப்பாட்டைத் திறந்துவிடுமேயானுல் அப்போது அதை நாம் குறிப்பிட்டாக வேண்டும், அதை எதார்த்தமாக மாற்றுவதற்குச் செயல்பூர்வமாக அறைகூவியழைக்க வேண்டும், மேலும் ஐரோப்பாவுக்குப் புரட்சி பரவும்போது மட்டுமின்றி அங்கே புரட்சியைக் கொண்டு செல்வதற்காகவும் நாம் நடைமுறைக் கோஷங்களேக் கொடுக்க

வேண்டும். வால்பிடிக்கும் போக்குள்ள சமூக-ஜனநாயகவாதிகள் ''ருஷ்யப் புரட்சியின் குறுகிய வரலாற்று வரம்புகளைப்'' பற்றிக் குறிப்பிடுவது அவர்கள் இந்த ஜனநாயகப் புரட்சியின் குறிக்கோள்களைப் பற்றியும் அதில் பாட்டாளி வர்க்கத்தின் தலைமைப் பாத்திரத்தைப் பற்றியும் வரம்புக்குட்பட்ட அறிவைப் பெற்றிருப்பதை வெறுமே மறைப்பதற்குத்தான் பயன்படுகிறது!

''பாட்டாளி வர்க்கத்தின், விவசாயி மக்களின் புரட்சிகரமான-ஜனநாயகச் சர்வாதிகாரம்'' எனும் கோஷத்துக்குத் தெரிவிக்கும் ஆட்சேபணைகளில் ஒன்று, சர்வாதிகாரம் ஒரு ''ஒற்றைச் சித்தத்தை'' முன்னனுமானித்துக் கொள்கிறது (இஸ்க்ரா, இதழ் 95), பாட்டாளி வர்க்கத்துக்கும் சிறு முதலாளி வர்க்கத்தினருக்கும் உரிய ஒற்றைச் சித்தம் இருக்க முடியாது என்பது. இந்த ஆட்சேபணை சரியல்ல, ஏனெனில், ''ஒற்றைச் சித்தம்'' எனும் கருத்தினத்தைக் கருத்தியலான, ''இயக்கமறுப்பியலான'' வகையில் வியாக்கியானப்படுத்துவதை அது ஆதாரமாகக் கொண்டிருக்கிறது. ஒற்றைச் சித்தம் ஓர் அம்சத்தில் இருக்கக்கூடும், வேறொன்றில் இல்லாதிருக்கக் கூடும். சோஷலிஸத்தின் பிரச்சினைகளிலும் சோஷலிஸத்திற்கான போராட்டத்திலும் ஒற்றுமை இல்லாமை ஜனநாயகத்துவத்தின் பிரச்சினைகளிலும் குடியரசுக்கான போராட்டத்திலும் சித்தத்தின் ஒற்றுமையை விலக்கவில்லை. இதை மறப்பது ஜனநாயகப் புரட்சிக்கும் சோஷலிஸப் புரட்சிக்கும் உள்ள தர்க்கரீதியான, வரலாற்று வழிப்பட்ட வேற்றுமையை மறப்பதற்குச் சமமாகும். இதை மறப்பது மக்கள் முழுமையின் புரட்சியாக இருக்கும் ஜனநாயகப் புரட்சியின் தன்மையை மறப்பதற்குச் சமமாகும்; அது ''மக்கள் முழுமையின்'' புரட்சியாக இருக்கிறதென்றால் அதற்கு அர்த்தம் இந்தப் புரட்சி மக்கள் முழுவதின் தேவைகளையும் எந்த அளவுக்குப் பொருத்தமாயுள்ளதோ அந்த அளவுக்கு ''சித்தத்தின் ஒற்றுமை'' இருக்கிறது. ஜனநாயகத்துவத்தின் எல்லைகளுக்கு அப்பால் பாட்டாளி வர்க்கத்துக்கும் விவசாயி முதலாளி வர்க்கத்தினருக்கும் ஒற்றைச் சித்தம் இருக்கும் பிரச்சினை இருக்க முடியாது. அவற்றிடையே வர்க்கப் போராட்டம்

தவிர்க்க முடியாததாகும், எனினும் ஜனநாயகக் குடியரசி லேதான் இந்தப் போராட்டம் சோஷலிஸத்துக்காக மக்கள் நடத்தும் மிக ஆழமான, விரிந்து பரந்த போராட்டமாக இருக்கும். உலகத்திலுள்ள மற்றெல்லாவற்றையும் போலவே பாட்டாளி வர்க்கத்தின், விவசாயி மக்களின் புரட்சிகரமான-ஜனநாயகச் சர்வாதிகாரத்துக்குங்கூட ஓர் இறந்தகாலமும் எதிர்காலமும் உண்டு. எதேச்சாதிகார முறை, பண்ணை யடிமை முறை, முடியரசு, சிறப்புரிமை அதன் இறந்த காலமாகும். இந்த இறந்த காலத்தை எதிர்த்து நடக்கும் போராட்டத்தில், எதிர்ப்புரட்சியை எதிர்த்து நடக்கும் போராட்டத்தில் பாட்டாளி வர்க்கத்தின், விவசாயி மக்களின் ''ஒற்றைச் சித்தம்'' சாத்தியமே, ஏனெனில் இங்கே நலன் களின் ஒற்றுமை இருக்கிறது.

அதன் எதிர்காலம் தனிச்சொத்துடைமையை எதிர்த்து நடக்கும் போராட்டமாகும், முதலாளியை எதிர்த்துக் கூலிக் குழைக்கும் தொழிலாளி நடத்தும் போராட்டமாகும், சோஷலிஸத்துக்காக நடக்கும் போராட்டமாகும். இங்கே சித்தத்தின் ஒற்றுமை சாத்தியமில்லை.* இங்கே நம் முன் உள்ள பாதை எதேச்சாதிகார முறையிலிருந்து குடியரசுக்குப் போவது அல்ல, ஒரு சிறுமுதலாளித்துவக் குடியரசிலிருந்து சோஷலிஸத்துக்குப் போவதாகும்.

நிலவர வரலாற்றுச் சூழ்நிலைமைகளில் இறந்த காலத்தின் அம்சங்கள் எதிர்காலத்தின் அம்சங்களோடு பின்னிப் பிணைந்து விடுவது உண்மையே. இரண்டு பாதைகளும் ஒன்றையொன்று கடக்கின்றன. கூலியுழைப்பும் தனிச் சொத்துடைமையை எதிர்த்து அது நடத்தும் போராட்டமும் எதேச்சாதிகார முறையின்கீழும் உண்டு; பண்ணையடிமை முறையின்கீழும் அது உதிக்கிறது. எனினும், நாம் தர்க்கரீதியாகவும் வரலாற்று

---

* சுதந்தரம் நிலவும் நிலைமைகளில் முன்னைவிட விரிவாக வும் விரைவாகவும் நிகழும் முதலாளித்துவத்தின் வளர்ச்சி தவிர்க்க முடியாதவாறு சித்தத்தின் ஒற்றுமைக்கு விரைவில் முற்றுப்புள்ளி வைத்துவிடும். எவ்வளவு விரைவாக எதிர்ப் புரட்சியும் பிற்போக்கும் நசுக்கப்பட்டுவிடுகின்றனவோ அவ்வளவு விரைவாக இது நிகழும்.

வழியிலும் முக்கியமான வளர்ச்சிக் கட்டங்களை வேறுபடுத்திப் பார்ப்பதைக் கொஞ்சமேனும் இது தடுக்கிறதில்லை. நாமனைவரும் முதலாளித்துவப் புரட்சியையும் சோஷலிஸப் புரட்சியையும் எதிர்மாறு வேறுபடுத்தி நிறுத்துகிறோம்; நாமனைவரும் அவற்றைக் கறாராக வேறுபடுத்திப் பார்ப்பதின் முற்றவசியத்தை வலியுறுத்துகிறோம். என்றபோதிலும், வரலாற்றுப் போக்கில் இவ்விரண்டு புரட்சிகளின் தனித்தனி அம்சங்கள், தனிப்பட்ட அம்சங்கள் பின்னிப் பிணைந்துவிடுவதை மறுக்க முடியுமா? ஐரோப்பாவில் ஜனநாயகப் புரட்சிகளின் காலப்பகுதியில் பல சோஷலிஸ்டு இயக்கங்களையும் சோஷலிஸத்தை நிலைநாட்டப் பார்த்த முயற்சிகளையும் காணவில்லையா? மேலும், ஐரோப்பாவில் எதிர்கால சோஷலிஸப் புரட்சி ஜனநாயகத்துவம் என்கிற துறையில் வெகுவாகச் செய்யாது விட்டுப்போனதை நிறைவேற்றித் தீர வேண்டியிராதா?

மிகவும் ஜனநாயகப் போக்குள்ள, குடியரசுவாத முதலாளி வர்க்கத்தினரையும் சிறுமுதலாளி வர்க்கத்தினரையுங்கூட எதிர்த்துப் பாட்டாளி வர்க்கம் தவிர்க்க முடியாதபடி சோஷலிஸத்துக்காக வர்க்கப் போராட்டத்தை நடத்த வேண்டியிருப்பதை ஒரு கணமேனும் சமூக-ஜனநாயகவாதி மறக்கலாகாது. இதில் ஐயமில்லை. எனவேதான் சமூக-ஜனநாயகவாதத்தின் ஒரு தனியான, சுதந்தரமான, கறாரான வர்க்கக் கட்சி முற்றவசியமாகிறது. எனவேதான் முதலாளி வர்க்கத்தோடு சேர்ந்து ''கூட்டாக அடி கொடுக்கும்'' நம் போர்த்தந்திரங்களின் தற்காலிகத் தன்மையும் ''பகைவனைக் கண்காணிப்பது போல் நம் கூட்டாளியைக்'' கண்டிப்புடன் கண்காணித்துவரும் கடமையும் ஏற்படுகிறது. இவற்றிலும் ஐயமிருக்க முடியாது. என்றபோதிலும், தோன்றி மறைகிறதாயும் தற்காலிகமானதாயும் இருந்தபோதிலும் தற்காலத்துக்கு உயிர்நிலையானதாயுள்ள பணிகளை நாம் மறக்க வேண்டுமென்றோ புறக்கணிக்க வேண்டுமென்றோ தள்ளிவிட வேண்டுமென்றோ இதிலிருந்து முடிவு செய்வது கேலிக்குரியதாகும், பிற்போக்கானதாகும். எதேச்சாதிகார முறையை எதிர்க்கும் போராட்டம் சோஷலிஸ்டு

களுக்கு ஒரு தற்காலிகமான, வந்துபோகிற பணியாகும்; ஆனல் இந்தப் பணியை எவ்வகையிலாயினும் புறக்கணிப்பதோ தள்ளிவிடுவதோ சோஷலிஸத்துக்குத் துரோகம் செய்வதாகும், பிற்போக்குக்குத் தொண்டு புரிவதாகும். பாட்டாளி வர்க்கத்தின், விவசாயி மக்களின் புரட்சிகரமான-ஜனநாயக சர்வாதிகாரம் நிச்சயமாக ஒரு வந்துபோகிற, தற்காலிகமான சோஷலிஸ்டுக் குறிக்கோளாகும்; எனினும் ஜனநாயகப் புரட்சிக் காலத்தில் இக்குறிக்கோளைப் புறக்கணிப்பது பச்சையான பிற்போக்குத்தனமாகும்.

ஸ்தூலமான சூழ்நிலைமைகளில் ஸ்தூலமான அரசியல் பணிகளை வகுத்தளிக்க வேண்டும். எல்லா விஷயங்களும் சார்புள்ளவை, எல்லா விஷயங்களும் ஆற்றொழுக்கு போல் ஓடிக் கொண்டிருக்கின்றன, எல்லா விஷயங்களும் மாறுகின்றன. ஜெர்மன் சமூக-ஜனநாயகவாதம் குடியரசுக்கான கோரிக்கையைத் தன் வேலைத்திட்டத்தில் போட்டுக் கொள்ளவில்லை. இந்தப் பிரச்சினையை நடைமுறையில் சோஷலிஸத்தின் பிரச்சினையினின்று பிரிக்கமுடிவது கடினம் எனும்படியான நிலைமை ஜெர்மனியில் உள்ளது (என்ருலும், ஜெர்மனி விஷயத்திலுங்கூட, 1891ல் எர்ஃபுர்ட் வேலைத்திட்ட நகலைப் பற்றி[68] எங்கெல்ஸ் தம்முடைய குறிப்புகளை அளிக்கையில் குடியரசின் முக்கியத்துவத்தையும் குடியரசுக்கான போராட்டத்தின் முக்கியத்துவத்தையும் சிறுமைப்படுத்தக் கூடாது என்று எச்சரித்திருந்தார்!). ருஷ்யாவின் சமூக-ஜனநாயகவாதத்தில் குடியரசுக்கான கோரிக்கையைத் தன்னுடைய வேலைத்திட்டத்திலிருந்தும் கிளர்ச்சியிலிருந்தும் அகற்றிவிடும் பிரச்சினை என்றைக்கும் எழுந்ததுகூட இல்லை. காரணம், நம் நாட்டில் குடியரசுப் பிரச்சினைக்கும் சோஷலிஸப் பிரச்சினைக்கும் இடையே பிரிக்கவொண்ணுப் பிணைப்பு பற்றிப் பேச்சே இருக்க முடியாது. 1898ஐச் சேர்ந்த ஜெர்மன் சமூக-ஜனநாயகவாதிக்குக் குடியரசுப் பிரச்சினையைத் தனிச்சிறப்பாக வலியுறுத்தாமலிருப்பது முற்றிலும் இயல்பானதே. இது வியப்பையோ கண்டனத்தையோ எழுப்புகிறதில்லை. ஆனல் 1848ல் ஒரு ஜெர்மன் சமூக-ஜனநாயகவாதி குடியரசுப் பிரச்சினையைப் பின்னணிக்குத் தள்ளியிருந்தானேயாஞல்

புரட்சிக்குப் பச்சைத் துரோகியாக இருந்திருப்பான். சூட்சுமமான உண்மை என்று எதுவும் கிடையாது. உண்மை எப்போதும் ஸ்தூலமாக உள்ளது.

ருஷ்யாவின் எதேச்சாதிகார முறைக்கு எதிரான போராட்டம் முடிவு பெறும் காலம் வரும், ருஷ்யாவில் ஜனநாயகப் புரட்சிக் காலமும் கடந்துவிட்டிருக்கும்; அப்போது பாட்டாளி வர்க்கத்தின், விவசாயி மக்களின் ''சித்த ஒற்றுமை'', ஜனநாயகச் சர்வாதிகாரமுறை என்றெல்லாம் பேசுவதுகூடக் கேலிக்குரியதாக இருக்கும். அந்தக் காலம் வரும் போது பாட்டாளி வர்க்கத்தின் சோஷலிஸ்டு சர்வாதிகாரப் பிரச்சினையை நேரடியாகக் கவனிப்போம், மேலும் விபரமாகப் பேசுவோம். முன்னேறிய வர்க்கத்தின் கட்சி தற்சமயம் ஜனநாயகப் புரட்சி ஜாராட்சியை எதிர்த்து நிர்ணயமான வெற்றி பெறுவதற்கு மிக்க வலுவுடன் முயற்சி செய்யாமல் இருக்க முடியாது. நிர்ணயமான வெற்றி என்பதற்குப் பொருள் பாட்டாளி வர்க்கத்தின், விவசாயி மக்களின் புரட்சிகரமான-ஜனநாயகச் சர்வாதிகாரம் என்பதைத் தவிர வேறில்லை.

## குறிப்பு

1) இஸ்க்ராவுக்கும் வ்பெரியோதுக்கும் இடையே நடந்த வாதப்போரில், மற்ற விஷயங்களிடையே, டுராட்டிக்கு எங்கெல்ஸ் எழுதிய கடிதத்தை[69] இஸ்க்ரா குறிப்பிட்டதை வாசகருக்கு நினைவூட்ட விரும்புகிறோம். இதில் ஜனநாயகப் புரட்சியை சோஷலிஸப் புரட்சியோடு போட்டுக் குழப்பக் கூடாது என்று இந்த இத்தாலியச் சீர்திருத்தவாதிகளின் (எதிர்காலத்) தலைவரை எங்கெல்ஸ் எச்சரித்தார். 1894ல் இத்தாலியில் இருந்த அரசியல் நிலைமையைப் பற்றி எங்கெல்ஸ் எழுதுகையில், இத்தாலியில் நிகழவிருக்கும் புரட்சி ஒரு சிறுமுதலாளித்துவ, ஜனநாயகப் புரட்சியாக இருக்கும், சோஷலிஸப் புரட்சியாக இராது என்று எழுதினார். எங்கெல்ஸ் வகுத்துக் கொடுத்த கோட்பாட்டினின்று வ்பெரியோத் விலகிவிட்டது என்று இஸ்க்ரா கடிந்து கொண்டது. இந்தக் கண்டனம்

நியாயமானதல்ல; ஏனெனில், மொத்தத்தில் பார்த்தால், பத்தொன்பதாம் நூற்ருண்டின் புரட்சிகளில் உள்ள மூன்று முக்கியமான சக்திகளிடையேயுள்ள வேறுபாடு பற்றிய மார்க்ஸின் தத்துவம் சரியாயிருப்பதை வ்பெரியோத் (இதழ் 14) முற்ருக அங்கீகரித்தது.* இத்தத்துவத்தின்படி பழைய அமைப்புமுறையை எதிர்த்து, எதேச்சாதிகார முறையையும் நிலப்பிரபுத்துவ முறையையும் பண்ணையடிமை முறையையும் எதிர்த்து வரும் சக்திகள் பின்வருமாறு: 1) மிதவாதப் பெருமுதலாளி வர்க்கத்தினர், 2) தீவிரப்போக்குள்ள சிறுமுதலாளி வர்க்கத்தினர், 3) பாட்டாளி வர்க்கம். முதற்சக்தி அரசியல் சட்டத்திற்குட்பட்ட முடியரசுக்காக மட்டுமே போராடுகிறது; இரண்டாவது சக்தி ஜனநாயகக் குடியரசுக்காக போராடுகிறது; மூன்ரும் சக்தி சோஷலிஸப் புரட்சிக்காகப் போராடுகிறது. முழுமையான ஜனநாயகப் புரட்சிக்காகச் சிறுமுதலாளி வர்க்கத்தினர் நடத்தும் போராட்டத்தை ஒரு சோஷலிஸப் புரட்சிக்காகப் பாட்டாளி வர்க்கம் நடத்தும் போராட்டத்துடன் போட்டுக் குழப்புவது சோஷலிஸ்டு அரசியல் திவாலாவாகிவிடும் அபாயத்தை உண்டாக்குகிறது. மார்க்ஸ் விடுத்த இந்த எச்சரிக்கை முற்றிலும் நியாயமானது. எனினும் இக்காரணத்திஞல்தான் ''புரட்சிகரமான கம்யூன்கள்'' எனும் கோஷம் தவருனதாகும். ஏனெனில், வரலாறு கண்ட கம்யூன்கள் செய்த தவறு ஜனநாயகப் புரட்சியை சோஷலிஸப் புரட்சியோடு குழப்பிவிட்டதுதான். மறுபுறத்தில், பாட்டாளி வர்க்கத்தின், விவசாயி மக்களின் புரட்சிகரமான ஜனநாயக சர்வாதிகாரம் எனும் நம் கோஷம் இத்தவற்றிலிருந்து நம்மை முற்ருகப் பாதுகாக்கிறது. வெறும் ஜனநாயகப் புரட்சியின் எல்லைகளை நேரடியாகத் தாண்டிச் செல்லத் திறனற்ற புரட்சியின் மறுக்க முடியாத முதலாளித்துவத் தன்மையை அங்கீகரிக்கிற அதே நேரத்தில் நம் கோஷம் இந்தக் குறிப்பிட்ட புரட்சியை முன்னுக்குக் கொண்டு செல்கிறது, பாட்டாளி வர்க்கத்துக்கு மிகவும் அனுகூலமான வடிவங்களை அதற்குக் கொடுக்க

* வி.இ. லெனின் எழுதிய சமூக-ஜனநாயகவாதமும் தற்காலிகப் புரட்சி அரசாங்கமும்.—ப-ர்.

முயல்கிறது. எனவே, பாட்டாளி வர்க்கம் மேற்சென்று சோஷலிஸத்துக்காக நடத்தும் போராட்டத்தில் மீமிகு வெற்றி பெறுவதற்காக ஜனநாயகப் புரட்சியை முற்றாகப் பயன்படுத்திக் கொள்ள முயல்கிறது.

## 11. ரு.ச.ஜ.தொ. கட்சியின் மூன்றாவது காங்கிரஸின் பல தீர்மானங்களுக்கும் "மாநாட்டின்" பல தீர்மானங்களுக்கும் இடையே மேலோட்டமான ஒப்புநோக்கல்

தற்காலிகப் புரட்சி அரசாங்கம் பற்றிய பிரச்சினை தற்சமயம் சமூக-ஜனநாயக இயக்கத்தின் அச்சாணியான போர்த்தந்திரப் பிரச்சினையாகும். மாநாட்டின் மற்ற தீர்மானங்களையும் இதுபோன்ற விபரத்துடன் கவனிப்பது சாத்தியமில்லை, அவசியமுமில்லை. ரு.ச.ஜ.தொ. கட்சியின் மூன்றாவது காங்கிரஸின் தீர்மானங்களில் உள்ள போர்த்தந்திரப் போக்குக்கும் மாநாட்டின் தீர்மானங்களில் உள்ள போர்த்தந்திரப் போக்குக்கும் இடையேயுள்ள மேலே பகுத்தாய்ந்த கோட்பாடு வேற்றுமையை உறுதிப்படுத்துவதாயிருக்கும் பல அம்சங்களைச் சுருக்கமாகக் குறிப்பிடுவதோடு நிறுத்திக் கொள்வோம்.

புரட்சி நிகழவிருக்கும் காலத்தில் அரசாங்கத்தின் போர்த்தந்திரங்கள்பால் கொள்ள வேண்டிய கண்ணோட்டத்தைப் பற்றிய பிரச்சினையை எடுத்துக் கொள்ளுங்கள். ரு.ச.ஜ.தொ. கட்சியின் மூன்றாவது காங்கிரஸின் ஒரு தீர்மானத்தில் இப்பிரச்சினைக்குரிய முழுவிரிவான விடை இருப்பதை மீண்டும் காண்பீர்கள். தனிப்பட்ட காலத்துக்குரிய பல்வேறான எல்லா நிலைமைகளையும்பணிகளையும் இத்தீர்மானம் கணக்கிலெடுத்துக் கொள்கிறது. அவையாவன: அரசாங்கம் வழங்கும் சலுகைகளின் பாசாங்கை அம்பலப்படுத்துவது; "மக்கள் பிரதிநிதித்துவத்தின் கேலிக்குரிய வடிவங்களைப்" பயன்படுத்துவது; தொழிலாளி வர்க்கத்தின் அவசரக் கோரிக்கைகளை (இவற்றில் எட்டுமணி நேர வேலை நாள் முதன்மையானது)

புரட்சிகரமான வழியிலே நடைமுறையாக்குவது; இறுதியாக, கறுப்பு நூற்றுவர்களை எதிர்த்துப் போராடுவது. மாநாட்டுத் தீர்மானங்களில் இப்பிரச்சினை துண்டு துண்டாகப் பல பிரிவு களில் கவனிக்கப்படுகிறது: ''பிற்போக்கின் தீய சக்திகளை எதிர்த்துப் போராடுவது'' மற்ற கட்சிகள்பால் கொள்ள வேண்டிய கண்ணோட்டம் பற்றிய தீர்மானத்தின் பீடிகையில் மட்டுமே குறிப்பிடப்படுகிறது. பிரதிநிதித்துவ நிறுவனங் களுக்கான தேர்தல்களில் கலந்து கொள்வது என்பது முத லாளி வர்க்கத்தோடு ஜாராட்சி ''சமரசங்கள்'' செய் வதனின்று பிரித்தெடுத்துக் கவனிக்கப்படுகிறது. புரட்சிகர மான வழிவகைகளின் மூலமாக எட்டு மணி நேர வேலை நாளைச் சாதிப்பதற்கு அறைகூவியழைப்பதற்குப் பதிலாக, ''பொருளாதாரப் போராட்டத்தைப் பற்றி'' என்று பகட் டான தலைப்புள்ள ஒரு தனித் தீர்மானம் (''ருஷ்யாவின் சமுதாய வாழ்க்கையில் தொழிலாளர் பிரச்சினை வகிக்கும் மையமான நிலையைப் பற்றிப்'' படாடோபமான, மிகவும் முட்டாள்தனமான சொற்றொடர்களைப் பின்னிட்டு) ''எட்டு மணி நேர வேலை நாளைச் சட்டத்தின் மூலமாகச் செயல் படுத்துவதற்கு'' இயக்கம் நடத்துவது பற்றிய பழைய கோஷத்தைத் திருப்பிச் சொல்கிறது. இந்தக் கோஷம் போதாக் குறையுள்ளது, காலங்கடந்த தன்மையுள்ளது என்பது சான்று வேண்டாத அளவுக்கு வெளிப்படையா யுள்ளது.

பகிரங்கமான அரசியல் செய்கை பற்றிய பிரச்சினை. நம் நடவடிக்கைகளில் வரவிருக்கும் **அடிப்படையான** மாற்றங் களை மூன்றாவது காங்கிரஸ் கவனத்தில் எடுத்துக் கொள் கிறது. எக்காரணத்தைக் கொண்டும் இரகசிய நடவடிக்கை களையோ தலைமறைவான அமைப்பை வளர்ப்பதையோ கை விடக்கூடாது: அப்படிக் கைவிடுவது போலீஸுக்குத் துணை போவதாகும், அரசாங்கத்துக்கு மிகவும் அனுகூலமாக நடந்து கொள்வதாயிருக்கும். ஆனால் அதே பொழுதில் பகிரங்கமான செய்கை விஷயத்திலும் நாம் சிந்தனை செலுத்த வேண்டும். இந்த நோக்கத்திற்காக இப்படிப்பட்ட செய்கைக்குரிய சூழ் தகுதியுள்ள வடிவங்களும், எனவே (குறைவாகத் தலைமறை

வான தன்மையுள்ள) தனி அமைப்புகளும் உடனடியாகத் தயாரிக்கப்பட வேண்டும். ருஷ்யாவில் எதிர்காலத்திய பகிரங்க மானசமூக-ஜனநாயகத் தொழிலாளர் கட்சிக்குத் தளங்களாக முடிந்தவரை மாற்றிவிடும் நோக்குடன் சட்டபூர்வமான சங்கங்களையும், அரைகுறையாகச் சட்டபூர்வமான சங்கங்களையும் பயன்படுத்த வேண்டும்.

இங்கேயுங்கூட இந்தப் பிரச்சினையை மாநாடு பிளந்து வைக்கிறது, உள்ளிணக்கமுள்ள கோஷங்கள் எதையும் முன் வைக்கத் தவறுகிறது. சட்டபூர்வமாக இருந்து வரும் எழுத்தாளர்களைத் ''தக்க இடங்களில் இருப்பதைக்'' கவனித்துக் கொள்ளும்படி அமைப்புக் கமிட்டிக்கு இட்டுள்ள நகைக்கத் தக்க ஆணைதான் எடுப்பாகத் தெரிகிறது. அப்புறம் ''தொழிலாளி வர்க்க இயக்கத்துக்கு உதவியளிப்பதைக் குறிக்கோளாகக் கொண்டுள்ள ஜனநாயகப் பத்திரிகைகளை நம் செல்வாக்கின்கீழ் வைத்திடுவது'' எனும் அபத்தமான முடிவும் இருக்கிறது. நம் சட்டபூர்வமான மிதவாதப் பத்திரிகைகள் அனைத்தும் (அவற்றில் அநேகமாக யாவும் ஒஸ்வபஷ்தேனியேயின் போக்கைக் கொண்டிருக்கிறது) கூறிக்கொள்ளும் குறிக்கோள் இதுவே. இஸ்க்ரா ஆசிரியர் குழுவே தம் அறிவுரையைச் செயலாக்கத் தொடங்கி எப்படி ஒஸ்வபஷ்தேனியேயைச்சமூக-ஜனநாயகவாதத்தின் செல்வாக்கின்கீழ்க்கொண்டு வருவது என்ற ஏன் ஓர் உதாரணம் காட்டக் கூடாது? கட்சிக்குத் தளங்களை ஏற்படுத்திக் கொள்வதற்காகச் சட்டபூர்வமாக இருந்து வரும் சங்கங்களைப் பயன்படுத்திக் கொள்வது எனும் கோஷத்திற்குப் பதிலாக, முதலில் ''தொழிற்'' சங்கங்களைப் பற்றி மட்டும் (இவற்றில் கட்சி உறுப்பினர்கள் அவசியமாக வேலை செய்து வரவேண்டும்) ஒரு தனிப்பட்ட அறிவுரையும், இரண்டாவதாகத் ''தொழிலாளர்களின் புரட்சிகரமான அமைப்புகளுக்கு''=''பதிவு செய்யாத நிறுவனங்களுக்கு''=''புரட்சிகரமான தொழிலாளர் கிளப்புகளுக்கு'' வழிகாட்டி வருமாறு ஓர் அறிவுரையும் நமக்குக் கொடுக்கிறுர்கள். இந்தக் ''கிளப்புகள்'' எப்படி பதிவு செய்யாத நிறுவனங்களாக வகைப்படுத்தப்பட்டன, இந்தக் ''கிளப்புகள்'' எவை என்பதெல்லாம் அந்த

ஆண்டவனுக்குத்தான் வெளிச்சம். தலைமைக் கட்சியுறுப்பு கொடுக்கும் தெளிவான, திட்டவட்டமான ஆணைகளுக்குப் பதிலாக எழுத்தாளர்கள் மனம் போனபடி குறித்து வைத்த சில சிந்தனைகளும் சில முழுமையற்ற நகல்களும் நமக்குக் கிடைக்கின்றன. கட்சி தன்னுடைய வேலை முழுவதிலும் ஒரு புதிய அடிப்படைக்கு மாறிச் செல்லத் தொடங்குவதைப் பற்றி முழுமையான சித்திரம் எதுவும் இல்லை.

''விவசாயிப் பிரச்சினையைக்'' கட்சி காங்கிரஸும் இந்த மாநாடும் முற்றிலும் வேறுபட்ட வகையில் முன்வைக்கின்றன. ''விவசாயிகள் இயக்கத்தின் பால் உறவுநிலை'' பற்றி காங்கிரஸ் ஒரு தீர்மானம் தயாரித்தளித்தது; ''விவசாயிகளிடையே வேலை செய்வது'' பற்றி மாநாடு ஒரு தீர்மானம் தயாரித்தளித்தது. முதலில் சொன்ன தீர்மானத்தில் ஜார் ஆட்சியை எதிர்க்கும் போராட்டத்தின் பொதுவான தேசிய நலன்களை உத்தேசித்துப் புரட்சிகரமான ஜனநாயக இயக்கம் முழுவதற்கும் வழிகாட்டி வரும் பணிக்கு முதலிடம் கொடுக்கப்பட்டிருக்கிறது. மற்ற தீர்மானத்தில் வெறுமே சமுதாயத்தின் ஒரு குறிப்பிட்ட பகுதியினரிடையே ''வேலை செய்வது'' என்று பிரச்சினை தாழ்த்தப்பட்டிருக்கிறது. முதலில் சொன்ன தீர்மானத்தில் எல்லா ஜனநாயக மாற்றங்களையும் செய்து முடிப்பதற்காகப் புரட்சிகரமான விவசாயிக் கமிட்டிகளை உடனடியாக ஒழுங்கமைக்க வேண்டும் என்று கோரும் ஒரு மையமான நடைமுறைக் கோஷம் நம் கிளர்ச்சிக்காக முன்வைக்கப்படுகிறது. மற்ற தீர்மானத்தில் ''கமிட்டிகள் ஒழுங்கமைக்கப்படுவதற்கான கோரிக்கை'' ஒன்று அரசியல் நிர்ணய சபை முன்வைக்கப்படுமாம். இந்த அரசியல் நிர்ணய சபைக்காக நாம் ஏன் காத்திருக்க வேண்டும்? நிர்ணயிக்கக் கூடியதாய் இருக்குமா அது? புரட்சிகரமான விவசாயிக் கமிட்டிகள் பூர்வாங்கமாகவும் சமநேரத்திலும் ஏற்படுத்தப்படாமற்போனால் அது உறுதியான நிலை பெற்றிருக்குமா? இப்பிரச்சினைகள் அனைத்தையும் மாநாடு பார்க்கத் தவறிவிட்டது. நாம் கவனித்து வந்துள்ள பொதுவான கருத்தை—அதாவது, ஜனநாயக இயக்கம் முழுவதற்கும் வழிகாட்டி வருவது, அந்த இயக்கத்தைச் சுதந்தரமாக நடத்தி வருவது எனும்

குறிக்கோளைப் பின்பற்றிச் செல்லாமல் நாம் முதலாளித்துவப் புரட்சியில் நம்முடைய சொந்தமான தனி வேலையை மட்டும் செய்ய வேண்டும் என்கிற கருத்தை—அதன் முடிவுகள் அனைத்தும் பிரதிபலிக்கின்றன. பொருளாதாரப் போராட்டம் சமூக-ஜனநாயகவாதிகளுக்குரியது, அரசியல் போராட்டம் மிதவாதிகளுக்குரியது எனும் பிழையை இடைவிடாமல் ''பொருளாதாரவாதிகள்'' செய்து வந்தது போல், புதிய-இஸ்க்ரா ஆதரவாளர்களும் வாதிக்கும் போது நாம் முதலாளித்துவப் புரட்சிப் பாதையினின்று விலகி மூலையில் அடக்கமாக உட்கார்ந்திருக்க வேண்டும், முதலாளி வர்க்கத்தினர் புரட்சியை நடத்தி முடிக்கும் வேலையைத் தீவிரமாகச் செய்துவர வேண்டும் எனும் கருத்தில் விழுந்தபடி இருக்கிறார்கள்.

கடைசியாக, மற்ற கட்சிகள்பால் கொள்ள வேண்டிய உறவுநிலை பற்றிய தீர்மானங்களையும் குறித்துக் கொள்ள வேண்டும். விடுதலைக்கான முதலாளித்துவ இயக்கத்தின் எல்லா வரம்புக்குட்பட்ட தன்மையையும் போதாமையையும் — இப்படிப்பட்ட வரம்புக்குட்பட்ட தன்மையைக் காட்டும் ஒவ்வொரு எடுத்துக்காட்டையும் ஒரு காங்கிரஸிலிருந்து மற்றொரு காங்கிரஸ் வரை கணக்கிட்டுக் கூறும் வெகுளித்தனமான கருத்தை வைத்துக்கொண்டிராமல், அல்லது கெட்ட முதலாளி, நல்ல முதலாளி என்று வேறுபடுத்திக் கோடு கிழித்துக் கொண்டிராமல் — அம்பலப்படுத்துவது பற்றி ரு.ச.ஜ.தொ. கட்சியின் மூன்றாவது காங்கிரஸ் தீர்மானம் பேசுகிறது. ஸ்தரவேர் செய்த தவற்றை மீண்டும் செய்தவாறு மாநாடு அந்த வேறுபாட்டுக் கோட்டை விடாமல் தேடிக் கொண்டிருந்தது, புகழ்பெற்ற ''லிட்மஸ்-காகிதத்'' தத்துவத்தையும் வளர்த்தது. முதலாளி வர்க்கத்திடம் ஆனமட்டும் கடுமையான நிபந்தனைகளை வைக்க வேண்டும் எனும் நல்ல கருத்திலிருந்துதான் ஸ்தரவேர் தொடங்கினார். ஆனால் ஒன்று. ஒப்புதலுக்கோ உடன்பாட்டிற்கோ தகுதியுள்ள முதலாளி வர்க்க ஜனநாயகவாதிகளையும் அவற்றிற்குத் தகுதியற்ற முதலாளி வர்க்க ஜனநாயகவாதிகளையும் முன்கூட்டியே பிரித்துப் பார்க்கும் முயற்சி ஒரு ''சூத்திரத்துக்குத்''

தான் கொண்டுபோய்விடுகிறது, அந்தச் சூத்திரம் உடனடியாக நிகழ்ச்சி வளர்ச்சிகளால் தள்ளப்பட்டுவிடுகிறது, அந்தச் சூத்திரம் பாட்டாளி வர்க்கத்தின் வர்க்க உணர்வில் குழப்பத்தைப் புகுத்துகிறது. போராட்டத்திற்கான உண்மையான ஒற்றுமையை வலியுறுத்துவது மாறிப் பிரகடனங்களும் வாக்குறுதிகளும் கோஷங்களும் வலியுறுத்தப்படுகின்றன. ''எல்லோருக்கும் சம வாக்குரிமை, நேரடித் தேர்தல்கள், இரகசிய வாக்குப்பதிவு'' என்பவை இப்படிப்பட்ட அடிப்படையான கோஷம் என்று ஸ்தரவேர் கருதினர். இரண்டு ஆண்டுகள் ஓடி முடிந்தனவோ இல்லையோ ''லிட்மஸ்-காகிதம்'' பயனற்றது என்று காட்டிக் கொண்டது, ஒஸ்வபஷ்தேனியே குழுவினர் எல்லோருக்கும் வாக்குரிமை எனும் கோஷத்தைத் தங்கள் கையில் எடுத்துக் கொண்டனர்; அதனுல் அவர்கள் ஒன்றும் சமூக-ஜனநாயகவாதிகளிடம் முன்னைவிட நெருங்கி வந்துவிடவில்லை; அது மட்டுமல்ல, மாருக அந்தக் கோஷத்தைக் கொண்டே அவர்கள் தொழிலாளிகளைத் தவருன வழியில் செலுத்தவும் சோஷலிஸத்தினின்று திசை திருப்பி விடவும் முயன்றனர்.

இப்போது புதிய-இஸ்க்ராவாதிகள் முன்னைவிட ''கடுமையான'' ''நிபந்தனைகளை'' முன்வைக்கிருர்கள். ''மக்கள் தாமாக ஆயுதம் எடுத்துக் கொள்வதில் தீவிரமாகப் பங்கெடுப்பது'' உட்பட ''ஒழுங்கமைந்துள்ள பாட்டாளி வர்க்கத்தின் ஒவ்வொரு உறுதியான செய்கைக்கும் வலுவான, ஐயந்திரிபுக்கிடமற்ற [!?] ஆதரவு அளிக்க வேண்டும்'' என்று அவர்கள் ஜாராட்சியின் எதிரிகளிடம் ''கோருகிருர்கள்''. அந்தக் கோடு கிழித்தலை மேலும் தொலைவுக்குக் கொண்டுபோயிருக்கிருர்கள் — என்றபோதிலும், இது ஏற்கெனவே மீண்டும் காலாவதியாகிவிட்டிருக்கிறது, பயனற்றதென்று உடனே காட்டிக் கொண்டிருக்கிறது. எடுத்துக்காட்டாக, ஏன் குடியரசு கோரும் கோஷம் எதுவும் இல்லை? ''சமுதாயப் படிநிலைகளைக் கொண்டுள்ள முடியரசு அமைப்பு அடித்தளங்களனைத்தையும் எதிர்த்து தீவிரப் புரட்சிகரமான போரின்'' நலன்களை உத்தேசித்துச் சமூக-ஜனநாயகவாதிகள் குடியரசுக்கான போராட்டத்தைத் தவிர வேறு எதை

வேண்டுமானாலும் !! முதலாளித்துவ ஜனநாயகவாதிகளிட மிருந்து ''கோருகிறார்களே'', அது எப்படி?

இந்தக் கேள்வி வெறும் விதண்டாவாதம் அல்ல, புதிய-இஸ்க்ராவாதிகளின் தவறு உயிர்நிலையான அரசியல் குறிபொருள் படைத்தது என்று ''ருஷ்யாவின் விடுதலைச் சங்கம்'' (பார்க்க: **புரொலிட்டாரி**, இதழ் 4) நிரூபித்துள்ளது.* இந்த ''ஜாராட்சியின் எதிரிகள்'' புதிய-**இஸ்க்ரா** ஆதரவாளர்களின் ''தேவைகள்'' அனைத்துக்கும் முற்றாகப் பொருந்திருக்கும். ஆனால் இந்த ''ருஷ்யாவின் விடுதலைச் சங்கத்தின்'' வேலைத்திட்டத்தில் (அல்லது வேலைத்திட்டமின்மையில்) **ஒஸ்வபஷ்தேனியே** உணர்ச்சி கோலோச்சுவதையும் **ஒஸ்வபஷ்தேனியே** குழுவினர் அதைத் தங்களுடன் சுளுவாக இழுத்துச் செல்ல முடியும் என்பதையும் காட்டியிருக்கிறோம். என்ற போதிலும் தீர்மானத்தின் கடைசிப் பகுதியில் ''மிதவாத, ஜனநாயகக் கொடியை உயர்த்திக் காட்டிய போதிலும் பாட்டாளி வர்க்கத்தின் புரட்சிகரமான போராட்டத்துக்கு உண்மையான ஆதரவு அளிக்க மறுக்கும் எல்லாக் கட்சிகளையும் **மக்களின் கபட நண்பர்கள்** என்று சமூக-ஜனநாயகவாதம் தொடர்ந்து எதிர்த்து வரும்'' என்று மாநாடு அறிவிக்கிறது. ''ருஷ்யாவின் விடுதலைச் சங்கம்'' இந்த ஆதரவை நல்க மறுக்கவில்லை என்பது மட்டுமல்ல, மிகவும் வற்புறுத்தி

---

* **புரொலிட்டாரி**, இதழ் 4, 1905 ஜூன் 4ல் வெளிவந்தது; அதில் ''ஒரு புதிய புரட்சிகரமான தொழிலாளர் சங்கம்'' என்று தலைப்புள்ள நீண்ட கட்டுரை ஒன்று இருந்தது. இந்தச் சங்கம் வெளியிட்ட வேண்டுகோள்களின் உள்ளடக்கத்தை இக்கட்டுரை கொடுக்கிறது. இச்சங்கம் ''ருஷ்யாவின் விடுதலைச் சங்கம்'' என்று பெயர் வைத்துக் கொண்டு ஆயுதமேந்திய புரட்சியெழுச்சியின் மூலமாக அரசியல் நிர்ணய சபையைக் கூட்டும் குறிக்கோளை வகுத்துக் கொண்டது. மேலும், இவ்வகையான கட்சிச்சார்பற்ற சங்கங்களின்பால் சமூக-ஜனநாயகவாதிகளின் உறவுநிலையை இக்கட்டுரை வரையறுக்கிறது. எந்த அளவுக்கு இச்சங்கம் உண்மையில் இருந்து வந்தது, புரட்சியில் அதன் கதி என்னவாயிற்று என்று எதுவும் நாமறியோம். (1907 பதிப்புக்கு ஆசிரியர் எழுதிய குறிப்பு.—**ப-ர்.**)

நல்குகிறது. இந்தச் சங்கத்தின் தலைவர்கள் ''விடுதலைவாதிகள்'' ஆனபோதிலும் ''மக்களின் கபட நண்பர்கள்'' அல்ல என்பதற்கு இது உத்தரவாதமாகுமா?

ஆக, முன்கூட்டியே ''நிபந்தனைகளைப்'' புனைவதின் மூலமாகவும், இணையற்ற செயல்திறமின்மையினால் நகைக்கத் தக்க ''கோரிக்கைகளை'' முன்வைப்பதின் மூலமாகவும் புதிய-இஸ்க்ராவாதிகள் உடனே கேலிக்குரியவர்களாகிறார்கள். உயிர்ப்புள்ள எதார்த்த நிலைமைகளை மதிப்பீடு செய்கிற போது அவர்களின் நிபந்தனைகளும் கோரிக்கைகளும் போதா என்று உடனே காட்டிக் கொள்கின்றன. அவர்கள் சூத்திரங்களைத் தேடிச் செல்வது பயனற்றது. ஏனெனில் முதலாளித்துவ ஜனநாயகவாதம் காட்டிக் கொள்கிற பாசாங்கின், முரண் தன்மையின், ஒற்றைச்சாண் மனப்பான்மையின் பல்வேறு வெளிப்பாடுகள் அனைத்தையும் எந்தச் சூத்திரமும் உள்ளடக்கியிருக்க முடியாது. ''லிட்மஸ்-காகிதம்'', சூத்திரங்கள், அல்லது எழுதி அச்சடித்த கோரிக்கைகள் என்பது பிரச்சினையல்ல, கபடமான அல்லது நேர்மையான ''மக்களின் நண்பர்களை'' வேறுபடுத்திக் காட்டும் கோட்டை முன்கூட்டியே போட்டுக் கொள்கிற பிரச்சினையும் அல்ல அது. போராட்டத்தில் உண்மையான ஒற்றுமையைக் காணும் பிரச்சினையே அது; முதலாளித்துவ ஜனநாயகம் எடுத்து வைக்கிற ஒவ்வொரு ''உறுதியற்ற'' படியையும் இடைவிடாமல் சமூக-ஜனநாயகவாதிகள் விமர்சித்து வரும் பிரச்சினையாகும். ''ஜனநாயக மாற்றத்தில் அக்கறையுள்ள எல்லாச் சமுதாயச் சக்திகளையும் உண்மையில் கெட்டிப்படுத்துவதற்குத்'' தேவைப்படுவது உண்மையிலே புரட்சிகரமான கோஷங்களை முன்வைப்பதற்கான திறமையேயாகும், மாநாடு எவ்வளவோ முனைந்தும் பயனின்றியும் கவனஞ்செலுத்திய ''அம்சங்கள்'' அல்ல. பாட்டாளி வர்க்கத்தின் குறிக்கோள்களை முடியரசுவாத முதலாளி வர்க்கத்தினரின் தரத்துக்குத் தாழ்த்தாமல் பாட்டாளி வர்க்கத்தின் தரத்துக்குப் புரட்சிப் போக்குள்ள, குடியரசுவாத முதலாளி வர்க்கத்தினரை உயர்த்தக்கூடிய கோஷங்கள் இதற்குத் தேவைப்படுகின்றன. புரட்சியெழுச்சியில் மிகவும் தீவிரமாகக் கலந்து கொள்வது

இதற்குத் தேவைப்படுகிறது, ஆயுதமேந்திய புரட்சியெழுச்சியின் அவசரப் பணியைக் குதர்க்கம் பண்ணித் தட்டிக் கழிப்பது அல்ல.

## 12. ஜனநாயகப் புரட்சியிலிருந்து முதலாளி வர்க்கம் பின்வாங்கிஞல் அதன் வீச்சு குறைந்துவிடுமா?

மேலேயிருக்கும் வரிகளை ஏற்கெனவே எழுதி முடித்திருந்த நேரத்தில் புதிய-இஸ்க்ராவாதிகளின் காக்கேஸிய மாநாடு நிறைவேற்றி இஸ்க்ராவில் வெளியிட்ட தீர்மானங்களின் பிரதியொன்று நம் கைக்கு எட்டியது. நாம் முயன்ருலுங்கூட pour la bonne bouche (வேலையை முடிவு செய்வதற்காக) இதைவிட மேலான சுவையுள்ள விஷயதானத்தைப் புனைந்திருக்க முடியாது.

இஸ்க்ரா ஆசிரியர்கள் முழு நியாயத்துடன்தான் குறிப்பிடுகிருர்கள்: ''போர்த்தந்திரங்கள் பற்றிய அடிப்படையான பிரச்சினையில் அனைத்து ருஷ்ய மாநாடு'' (அதாவது, புதிய-இஸ்க்ரா மாநாடு) ''எடுத்த முடிவுடன் ஒத்திருக்கக் கூடிய'' (இது உண்மை!) ''முடிவுக்குத்தான் காக்கேஸிய மாநாடும் வந்திருக்கிறது'' என்று. ''வ்பெரியோத் குழுவினரும் அவர்களுடன் சேர்ந்து கொண்ட காங்கிரஸ் என்று சொல்லிக் கொள்வதின் பிரதிநிதிகளும் எடுத்துப் பேசும் புதிய வழிமுறையை மிகவும் வெளிப்படையாக எதிர்க்கும் உணர்ச்சியில் தற்காலிகப் புரட்சியரசாங்கத்தின்பால் சமூக-ஜனநாயகவாதிகள் கொள்ள வேண்டிய உறவுநிலை பற்றிய பிரச்சினையைக் காக்கேஸியத் தோழர்கள் தீர்த்திருக்கிருர்கள்.'' ''மாநாடு வரையறுத்துக் கொடுத்திருக்கிறபடி ஒரு முதலாளித்துவப் புரட்சியில் பாட்டாளி வர்க்கக் கட்சியின் போர்த்தந்திரங்கள் பற்றிய வரையறுப்பு மிகவும் பொருத்தமானது என்று ஒப்புக்கொண்டு தீர வேண்டும்.''

உண்மை உண்மைதான். புதிய-இஸ்க்ரா குழுவினரின் அடிப்படையான தவறு பற்றி இதைவிட ''பொருத்தமான''

வரையறுப்பை யாராலும் கொடுத்திருக்க முடியாது. இந்த வரையறுப்பை முழுவதாக மேற்கோள் காட்டுவோம். முதலில் இடைமொழியாக மலர்களைக் குறிப்பிட்டுவிட்டு இறுதியில் கனிகளைக் குறிப்பிடுவோம்.

புதிய-இஸ்க்ரா ஆதரவாளர்களின் காக்கேஸிய மாநாடு தற்காலிக அரசாங்கம் பற்றி நிறைவேற்றியுள்ள தீர்மானம் பின்வருமாறு:

''பாட்டாளி வர்க்கத்திடையே சமூக-ஜனநாயகவாத உணர்வை ஆழப்படுத்துவதற்காகவும்'' (உண்மைதான்! மர்த்தீனவ் வழியில் என்று அவர்கள் சேர்த்துச் சொல்லியிருக்க வேண்டும்! மேலும், உணர்வை ஆழப்படுத்துவதற்கு மட்டுந்தானு, குடியரசைச் சாதித்துக் கொள்வதற்கு இல்லையா? புரட்சியைப்பற்றி எவ்வளவு ''ஆழ்ந்த'' கருத்தோட்டம் இது!) ''புரட்சிகரமான நிலைமையைப் பயன்படுத்திக் கொள்வது நம் பணி என்று நாங்கள் கருதுவதிஞல், உதித்து வரும் முதலாளித்துவ-அரசு அமைப்பு முறையை விமர்சிப்பதற்குக் கட்சிக்கு முழுச் சுதந்தரம் பெறுவதற்காகவும்'' (குடியரசைப் பெறுவது நம் வேலை அல்லவாம்! நம் வேலை விமர்சனச் சுதந்தரம்பெறுவது மட்டுந்தாஞம். அராஜகவாதக் கருத்துக்கள் ''முதலாளித்துவ-அரசு'' அமைப்பு முறை எனும் அராஜகவாத மொழியை உண்டாக்கி வைக்கின்றன!) ''ஒரு சமூக-ஜனநாயகத் தற்காலிக அரசாங்கம் ஏற்படுத்துவதற்கும் அப்படிப்பட்ட அரசாங்கத்தில் பங்கெடுத்துவதற்கும் மாநாடு எதிர்ப்பு தெரிவிக்கிறது'' (ஸ்பெயின் புரட்சி நடப்பதற்குப் பத்து மாதங்களுக்குமுன் பக்கூனின்வாதிகள் நிறைவேற்றிய தீர்மானத்தை நினைவூட்டிக் கொள்ளுங்கள், இதைப்பற்றி எங்கெல்ஸ் குறிப்பிட்டிருக்கிருர், **புரொலிட்டாரி**, இதழ் 3ஐப் பார்க்க), ''மற்றும் அரசு அமைப்பு முறையை ஜனநாயகமயமாக்குவதைச் சாத்தியமான அளவுக்குச் [?!] சாதிப்பதற்காகத் தற்காலிக முதலாளித்துவ அரசாங்கத்தின் மீது வெளியில் இருந்து'' (மேலிருந்தல்ல, கீழிருந்து) ''நிர்ப்பந்தம் கொண்டுவருவது மிகவும் சூழ்தகுதியுள்ள வழி என்று கருதுகிறது. சமூக-ஜனநாயகவாதிகள் தற்காலிக அரசாங்கத்தை ஏற்படுத்துவதாயினும் சரி, அப்படிப்பட்ட அர

சாங்கத்தில் அவர்கள் கலந்து கொள்வதாயினும் சரி, ஒரு புறத்தில் பாட்டாளி வர்க்கத்தைச் சேர்ந்த மக்கள்திரள் சமூக-ஜனநாயகக் கட்சியின்பால் ஏமாற்றமடைந்து கைவிட்டு விடுவதில் கொண்டுபோய்விடும்—காரணம், அரசதிகாரத்தைக் கைப்பற்றியபோதிலும் சமூக-ஜனநாயகவாதிகளால் தொழிலாளி வர்க்கத்தின் அவசர அவசியமான, சோஷலிஸத்தை ஏற்படுத்துவது உள்ளிட்ட, தேவைகளை நிறைவேற்ற முடியாமற்போய்விடும்'' (குடியரசு அவசர அவசியமான தேவை அல்லவாம்! முதலாளித்துவப் புரட்சியில் கலந்து கொள்வதை மறுக்கிறவர்கள் மாதிரி தாங்கள் அப்பட்டமான அராஜகவாத மொழியில் பேசுகிறதை அந்த ஆசிரியர்கள் தங்களுடைய அப்பாவித்தனத்தின் காரணமாகப் பார்க்கவில்லை), ''மறு புறத்தில் **முதலாளிப் போக்கான வர்க்கங்களை புரட்சியிலிருந்து பின்வாங்கும்படி செய்து அதன் வீச்சைக் குறைத்துவிடும்''.

விஷயத்தின் சாராம்சம் அதுதான். அங்கேதான் அராஜகவாதக் கருத்துக்கள் பச்சையான சந்தர்ப்பவாதத்துடன் பிணைவுறுகின்றன (மேற்கு ஐரோப்பிய பெர்ன்ஷ்டைன்வாதிகளிடையே இடையருது நிகழ்வதுங்கூட இதுதான்). சற்றுச் சிந்தியுங்கள்: இந்த ஆசாமிகள் தற்காலிக அரசாங்கத்தில் கலந்து கொள்ள மாட்டார்களாம், ஏனெனில் அப்படிச் செய்வது முதலாளி வர்க்கத்தைப் புரட்சியிலிருந்து பின்வாங்கும்படி செய்துவிடுமாம், அதனுல் புரட்சியின் வீச்சு குறைந்துவிடுமாம்! சுத்தமான முரணற்ற வடிவத்தில் புதிய-இஸ்க்ரா தத்துவஞானம் முழுவதும் இங்கேதான் நமக்குக் கிடைக்கிறது: இது முதலாளித்துவப் புரட்சியாக இருக்கிறதினுல் நாம் முதலாளித்துவக் கொச்சைவாதத்துக்கு அடிபணிந்து விலகி நிற்க வேண்டுமாம். நாம் கலந்து கொள்வதால் முதலாளி வர்க்கத்தைப் பின்வாங்கச் செய்யக்கூடும் எனும் எண்ணம் சிறிதளவுக்காயினும் ஒரு விஞடிக்காயினும் நமக்கு வழிகாட்டுவதாயிருந்தால் அதன் வழியாக வெறுமே நாம் புரட்சித் தலைமை முழுவதையும் முதலாளித்துவப் போக்குள்ள வர்க்கங்களின் கையில் ஒப்படைத்துவிடுகிறவர்களாகிருேம். அதன் வழியாகப் பாட்டாளி வர்க்கத்தை முற்ருக

முதலாளி வர்க்கத்தின் பாதுகாப்பின்கீழ் வைக்கிறோம் (முழு ''விமர்சனச் சுதந்தரத்தை'' நீடித்து வைத்துக் கொண்டிருக்கிறபடியேதான்!!), முதலாளி வர்க்கம் பின் வாங்காமல் இருப்பதற்காகப் பாட்டாளி வர்க்கத்தை அடங்கி ஒடுங்கி இருக்குமாறு கட்டாயப்படுத்துகிறோம். முதலாளி வர்க்கம் பின்வாங்காமல் இருக்கும்படி செய்வதற் காகப் பாட்டாளி வர்க்கத்தின் மிகவும் உயிர்நிலையான தேவைகளை—அதாவது, அதன் அரசியல் தேவைகளை (அவற் றைப் ''பொருளாதாரவாதிகளும்'' அவர்களைக் காப்பி யடிக்கிறவர்களும் சரிவர என்றைக்கும் புரிந்து கொண்ட தில்லை)—நாம் விரையடித்துவிடுகிறோம். பாட்டாளி வர்க்கத் துக்குத் தேவைப்படும் அளவுக்கு ஜனநாயகத்தைச் சாதித்துக் கொள்வதற்கான புரட்சிகரமான போராட்டம் எனும் அடித்தளத்தை விட்டு, முதலாளி வர்க்கத்தோடு பேரம் பேசுவது, புரட்சிக்குத் துரோகம் செய்வதின் மூலமாக நம் கோட்பாடுகளை விலைபேசி முதலாளி வர்க்கத்தின் (''அது பின்வாங்காமல் இருக்கும்படி செய்வதற்காக'') தன்னிச்சை யான ஒப்புதலை வாங்குவது எனும் அடித்தளத்துக்கு முற்றாகப் போய்விடுகிறோம்.

புரட்சிக்குத் துரோகம் புரிந்து பாட்டாளி வர்க்கத்தை முதலாளி வர்க்கத்தினரின் இழிந்த தொங்குசதையாக மாற் றிவிடும் போர்த்தந்திரத்தை இரண்டே வரிகளில் காக்கே ஸியப் புதிய-இஸ்க்ராவாதிகளால் வெளியிட முடிந்திருக் கிறது. ஒரு போக்காக புதிய-இஸ்க்ரா செய்த தவறுகளி லிருந்து எதை நாம் மேலே ஆய்ந்து பெற்றோமோ அது இப்போது ஒரு தெளிவான, திட்டவட்டமான கோட்பாட் டிற்கு—அதாவது, முடியரசுவாத முதலாளி வர்க்கத்தின ரைப் பின்தொடர்ந்து செல்வது எனும் கோட்பாட்டிற்கு— உயர்த்தப்பட்டுள்ளதைப் பார்க்கிறோம். குடியரசை ஏற் படுத்துவது முதலாளி வர்க்கத்தைப் பின்வாங்கச் செய்யு மாதலால் (ஏற்கெனவே அவ்வாறு செய்து வருகிறது —திரு. ஸ்துருவே ஓர் எடுத்துக்காட்டாவார்) குடியரசுக்கான போ ராட்டம் ஒழியட்டும். பாட்டாளி வர்க்கம் வைக்கும் ஒவ் வொரு வலுவான முரணற்ற ஜனநாயகக் கோரிக்கையும்

உலகத்தில் எங்கும் எப்போதும் முதலாளி வர்க்கத்தைப் பின்வாங்கச் செய்யுமாதலால்—தொழிலாளிகளே, உங்கள் குகைகளில் போய் ஒளிந்து கொள்ளுங்கள்; விலகி நின்று மட்டும் செயலாற்றுங்கள்; புரட்சியின் நலன்களுக்காக முதலாளித்துவ-அரசு அமைப்பு முறையின் கருவிகளையும் ஆயுதங்களையும் பயன்படுத்துவோம் என்று கனவு காணுதீர்கள்; ''விமர்சனச் சுதந்தரத்தை'' வைத்துக் கொண்டிருங்கள்!

''முதலாளித்துவப் புரட்சி'' எனும் சொல்லைப் பற்றிய அவர்களின் கருத்தோட்டத்திலேயே இருக்கும் அடிப்படையான பிழை வெளியே தலைதூக்கியிருக்கிறது. இச்சொல்லைப் பற்றிய மர்த்தீனவ் ''கருத்தோட்டம்'' அல்லது புதிய-இஸ்க்ரா கருத்தோட்டம் பாட்டாளி வர்க்கத்தின் இலட்சியத்தை முதலாளி வர்க்கத்துக்குக் காட்டிக்கொடுப்பதில் நேராகக் கொண்டுபோய்விடுகிறது.

பழைய ''பொருளாதாரவாதத்தை'' மறந்தோர், படிக்காதோர், நினைவிற்கொள்ளாதோர், ஆகியவர்களுக்குத் தற்சமயம் ''பொருளாதாரவாதம்'' மறுவுயிர்ப்பு எய்தியுள்ளதைப் புரிந்து கொள்வது கஷ்டமாயிருக்கக் காண்பார்கள். பெர்ன்ஷ்டைன் வழிப்பட்ட *Credo*வை[70] நினைவூட்டிக் கொள்ளுங்கள். ''சுத்தமான பாட்டாளி வர்க்கக்'' கருத்துக்களிலிருந்தும் வேலைத்திட்டங்களிலிருந்தும் அதன் ஆசிரியர்கள் பின்வரும் முடிவுக்கு வந்தார்கள்: சமூக-ஜனநாயகவாதிகளாகிய நாம் பொருளாதாரத்திலும், உண்மையான தொழிலாளி வர்க்கப் பணியிலும், எல்லா அரசியல் பித்தலாட்டங்களையும் விமர்சிப்பதற்கான சுதந்தரத்திலும் சமூக-ஜனநாயகவாத வேலையை உண்மையாகவே மேலும் ஆழ்ந்ததாகச் செய்வதிலும் கவனம் செலுத்த வேண்டும்; மிதவாதிகளுக்குத் தான் அரசியல். ''புரட்சிவாதத்தில்'' விழாமல் கடவுள் நம்மைக் காப்பாற்றட்டும்; அது முதலாளி வர்க்கத்தைப் பின்வாங்கச் செய்துவிடும். *Credo* முழுவதையும் அல்லது ரபோச்சயா மீசில் (செப்டம்பர் 1899) இதழ் 9ன் தனி இணை மலரைத் திரும்பப் படிக்கக்கூடியவர்கள் இந்த வாதத்தின் போக்கு முழுவதையும் ஆழ்ந்தறிவார்கள்,

இதே விஷயந்தான் இன்று பெருத்த அளவில் ''மாபெரும்'' ருஷ்யப் புரட்சி முழுவதையும் மதிப்பீடு செய்வதில் செயல்படுத்தப்படுகிறது—அந்தோ, மரபுவழிப் போலிப் பண்புவாதத்தின் தத்துவாசிரியர்கள் முன்கூட்டியே இதைக் கேலி வர்ணனையாகக் கொச்சைப்படுத்தியும் தாழ்த்தியும் இருக்கிறார்களே! சமூக-ஜனநாயகவாதிகளாகிய நாம் விமர்சனச் சுதந்தரத்திலும் வர்க்க உணர்வை ஆழப்படுத்துவதிலும் வெளியில் நின்று செயலாற்றுவதிலும் கவனஞ்செலுத்த வேண்டுமாம். அவர்களுக்கு, முதலாளித்துவப் போக்கான வர்க்கத்தினருக்குச் செயலாற்றும் சுதந்தரம் இருக்க வேண்டுமாம், புரட்சிகரமான (மிதவாதப் போக்கான என்று வாசித்துக் கொள்ளுங்கள்) தலைமை வகிப்பதற்குச் சுயேச்சையான களம் இருக்க வேண்டுமாம், மேலிருந்து ''சீர்திருத்தங்கள்'' செய்வதற்குச் சுதந்தரம் இருக்க வேண்டுமாம்.

மார்க்ஸியத்தைக் கொச்சைப்படுத்தும் இவர்கள் விமர்சன ஆயுதத்துக்குப் பதிலாக ஆயுதங்களின் விமர்சனத்தை வைக்க வேண்டியதின் தேவையைப் பற்றி மார்க்ஸ் சொன்னதைக் குறித்துச் சிந்தித்துப் பார்த்ததே கிடையாது.[71] வீணாக மார்க்ஸின் பெயரைச் சொல்லிக் கொண்டே இவர்கள் நடைமுறையில் முற்றாக ஃபிராங்ஃபுர்ட் முதலாளித்துவ வாய்ச்சொல் வீரர்களின் உணர்ச்சியில் போர்த்தந்திரங்களைப் பற்றித் தீர்மானங்கள் தயாரிக்கிறார்கள்; இந்த ஃபிராங்ஃபுர்ட் வாய்ச்சொல் வீரர்கள் எதேச்சாதிகார முறையைத் தங்குதடையின்றி விமர்சித்தனர், ஜனநாயக உணர்வை ஆழப்படுத்தினர், ஆனால் புரட்சிக் காலம் செயலாற்றுவதற்கான காலம், மேலிருந்தும் கீழிருந்தும் செயலாற்றுவதற்கான காலம் என்பதைப் புரிந்து கொள்ளத் தவறினர். இவர்கள் மார்க்ஸியத்தை ஏட்டறிவு உபதேசத்திற்குரிய தத்துவமாக மாற்றுவதின் மூலம் முன்னேறிய வர்க்கத்தின், மிகவும் மனவுறுதியுள்ள, வலுவான புரட்சிகரமான வர்க்கத்தின் சித்தாந்தத்தை, மிகவும் பிற்பட்டிருக்கும் மக்கள் பகுதிகளின் சித்தாந்தமாக,கடினமான புரட்சிகரமான ஜனநாயகப் பணிகளினின்றி பின்வாங்கி ஜனநாயகப் பணிகளுக்குத் தீர்வு காணும் வேலையைத் திரு. ஸ்துரூவே கூட்டத்தினர்

கவனித்துக் கொள்ள விட்டிருக்கிறவர்களின் சித்தாந்தமாக மாற்றிவிடுகிருர்கள்.

புரட்சிகரமான அரசாங்கத்தில் சமூக-ஜனநாயகவாதிகள் கலந்து கொள்கிறதினுல் முதலாளித்துவப் போக்கான வர்க்கங்கள் புரட்சியிலிருந்து பின்வாங்குமேயானுல் அதன் வழியாக அவை புரட்சியின் ''வீச்சைக் குறைத்துவிடும்''.

ருஷ்யத் தொழிலாளிகளே, இதைக் கேளுங்கள்: சமூக-ஜனநாயகவாதிகளிடம் பயப்படாத, ஜாராட்சி மீது வெற்றி கொள்ள விரும்பாமல் பேரம் செய்துகொள்ள விரும்புகிற ஸ்துரூவே கூட்டத்தினர் புரட்சி செய்து முடித்தால் அந்தப் புரட்சியின் வீச்சு மேலும் வலுவானதாயிருக்குமாம். நாம் மேலே கூறிய புரட்சியின் இரு சாத்தியப்பாடுகளில் முதல் விளைவு நிகழ்ந்து முடியுமேயானுல்—அதாவது, முடியரசுவாத முதலாளி வர்க்கத்தினர் ஷீப்பவ் பாணி ''அரசியல் சட்டத்தின்'' அடிப்படையில் ஜாராட்சியுடன் பேரம் செய்து கொண்டால்—புரட்சியின் வீச்சு மேலும் வலுவானதாயிருக்குமாம்!

கட்சி முழுவதற்கும் வழிகாட்டுவதற்கு அமைந்த தீர்மானங்களில் இப்படிப்பட்ட மானக்கேடான விஷயங்களை எழுதுகிற சமூக-ஜனநாயகவாதிகள், அல்லது இப்படிப்பட்ட ''பொருத்தமான'' தீர்மானங்களை ஆதரித்துக் கொள்கிற சமூக-ஜனநாயகவாதிகள் மார்க்ஸியத்திலிருந்து உயிர்ப்புள்ள உணர்ச்சியை விரட்டியடித்து விட்ட ஏட்டறிவு உபதேசத்திற்குரிய தத்துவத்திலே கண்மூடிப் போய் இந்தத் தீர்மானங்கள் தம்முடைய மற்ற அழகான சொற்கள் அனைத்தையும் பொருளற்ற சொற்ருெடர்களாக மாற்றிவிடுவதைப் பார்க்கத் தவறுகிருர்கள். இஸ்க்ரா வெளியிட்ட அவர்களின் எந்தக் கட்டுரையையாயினும் எடுத்துப் பாருங்கள், பெயர் கெட்ட நம் மர்த்தீனவ் எழுதிய பெயர்கெட்ட குறுநூலையுங் கூட எடுத்துப் பாருங்கள்: மக்கள் புரட்சியெழுச்சி பற்றியும், புரட்சியை முழுமையாக நடத்தி முடிப்பது பற்றியும், முரணுள்ள முதலாளி வர்க்கத்தை எதிர்க்கும் போராட்டத்தில் சாதாரண மக்களை ஆதாரமாகக் கொண்டிருக்க முயற்சிப்பது பற்றியும் அதில் படிப்பீர்கள். என்றபோதிலும், முதலாளி

வர்க்கம் விலகிவிடுவதின் விளைவாகப் ''புரட்சியின் வீச்சு குறைந்துவிடும்'' எனும் கருத்தை நீங்கள் ஒப்புக்கொண்ட வுடனே, அல்லது ஆதரித்தவுடனே இந்த நேர்த்தியான விஷயங்கள் அனைத்தும் பயனற்ற சொற்றொடர்களாகிவிடு கின்றன. கனவான்களே, முன்னுள்ள மாற்றுவழிகள் இவை தாம்: ஒன்று, முரணுள்ள, தன்னலம் பேணுகிற, பேடித்தன முள்ள முதலாளி வர்க்கத்தையும் மீறி மக்களோடு சேர்ந்து நாம் புரட்சியை நடத்தி முடிக்க முயற்சிக்க வேண்டும், ஜாராட்சி மீது முழுமையான வெற்றி பெற வேண்டும்; அல்லது, இந்த ''மீறி'' என்பதை நாம் ஒப்புக் கொள்ளாமல் முதலாளி வர்க்கம் புரட்சியிலிருந்து ''பின்வாங்கக்'' கூடுமே என்று பயப்படுகிறவர்களாயிருக்க வேண்டும். இரண்டாம் வழக்கின்படி பார்த்தால் நாம் முரணுள்ள, தன்னலம் பேணு கிற, பேடித்தனமுள்ள முதலாளி வர்க்கத்துக்குப் பாட்டாளி வர்க்கத்தையும் மக்களையும் காட்டிக் கொடுக்கிறோம்.

என் வார்த்தைகளைத் தவறாக வியாக்கியானம் செய்ய நினைக்காதீர்கள். வேண்டுமெனறே துரோகம் செய்வதாக உங்களைக் குற்றஞ்சாட்டுவதாகக் கூக்குரலிடாதீர்கள். இல்லை, நீங்கள் எப்போதும் சதுப்புக் குழியை நோக்கி ஊர்ந்து சென்றவர்களே, கடைசியாக அதில் போய் விழுந்திருக்கிறீர் கள். பழைய ''பொருளாதாரவாதிகளைப் போலவே நீங்களும் தன்னையறியாமல் போய் விழுந்திருக்கிறீர்கள். அவர்கள் மார்க்ஸியத்தை ''மேலும் ஆழப்படுத்துவது'' எனும் சரிவுப் பலகையிலே சரிந்தார்கள், அதிலிருந்து தடுத்துக் கொள்ள வும் முடியவில்லை, மீண்டெழுந்துவரவும் முடியவில்லை. கடை சியில் மார்க்ஸியம் ஒரு புரட்சி-எதிர்ப்பான, ஆன்மா இல் லாத, உயிர் இல்லாத ''அறிவுநடிப்பாகிவிட்டது''.

கனவான்களே, ''புரட்சியின் வீச்சை'' நிர்ணயிக்கிற உண்மையான சமுதாயச் சக்திகளைப் பற்றி என்றைக்காயி னும் நீங்கள் சிந்தித்துண்டா? தற்சமயம் நமக்கு வெகு சாதகமாக வளர்ந்துள்ள வெளிநாட்டு அரசியல் சக்திகளை, சர்வதேசக் கூட்டுகளை விட்டு விடுவோம்; ருஷ்யாவின் உள் நாட்டுச் சக்திகள் பற்றிய பிரச்சினையை நாம் பார்த்து வரு வதால் அவற்றை நாமனைவருமே விவாதத்திலிருந்து விலக்கி

வைக்கிறோம், அப்படிச் செய்வது சரியுங்கூட. இந்த உள் நாட்டுச் சமுதாயச் சக்திகளைப் பரிசீலியுங்கள். புரட்சிக்கு எதிராக எதேச்சாதிகாரமுறை, ஜார் மன்னன் பரிவாரம், போலீஸ், அதிகாரவர்க்கம், இராணுவம், பிரபுவம்சத்தைச் சேர்ந்த சிறு கூட்டத்தினர் அணி வகுத்து நிற்கின்றனர். மக்களின் வெஞ்சினம் ஆழமாக வளர வளர, துருப்புகள் மேன் மேலும் நம்பிக்கை வைக்கத் தகாதவையாகிவிடுகின்றன, மேன்மேலும் அதிகாரவர்க்கம் ஊசலாடுகிறது. மேலும், மொத்தத்தில் முதலாளி வர்க்கம் இப்போது புரட்சியை ஆதரிக்கிறது, சுதந்தரத்தைப் பற்றி வாய்ப்பறை அடிக்கிறது, மேன்மேலும் அடிக்கடி மக்கள் பெயரால், புரட்சியின் பெயராலுங்கூடப் பொழிந்து தள்ளுகிறது.* எனினும் மார்க்ஸிய வாதிகளான நாமனைவரும் தத்துவத்திலிருந்தும் நாள்தோறும் மணிதோறும் நம்முடைய மிதவாதிகளையும் ஜெம்ஸ்துவோ உறுப்பினர்களையும் ஒஸ்வபஷ்தேனியே ஆதரவாளர்களையும் உற்றுக் கவனிக்கிறதிலிருந்தும் புரட்சியை ஆதரிப்பதில் முதலாளி வர்க்கம் முரணுள்ளதாய், தன்னலம் பேணுவதாய், பேடித்தனமுள்ளதாய் இருப்பதை அறிவோம். மொத்தத்தில் முதலாளி வர்க்கம் தவிர்க்க முடியாதவாறு எதிர்ப் புரட்சியை நோக்கித் திரும்பும், எதேச்சாதிகாரமுறையை நோக்கித் திரும்பும், புரட்சிக்கும் மக்களுக்கும் எதிராகத் திரும்பும்—அதன் குறுகிய சுயநலங்கள் கைகூடியவுடன், முரணற்ற ஜனநாயகத்திடமிருந்து அது ''பின்வாங்கிய'' வுடன் (அது ஏற்கெனவே பின்வாங்கி வருகிறது!). பாக்கி இருப்பது ''மக்கள்''—அதாவது, பாட்டாளி வர்க்கமும் விவசாயி மக்களும்: பாட்டாளி வர்க்கம் ஒன்றுதான் நம்பிக்கையுடன் முடிவுவரை செல்லத் திறமை வாய்ந்தது, ஏனெனில் அது ஜனநாயகப் புரட்சிக்கும் அப்பால் வெகு தொலைவுக்குச் செல்கிறது. எனவேதான் பாட்டாளி வர்க்கம் குடியரசுக்காகப் போராடுவதில் முன்னணியில் நிற்கிறது, முத

---

* இது சம்பந்தமாகத் திரு. ஸ்துரூவே ழொரேஸுக்கு எழுதிய பகிரங்கக் கடிதம் சுவையுள்ளது. இதை ழொரேஸ் *L' Humanité* இலும்[72] திரு. ஸ்துரூவே ஒஸ்வபஷ்தேனியே, இதழ் 72லும் வெளியிட்டனர்.

லாளி வர்க்கம் பின்வாங்கக்கூடிய சாத்தியப்பாட்டைக் கணக்கில் எடுத்துக் கொள்ளச் சொல்லும் முட்டாள்தனமான, தகாத அறிவுரையைத் துச்சமென்று தள்ளிவிடுகிறது. விவசாயி மக்களில் சிறுமுதலாளி வர்க்கப் பகுதியினருடன் கூடவே பெரும் எண்ணிக்கையில் அரை பாட்டாளி வர்க்கப் பகுதியினரும் அடங்கியுள்ளனர். அதனுல் அதுவும் தடுமாறுகிறதாயுள்ளது; அது பாட்டாளி வர்க்கத்தைக் கருராக ஒரு வர்க்கக் கட்சியில் திரளுமாறு கட்டாயப்படுத்துகிறது. என்றபோதிலும், விவசாயி மக்களின் தடுமாறும் நிலேக்கும் முதலாளி வர்க்கத்தின் தருமாறும் நிலேக்கும் அடிப்படை வேற்றுமை உண்டு. ஏனெனில் தற்சமயம் விவசாயி மக்கள் முற்ருகத் தனிச் சொத்துடைமையைப் பேணிக்காப்பதை விட தனிச் சொத்துடைமையின் முதன்மையான வடிவங்களில் ஒன்ருகிய நிலப்பிரபுத்துவப் பண்ணேகளேப் பறிமுதல் செய்வதில் அதிகமாக அக்கறை கொண்டுள்ளது. அதன் வழியாக சோஷலிஸ்டு ஆகிவிடாமலும் சிறுமுதலாளி வர்க்கத் தன்மையும் இழக்காமலும் இருந்தபோதிலும் விவசாயி மக்களிடம் ஜனநாயகப் புரட்சியின் ஒரு முழுமனதான, தீவிரமான ஆதரவாளஞக ஆகும் திறமுண்டு. அதற்கு அறிவுத் தெளிவு ஊட்டும் புரட்சிகரமான நிகழ்ச்சிகளின் போக்கு முதலாளி வர்க்கத்தின் துரோகத்தாலோ பாட்டாளி வர்க்கத்தின் தோல்வியாலோ அகாலமாகத் துண்டிக்கப்படாமல் மட்டும் இருக்குமேயாஞல் விவசாயி மக்கள் தவிர்க்க முடியாதவாறு அப்படி ஆவார்கள். இந்த நிபந்தனேக்கு உட்பட்ட நிலேயில், தவிர்க்க முடியாதவாறு விவசாதி மக்கள் புரட்சிக்கும் குடியரசுக்கும் அரணுகிவிடுவார்கள். ஏனெனில் முற்ருக வெற்றிபெறும் புரட்சி ஒன்றுதான் நிலச்சீர்திருத்தத் துறையில் விவசாயி மக்களுக்கு அனேத்தையும் கொடுக்க முடியும்—விவசாயிகள் விரும்புவது, கனவு கண்டது, விவசாயிகளுக்கு உண்மையில் தேவையானது அனேத்தையும் கொடுக்க முடியும்—(அவர்களுக்கு அவை தேவைப்படுவது ''சோஷலிஸ்டு-புரட்சியாளர்கள்'' நினேப்பதுபோல் முதலாளித்துவத்தை ஒழிப்பதற்காக அல்ல) அரைப் பண்ணேயடிமை முறை எனும் சேற்றுக் குழியிலிருந்து வெளியேறுவதற்

காக, ஒடுக்குமுறை அடிமை நிலையிலிருந்து வெளியேறுவதற் காக, பண்ட உற்பத்தி அமைப்புமுறையின் கீழ் எந்த அள வுக்கு முடியுமோ அந்த அளவுக்குத் தங்களுடைய வாழ்க்கை நிலைமைகளை மேம்படுத்திக் கொள்வதற்காக.

மேலும், தீவிரமான நிலச் சீர்திருத்தம் கிடைக்கும் என் பதற்காக மட்டும் விவசாயி மக்கள் புரட்சியுடன் ஒட்டிக் கொண்டிருக்கவில்லை, தங்களுடைய பொதுவான, நிரந்தர மான நலன்களுக்காகவும்தான். பாட்டாளி வர்க்கத்தோடு சேர்ந்து போராடிக் கொண்டிருக்கும்போதுங்கூட விவசாயி மக்களுக்கு ஜனநாயகம் தேவையாயுள்ளது, ஏனெனில் ஜன நாயக அமைப்புமுறை ஒன்றுதான் விவசாயி மக்களின் நலன்களைச் சரிநுட்பமாக வெளியிடவும் பெருந்திரள், பெரும் பான்மை எனும் வகையில் விவசாயி மக்களின் தலைமை நிலைமை உறுதிப்படுத்தவும் முடியும். விவசாயி மக்களின் அறிவுத்தெளிவு வளர வளர (ஜப்பானுடன் போர்[73] நடந்த காலத்திலிருந்து அவர்களின் அறிவுத்தெளிவு விரைவாக வளர்ந்து வருகிறது, பள்ளிக்கூட கெஜக்கோலை வைத்து அறிவுத்தெளிவை அளந்த பழக்கப்பட்ட பலர் இவ்வளவு வேகமாக அது வளரும் என்று எதிர்பார்க்கவில்லை), மேன் மேலும் முரணின்றியும் உறுதியுடனும் அது முழுமையான ஜனநாயகப் புரட்சியை ஆதரிக்கும். ஏனெனில் முதலாளி வர்க்கத்தைப் போல் மக்களின் மேலாதிக்கத்தைப் பற்றி அது பயப்படுவதற்கு ஏதுமில்லை; மாறாக அதனால் ஆதாயந் தான் உண்டு. விவசாயி மக்கள் தம்முடைய அப்பாவித்தன மான முடியரசுவாதத்தைத் தூக்கியெறியத் தொடங்கிய தும் ஜனநாயகக் குடியரசு அவர்களின் இலட்சியமாகிவிடும், ஏனெனில் முதலாளி வர்க்கத் தரகர்களின் உணர்வுபூர்வ மான முடியரசுவாதம் (மேல் சபை முதலியவற்றைக் கொண் டது) விவசாயி மக்கள் இன்று அனுபவித்து வரும் அதே உரி மையின்மையையும் ஒடுக்குமுறையையும் அறியாமையையும் —ஐரோப்பிய அரசியல் சட்டமுறை எனும் பூச்சப் பூசிச் சற்று மெருகிட்டதோடு சரி—குறிக்கும்.

எனவேதான், ஒரு வர்க்கம் என்கிற வகையில் முதலாளி வர்க்கம் இயல்பாகவும் தவிர்க்க முடியாதபடியும் மிதவாத-

முடியரசுவாதக் கட்சியின் அரவணைப்பின்கீழ் வரும் போக்கில் போகிறது, விவசாயி மக்கள் மொத்ததில் புரட்சிகரமான, குடியரசுவாதக் கட்சியின் தலைமையின்கீழ் வரும் போக்கில் போகிறது. எனவேதான் முதலாளி வர்க்கத்தால் ஜனநாயகப் புரட்சியை முழுமையாக நடத்தி முடிக்க முடியாது, விவசாயி மக்களால் அவ்வாறு நடத்தி முடிக்க முடியும். அதற்கு நாம் உதவியளிக்க எல்லா முயற்சிகளும் செய்யவும் வேண்டும்.

இது சொல்லித் தெரிய வேண்டிய விஷயமல்லவே, அரசியல் ஆனு ஆவன்னு ஆயிற்றே, எல்லாச் சமூக-ஜனநாயகவாதிகளுக்கும் நன்ருகத் தெரிந்ததுதானே என்று ஆட்சேபனை எழக்கூடும். இல்லை, அப்படி ஒன்றும் இல்லை. முதலாளி வர்க்கம் பின்வாங்குவதின் விளைவாக புரட்சியின் ''வீச்சு குறைந்து விடும்'' என்று பேச முடிகிறவர்கள் அதைப் புரிந்து கொள்ளவில்லை. அப்படிப்பட்ட ஆசாமிகள் நம் நிலப்பிரச்சினை பற்றிய வேலைத்திட்டத்தின் சொற்களைத் திருப்பியொப்பிக்கிருர்கள். அவற்றின் அர்த்தத்தைப் புரிந்துகொள்ளாமல் வெறுமே மனப்பாடமாகக் கற்றிருக்கிருர்கள். அப்படி இல்லாவிட்டால் பாட்டாளி வர்க்கத்தின், விவசாயி மக்களின் புரட்சிகரமான ஜனநாயகச் சர்வாதிகாரம் எனும் கருத்துருவத்தைப் பற்றி அவர்கள் பயப்பட்டிருக்க மாட்டார்கள்—இந்தக் கருத்துருவம் மார்க்ஸிய உலகப் பார்வை முழுவதிலிருந்தும் நம் வேலைத்திட்டத்திலிருந்தும் தவிர்க்க முடியாதவாறு வருவதாகும்; அப்படி இல்லாவிட்டால் முதலாளி வர்க்கம் எந்த எல்லைக்குப் போகத் தயாராயிருக்கிறதோ அந்த எல்லையுடன் அவர்கள் மாபெரும் ருஷ்யப் புரட்சியின் வீச்சைக் கட்டுப்படுத்தி நிறுத்திவிட மாட்டார்கள். இப்படிப்பட்ட ஆசாமிகள் தம்முடைய ஸ்தூலமான மார்க்ஸிய-எதிர்ப்பான, புரட்சி-எதிர்ப்பான தீர்மானங்களின் மூலமாகத் தம்முடைய சூட்சுமமான மார்க்ஸியப் புரட்சிகரமான சொற்ளெடர்களைத் தோற்கடித்துவிடுகிருர்கள்.

வெற்றிகரமான ருஷ்யப் புரட்சியில் விவசாயி மக்களின் பாத்திரத்தை உண்மையாகவே புரிந்து கொண்டிருப்பவர்கள் முதலாளி வர்க்கம் பின்வாங்குமேயாளுல் புரட்சியின்

*வீச்சு குறைந்துவிடும் என்று பேசக்கூட கனவு காண மாட்டார்கள். ஏனெனில், உண்மையாகப் பார்த்தால், முதலாளி வர்க்கம் பின்வாங்கும் போதுதான், திரள்திரளான விவசாயி மக்கள் பாட்டாளிவர்க்கத்துடன் தோள் சேர்த்துத் தீவிர மான புரட்சியாளர்களாக வெளிக்கிளம்புகிற போதுதான் ருஷ்யப் புரட்சி தன்னுடைய உண்மையான வீச்சை எடுத்துக் கொள்ளத் தொடங்கும், முதலாளித்துவ-ஜனநாயகப் புரட்சியின் சகாப்தத்தில் சாத்தியமான மிக விரிவான புரட்சிகர வீச்சை உண்மையாகவே எடுத்துக் கொள்ளும். முரணின்றிக் கடைசிவரை கொண்டு சென்று முடிப்பதற்கு நம்முடைய புரட்சியானது முதலாளி வர்க்கத்தின் தவிர்க்க முடியாத முரண்தன்மையை முடக்கம் செய்யக் கூடிய சக்திகளை (அதாவது, ''அதைப் புரட்சியிலிருந்து பின்வாங்கும்படி செய்ய'' முடிகிற சக்திகளை—சிந்தனையின்மையின் காரணமாக* இஸ்க்ரா*வின் காக்கேஸிய ஆதரவாளர்கள் அதைக் கண்டு வெகுவாகப் பயப்படுகிறார்கள்) நம்பி நிற்க வேண்டும்.*

எதேச்சாதிகார முறையின் எதிர்ப்பைப் பலத்தின் மூலமாக நசுக்கவும் முதலாளி வர்க்கத்தின் தடுமாற்ற நிலையை முடக்கம் செய்துவிடவும் திரளான விவசாயி மக்களுடன் கூட்டணி வகுத்துக் கொண்டு பாட்டாளி வர்க்கம் ஜனநாயகப் புரட்சியை நடத்தி முடிக்க வேண்டும். முதலாளி வர்க்கத்தின் எதிர்ப்பைப் பலத்தின் மூலமாக நசுக்கவும் விவசாயி மக்களின், சிறு முதலாளி வர்க்கத்தினரின் தடுமாற்ற நிலையை முடக்கம் செய்துவிடவும் மக்களிடையேயுள்ள அரைப் பாட்டாளி வர்க்கத் தன்மையுள்ள பகுதிகளோடு கூட்டணி வகுத்துக்கொண்டு பாட்டாளி வர்க்கம் சோஷலிஸப் புரட்சியைச் சாதித்து முடிக்க வேண்டும். *இவைதாம் பாட்டாளி வர்க்கத்தின் பணிகள். புரட்சியின் வீச்சைப் பற்றிய தம்முடைய வாதங்கள் தீர்மானங்கள் அனைத்திலும் புதிய-*இஸ்க்ரா *குழுவினர்* இவற்றை *மிகவும் குறுக்கி முன்வைக்கிறார்கள்.*

*எனினும் ஒரு விஷயத்தை மறந்துவிடக் கூடாது; புரட்சியின் ''வீச்சு'' பற்றிய விவாதங்களில் அதை அடிக்கடி மறந்துவிடுகிறார்கள். இந்தப் பணியிலுள்ள கஷ்டங்கள் பிரச்சினையல்ல, அதன் தீர்வைத் தேடி எடுத்துக் கொள்வதற்கு என்ன*

வழி என்பதே பிரச்சினையாகும் என்பதை மறக்கலாகாது. புரட்சியின் வீச்சை வலுவானதாகவும் வெல்லற்கரியதாக வும் செய்வது சுலபமா கஷ்டமா என்பது பிரச்சினையல்ல, அந்த வீச்சை மேலும் வலுவுள்ளதாகச் செய்வதற்கு எப் படிச் செயலாற்ற வேண்டும் என்பதே பிரச்சினை. நம் நடவடிக் கைகளின் அடிப்படையான தன்மை, அவை பின்பற்றிச் செல்ல வேண்டிய திசை—இதிலேதான் நம்முடைய கருத்துக் கள் வேறுபடுகின்றன. இதை நாம் வலியுறுத்தக் காரணம், கவனமற்ற, மனச்சாட்சியற்ற ஆசாமிகள் மிக அடிக்கடி இரண்டு வெவ்வேருன பிரச்சினைகளை—பின்பற்ற வேண்டிய திசை, அதாவது, இரண்டு வெவ்வேருன பாதைகளில் ஒன் றைத் தேர்ந்து கொள்வது எனும் பிரச்சினையையும் நம் குறிக்கோளைச் சாதித்துக் கொள்வது சுலபமா, குறிப்பிட்ட பாதையில் போனல் அதைச் சாதித்துக் கொள்வதின் வாய்ப்பு நெருங்குமா என்கிற பிரச்சினையையும்—குழப்பிக் கொள் கிருர்கள்.

மேலே இந்தக் கடைசிப் பிரச்சினையை நாம் எடுத்துக் கவனிக்கவேயில்லை. ஏனெனில் அது கட்சியில் எந்த வேறு பாட்டையோ கருத்துவேற்றுமையையோ உண்டாக்கவில்லை. உண்மை, இந்தப் பிரச்சினை மிகவும் முக்கியமானது, எல்லாச் சமூக-ஜனநாயகவாதிகளும் கருராகக் கவனம் செலுத்தும் தகுதியுடையது. திரள்திரளாகப் பாட்டாளி வர்க்கத்தை மட்டுமின்றி விவசாயி மக்களையும் இயக்கத்தினுள் கொண்டு வருவதிலுள்ள கஷ்டங்களை மறப்பது மன்னிக்கத்தகாத நம்பிக்கைவாதமாகும். இந்தக் கஷ்டங்கள்தாம் பல தடவை களில் ஜனநாயகப் புரட்சியை முற்ருக நடத்தி முடிக்கச் செய்யும் முயற்சிகளை நாசப்படுத்தியுள்ளன, மிகப் பெரும் பாலும் முரணுள்ள, தன்னலமிக்க முதலாளி வர்க்கமே வெற்றி பெற்றுள்ளது. ஏனெனில் அது மக்களுக்கு எதிராக முடியரசின் பாதுகாப்பு எனும் வடிவத்தில் "முதல் எடுத்து" அதே நேரத்தில் மிதவாதத்தின்.... அல்லது ஒஸ்வபஷ்தேனியே போக்கின் "கன்னித்தன்மையைக் காத்துக் கொண்டும்" இருக்கிறது. என்றபோதிலும், கஷ்டம் என்பதால் அசாத்தி யம் என்ருகிவிடாது. தேர்ந்து கொண்ட பாதை சரியானது

என்கிற நம்பிக்கையே முக்கியமாகும், இந்த நம்பிக்கை அதிசயங்களைச் செய்ய முடிகிற புரட்சிகரமான ஆற்றலையும் புரட்சிகரமான ஆர்வத்தையும் நூறு மடங்காகப் பெருக்கி விடும்.

தேர்ந்து கொள்ள வேண்டிய பாதை பற்றிய பிரச்சினையில் இன்றையச் சமூக-ஜனநாயகவாதிகளிடையேயுள்ள பிளவின் ஆழத்தைப் பார்ப்பதற்குப் புதிய-இஸ்க்ரா ஆதரவாளர்களின் காக்கேஸியத் தீர்மானத்தை ரு.ச.ஜ.தொ. கட்சியின் மூன்ருவது காங்கிரஸ் தீர்மானத்துடன் ஒப்புநோக்கிஞல் உடனே தெரிந்துவிடும். காங்கிரஸ் தீர்மானம் கூறுகிறதாவது: முதலாளி வர்க்கம் முரண்தன்மை உள்ளது, நம்மிடமிருந்து புரட்சியின் ஆதாயங்களைப் பறிப்பதற்குத் தவருமல் முயற்சிக்கும். எனவே, தொழிலாளித் தோழர்களே! போராட்டத்துக்கு மேலும் வலுவான தயாரிப்புகள் செய்யுங்கள்! ஆயுதமெடுத்துக் கொள்ளுங்கள், விவசாயி மக்களை உங்கள் பக்கம் கொண்டுவந்துவிடுங்கள்! போராட்டம் இன்றி நம்முடைய புரட்சிகரமான ஆதாயங்களைத் தன்னலம் தேடும் முதலாளி வர்க்கத்திடம் தாரை வார்க்க மாட்டோம். காக்கேஸியப் புதிய-இஸ்க்ரா ஆதரவாளர்களின் தீர்மானம் கூறுகிறதாவது: முதலாளி வர்க்கம் முரண்தன்மை உள்ளதால் புரட்சியிலிருந்து பின்வாங்கக் கூடும். எனவே, தொழிலாளித் தோழர்களே! தயவு செய்து தற்காலிக அரசாங்கத்தில் கலந்து கொள்வது பற்றிச் சிந்திக்க வேண்டாம். ஏனெனில் அப்படிச் செய்தால் முதலாளி வர்க்கம் நிச்சயமாகப் பின்வாங்கிவிடும், அதஞல் புரட்சியின் வீச்சு குறைக்கப் பட்டுவிடும்!

ஒரு தரப்பினர் சொல்கிறதாவது: முரண்தன்மையுள்ள முதலாளி வர்க்கத்தின் எதிர்ப்பையோ செயல்முனைப்பின்மையையோ மீறிப் புரட்சியை முழு முடிவுக்குக் கொண்டு செல்ல வேண்டும்.

மற்ற தரப்பினர் சொல்கிறதாவது: சுதந்தரமாகப் புரட்சியை முழுமுடிவுக்குக் கொண்டுசெல்வதைப் பற்றிச் சிந்திக்காதீர்கள், ஏனெனில் அப்படிச் செய்தால் முரண்தன்மையுள்ள முதலாளி வர்க்கம் அதிலிருந்து பின்வாங்கிவிடும்.

*இவ்விரண்டும் நேரெதிரான பாதைகள் அல்லவா? ஒரு போர்த்தந்திரத் தொகுதி மற்றதை முற்றுக விலக்குகிறது என்பது வெளிப்படையில்லையா? முதலில் சொன்ன போர்த் தந்திரங்கள் மட்டுமே புரட்சிகரமான சமூக-ஜனநாயக வாதத்தின் சரியான போர்த்தந்திரங்கள், இரண்டாவதாகச் சொன்னவை வெறுமே* **ஒஸ்வபஷ்தேனியே** *போர்த்தந்திரங் களே என்பதும் வெளிப்படையில்லையா?*

## 13. முடிவு. வெல்லத் துணிவோமா?

ருஷ்யச் சமூக-ஜனநாயகவாதத்தில் உள்ள நிலவரங்களை மேம்போக்காகத் தெரிந்து வைத்திருக்கிறவர்களும் சரி, ''பொருளாதாரவாதம்'' தோன்றிய காலத்திலிருந்து இருந்து வரும் நம் உள்கட்சிப் போராட்டத்தின் முழு வரலாற்றையும் அறியாமல் வெறுமே பார்வையாளர்கள் என்கிற நிலையில் மதிப்பிடுகிறவர்களும் சரி, போர்த்தந்திரங்களைப் பற்றி இன்று உருவாகியுள்ள—குறிப்பாக மூன்றுவது காங்கிரஸைத் தொடர்ந்து உருவாகியுள்ள—கருத்துவேற்றுமைகளை, ஒவ்வொரு சமூக-ஜனநாயக இயக்கத்திலும் இரண்டு இயல்பான, தவிர்க்க முடியாத, முற்றிலும் சமரசப்படுத்தத்தக்க போக்குகள் உள்ளன என்கிற எளிமையான வாதத்தைக் கொண்டு மிக அடிக்கடி தள்ளிவிடுகிறார்கள். ஒரு தரப்பினர் சாதாரணமான, நடப்பிலுள்ள அன்றாட வேலையைக் குறிப்பாக வலியுறுத்துகின்றனர், பிரச்சாரத்தையும் கிளர்ச்சியையும் வளர்ப்பது, சக்திகளைத் தயாரிப்பது, இயக்கத்தை ஆழப்படுத்துவது முதலியவற்றின் அவசியத்தை வலியுறுத்துகின்றனர் என்றும்; மற்ற தரப்பினர் இயக்கத்தின் போர்த்துடிப்புள்ள, பொது அரசியலான, புரட்சிகரமான பணிகளை வலியுறுத்துகின்றனர், ஆயுதமேந்திய புரட்சியெழுச்சியின் தேவையைச் சுட்டிக் காட்டுகின்றனர், மற்றும் புரட்சிகர-ஜனநாயகச் சர்வாதிகாரம், தற்காலிகப் புரட்சி அரசாங்கம் எனும் கோஷங்களை முன்வைக்கிறார்கள் என்றும் கூறுகிறார்கள். இரு தரப்பினரையும் மிகைப்படுத்தலாகாது என்கிறார்

கள்; இரு வழக்குகளிலும் (பொதுவாகச் சொன்னல், உலகத்தில் எங்குமே) துருவநிலே எடுப்பது மோசம் என்றெல்லாம் கூறுகிறுர்கள்.

இப்படிப்பட்ட வாதங்களில் சாமானிய (மற்றும் மேற்கோள் குறிகளில் அடைத்த ''அரசியல்'') அறிவின் பாற்பட்ட மலிவான மூதுண்மை உள்ளதில் ஐயமில்லே; இது மிக அடிக்கடி கட்சியின் அவசர அவசியமான தேவைகளேப் புரிந்து கொள்ளச் சக்தியற்றிருப்பதை மறைக்கிறது. ருஷ்யாவின் சமூக-ஜனநாயகவாதிகளிடையே இன்று இருந்து வரும் போர்த்தந்திரக் கருத்துவேற்றுமைகளே எடுத்துக் கொள்ளுங்கள். வேலேயின் அன்ருட, வழக்கமுறையான அம்சத்தை—போர்த்தந்திரங்களேப்பற்றிய புதிய-இஸ்க்ராவாதங்களில் நாம் காண்பது போன்ற அம்சத்தை—தனிச் சிறப்பாக வலியுறுத்துவது தன்னளவில் எந்த விதமான அபாயத்தையோ போர்த்தந்திரக் கோஷங்கள் சம்பந்தமாகக் கருத்துவேற்றுமையையோ தோற்றுவித்திருக்க முடியாது என்பது உண்மை. ஆனுல், ருஷ்யாவின் சமூக-ஜனநாயகத் தொழிலாளர் கட்சியின் மூன்ருவது காங்கிரஸ் தீர்மானங்களுடன் மாநாட்டின் தீர்மானங்களே ஒப்புநோக்கினுல் போதும், இந்தக் கருத்து வேற்றுமை பளிச்சென்று தெரிந்துவிடுகிறது.

பிறகு என்ன விஷயம்? முதலாவதாக, இயக்கத்தில் இரண்டு போக்குகள் பற்றியும் துருவநிலேகளின் தீமை பற்றியும் பொதுவான, கருத்தியலான முறையிலே பேசினுல் போதாது. குறிப்பிட்ட காலத்தில் குறிப்பிட்ட இயக்கத்தைப் பீடித்து வரும் நோய் என்ன, தற்சமயம் கட்சிக்கு உண்மையான அரசியல் அபாயமாக உள்ளது என்ன என்று நமக்கு ஸ்தூலமாகத் தெரிந்து தீரவேண்டும். இரண்டாவதாக, குறிப்பிட்ட போர்த்தந்திரக் கோஷங்களால்—அல்லது, ஒருக்கால் குறிப்பிட்ட கோஷங்கள் இல்லாமையால்—இலாபமடைகிற உண்மையான அரசியல் சக்திகள் எவை என்றும் நமக்குத் தெரிந்து தீரவேண்டும். புதிய-இஸ்க்ராவாதிகள் சொல்வதைக் கேட்டால், கிளர்ச்சியையும் பிரச்சாரத்தையும் பொருளாதாரப் போராட்டத்தையும் முதலாளித்துவ ஜனநாயகத்தைப் பற்றிய விமர்சனத்தையும் தூக்கியெறிந்து

விடும் அபாயமும் இராணுவத் தயாரிப்புகளிலும் ஆயுதமேந்திய தாக்குதல்களிலும் அதிகாரத்தைக் கைப்பற்றுதல் முதலியவற்றிலும் மிதமிஞ்சிக் கவனஞ்செலுத்தும் அபாயமும் சமூக-ஜனநாயகவாதக் கட்சிக்கு ஏற்பட்டிருக்கிறது எனும் முடிவுக்கு வருவார்கள். ஆனால் உண்மையிலே சொன்னால், கட்சிக்கு உண்மையான அபாயம் முற்றிலும் வேறான திசையிலிருந்து வருகிறது. இயக்கத்தின் நிலையைக் கொஞ்சமேனும் தெரிந்து வைத்திருக்கும் எவரும், அதைக் கவனத்துடனும் சிந்தனைப்பற்றுடனும் பார்த்துக்கொண்டு வருகிற எவரும் புதிய-இஸ்க்ராவாதிகளின் பயத்தில் உள்ள நகைக்கத்தக்க அம்சத்தைப் பார்க்காமல் இருக்க முடியாது. ருஷ்யாவின் சமூக-ஜனநாயகத் தொழிலாளர் கட்சியின் வேலை முழுவதும் ஏற்கெனவே திட்டவட்டமான, மாறாத உருவத்தைப் பெற்றுவிட்டுள்ளது. கிளர்ச்சிப் பிரச்சாரம், முன்னேற்பாடற்ற பொதுக் கூட்டங்கள், துண்டுப்பிரசுரங்களையும் குறுநூல்களையும் வினியோகித்தல், பொருளாதாரப் போராட்டத்தில் உதவி புரிதல், அந்தப் போராட்டத்தின் கோஷங்களை ஆதரித்து நிற்பது ஆகியவற்றின் மீது நம் கவனம் நிலைகொண்டிருப்பதை அது உத்தரவாதம் செய்கிறது. 1890களின் மத்தியிலிருந்தே உறுதியாக நிலைநிறுத்தப் பெற்றுவிட்ட இந்த வேலைகளின்பால் தொண்ணூற்றொன்பது சதவீதத்தில் நம் கவனத்தையும் சக்தியையும் நேரத்தையும் எப்போதும் விடாமல் செலுத்திவராத கட்சிக் கமிட்டியோ, வட்டாரக் கமிட்டியோ, மத்தியப் பிரதிநிதிகளின் கூட்டமோ, தொழிற்சாலைக் குழுவோ ஒன்று கூட இல்லை. இயக்கத்தைப் பற்றி எதும் அறிந்திராதிருப்பவர்களுக்குத்தான் இது தெரியாது. மிகவும் அப்பாவித்தனமான பேர்வழிகள்தாம் ஒன்றுமறியாத பேர்வழிகள்தாம் புதிய-இஸ்க்ரா திருப்பிச் சொல்கிற—மிக முக்கியமானது போன்ற தோரணையில் சொல்கிற—ஊசிப்போன உண்மைகளை அப்படியே ஏற்றுக் கொள்வார்கள்.

உண்மை இதுதான்: புரட்சியெழுச்சியைச் சேர்ந்த பணிகள், பொதுவான அரசியல் கோஷங்கள், மக்கள் புரட்சி முழுவதற்கும் தலைமை தாங்குதல் சம்பந்தமாக மிதமிஞ்சிய

ஆர்வம் காட்டுவதற்கு மாருக மிகவும் எடுப்பாகத் தெரிகிற பிற்பட்ட நிலேயைத்தான் இவ்விஷயத்தில் நாம் காட்டுகிரேம். இந்தப் பிற்பட்ட நிலேயே நம்முடைய மிகப் பெரிய பலவீனமாகும், இயக்கத்துக்கு வாய்த்துள்ள உண்மையான அபாயமாகும், அதனுல் இந்த இயக்கம் செயலளவில் புரட்சிகரமானதாக இருக்கிறதை விட்டுச் சொல்லளவில் புரட்சிகரமானதாக இருக்கும் நிலேக்கு இழிந்துவிடக் கூடும், சில இடங்களில் இழிந்தும் வருகிறது. கட்சி வேலேகளேச் செய்து வரும் நூற்றுக் கணக்கான அமைப்புகள், குழுக்கள், வட்டங்கள் இடையே ஒன்றுகூட இன்று புதிய உண்மைகளேக் கண்டு பிடித்துவிட்ட தோரணேயில் புதிய-இஸ்க்ராவின் போலி அறிஞர்கள் சொல்லி வரும் அன்ருட வேலேகளேத் துவக்கத்திலிருந்தே செய்து வராமல் இருந்தது கிடையாது. மறுபுறத்தில், ஆயுதமேந்திய புரட்சியெழுச்சிக்கு ஆற்றித் தீரவேண்டிய பணிகளேப் புரிந்து கொண்டிருக்கும், அவற்றைச் செய்யத் துவங்கியிருக்கும், ஜாராட்சியை எதிர்க்கும் மக்கள் புரட்சி முழுவதற்கும் தலேமை வகிப்பதின் அவசியத்தை உணர்ந்திருக்கும், அந்நோக்கத்திற்காக திட்டவட்டமான முற்போக்கான கோஷங்களே முன்வைக்க வேண்டியதின் அவசியத்தை—வேறெந்த கோஷங்களேயும் முன்வைக்கலாகாது என்கிற அவசியத்தை—உணர்ந்திருக்கும் குழுக்களும் வட்டங்களும் அற்பசொற்பமான சதவீதத்திலே இருப்பதைக் காண்பீர்கள்.

நம்பமுடியாத அளவுக்கு நாம் முற்போக்கான, உண்மையாகவே புரட்சிகரமான பணிகளிலிருந்து பின்னடைந்திருக்கிருேம். பலப்பல வழக்குகளில் அவற்றைப் பற்றிய உணர்வுகூட நம்மிடையே கிடையாது. இந்த அம்சத்தில் நம்முடைய பிற்பட்ட நிலேயின் காரணமாக இங்கும் அங்குமாகப் புரட்சிகரமான முதலாளித்துவ ஜனநாயகம் பலம் பெற்றிருப்பதையும் நாம் பார்க்கத் தவறியுள்ளோம். அப்படியிருந்தும், நிகழ்ச்சிகளின் போக்கையும் காலத்தின் தேவைகளேயும் பாராதவாறு முதுகைத் திருப்பி நின்று கொண்டு புதிய-இஸ்க்ரா எழுத்தாளர்கள் ''பழையவற்றை மறக்காதீர்கள்! புதியவை உங்களே அடித்துச் செல்ல விடாதீர்கள்!'' என்று

பிடிவாதமாகத் திருப்பிச் சொல்லி வருகிறார்கள். மாநாட்டின் எல்லா முக்கியமான தீர்மானங்களிலும் மாறாமல் இழையோடிக் கொண்டிருக்கும் ஆதாரப்பொருள் இதுவே. ஆனால் காங்கிரஸ் தீர்மானங்களில் அதேபோல் மாறாட்டம் இல்லாமல் நீங்கள் படிப்பது இதுதான்: பழைய பணியை உறுதிப்படுத்துகிற அதே நேரத்தில் (என்றாலும், அதையே வாயில் போட்டு மென்று வருவதோடு நிற்கக் கூடாது, ஏனெனில் அது பழசாகி இருக்கிறது, இலக்கியத்திலும் தீர்மானங்களிலும் அனுபவத்திலும் அது ஏற்கெனவே தீர்க்கப்பட்டுப் பதிவு செய்யப்பட்டுவிட்டது) நாம் ஒரு புதிய பணியை முன்னிறுத்தி, அதன்பால் கவனத்தை ஈர்த்து, ஒரு புதிய கோஷத்தைக் கொடுக்கிறோம், உண்மையிலேயே புரட்சிகரமானவர்களாயுள்ள சமூக-ஜனநாயகவாதிகள் அதைச் செயலில் சாதிக்க உடனடியாக வேலையில் இறங்குமாறு கோருகிறோம் என்று.

சமூக-ஜனநாயகவாதப் போர்த்தந்திரங்களில் உள்ள இரண்டு போக்குகள் பற்றிய பிரச்சினையில் உண்மையில் உள்ள விவகாரம் இதுதான். புரட்சிக் காலம் புதிய பணிகளை முன்வைத்துள்ளது, முற்றாகக் கண்ணிழந்தவர்கள்தாம் அவற்றைப் பார்க்காமல் இருக்க முடியும். சில சமூக-ஜனநாயகவாதிகள் இந்தப் பணிகளைத் தயக்கமின்றி அங்கீகரித்து, நிகழ்ச்சி நிரலில் போட்டு அறிவிக்கிறதாவது: ஆயுதமேந்திய புரட்சியெழுச்சியைத் தாமதப்படுத்தக் கூடாது, அதற்கு உங்களை உடனடியாக, வலுவாகத் தயார்படுத்திக் கொள்ளுங்கள், நிர்ணயமான வெற்றிக்கு அது இன்றியமையாதது என்பதை நினைவில் நிறுத்துங்கள், குடியரசு, தற்காலிக அரசாங்கம்,பாட்டாளி வர்க்கத்தின் விவசாயி மக்களின் புரட்சிகரமான-ஜனநாயகச் சர்வாதிகாரம் ஆகியவற்றைக் கோரும் கோஷங்களை முன்னிறுத்துங்கள், என்று. ஆனால் மற்ற சமூக-ஜனநாயகவாதிகள் பின்னடைகிறார்கள், அதே இடத்தில் நின்றுவிடுகிறார்கள், கோஷங்கள் கொடுப்பதற்குப் பதிலாக முகவுரைகள் எழுதுகிறார்கள்; பழையவற்றை உறுதிப்படுத்தியவாறே புதியவற்றைக் காட்டுவதற்குப் பதிலாக அவர்கள் பழையவற்றைச் சலிப்பூட்டும் வகையில் நெடு

நேரமாக அசைபோட்டுக் கொண்டிருக்கிறார்கள், புதியவற்றைப் பார்க்காமலிருப்பதற்குச் சாக்குகளைப் புனைந்து வருகிறார்கள், நிர்ணயமான வெற்றிக்குரிய நிலைமைகளை நிர்ணயிக்கவோ முழு வெற்றியைச் சாதித்துக் கொள்வதற்குப் பொருத்தமான கோஷங்களை முன்னிறுத்தவோ சக்தியற்றிருக்கிறார்கள்.

இந்த வால்பிடிக்கும் போக்கின் அரசியல் விளைவு நம்மெதிரே நிற்கிறது. ருஷ்யாவின் சமூக-ஜனநாயகத் தொழிலாளர் கட்சியின் ''பெரும்பான்மையினருக்கும்'' புரட்சிகரமான முதலாளித்துவ ஜனநாயகவாதத்துக்கும் இடையே நெருங்குதல் இருப்பதாகச் சொல்லும் கட்டுக்கதை எந்த ஓர் அரசியல் உண்மையாலும் உறுதிப்படுத்தப்படாமல், ''போல்ஷிவிக்குகளின்'' எந்த ஒரு முக்கியமான தீர்மானத்தாலும் உறுதிப்படுத்தப்படாமல், ருஷ்யாவின் சமூக-ஜனநாயகத் தொழிலாளர் கட்சியின் மூன்றாவது காங்கிரஸின் எந்த ஓர் ஆவணத்தாலும் உறுதிப்படுத்தப்படாமல் கட்டுக்கதையாகவே நிற்கிறது. மறு புறத்தில், ஒஸ்வபஷ்தேனியே பிரதிநிதித்துவப்படுத்தும் சந்தர்ப்பவாத, முடியரசுப் போக்கான முதலாளி வர்க்கத்தினர், புதிய-இஸ்க்ரா குழுவினர் ஆதரித்துப் பேசுகிற ''கோட்பாட்டுக்குரிய'' போக்குகளை நெடுங்காலமாகவே வரவேற்று வந்துள்ளனர், இன்று அவற்றைச் செயல்படுத்துவதற்குத் தங்களுடைய சக்தியையும் ஈந்து வருகின்றனர், அவர்களுடைய கவர்ச்சிச் சொற்களையும் ''கருத்துக்களையும்'' தத்து எடுத்துக் கொண்டு வருகிறார்கள்—இவை ''இரகசிய முறைகளையும்'' ''கலகங்களையும்'' எதிர்க்கின்றன, புரட்சியின் ''செயல்முறை'' அம்சத்தை மிகைப்படுத்துவதை எதிர்க்கின்றன, ஆயுதமேந்திய புரட்சியெழுச்சிக் கோஷத்தை வெளிப்படையாகப் பிரகடனப்படுத்துவதை எதிர்க்கின்றன, மிகத்தீவிரமான கோரிக்கைகளின் ''புரட்சிவாதத்தையும்'' மற்றவற்றையும் எதிர்க்கின்றன. மற்றும் காக்கஸஸிலுள்ள ''மென்ஷிவிக்'' சமூக-ஜனநாயகவாதிகளின் முழு மாநாடு போட்டுள்ள தீர்மானமும் புதிய-இஸ்க்ரா ஆசிரியர்கள் அதற்கு அளித்துள்ள ஆதரவும் விவகாரம் முழுவதற்கும் அரசியல்ரீதியிலே பிழைக்கிடமற்ற

வழியில் முடிவு கட்டுகின்றன: புரட்சிகரமான ஜனநாயகச் சர்வாதிகாரத்தில் பாட்டாளி வர்க்கம் பங்கு கொள்ளும் பட்சத்தில் முதலாளி வர்க்கம் பின்வாங்க நேரிட்டால் என்ன ஆகும், என்று! இது விவகாரத்தை இரத்தினச் சுருக்கமாகச் சொல்லி, பாட்டாளி வர்க்கத்தை முடியரசுவாத முதலாளி வர்க்கத்தினரின் தொங்குசதையாக மாற்றிப் பூச்சும் பொட்டும் இட்டு முடிக்கிறது. அதன் வழியாகப் புதிய-இஸ்க்ரா வின் வால்பிடிக்கும் போக்கின் அரசியல் குறிபொருள் செயலளவில் நிரூபிக்கப்படுகிறது—யாரோ ஒரு நபர் போகிற போக்கில் கூறிய கருத்துரையினுல் அல்ல, ஒரு முழுமையான போக்கு குறிப்பாக அங்கீகரித்துள்ள தீர்மானத்தின் மூலமாக.

இந்த உண்மைகளைப்பற்றிச் சிந்திக்கிறவர்கள் சமூக-ஜனநாயக இயக்கத்தில் இரண்டு தரப்பினரும் இரண்டு போக்குகளும் இருப்பதாக வழக்கமாகக் குறிப்பிடுவதின் உண்மையான குறிபொருளைப் புரிந்துகொள்வார்கள். இந்தப் போக்குகளைப் பெரிய அளவில் பயில்வதற்குப் பெர்ன்ஷ்டைன் வாதத்தை எடுத்துக்கொள்ள வேண்டும். இதே வழியிலேதான் பெர்ன்ஷ்டைன்வாதிகள் நம் காது செவிடுபடக் கூறி வருகிறுர்கள்—தாங்கள்தாம் பாட்டாளி வர்க்கத்தின் உண்மையான தேவைகளைப் புரிந்து கொண்டிருக்கிறவர்கள் என்று, தாங்கள்தாம் அதன் சக்திகளைத் திரட்டி வளர்க்கும் பணியையும் வேலை முழுவதையும் ஆழப்படுத்தும் பணியையும் ஒரு புதிய சமுதாயத்துக்குரிய அம்சங்களைத் தயாரிக்கும் பணியையும் கிளர்ச்சி-பிரச்சாரப் பணியையும் புரிந்து கொண்டிருப்பவர்கள் என்று. பெர்ன்ஷ்டைன் சொல்கிறுர்: உள்ளதை அப்படியே மனம் விட்டு அங்கீகரிக்க வேண்டும் என்று நாங்கள் கோருகிறோம், என்று. இதன் வழியே ''இறுதிக் குறிக்கோள்'' ஏதும் இல்லாத ''இயக்கத்தை'' அவர் புனிதப்படுத்துகிறுர், தற்காப்புப் போர்த்தந்திரங்களை மட்டும் புனிதப்படுத்துகிறுர், ''முதலாளி வர்க்கம் பின்வாங்க நேரிட்டால் என்னுவது'' என்று பயப்படும் போர்த்தந்திரங்களைப் பிரச்சாரம் செய்கிறுர். எனவே புரட்சிகரமான சமூக-ஜனநாயகவாதிகளின் ''ஜாக்கொபின்வாதத்தை'' எதிர்த்

தும், ''தொழிலாளர்களின் முன்முயற்சி'' முதலியவற்றைப் புரிந்து கொள்ளத் தவறுகிற ''நூலாசிரியர்களை'' எதிர்த்தும் பெர்ன்ஷ்டைன்வாதிகள் கூக்குரலிட்டனர். உண்மை என்னவென்றால், புரட்சிகரமான சமூக-ஜனநாயகவாதிகள் அன்றாட வேலையை, சின்ன வேலையை, சக்திகளைத் திரட்டுவது முதலான வேலையைக் கைவிடுவது பற்றிச் சிந்தித்ததுகூடக் கிடையாது. இதை எல்லோரும் அறிவார்கள். அவர்கள் கோரியதெல்லாம் இதுதான்: இறுதிக் குறிக்கோள் பற்றித் தெளிவான அறிவு வேண்டும், புரட்சிகரமான பணிகளைத் தெளிவாக முன்வைத்தல் வேண்டும், என்று. அவர்கள் அரைப் பாட்டாளி நிலையிலுள்ள மக்கட்பகுதியையும் அரைச்சிறு முதலாளித்துவ நிலையிலுள்ள மக்கட்பகுதிகளையும் பாட்டாளி வர்க்கத்தின் புரட்சித் தரத்துக்கு உயர்த்த விரும்பினர்— ''முதலாளி வர்க்கம் பின்வாங்கினால் என்னுவது'' என்பது போன்ற சந்தர்ப்பவாத யோசனைகளின் தரத்துக்குப் புரட்சித் தரத்தைத் தாழ்த்த அல்ல. கட்சியின் அறிவுஜீவி வழிப்பட்ட சந்தர்ப்பவாதப் பிரிவுக்கும் பாட்டாளி வர்க்கப் புரட்சிகரமான பிரிவுக்கும் இடையேயுள்ள பிளவை ஒருக்கால் dürfen wir siegen? ''வெல்லத் துணிவோமா?'' எனும் கேள்வி மிகவும் எடுப்பாக வெளியிடுகிறது. நாம் வெற்றி பெறுவது அனுமதிக்கத்தக்கதா? நாம் வெற்றி பெறுவது அபாயகரமானதாயிராதா? நாம் வெற்றி பெற வேண்டுமா? முதற் பார்வைக்கு இக்கேள்வி மிகவும் விந்தையாகத் தெரியும். என்றாலும் அதை எழுப்பினார்கள், எழுப்பித் தீரவேண்டியிருந்தது. காரணம், சந்தர்ப்பவாதிகள் வெற்றியைக் கண்டு பயந்தார்கள், பாட்டாளி வர்க்கத்தைப் பயங்காட்டி வெற்றியிலிருந்து விரட்டப் பார்த்தனர், வெற்றியினால் சங்கடம் ஏற்படும் என்று ஆருடம் சொல்லி வெற்றிக்குப் பாடுபடுமாறு நேர்படக் கோரும் கோஷங்களைக் கேலி செய்தனர்.

அறிவுஜீவி வழிப்பட்ட சந்தர்ப்பவாதப் போக்கு, பாட்டாளி வர்க்க வழிப்பட்ட புரட்சிகரமான போக்கு என்றிருக்கும் இதே அடிப்படையான பிளவு நம்மிடையேயும் உள்ளது. ஆனால் அதில் ஒரு முக்கியமான வேற்றுமை உண்டு: இங்கே

நம் எதிரே இருப்பது ஜனநாயகப் புரட்சி பற்றிய பிரச்சினை, சோஷலிஸப் புரட்சி பற்றிய பிரச்சினையல்ல. முதற்பார்வைக்கு விந்தையாகத் தெரியும் ''வெல்லத் துணிவோமா?'' எனும் கேள்வி நம்மிடையேயும் எழுப்பப்பட்டிருக்கிறது. மார்த்தினவ் தம்முடைய இரண்டு சர்வாதிகார முறைகள் எனும் குறுநூலில் இக்கேள்வியை எழுப்பியிருக்கிறார். நாம் புரட்சி யெழுச்சிக்கு நல்ல முறையிலே தயாரிப்பு செய்து வெற்றி கரமாக நடத்தி முடித்தால் கொடிய துரதிர்ஷ்டம் ஏற்படும் என்று அதில் ஆரூடம் சொல்கிறார். தற்காலிகப் புரட்சி அரசாங்கம் பற்றிய புதிய-இஸ்க்ரா இலக்கியம் முழுவதிலும் இக்கேள்வி எழுப்பப்பட்டிருக்கிறது, மேலும் முதலாளித்துவ-சந்தர்ப்பவாத அரசாங்கத்தில் மில்லிரான் கலந்து கொண்டதைச் சிறுமுதலாளித்துவ புரட்சிகரமான அரசாங்கத்தில் வர்லேன்[74] கலந்து கொண்டதோடு ஒப்பிடுவதில் விடாப்பிடியான, ஆனால் வீணான முயற்சிகளில் விடாமல் ஈடுபட்டிருந்தனர். ''முதலாளி வர்க்கம் பின்வாங்கினால் என்னாவது'' எனும் தீர்மானத்தில் இது உருக்கொண்டிருக்கிறது. எடுத்துக் காட்டாக, இப்போது காவுத்ஸ்கி நையாண்டி பண்ண முயற்சித்து தற்காலிகப் புரட்சி அரசாங்கத்தைப் பற்றிய நம்முடைய சர்ச்சை கரடியைக் கொல்வதற்கு முன்பே இறைச்சியைப் பங்கிட்டுக் கொள்வது போலிருக்கிறது என்று சொல்கிற போதிலும் அந்த நையாண்டி நிரூபிக்கிறது இது தான்: வெறுமே காதுவழியே அறிந்த ஒன்றைப் பற்றிப் பேசினால் திறமையுள்ள புரட்சிகரமான சமூக-ஜனநாயகவாதிகள் கூட தவறு செய்ய நேரிடும். ஜெர்மன் சமூக-ஜனநாயகவாதம் அப்படியொன்றும் தன்னுடைய கரடியைக் கொல்லும் நிலையை (சோஷலிஸப் புரட்சியை நடத்தி முடிக்கும் நிலையை) எட்டிவிடவில்லை; என்றபோதிலும், கோட்பாடுகள், நடைமுறை அரசியல் ஆகியவற்றின் பார்வைநிலையிலிருந்து பார்க்கும் போது நாம் கரடியைக் கொல்லத் ''துணிவோமா'' என்கிற சர்ச்சை மாபெரும் முக்கியத்துவம் பெற்றிருந்திருக்கிறது. ருஷ்யச் சமூக-ஜனநாயகவாதிகள் ''தங்களுடைய கரடியைக் கொல்ல'' முடிகிற நிலையை (ஜனநாயகப் புரட்சியை நடத்தி முடிக்கும் நிலையை) இன்னும் எட்டிவிடவில்லை;

என்றபோதிலும் அதை நாம் கொல்லத் ''துணிவோமா'' என்கிற பிரச்சினை ருஷ்யாவின் எதிர்காலம் முழுவதற்கும் ருஷ்ய சமூக-ஜனநாயகவாதத்தின் எதிர்காலம் முழுவதற்கும் மிகவும் முக்கியமாகும். வெல்லும் ''துணிவு'' நமக்கு உண்டு என்கிற உறுதி இல்லாவிட்டால் போர்ப்படையை வலுவுடன் வெற்றிகரமாகத் திரட்டித் தலைமை வகித்துச் செலுத்த முடியாது.

நம்முடைய பழைய ''பொருளாதாரவாதிகளை'' எடுத்துக் கொள்ளுங்கள். அவர்களுங்கூட தம்முடைய எதிராளி கள் சதிவேலைக்காரர்கள், ஜாக்கொபின்கள் என்றும் (ரபோச்சியே தேலோ, குறிப்பாக இதழ் 10ஐயும், இரண்டாவது காங்கிரஸில் வேலைத்திட்டம் பற்றிய விவாதத்தில்[75] மர்த்தீனவ் ஆற்றிய உரையையும் பார்க்க), அரசியலில் இறங்குவதினால் அவர்கள் மக்களிடமிருந்து தனிமைப்படுத்திக் கொள்கிறார்கள் என்றும், தொழிலாளி வர்க்க இயக்கத்தின் அடிப்படைகளைப் பார்க்கத் தவறுகிறார்கள் என்றும், தொழிலாளிகளின் முன்முயற்சியைப் புறக்கணிக்கிறார்கள் என்றும் மற்றபடியும் கூச்சலிட்டனர். உண்மை என்னவென்றால், ''தொழிலாளர் முன்முயற்சியின்'' ஆதரவாளர்களாகிய இவர்கள் சந்தர்ப்பவாதப் போக்கான அறிவுஜீவிகளே. இவர்கள் பாட்டாளி வர்க்கத்தின் பணிகளைப் பற்றிய தங்களுடைய குறுகிய, சிறுமுதலாளி பாணியிலான தன்னலக் கருத்தோட்டத்தைத் தொழிலாளிகள் மீது சுமத்த முயன்றனர். உண்மை என்னவென்றால், ''பொருளாதாரவாதத்தின்'' எதிராளிகள் சமூக-ஜனநாயக வேலையின் எந்த அம்சத்தையும் புறக்கணிக்கவோ, பின்னணியில் தள்ளிவிடவோ கிடையாது, பொருளாதாரப் போராட்டத்தையும் சிறிதேனும் மறக்கக் கிடையாது; அதே நேரத்தில் அவர்கள் அவசர அவசியமான, உடனடியான அரசியல் பணிகளை முழுப் பரப்பளவில் முன்வைக்க முடிந்தது, அதன் வழியே மிதவாத முதலாளித்துவப் ''பொருளாதாரவாதத்'' தொங்குசதையாகத் தொழிலாளர் கட்சியை உருமாற்றுவதை எதிர்த்தார்கள். இதைப் பழைய இஸ்க்ராவிலிருந்து எவரும் கண்டு கொள்ள முடியும்.

அரசியலானது பொருளாதாரத்தை ஆதாரமாகக் கொண்டது என்று ''பொருளாதாரவாதிகள்'' மனப்பாடமாகக் கற்றுக் கொண்டு அரசியல் போராட்டத்தைப் பொருளாதாரப் போராட்டத்தின் தரத்துக்குத் தாழ்த்த வேண்டும் என்பதே அதன் பொருள் என்று ''புரிந்து கொண்டார்கள்''. பொருளாதாரச் சாராம்சத்தில் ஜனநாயகப் புரட்சி என்பது முதலாளித்துவப் புரட்சியே என்று புதிய-இஸ்க்ராவாதிகள் மனப்பாடமாகக் கற்றுக் கொண்டு முதலாளித்துவ நிதானத்தின் தரத்துக்கு (அதற்கு மேல் போனால் ''முதலாளி வர்க்கம் பின்வாங்கிவிடுமாம்'') பாட்டாளி வர்க்கத்தின் ஜனநாயகக் குறிக்கோள்களைத் தாழ்த்த வேண்டும் என்பதே அதன் பொருள் என்று ''புரிந்து கொண்டார்கள்''. தங்கள் வேலையை ஆழப்படுத்துவதாகச் சாக்கு சொல்லி, தொழிலாளிகளின் முன்முயற்சியை எழுப்பிவிட்டு ஒரு சுத்தமான வர்க்கக் கொள்கையைப் பின்பற்றுவதாகச் சாக்கு சொல்லி, எதார்த்தத்தில் ''பொருளாதாரவாதிகள்'' தொழிலாளி வர்க்கத்தை மிதவாத-முதலாளித்துவ அரசியல்வாதிகளின் கையில் ஒப்படைத்து வந்தார்கள்—அதாவது, புறநிலையில் இதே குறிபொருள் உள்ள பாதையில் கட்சியை நடத்திச் சென்றனர். இதே சாக்குகளைச் சொல்லி, புதிய-இஸ்க்ராவாதிகள் ஜனநாயகப் புரட்சியில் உள்ள பாட்டாளி வர்க்கத்தின் நலன்களை முதலாளி வர்க்கத்துக்கு எதார்த்தத்தில் காட்டிக் கொடுத்து வருகின்றனர்—அதாவது, புறநிலையில் இதே போன்ற குறிபொருள் உள்ள பாதையில் கட்சியை நடத்திச் செல்கின்றனர். அரசியல் போராட்டத்தில் தலைமை வகிப்பது சமூக-ஜனநாயகவாதிகளின் வேலையல்ல, முறையாகச் சொன்னால் அது மிதவாதிகளின் வேலைதான் என்று ''பொருளாதாரவாதிகள்'' நினைத்தனர். ஜனநாயகப் புரட்சியைச் செயல் ஊக்கத்துடன் நடத்துவது சமூக-ஜனநாயகவாதிகளின் வேலையல்ல, முறையாகச் சொன்னால் அது ஜனநாயகப் போக்குள்ள முதலாளி வர்க்கத்தினரின் வேலையே என்று புதிய-இஸ்க்ராவாதிகள் நினைக்கின்றனர்; ஏனெனில், பாட்டாளி வர்க்கத்தின் வழிகாட்டுதலும் தலைமைப் பங்கு செலுத்தலும் புரட்சி

யின் ''வீச்சைக் குறைத்துவிடும்'' என்று அவர்கள் வாதிடுகின்றனர்.

சுருங்கச் சொன்ஞல், புதிய-இஸ்க்ராவாதிகள் ''பொருளாதாரவாதத்தைக்'' காப்பியடிப்பவர்களே—கட்சியின் இரண்டாம் காங்கிரஸில் அவர்கள் தோன்றிய வழியிலும் சரி, ஜனநாயகப் புரட்சியில் பாட்டாளி வர்க்கத்தின் போர்த்தந்திரப் பணிகளை அவர்கள் இன்று முன்வைக்கும் முறையிலும் சரி. அவர்களுங்கூட கட்சியின் அறிவுஜீவி வழிப்பட்ட சந்தர்ப்பவாதப் பிரிவாக உள்ளனர். நிறுவன ஒழுங்கமைப்பில் அவர்கள் அறிவுஜீவி அராஜகவாதத்தின் பாற்பட்ட தனிநபர்வாதத்துடன் அரங்கில் தோன்றி, ''சீர்குலைவு-தொடர்நிகழ்வுப்போக்கு'' என்கிறதில் போய் முடிந்தார்கள். மாநாட்டில் நிறைவேற்றிய ''விதிகளில்'' கட்சியின் இலக்கியப் பணியைக் கட்சி அமைப்பிலிருந்து பிரித்துவிட்டனர்; நேரடியாக அல்லாமல், நடைமுறையில் நான்கு கட்டங்களைக் கொண்ட தேர்தல் முறையை ஏற்படுத்தினர்; ஜனநாயகப் பிரதிநிதித்துவத்துக்குப் பதிலாக போனப்பார்த் வகைப்பட்ட பொதுக்கருத்து அறிவிப்பு முறையை ஏற்படுத்தினர்; கடைசியாக, பகுதிக்கும் முழுமைக்கும் இடையே ''உடன்பாடுகள்'' எனும் கோட்பாட்டை ஏற்படுத்தினர். கட்சிப் போர்த்தந்திரங்களில் இதே சரிவுப் பலகையில் சரிந்தனர். ''ஜெம்ஸ்துவோ இயக்கத்திற்கான திட்டத்தில்''[76] ஜெம்ஸ்துவோ உறுப்பினர்களுக்கு உரைகள் நிகழ்த்துவது ''மிகவும் உயர்தர வகையைச் சேர்ந்த ஆர்ப்பாட்டம்'' என்று கூறினர். அரசியல் அரங்கில் அரசாங்கம், முதலாளித்துவ ஜனநாயகவாதம் என்று இரண்டே இரண்டு செயலூக்கமுள்ள அரசியல் சக்திகளைத்தான் (ஜனவரி 9 வரவிருக்கும் காலத்தில்!) கண்டார்கள். நேரடியான நடைமுறைக் கோஷத்துக்குப் பதிலாகத் தன்னைத் தானே ஆயுதமேந்துவதில் ஆர்வத்தை உணர வேண்டும் என்று அறைகூவல் விடுத்து மக்களை ஆயுதமேந்தச் செய்யும் அவசரப் பணியை ''மேலும் பொருளாழமுள்ளதாகச்'' செய்தார்கள். தங்களுடைய அதிகாரபூர்வமான தீர்மானங்களில் ஆயுதமேந்திய புரட்சியெழுச்சியோடும் தற்காலிக அரசாங்கத்தை நிறுவுவதோடும் புரட்சி

கர-ஜனநாயகச் சர்வாதிகாரத்தோடும் சம்பந்தப்பட்ட பணிகளை உருத்திரித்து வீரியமற்றதாகச் செய்துள்ளனர். ''முதலாளி வர்க்கம் பின்வாங்கினுல் என்னுவது''—கடைசியாக வந்துள்ள அவர்கள் தீர்மானத்தின் இந்த இறுதி ஸ்வரம் அவர்களின் பாதை கட்சியை எங்கே கொண்டுபோய் விடுகிறது எனும் பிரச்சினையைத் தெளிவாக்குகிறது.

ருஷ்யாவில் ஜனநாயகப் புரட்சி சமுதாய-பொருளாதார சாராம்சத்தில் முதலாளித்துவப் புரட்சியேயாகும். இந்தச் சரியான மார்க்ஸியக் கருத்துரையை வெறுமே திருப்பிச் சொன்னுல் மட்டும் போதாது. அதைச் சரியாகப் புரிந்து கொள்ள வேண்டும், சரியாக அரசியல் கோஷங்களோடு பொருத்திச் செயல்படுத்த வேண்டும். பொதுவாகவே, தற்கால, அதாவது முதலாளித்துவ, உற்பத்தி உறவுகளின் அடிப்படையில் அமைந்த அரசியல் சுதந்தரம் அனைத்தும் முதலாளி வர்க்கத்தன்மையுள்ள சுதந்தரமேயாகும். சுதந்தரக் கோரிக்கை முதலாளி வர்க்கத்தின் நலன்களையே முதன்மையாக வெளியிடுகிறது. அதன் பிரதிநிதிகள்தாம் இக்கோரிக்கையை முதன்முதலில் எழுப்பினர். அதன் ஆதரவாளர்கள் தாம் பெற்ற சுதந்தரத்தை எஜமானர்களாகவே எங்கும் பயன்படுத்தினர்; முதலாளித்துவப் பண்புப்படி மிதமாக, நுண்ணிய வரம்புகளுக்குள் அதைச் சுருக்கினர்; அமைதியான காலங்களில் புரட்சிகரமான பாட்டாளி வர்க்கத்தை மிகவும் சூழ்ச்சித் திறத்துடன் நசுக்கு முறையுடன் அதைப் பிணைத்தனர்; புயல் வீசும் காலங்களில் காட்டுமிராண்டித்தனமான நசுக்கு முறையுடன் அதைப் பிணைத்தனர்.

என்ற போதிலும், இதிலிருந்து சுதந்தரத்திற்கான போராட்டத்தை மறுக்க வேண்டும் அல்லது இழித்துப் பேச வேண்டும் என்று கலக்கார நரோத்னிக்குகளும் அராஜகவாதிகளும் ''பொருளாதாரவாதிகளும்'' மட்டுமே முடிவுக்கு வர முடியும். இந்த அறிவுஜீவிப் போக்கான குறுகிய சிறு முதலாளித்துவப் போக்கான போதனைகளைப் பாட்டாளி வர்க்கத்தின் மீது கொஞ்ச காலத்துக்குத்தான், அதன் சித்தத்துக்கு எதிராகச் சுமத்த முடிந்தது. அரசியல் சுதந்தரம் தனக்குத் தேவை, மற்றனைவரையும்விட தனக்குத் தேவை என்று

எப்போதுமே பாட்டாளி வர்க்கம் உள்ளியல்பாக உணர்ந்து கொண்டிருக்கிறது—முதலாளி வர்க்கத்தைப் பலப்படுத்தி ஒழுங்கமைப்பதே அந்தச் சுதந்தரத்தின் உடனடி விளைவாக இருந்தபோதிலுங்கூட. வர்க்கப் போராட்டத்தைத் தவிர்ப்பதின் மூலமாகத் தன் விமோசனத்தைத் தேடிக் கொள்ளலாம் என்று பாட்டாளிவர்க்கம் எதிர்பார்க்கவில்லை; வர்க்கப் போரட்டத்தை வளர்ப்பதின் மூலமாகத்தான், அதன் செயற்பரப்பையும் உணர்வையும் ஒழுங்கமைப்பையும் மனோதிடத்தையும் விரிவாக்குவதின் மூலமாகத்தான் தன்னுடைய விமோசனத்தைத் தேடிக் கொள்ளலாம் என்று எதிர்பார்க்கிறது. அரசியல் போராட்டத்தின் பணிகளை இழித்துப் பேசுகிறவன் சமூக-ஜனநாயகவாதியை மக்களின் போராட்ட வீரனுக இருப்பதை விட்டு ஒரு தொழிற்சங்கச் செயலாளனுக மாற்றிவிடுகிருன். ஜனநாயக-முதலாளித்துவப் புரட்சியில் பாட்டாளி வர்க்கத்தின் பணிகளை இழித்துப் பேசுகிறவன் சமூக-ஜனநாயகவாதியை மக்கள் புரட்சிக்குத் தலைவனுக இருப்பதை விட்டு ஒரு சுயேச்சையான தொழிற் சங்கத் தலைவனுக மாற்றிவிடுகிருன்.

ஆம், மக்கள் புரட்சி. ''மக்கள்'' எனும் சொல்லை முதலாளித்துவ-ஜனநாயகவாதம் கேடாகப் பயன்படுத்துவதைச் சமூக-ஜனநாயகவாதம் முழு உரிமையுடன் எதிர்த்துப் போராடியிருக்கிறது, தொடர்ந்து போராடி வருகிறது. மக்களுக்குள்ளே இருக்கும் வர்க்கப் பகைமைகளைப் புரிந்து கொள்ளத் தவறுவதை மறைப்பதற்கு இச்சொல்லைப் பயன்படுத்தக் கூடாது என்று அது கோருகிறது. பாட்டாளி வர்க்கத்தின் கட்சிக்கு முழுமையான வர்க்க சுதந்தரம் இருக்க வேண்டியதின் அவசியத்தை அது கண்டிப்புடன் வலியுறுத்துகிறது. ஆனுல், முன்னேறிய வர்க்கம் தன்னைத் தன்னுள்ளே அடைபட்டுப் போவதற்காகவோ, குறுகிய வரம்புகளுக்குள் கட்டுண்டு விடுவதற்காகவோ, உலகத்தின் பொருளாதார ஆட்சியாளர்கள் பின்வாங்கிவிடுவார்களே என்று பயப்பட்டுத் தன்னுடைய நடவடிக்கையை வீரியமற்றதாகச் செய்வதற்காகவோ ''மக்களை'' அது ''வர்க்கங்களாகப்'' பிரிக்கவில்லை; இடைத்தர வர்க்கங்களின் அரைமனதான தன்மையோ ஊச

லாட்டமோ மனவுறுதியின்மையோ அறவே இல்லாத இந்த முன்னேறிய வர்க்கம் மக்கள் முழுவதின் இலட்சியத்துக்காக, மக்கள் முழுவதற்கும் தலைவனாக மேலும் அதிகமான வலுவுடனும் ஆர்வத்துடனும் போராட வேண்டும் என்பதற்காகவே அவ்வாறு பிரிக்கிறது.

அதைத்தான் இன்றைய புதிய-இஸ்க்ராவாதிகள் அடிக்கடி புரிந்து கொள்ளத் தவறுகிறார்கள்; இந்த ஆசாமிகள் ஜனநாயகப் புரட்சியில் செயலூக்கமுள்ள அரசியல் கோஷங்கள் கொடுப்பதற்குப் பதிலாக வெறுமே ''வர்க்கம்'' என்கிற சொல்லை எல்லா வேற்றுமையுருபுகளிலும் பால் பாகுபாடுகளிலும் ஏட்டுப்புலமையுடன் திருப்பிச் சொல்கிறார்கள்!

ஜனநாயகப் புரட்சி முதலாளித்துவத் தன்மை உடையது. பொது மறுவினியோகம், அல்லது ''நிலமும் சுதந்தரமும்'' எனும் கோஷம்—மிதியுண்டு கிடக்கிறபோதிலும் அறியாமையில் மூழ்கியிருக்கிறபோதிலும் ஒளி வேண்டும் இன்பம் வேண்டும் என்று பேரார்வத்துடன் விரும்பும் விவசாயி மக்களின் இந்த மிகப் பரவலான கோஷம்—ஒரு முதலாளித்துவ கோஷமாகும். ஆனால், முதலாளித்துவச் சுதந்தரம், முதலாளித்துவ முன்னேற்றம் எனும் பாதையைத் தவிர பாட்டாளி வர்க்கத்தின், விவசாயி மக்களின் உண்மையான சுதந்தரத்துக்கு வேறு பாதை கிடையாது, இருக்கவும் முடியாது என்பதை மார்க்ஸியவாதிகளாகிய நாம் அறிய வேண்டும். சோஷலிஸத்தை மேலும் நெருங்கி வரச் செய்வதற்கு முழுமையான அரசியல் சுதந்தரம் தவிர, ஒரு ஜனநாயகக் குடியரசு தவிர, பாட்டாளி வர்க்கத்தின், விவசாயி மக்களின் புரட்சிகரமான ஜனநாயக சர்வாதிகாரம் தவிர வேறெந்தச் சாதனமும் தற்காலத்தில் கிடையாது, இருக்கவும் முடியாது என்பதை நாம் மறக்கக் கூடாது. முன்னேறிய, புரட்சிகரமான—எந்த விலக்கமும் ஐயமும் இல்லாத, பின்னோக்கிப் பார்க்காத புரட்சிகரமான—ஒரே வர்க்கத்தின் பிரதிநிதிகள் என்கிற முறையில் ஜனநாயகப் புரட்சியின் பணிகளை முடிந்தவரை விரிவாகவும் தைரியமாகவும் உச்சபட்சமான முன்முயற்சியுடனும் மக்கள் அனைத்துக்கும் முன்வைக்க

வேண்டும். இந்தப் பணிகளை இழித்துப் பேசுவது தத்துவார்த்த ரீதியில் மார்க்ஸியத்தைக் கொச்சையாக்குவதாகவே அர்த்தம், குறுகிய சிறுமுதலாளித்துவப் பாணியில் உருக்குலைப்பதாகவே அர்த்தம்; நடைமுறை-அரசியலில் பார்க்கும் போது புரட்சி இலட்சியத்தை முதலாளி வர்க்கத்தின் கையில் கொடுப்பதாகத்தான் அர்த்தம்—அந்த வர்க்கம் புரட்சியை முரணின்றி நிறைவேற்றி வைக்கும் பணியிலிருந்து தவிர்க்க முடியாதபடி பின்வாங்கும். புரட்சி முழு வெற்றி பெறுவதற்கான பாதையில் உள்ள கஷ்டங்கள் மிகப் பெரியவை. பாட்டாளி வர்க்கத்தின் பிரதிநிதிகள் தங்கள் சக்திக்குட்பட்டதனைத்தும் செய்து பார்த்தும் பிற்போக்கின் எதிர்ப்பாலும் முதலாளி வர்க்கத்தின் துரோகத்தாலும் மக்களின் அறியாமையினுலும் அவர்களின் முயற்சிகள் தோற்றுவிடுமானுல் அதற்காக யாரும் அவர்களைப் பழிக்க முடியாது. ஆனுல், சமூக-ஜனநாயகவாதம் வெற்றியைக் கண்டு பயப்படுவதின் காரணமாக, முதலாளி வர்க்கம் பின்வாங்கினுல் என்னுவது எனும் எண்ணத்தினுல் தூண்டப்படுவதின் காரணமாக ஜனநாயகப் புரட்சியின் புரட்சிகரமான ஆற்றலை வெட்டிக் குறைக்குமானுல், புரட்சிகரமான ஆர்வத்தைத் தணிக்குமானுல் அதை எல்லோரும், குறிப்பாக வர்க்க உணர்வுள்ள பாட்டாளி வர்க்கம், கண்டிப்பார்கள்.

புரட்சிகள் வரலாற்றின் உந்துசக்திகள் என்று கூறினுர் மார்க்ஸ்.[77] புரட்சிகள் ஒடுக்கப்படும் மக்களின், சுரண்டப்படும் மக்களின் விழாக்களாகும். புரட்சிக் காலத்தைப் போல் வேறெந்தக் காலத்திலும் திரள் திரளான மக்கள் ஒரு புதிய சமுதாய அமைப்பின் படைப்பாளிகளாக அத்தனை செயலாற்றலுடன் முன்வரக்கூடிய நிலையில் இல்லை. அப்படிப்பட்ட காலங்களில் மக்கள் அதிசயங்களைச் செய்து காட்ட முடியும்—படிப்படியான முன்னேற்றம் எனும் குறுகிய சிறுமுதலாளித்துவப் பாணியில் அமைந்த அளவுகோல்படி பார்க்கும் போது. ஆனுல், அப்படிப்பட்ட காலத்தில் புரட்சிகரமான கட்சிகளின் தலைவர்களும்கூட தம்முடைய குறிக்கோள்களை மேலும் முழு விரிவாகவும் தைரியமாகவும் முன்னுக்குக் கொண்டுவருவது அவசியம். அப்படிச் செய்

தால்தான் அவர்களின் கோஷங்கள் எப்போதும் மக்களின் புரட்சிகரமான முன்முயற்சியின் முன்னே சென்றபடி இருக்கும், கலங்கரை விளக்கமாகப் பயன்படும், நம்முடைய ஜன நாயக, சோஷலிஸ இலட்சியத்தை ஒளிமயமான முழுமை யான வடிவத்தில் மக்களுக்குக் காட்டும்; முழுமையான, சந்தேகமற்ற, நிர்ணயமான வெற்றிக்கு மிகவும் குறுகலான, மிகவும் நேரடியான பாதையைக் காட்டும். புரட்சிக்கும் நேரடிப் பாதைக்கும் பயந்து சமரசத்திற்கான சுற்று வழிப் பாதைகளைப் புனையும் வேலையை ஓஸ்வபஷ்தேனியே முத லாளி வர்க்கத்தின் சந்தர்ப்பவாதிகளுக்கு விட்டுவிடுவோம். அப்படிப்பட்ட பாதைகளில் நாம் இழுத்துச் செல்லப்படப் பலவந்தமாக நிர்ப்பந்திக்கப்பட்டால் அற்பமான அன்றாட வேலையிலுங்கூட நாம் நமது கடமையை ஆற்ற முடியும். ஆனால் முதலில் பாதையைத் தேர்ந்து கொள்வது ஈவிரக்க மற்ற போராட்டத்தில் தீர்மானிக்கப்படட்டும். நேரடியான, நிர்ணயமான பாதைக்காக ஓர் ஈவிரக்கமற்ற தியாகமய மான போராட்டத்தை நடத்துவதற்கு மக்களின் விழாக்கால ஊக்கத்தையும் புரட்சி ஆர்வத்தையும் பயன்படுத்தாவிட் டால் நாம் துரோகிகளாவோம், புரட்சியைக் காட்டிக் கொடுக்கிறவர்களாவோம். முதலாளித்துவச் சந்தர்ப்பவாதி கள் எதிர்காலப் பிற்போக்கைப் பற்றிப் பேடித்தனமான பயத்துடன் எண்ணிப் பார்த்துக் கொண்டு இருக்கட்டும். பிற் போக்கு பயங்கரமாக நடந்து கொள்ளும் முதலாளி வர்க்கம் பின்வாங்கக் கூடும் என்கிற எண்ணத்தால் தொழிலாளிகள் பயமடையாது. பேரம் செய்து கொள்ளலாம் என்று தொழி லாளிகள் எதிர்பார்க்கவில்லை, அற்பமான சலுகைகளையும் கேட்கவில்லை. பிற்போக்குச் சக்திகளை ஈவிரக்கமின்றி நசுக்கும் திசையில்—அதாவது, **பாட்டாளி வர்க்கத்தின், விவசாயி மக்களின் புரட்சிகர-ஜனநாயகச் சர்வாதிகாரத்தை ஏற்படுத்தும்** திசையில்—அவர்கள் முயன்று வருகிறார்கள்.

சுரண்டுபவர்கள் தொழிலாளி வர்க்கத்தின் இரத்தத் தைத் துன்பமிக்க முறையில் நெடிதாகவும் திடமாகவும் உறிஞ்சி வருவதைக் குறிக்கும் மிதவாத முன்னேற்றம் எனும் அமை தியான ‘‘கடற் பயணத்தின்’’ போது கட்சி எனும் கப்ப

லுக்கு இருக்கும் அபாயங்களைவிட புயல் சூழ்ந்த காலங்களில் அபாயங்கள் அதிகமாகும் என்பது உண்மையே. ''அதிதீவிரமான எதிர்க்கட்சியின்'' பணிகளைவிட, அல்லது முற்றிலும் நாடாளுமன்ற வகைப்பட்ட போராட்டத்தின் பணிகளைவிட புரட்சிகர-ஜனநாயகச் சர்வாதிகார முறையின் பணிகள் எவ்வளவோ கஷ்டமானவையாகும், சிக்கலுள்ளவையாகும் என்பதும் உண்மையே. ஆனால், இன்றையப் புரட்சிகரமான நிலைமையில் அமைதியான பயணத்தையும் பத்திரமான ''எதிர்க்கட்சிப்'' போக்கையும் உணர்வுபூர்வமாக விரும்பித் தேர்ந்தெடுத்துக் கொள்ளக் கூடியவர்கள் சமூக-ஜனநாயக வேலையை கொஞ்சகாலத்துக்குக் கைவிடுவது நல்லது, புரட்சி நடந்து முடிகிறவரை காத்திருப்பது நல்லது, விழா நாட்கள் முடிகிறவரை காத்திருப்பது நல்லது. அதன்பிறகு வழக்கமான அன்றாட வாழ்க்கை மீண்டும் தொடங்கிவிடும், அப்போது அவர்களின் குறுகிய வழக்கப்பட்டுப் போன வரையளவுகள் அவ்வளவு மோசமான அபஸ்வரங்களை எழுப்பாது, அல்லது முன்னேறிய வர்க்கத்தின் பணிகளை அவ்வளவு விகாரமாக உருக்குலைப்பவையாக இரா.

மக்கள் முழுமைக்கும், குறிப்பாக விவசாயி மக்களுக்குத் தலைமை தாங்கிச் செல்லும் நிலையில்—முழுமையான சுதந்தரத்துக்காக, முரணற்ற ஜனநாயகப் புரட்சிக்காக, குடியரசுக்காக! எல்லா உழைப்பாளிகளுக்கும் சுரண்டப்படுகிறவர்களுக்கும் தலைமை தாங்கும் நிலையில்—சோஷலிஸத்துக்காக! இப்படித்தான் புரட்சிகரமான பாட்டாளி வர்க்கத்தின் கொள்கை நடைமுறையில் இருந்து தீரவேண்டும். புரட்சிக் காலத்தில் தொழிலாளர் கட்சியின் ஒவ்வொரு போர்த்தந்திரப் பிரச்சினைக்குரிய தீர்வையும் ஒவ்வொரு நடைமுறைப் படியையும் நிறைத்துக் கொண்டு நிர்ணயிக்கிறதாயுள்ள வர்க்கக் கோஷம் இதுதான்.

# பின்னுரை

## மீண்டும் ''ஒஸ்வபஷ்தேனியே'' போக்கு, மீண்டும் புதிய-''இஸ்க்ரா'' போக்கு

*நம் குறுநூலின் 8ம் அத்தியாயத்தில் எடுத்துக் கவனித்துள்ள பிரச்சினைக்குக் கூடுதலாகப் புதிய வளமான விஷயாதாரத்தை* ஒஸ்வபஷ்தேனியே, *இதழ்கள் 71-72ம்,* இஸ்க்ரா *இதழ்கள் 102-103ம் தருகின்றன. இந்த வளமிக்க விஷயாதாரமனைத்தையும்* இங்கே *பயன்படுத்துவது முற்றிலும் சாத்தியமில்லை, எனவே மிகவும் முக்கியமான விஷயங்களோடு நிறுத்திக் கொள்வோம். முதலாவதாக, சமூக-ஜனநாயகவாதத்தில் எந்த வகையான ''எதார்த்தவாதத்தை''* ஒஸ்வபஷ்தேனியே *புகழ்கிறது, ஏன் அதைப் புகழ வேண்டும்; இரண்டாவதாக, புரட்சி, சர்வாதிகாரமுறை எனும் கருத்துருவங்களிடையே* இருக்கும் *உறவுமுறை.*

### 1. முதலாளித்துவ-மிதவாத எதார்த்தவாதிகள் சமூக-ஜனநாயகவாத "எதார்த்தவாதிகளை" ஏன் புகழ்கிறார்கள்?

*''ருஷ்யச் சமூக-ஜனநாயகவாதத்தில் பிளவு'', ''சாதாரண அறிவின் வெற்றி'' என்று தலைப்பிட்ட கட்டுரைகள்* (ஒஸ்வபஷ்தேனியே, *இதழ் 72) சமூக-ஜனநாயகவாதத்தைப் பற்றி மிதவாத முதலாளி வர்க்கத்தினர் கொண்டுள்ள கருத்தை வெளியிடுகின்றன.* இக்கருத்து *வர்க்க உணர்வுள்ள பாட்டாளிகளுக்குக் குறிப்பிடத்தக்க மதிப்புள்ளது.* இக்கட்டுரைகளை *முழுமையாகப் படிக்க வேண்டும், அவற்றின்* ஒவ்வொரு

வாக்கியத்தைப் பற்றியும் ஆழச்சிந்திக்க வேண்டும் என்று நாம் ஒவ்வொரு சமூக-ஜனநாயகவாதிக்கும் பலமாகப் பரிந்துரைப்பது மிகையாகாது. இக்கட்டுரைகளிலுள்ள மிக முக்கியமான கருத்துரைகளை முதலில் திரும்பக் கொடுப்போம். ஓஸ்வபஷ்தேனியே எழுதுவதாவது:

''சமூக-ஜனநாயகக் கட்சியை இரண்டு பிரிவுகளாகப் பிளந்திருக்கும் கருத்து வேற்றுமைகளின் உண்மையான அரசியல் பொருளை வெளியிலுள்ள நோக்கர் புரிந்து கொள்வது கொஞ்சம் கஷ்டந்தான். 'பெரும்பான்மையினரின்' பிரிவு மற்றதைவிட தீவிரமானது, வழியை விட்டு விலகாதது என்றும் இதிலிருந்து வேறுபடுத்திக் காட்டும் வகையில் 'சிறுபான்மையினரின்' பிரிவு இலட்சியத்தின் நலன்களை முன்னிட்டுச் சில சமரசங்கள் செய்து கொள்வதை அனுமதிக்கிறது என்றும் வரையறுப்பது அவ்வளவு சரிநுட்பமானதல்ல, எப்படியிருந்த போதிலும் அது முழுமையான பண்புரையை அளிக்கிறதாயில்லை. குறைந்த பட்சம், ஒருக்கால் லெனின் பிரிவைவிட சிறுபான்மையினரின் பிரிவு அதிக ஆர்வத்துடன் மார்க்ஸிய மரபுச் சூத்திரங்களைப் பின்பற்றுகிறது. பின்வரும் பண்புரை மேலும் சரியாய் இருக்கிறதாக நமக்குத் தோன்றுகிறது. 'பெரும்பான்மையினரின்' அடிப்படையான அரசியல் மனநிலை கருத்தியலான புரட்சிவாதம், கலகப் போக்கு, எவ்வகையிலாயினும் மக்கள் திரளிடையே புரட்சியெழுச்சியைத் தூண்டிவிட்டு அவர்கள் சார்பில் அதிகாரத்தைக் கைப்பற்றுவது. ஓரளவுக்கு இது 'லெனினியவாதிகளை' சோஷலிஸ்டு-புரட்சியாளர்களிடம் நெருங்கக் கொண்டு வந்து விடுகிறது, அனைத்து மக்களையும் தழுவிய ருஷ்யப் புரட்சி எனும் கருத்தைக் கொண்டு அவர்கள் மனத்திலிருந்து வர்க்கப் போராட்டம் எனும் கருத்தை மறைக்கச் செய்கிறது. 'லெனினியவாதிகள்' நடைமுறையில் சமூக-ஜனநாயகவாதத்தின் குறுகிய சித்தாந்தத்தைப் பெரிதாகக் கைவிடுகிறார்கள்; அதேபொழுதில், மறுபுறத்தில், புரட்சிவாதத்தின் குறுகிய மனப்போக்கு அவர்களை முற்றாக ஆட்கொண்டிருக்கிறது; உடனடியான புரட்சியெழுச்சிக்குரிய தயாரிப்பு தவிர மற்றெல்லா நடைமுறை வேலையையும் அவர்கள் கைவிடுகிறார்கள்; சட்டபூர்வமான கிளர்ச்சியின் மற்றும் ஓரளவு சட்டபூர்வமான கிளர்ச்சியின் எல்லா வடிவங்களையும் மற்ற எதிர்க்கட்சிப் போக்குகளுடன் நடைமுறைப் பயனுள்ள எவ்வகைப்பட்ட சமரசங்களையும் அவர்கள் கோட்பாடுரீதியிலே புறக்கணிக்கிறார்கள். அதற்கு மாறாக, சிறுபான்மையினர்

மார்க்ஸிய மரபுச் சூத்திரத்தை உறுதியாகப் பற்றி நிற்கிற அதே நேரத்தில் மார்க்ஸிய உலகப் பார்வையின் எதார்த்த வாத அம்சங்களைப் பேணிக் காக்கின்றனர். 'பாட்டாளி வர்க்கத்தின்' நலன்களை முதலாளி வர்க்கத்தின் நலன்களுக்கு எதிராக நிறுத்துவது இப்பிரிவினரின் அடிப்படைக் கருத்து. என்றபோதிலும், மறுபுறத்தில், சமூக-ஜனநாயகவாதத்தின் மாற்றவொண்ணாத சூத்திரங்கள் விதிக்கும் சில வரம்புகளுக்குள் நின்றுகொண்டு வர்க்கப் போராட்டத்தை எதார்த்தமான நிதானப் பாங்குடன்—இப்போராட்டத்தின் எல்லா ஸ்தூலமான நிலைமைகளையும் குறிக்கோள்களையும் தெளிவாக உணர்ந்துள்ள நிலையில்—பார்க்கின்றனர். இவ்விரண்டு பிரிவுகளும் தத்தம் அடிப்படைப் பார்வைநிலையை முரணின்றிப் பின்பற்றவில்லை. ஏனெனில் அவர்கள் தத்தம் சித்தாந்த, அரசியல் செயற்பாட்டில் சமூக-ஜனநாயகவாத வினாவிடைப் பாடத்தின் கண்டிப்பான சூத்திரங்களால் கட்டுண்டுள்ளனர்; குறைந்தபட்சம் சில சோஷலிஸ்டு-புரட்சியாளர்களின் பாணியிலான வழி பிசகாத கலகக்காரர்களாக ஆகாதபடி இது 'லெனினியவாதிகளைத்' தடுக்கிறது, தொழிலாளி வர்க்கத்தின் உண்மையான அரசியல் இயக்கத்தின் நடைமுறைத் தலைவர்களாக ஆகாதபடி இது 'இஸ்க்ரா குழுவினரைத்' தடுக்கிறது.''

மிக முக்கியமான தீர்மானங்களின் உள்ளடக்கங்களை மேற்கோள் காட்டியபின் ஒஸ்வபஷ்தேனியே எழுத்தாளர் அவற்றைப் பற்றிப் பல ஸ்தூலமான குறிப்புரைகளைக் கொண்டு தம்முடைய பொதுவான ''கருத்துக்களை'' விளக்கிக் காட்டுவதில் இறங்குகிறார். மூன்றாவது காங்கிரஸுடன் ஒப்புநோக்கும் போது ''சிறுபான்மையினரின் மாநாடு ஆயுதமேந்திய புரட்சியெழுச்சி விஷயத்தில் முற்றிலும் வேறுபட்ட கண்ணோட்டத்தை எடுத்துக் கொள்கிறது'' என்று அவர் கூறுகிறார். ''ஆயுதமேந்திய புரட்சியெழுச்சி பற்றிய கண்ணோட்டம் சம்பந்தமாகத்'' தற்காலிக அரசாங்கம் பற்றிய அவ்விரு தரப்பினரின் தீர்மானங்களில் வேற்றுமை இருக்கிறது. ''தொழிலாளிகளின் தொழிற்சங்கங்கள் விஷயத்திலும் இதே போன்று வேற்றுமையை வெளிப்படுத்துகின்றன. தொழிலாளி வர்க்கத்தின் அரசியல் கல்வியிலும் ஒழுங்கமைப்பிலும் மிகவும் முக்கியமான இந்தத் தொடக்கப் புள்ளியைப் பற்றி 'லெனினியவாதிகள்' தம் தீர்மானங்களில் ஒரு வார்த்தையேனும் சொல்லவில்லை. இதற்கு மாறாக, சிறுபான்மையினர் ஒரு பொருளாழமுள்ள தீர்மானம் போட்டுள்ளனர்.'' மிதவாதிகள் சம்பந்தமாக இரு பிரிவினரும் உடன்படுகின்

றனர் என்று கூறுகிறார், ஆனால் மூன்றாவது காங்கிரஸ் ''மித வாதிகள் பால் கொள்ள வேண்டிய உறவு நிலை பற்றி இரண்டாவது காங்கிரஸ் நிறைவேற்றிய பிளெஹானவ் தீர்மானத்தைஅநேகமாக வார்த்தைக்கு வார்த்தை அப்படியே திருப்பிச் சொல்கிறது, அதே காங்கிரஸ் நிறைவேற்றிய மிதவாதிகளுக்குச் சற்று அதிகமாகச் சாதகமாய் இருக்கும் ஸ்தரவேர் தீர்மானத்தை நிராகரிக்கிறது''. விவசாயிகளின் இயக்கம் பற்றிய காங்கிரஸ் தீர்மானமும் மாநாட்டின் தீர்மானமும் மொத்தத்தில் பொருந்துவதாயிருந்த போதிலும் ''நிலப்பிரபுக்களின் நிலங்களையும் மற்ற நிலத்தையும் புரட்சிகரமான முறையிலே பறிமுதல் செய்யும் கருத்தைப் 'பெரும்பான்மையினர்' அதிகமாக வலியுறுத்துகின்றனர், ஆனால் 'சிறுபான்மையினர்' அரசு, நிர்வாகம் ஆகிய துறைகளில் ஜனநாயகச் சீர்திருத்தங்கள் வேண்டும் எனும் கோரிக்கையைத் தம்முடைய கிளர்ச்சிக்கு அடிப்படையாக வைக்க விரும்புகிறார்கள்.''

இறுதியாக, இஸ்க்ராவின் இதழ் 100லிருந்து ஒரு மென்ஷிவிக் தீர்மானத்தை ஒஸ்வபஷ்தேனியே மேற்கோள் காட்டுகிறது. அதன் முக்கியமான பிரிவுக்கூறு பின்வருமாறு: ''கட்சி வாழ்க்கையில் மக்கள் போதியவாறு பங்கெடுத்துக் கொள்ளச் செய்வதற்குத் தலைமறைவான வேலை மட்டும் உத்தரவாதம் செய்ய முடியாததாலும், ஓரளவுக்குத் தம்மளவில் மக்களையும் சட்டவிரோதமான அமைப்பு என்கிற வகையிலுள்ள கட்சியையும் எதிரும் புதிருமாக நிறுத்துவதில் கொண்டுபோய்விடுவதாலும், கட்சியானது தொழிலாளிகளின் தொழிற்சங்கப் போராட்டத்தைச் சட்டபூர்வமான அடிப்படையில் நடத்துவதற்குத் தலைமை வகிக்க வேண்டும், இந்தப் போராட்டத்தைச் சமூக-ஜனநாயகவாதப் பணிகளுடன் கண்டிப்பாகப் பிணைத்திருக்கவும் வேண்டும்''. இந்தத் தீர்மானத்தைப் பற்றி ஒஸ்வபஷ்தேனியே விமர்சிக்கையில், ''இந்தத் தீர்மானம் சாதாரண அறிவின் வெற்றி, சமூக-ஜனநாயகக் கட்சியின் ஒரு குறிப்பிட்ட பகுதியினர் போர்த்தந்திரங்கள் விஷயத்தில் தெளிவு காணத் தொடங்கியுள்ளதற்குச் சான்று என்று இதை நாங்கள் மனதார வரவேற்கிறோம்'' என்று கூவுகிறது.

ஒஸ்வபஷ்தேனியேயின் குறிக்கத்தக்க கருத்துக்களனைத்தையும் வாசகர் முன் வைத்திருக்கிறோம். புறநிலை உண்மைக்குப் பொருத்தமாயுள்ளது என்கிற அர்த்தத்தில் இக்கருத்துக்கள் சரியே என்று கருதுவது மிகக் கொடிய தவறு என்பது

உண்மை. ஒவ்வொரு சமூக-ஜனநாயகவாதியும் அவற்றில் ஒவ்வொரு படியிலும் உள்ள தவறுகளை எளிதில் கண்டு கொள்வான். இந்தக் கருத்துக்களில் மிதவாத முதலாளி வர்க்கத்தினரின் நலன்களும் பார்வைநிலையும் நிறைந்துள்ளதையும் இந்த அர்த்தத்தில் அவை முற்றிலும் ஒருசார்பானதாகவும் நோக்குச் சார்புடையதாகவும் இருப்பதையும் மறுப்பது அப்பாவித்தனமாயிருக்கும். குவியாடியிலோ குழியாடியிலோ பொருட்கள் பிரதிபலிக்கிற மாதிரி அவை சமூக-ஜனநாயகவாதத்தின் கருத்துக்களை வக்கிரமாகப் பிரதிபலிக்கின்றன. என்றபோதிலும், கடைசிப் பரிசீலனையில் பார்க்கையில் இந்த முதலாளித்துவத் திரிபான கருத்துக்கள் முதலாளி வர்க்கத்தின் அசல் நலன்களைப் பிரதிபலிப்பதை மறப்பது அதைவிடப் பெரிய தவருயிருக்கும். வர்க்கம் என்கிற முறையில் அது சமூக-ஜனநாயகவாதத்தில் எந்தப் போக்குகள் தனக்கு அனுகூலமாகவும் நெருக்கமாகவும் பொருத்தமாகவும் ஏற்புடையதாகவும் இருக்கிறதென்பதையும் எந்தப் போக்குகள் கேடானதாகவும் தொலைவானதாகவும் அயலானதாகவும் பொருத்தமற்றதாகவும் இருக்கிறதென்பதையும் ஐயமின்றிச் சரியாகப் புரிந்து கொள்கிறது. ஒரு முதலாளித்துவப் போக்கான தத்துவஞானியோ முதலாளித்துவப் போக்கான பொதுவிவகார எழுத்தாளனே சமூக-ஜனநாயகவாதத்தை முறையாகப் புரிந்து கொள்ளவே மாட்டான்—அது போல்ஷிவிக் சமூக-ஜனநாயகவாதமாயிருந்தாலும் சரி, மென்ஷிவிக் சமூக-ஜனநாயகவாதமாயிருந்தாலும் சரி. ஆனல் அவன் ஓர் அறிவுணர்ச்சியுள்ள பொதுவிவகார எழுத்தாளனுக இருப்பானேயானுல் அவனுடைய வர்க்க உள்ளுணர்வுகள் அவனைக் கைவிடா, சமூக-ஜனநாயகஇயக்கத்தில் முதலாளி வர்க்கத்துக்குச் சாதகமாகவோ பாதகமாகவோ இருக்கக்கூடிய எந்தப் போக்கின் சாராம்சத்தையும் (அதைத் திரிந்த முறையிலே முன்வைத்த போதிலும்) அவன் எப்போதும் புரிந்து கொள்வான். எனவேதான், நம் பகைவனின் வர்க்க உள்ளுணர்வை, வர்க்கக் கருத்தை எப்போதும் ஒவ்வொரு வர்க்க உணர்வுள்ள பாட்டாளியும் மிக உன்னிப்பாகக் கவனிக்கத் தகுந்ததாகும்.

நிற்க. ஒஸ்வபஷ்தேனியேயைத் தன் குரலாகக் கொண்டுள்ள ருஷ்ய முதலாளி வர்க்கத்தின் வர்க்க உள்ளுணர்வு நமக்குச் சொல்வதென்ன?

அது புதிய-இஸ்க்ரா பிரதிநிதித்துவப்படுத்தும் போக்கைப் பற்றி திருப்தி தெரிவிக்கிறது, எதார்த்தவகைப்பட்டதாயிருப்பதற்கு அதை மெச்சிக் கொள்கிறது, நிதான மனப்பான்மைக்காகவும் சாதாரண அறிவின் வெற்றிக்காகவும் அதன் தீர்மானங்களின் நிறைவுக்காகவும் அது போர்த்தந்திரங்கள் விஷயத்தில் தெளிவு காணத் தொடங்கியிருப்பதற்காகவும் அதன் நடைமுறைப் பாங்கு முதலியவற்றிற்காகவும் அதை மெச்சிக் கொள்கிறது. அது மூன்றுவது காங்கிரஸின் போக்கைப் பற்றி அதிருப்தி தெரிவிக்கிறது, அதன் குறுகிய மனப்பான்மைக்காகவும் புரட்சிவாதத்திற்காகவும் கலகப் போக்குக்காகவும் நடைமுறைப் பயனுள்ள சமரசங்களை நிராகரிப்பது முதலியவற்றிற்காகவும் அதைக் கண்டிக்கிறது. அடிக்கடி நம் இலக்கியத்தில் மிகச் சரிநுட்பமான உண்மைகளைக் கொண்டு நிரூபிக்கப்பட்டிருக்கும் விஷயத்தை—அதாவது, புதிய-இஸ்க்ரா ஆதரவாளர்கள் தற்கால ருஷ்யச் சமூக-ஜனநாயக இயக்கத்தின் சந்தர்ப்பவாதப் பிரிவினர், அவர்களின் எதிராளிகள் புரட்சிகரமான பிரிவினர் என்கிற விஷயத்தை—முதலாளி வர்க்கத்தின் வர்க்க உள்ளுணர்வு அதற்குச் சரியாக உணர்த்துகிறது. முந்தைய பிரிவினரின் போக்குகள் பால் அனுதாபத்தையும் பிந்தைய பிரிவினரின் போக்குகள் பால் கண்டனத்தையும் மிதவாதிகள் காட்டாமல் இருக்க முடியாது. தொழிலாளி வர்க்கத்தின் ''நடைமுறைப் பாங்கினுல், நிதான மனப்பான்மையால், நிறைவால்''—முதலாளித்துவக் கட்டுக்கோப்புக்குள்ளும், சீர்திருத்தங்கள், தொழிற்சங்கப் போராட்டம் முதலியவற்றிற்குள்ளும் தன் நடவடிக்கைக் களத்தை உண்மையில் குறுக்கிக் கொள்வதால்—முதலாளி வர்க்கத்துக்கே ஆதாயமுண்டு என்பதை முதலாளி வர்க்கத்தின் சித்தாந்தவாதிகள் என்கிற முறையில் மிதவாதிகள் நன்ருகப் புரிந்து கொள்கிருர்கள். பாட்டாளி வர்க்கத்தின் ''புரட்சிகரமான குறுகிய மனப்பான்மை'', தன் வர்க்கப் பணிகளின் பெயரால் அது ருஷ்யாவின்

அனைத்து மக்களையும் தழுவிய புரட்சியில் தலைமை கொள் வதற்குச் செய்யும் முயற்சிகள்—இவ்விஷயங்கள் முதலாளி வர்க்கத்துக்கு அபாயகரமானதாகவும் பயமூட்டுவதாகவும் உள்ளன.

ஒஸ்வபஷ்தேனியேயின் அர்த்தத்தில் ''எதார்த்தப் போக்கு'' எனும் சொற்றொடரின் உண்மையான குறிபொருள்—மற்றவை ஒருபுறமிருக்க—இதுதான் என்பது இச்சொற் றொடரை முன்பு ஒஸ்வபஷ்தேனியேயும் திரு. ஸ்துரூவே யும் பயன்படுத்திய முறையிலிருந்து தெரிகிறது. ஒஸ்வபஷ் தேனியேயின் ''எதார்த்தப் போக்கின்'' குறிபொருள் இப் படிப்பட்டதுதான் என்பதை இஸ்க்ராவாலும் ஒத்துக் கொள் ளாமல் இருக்க முடியவில்லை. எடுத்துக்காட்டாக, இஸ்க்ரா வின் இதழ் 73-74ன் இணைமலரிலுள்ள ''நேரம் வந்துவிட் டது!'' எனும் கட்டுரையை நினைத்துப்பாருங்கள். இக்கட்டுரை யை எழுதியவர் (ருஷ்யாவின் சமூக-ஜனநாயகத் தொழி லாளர் கட்சியின் இரண்டாவது காங்கிரஸில் ''சதுப்புக்குழிப் பிரிவினரின்'' கருத்துக்களை முரணின்றி வெளியிடுகிறவர்) ''காங்கிரஸில் அக்கீமவ் சந்தர்ப்பவாதத்தின் ஆவியுருவாகத் தான் நடந்து கொண்டாரே தவிர உண்மைப் பிரதிநிதியாக நடக்கவில்லை'' என்று மனந்திறந்து கருத்துத் தெரிவித்தார். உடனே இஸ்க்ரா ஆசிரியர்கள் ''நேரம் வந்துவிட்டது!'' எனும் கட்டுரையை எழுதியவரைத் திருத்துவதற்காகப் பின்வரும் குறிப்பு வெளியிட வேண்டியதாயிற்று:

''இந்தக் கருத்தை ஏற்க முடியாது. வேலைத்திட்டம் பற்றிய தோழர் அக்கீமவின் கருத்துக்களில் சந்தர்ப்பவாதத் தின் முத்திரை தெளிவாகப் பதிந்திருக்கிறது. இந்த உண் மையை ஒஸ்வபஷ்தேனியேயின் விமர்சகர்கூட ஒப்புக்கொள் கிறார். அண்மையில் வந்த அதன் ஓரிதழில் அக்கீமவ் 'எதார்த் தப் போக்கின்' (திருத்தல்வாதப் போக்கின் என்று வாசிக்க வும்) ஆதரவாளர் என்று கூறினார்.''

எனவே, ஒஸ்வபஷ்தேனியேயின் ''எதார்த்தப் போக்கு'' வெறும் சந்தர்ப்பவாதமே தவிர வேறில்லை என்று இஸ்க்ரா வுக்கு நன்றாகத் தெரியும். ''மிதவாத எதார்த்தப் போக் கைத்'' தாக்குகையில் (இஸ்க்ரா, இதழ் 102) இஸ்க்ரா தன்

னுடைய எதார்த்தப் போக்குக்காக மிதவாதிகள் தன்னைப் போற்றிப் புகழ்ந்ததைப் பற்றி இப்போது ஒன்றும் சொல்லவில்லையென்றால் இந்த மௌனத்துக்குக் காரணம் இந்தப் புகழ்ச்சி எந்தக் கண்டனத்தையும்விட கசப்பானதாய் இருப்பதுதான். இப்படிப்பட்ட புகழ்ச்சி (இதை ஒஸ்வபஷ்தேனியே ஏதோ தற்செயலாகக் கூறியதல்ல, முதல் தடவையாகக் கூறியதும் அல்ல) மிதவாத எதார்த்தப் போக்குக்கும் புதிய-இஸ்க்ராவாதிகளின் போர்த்தந்திர நிலை முழுவதிலும் உள்ள பிழையின் விளைவாக அவர்களின் ஒவ்வொரு தீர்மானத்திலும் எடுப்பாகத் தெரிகிற சமூக-ஜனநாயகவாத ''எதார்த்தப் போக்குக்கும்'' (சந்தர்ப்பவாதத்துக்கும் என்று வாசிக்கவும்) இடையேயுள்ள ஒட்டுப்பண்பை உண்மையில் நிரூபிக்கிறது.

உண்மைதான், ''அனைத்து மக்களையும் தழுவிய'' புரட்சியில் ருஷ்ய முதலாளி வர்க்கம் தன்னுடைய முரண்நிலையையும் தன்னலத்தனத்தையும் ஏற்கெனவே முற்றாக வெளிப்படுத்திக் கொண்டிருக்கிறது—திரு. ஸ்துரூவேயின் வாதங்களிலும் சரி, பெரும்பாலான மிதவாதப் பத்திரிகைகளின் மொத்த தொனியிலும் உள்ளடக்கத்திலும் சரி, மிகப்பெரும்பான்மையான ஜெம்ஸ்துவோ உறுப்பினர்களின் அரசியல் உரைகளின் இயல்பிலும் சரி, பெரும்பாலான அறிவுஜீவிகளின், திருவாளர்கள் துரூபெத்ஸ்கோய், பெத்ருன்கேவிச், ரோதிச்செவ் முதலானோரின் எல்லா ஆதரவாளர்களும் வெளியிட்ட அரசியல் உரைகளின் இயல்பிலும் சரி. ஒரு புறத்தில் தன்னுடைய புரட்சிக்குப் பீரங்கித்தீனியாகவும் எதேச்சாதிகாரத்தை எதிர்ப்பதற்குரிய தாக்குக் கட்டையாகவும் பாட்டாளி வர்க்கமும் ''மக்களும்'' பயன்படுத்தப்படலாம் என்றும், ஆனால் மறுபுறத்தில், பாட்டாளி வர்க்கமும் புரட்சிகரமான விவசாயி மக்களும் ''ஜாராட்சி மீது நிர்ணயமான வெற்றி'' பெற்று ஜனநாயகப் புரட்சியை முழுமையாக நடத்தி முடித்தால் தனக்குப் பயங்கரமான அபாயம் ஏற்படும் என்றும் எல்லாப் பொழுதுகளிலும் முதலாளி வர்க்கம் தெளிவாக உணர்வதில்லை, ஆனால் அதன் வர்க்க உள்ளுணர்வு இவ்வறிவை மொத்தத்திலும் பொதுவாகவும் அதற்கு

மிக நன்ருக உணர்த்துகிறது. எனவேதான், பாட்டாளி வர்க்கம் புரட்சியில் ஒரு ''மிதமான'' பாத்திரம் வகிப்பதோடு திருப்திப்படும்படி செய்வதற்கு, மேலும் அதிகமாக நிதான மனப்பான்மையுடனும்நடைமுறைப் பாங்குடனும்எதார்த்தப் போக்குடனும் இருக்கும்படி செய்வதற்கு, ''முதலாளி வர்க்கம் பின்வாங்கிவிட்டால் என்ளுவது'' எனும் கோட்பாட்டைத் தன் நடவடிக்கைகளுக்கு வழிகாட்டியாக எடுத்துக் கொள்ளச் செய்வதற்கு, முதலாளி வர்க்கம் முழு முயற்சி செய்கிறது.

தொழிலாளி வர்க்க இயக்கத்தைத் தங்களால் விலக்கித் தள்ள முடியாது என்று அறிவுள்ள முதலாளித்துவ நபர்கள் நன்கு அறிவார்கள். எனவேதான் அவர்கள் தொழிலாளி வர்க்க இயக்கத்தையோ பாட்டாளி வர்க்கப் போராட்டத்தையோ எதிர்க்க முன்வருவதே கிடையாது. வேலைநிறுத்த உரிமையையும் நாகரிகப் பாங்குள்ள வர்க்கப் போராட்டத்தையும் வாயளவில் ஆதரிக்கவும் செய்கிருர்கள். ஏனெனில் அவர்கள் தொழிலாளி வர்க்க இயக்கத்தையும் வர்க்கப் போராட்டத்தையும் பிரெண்டாஞே அர்த்தத்திலோ[78] ஹிர்ஷ்-டுங்கர் அர்த்தத்திலோ புரிந்துகொள்கின்றனர். அதாவது, தொழிலாளிகள் மட்டும் தங்களுடைய ''கலகப் போக்கையும்'' ''குறுகிய மனப்பான்மையுள்ள புரட்சிவாதத்தையும்'' ''நடைமுறைப் பயனுள்ள சமரசங்கள் பாலுள்ள'' தங்களுடைய பகைமையையும் கைவிடுவார்களேயாஞல், ''ருஷ்யாவின் அனைத்து மக்களையும் தழுவிய புரட்சியின் மீது'' தங்களுடைய வர்க்கப் போராட்டத்தின் முத்திரையை, பாட்டாளி வர்க்க முரணின்மையின், பாட்டாளி வர்க்க மனத்திட்பத்தின், ''கீழ்த்தட்டு மக்களின் ஜாக்கொபின் போக்கின்'' முத்திரையைப் பதித்திடக் கோரும் தங்கள் பாத்தியதைகளையும் இலட்சியவிருப்பங்களையும் கைவிடுவார்களேயாஞல் தொழிலாளிகளுக்கு வேலைநிறுத்த உரிமையையும் தொழிற்சங்கம் அமைத்துக் கொள்ளும் சுதந்தரத்தையும் (ஏற்கெனவே தொழிலாளிகள் தங்கள் சொந்த பலத்தால் இவற்றை அநேகமாக வென்று கொண்டுவிட்டார்கள்) அவர்கள் ''விட்டுக் கொடுக்க'' முற்றிலும் தயார். எனவேதான், அறி

வுள்ள முதலாளித்துவ நபர்கள் ருஷ்யா முழுவதிலும் தொழிலாளிகளிடையே (முதலாளித்துவப் போக்கான) நிதான புத்தி, (மிதவாத) நடைமுறைப்பான்மை, (சந்தர்ப்பவாத) எதார்த்தப் போக்கு, (பிரெண்டானோ வழிப்பட்ட) வர்க்கப் போராட்டம், (ஹிர்ஷ்-டுங்கர் வழிப்பட்ட) தொழிற்சங்கங்கள்[79] முதலியவை சம்பந்தமான கருத்துக்களைப் பாய்ச்சி நிறைத்திட முழுமுயற்சி செய்து வருகின்றனர்; புத்தகங்கள்,* விரிவுரைகள், சொற்பொழிவுகள், பேச்சுகள் என்றவாறு ஆயிரக்கணக்கான வழிதுறைகளை இதற்காக பயன்படுத்துகின்றனர். கடைசியாகச் சொன்ன இரண்டு கோஷங்கள் ''அரசியல்சட்ட-ஜனநாயகக்'' கட்சியையும் ஒஸ்வபஷ்தேனியே கட்சியையும் சேர்ந்த முதலாளித்துவ நபருக்குக் குறிப்பாக வசதியானவை. ஏனெனில் அவை வெளித்தோற்றத்தில் மார்க்ஸியக் கோஷங்களோடு பொருந்துகின்றன—சற்றே வெட்டியும் திரித்தும் விட்டால் சுலுவாக அவற்றை சமூக-ஜனநாயகவாதக் கோஷங்களாகக் குழப்பிக் காட்ட முடியும், சில சமயங்களில் செலாவணியாக்கவும் முடியும். எடுத்துக்காட்டாக, ரஸ்வேத்[80] எனும் சட்டபூர்வமான மிதவாதப் பத்திரிகையைப் பாருங்கள் (என்றாவது ஒருநாள் இதைப் பற்றி புரொலிட்டாரி வாசகர்களுடன் விவாதிக்க முயற்சிப்போம்). அது வர்க்கப் போராட்டத்தைப் பற்றியும் முதலாளி வர்க்கம் பாட்டாளி வர்க்கத்தை வஞ்சிப்பதின் சாத்தியப்பாடு பற்றியும் தொழிலாளி வர்க்க இயக்கம், பாட்டாளி வர்க்க முன்முயற்சி முதலியவற்றைப் பற்றியும் அடிக்கடி விஷயங்களை ''உடைத்துச்'' சொல்வதிலிருந்து அதன் ''சமூக-ஜனநாயகத்துவம்'' உண்மையானது என்றே கவனமற்ற வாசகனோ விஷயந்தெரியாத தொழிலாளியோ சுலுவாக நம்பிவிடக் கூடும். உண்மை என்னவென்றால், அது சமூக-ஜனநாயகத்துவம் எனும் போர்வையின் கீழான முதலாளித்துவப் போலிச் சரக்கேயாகும், வர்க்கப் போராட்டம் எனும் கருத்துருவத்தின் சந்தர்ப்பவாத உருத்திரிபும் புரட்டும் ஆகும்.

---

* ஒப்புநோக்குக: புரொக்கப்போவிச் எழுதிய ருஷ்யாவில் தொழிலாளர் பிரச்சினை.

இந்த மாபெரும் முதலாளித்துவச் சூழ்ச்சிக்கு (மாபெரும் அளவில் இது மக்கள் மீது செல்வாக்கு வகிக்கிறது) அடிப்படை தொழிலாளி வர்க்க இயக்கத்தை முக்கியமாகத் தொழிற்சங்க இயக்கத்தின் தரத்துக்குத் தாழ்த்த விரும்புவதாகும், அதை ஒரு சுதந்தரமான கொள்கையிலிருந்து (அதாவது, புரட்சிகரமானதாயும் ஜனநாயக சர்வாதிகாரத்தை நோக்கிச் செலுத்துவதாயும் உள்ள கொள்கையிலிருந்து) முடிந்தவரை தொலைவில் தள்ளி வைக்க விரும்புவதாகும், ''வர்க்கப் போராட்டம் எனும் கருத்தைக் கொண்டு தொழிலாளர் மனத்திலிருந்து அனைத்து மக்களையும் தழுவிய ருஷ்யப் புரட்சி பற்றிய கருத்தை மறைக்கச் செய்ய'' விரும்புவதாகும்.

நாம் ஓஸ்வபஷ்தேனியே வரையறுப்பைத் தலைகீழாக மாற்றியிருப்பதை வாசகர் பார்க்கலாம். அது ஒரு நேர்த்தியான வரையறுப்பாகும் ஜனநாயகப் புரட்சியில் பாட்டாளி வர்க்கத்தின் பாத்திரம் பற்றி முதலாளி வர்க்கத்தின் கருத்து, சமூக-ஜனநாயகவாதத்தின் கருத்து என்கிற இரண்டு கருத்துக்களை அது நேர்த்தியாக வெளியிடுகிறது. முதலாளி வர்க்கம் பாட்டாளி வர்க்கத்தைத் தொழிற்சங்க இயக்கத்தினுள் கட்டிப்போட விரும்புகிறது, அதன் மூலமாக (பிரெண்டானோ வழிப்பட்ட) ''வர்க்கப் போராட்டம் எனும் கருத்தைக் கொண்டு அதன் மனத்திலிருந்து அனைத்து மக்களையும் தழுவிய ருஷ்யப் புரட்சி பற்றிய கருத்தை மறைக்கச் செய்ய'' விரும்புகிறது; இது முற்றிலும் *Credo*வைச் சேர்ந்த பெர்ன்ஷ்டைன்வாத ஆசிரியர்களின் உணர்ச்சியில் இருக்கிறது—அவர்கள் ''சுத்தமான தொழிலாளி வர்க்க இயக்கம்'' எனும் கருத்தைக் கொண்டு தொழிலாளர் மனத்திலிருந்து அரசியல் போராட்டத்தைப் பற்றிய கருத்தை மறைக்கச் செய்ய முயன்றார்கள். இதற்கு மாறாக, சமூக-ஜனநாயகவாதம் பாட்டாளி வர்க்கத்தின் வர்க்கப் போராட்டத்தை அனைத்து மக்களையும் தழுவிய ருஷ்யப் புரட்சியில் தலைமை வகிக்கும் தரத்துக்கு வளர்க்க விரும்புகிறது, அதாவது அந்தப் புரட்சியைப் பாட்டாளி வர்க்கத்தின், விவசாயி மக்களின் ஜனநாயக சர்வாதிகாரத்துக்குக் கொண்டுவர விரும்புகிறது.

நம் நாட்டுப் புரட்சி அனைத்து மக்களையும் தழுவியதாகும் என்று பாட்டாளி வர்க்கத்திடம் முதலாளி வர்க்கம் சொல்கிறது. எனவே, தனி வர்க்கம் என்கிற முறையில் நீங்கள் உங்கள் வர்க்கப் போராட்டத்துடன் நின்று கொள்ள வேண்டும், ''சாதாரண அறிவின்'' பேரால் நீங்கள் தொழிற்சங்கங்கள் மீதும் அவற்றைச் சட்டபூர்வமாக்குவதின் மீதும் முக்கியமாகக் கவனம் செலுத்தவேண்டும்; இந்தத் தொழிற்சங்கங்களை ''உங்களுடைய அரசியல் கல்விக்கும் ஒழுங்கமைப்புக்கும் மிக முக்கியமான தொடக்கப் புள்ளியாக'' நீங்கள் கருத வேண்டும்; புரட்சிகரமான நிலைமையில் நீங்கள் பெரும்பாலும் புதிய-இஸ்க்ரா தீர்மானத்தைப் போல் ''பொருளாழமுள்ள'' தீர்மானங்களைத் தயாரிக்க வேண்டும்; நீங்கள் ''மிதவாதிகளுக்குச் சற்று அதிகமாகச் சாதகமாய் இருக்கிற'' தீர்மானங்களைக் கவனித்து நடந்துகொள்ள வேண்டும்; ''தொழிலாளி வர்க்கத்தின் உண்மையான அரசியல் இயக்கத்தின் நடைமுறைத் தலைவர்களாக'' ஆகக் கூடிய போக்குள்ள தலைவர்களை நீங்கள் தேர்ந்து கொள்ள வேண்டும்; (துரதிர்ஷ்டவசமாக மார்க்ஸியத்தின் ''விஞ்ஞானக்கேடான'' வினவிடைப் பாடத்தின் ''கண்டிப்பான சூத்திரங்கள்'' உங்களை ஏற்கெனவே தொற்றிக் கொண்டிருக்குமேயானால்) நீங்கள் அந்த ''மார்க்ஸிய உலகப் பார்வையின் எதார்த்த வாத அம்சங்களைப் பேணிக் காக்க வேண்டும்''.

நம் நாட்டுப் புரட்சி அனைத்து மக்களையும் தழுவியதாகும் என்று சமூக-ஜனநாயகவாதிகள் பாட்டாளி வர்க்கத்திடம் சொல்கிறார்கள். நீங்கள் மிகவும் முன்னேறிய வர்க்கம், முற்றிலும் புரட்சிகரமான ஒரே வர்க்கம் என்கிற வகையில் நீங்கள் அதில் மிகவும் தீவிரமாகப் பங்கெடுக்க முயற்சிக்க வேண்டியது மட்டுமின்றித் தலைமைப் பாத்திரம் வகிக்கவும் முயற்சிக்க வேண்டும். எனவே, வர்க்கப் போராட்டம் என்பது முக்கியமாகத் தொழிற்சங்க இயக்கமே என்கிறபடி புரிந்து கொண்டு ஒரு குறுகிய பார்வையுள்ள வரம்புக்குள் நீங்கள் நின்று கொள்ளக் கூடாது; அதற்கு மாறாக, உங்கள் வர்க்கப் போராட்டம் அனைத்து மக்களையும் தழுவிய இன்றைய ருஷ்யாவின் ஜனநாயகப் புரட்சியின் எல்லாக் குறிக்கோள்களையும்

மட்டுமின்றி அதைத் தொடர்ந்து வரக்கூடிய சோஷலிஸப் புரட்சியின் குறிக்கோள்களையும் உள்ளடக்கிக் கொண்டுள்ள படி செய்கிற முறையில் உங்கள் வர்க்கப் போராட்டத்தின் வரம்பையும் உள்ளடக்கத்தையும் விரிவாக்க முயற்சிக்க வேண்டும். எனவே, நீங்கள் தொழிற்சங்க இயக்கத்தைப் புறக்கணிக்காமலும், அல்லது மிக மிக அற்பமான சட்டபூர்வமான வாய்ப்புகளையுங்கூட பயன்படுத்திக் கொள்ள மறுக்காமலும், மக்கள் ஜாராட்சி மீது முழுமையான வெற்றி பெறுவதற்கும் ஜனநாயகக் குடியரசையும் உண்மையான அரசியல் சுதந்தரத்தையும் சாதிப்பதற்கும் உள்ள ஒரே வழி என்கிற வகையில் ஆயுதமேந்திய புரட்சியெழுச்சி சம்பந்தப்பட்ட பணிகளையும் புரட்சிகரமான படையையும் புரட்சிகரமான அரசாங்கத்தையும் நிறுவும் பணிகளையும் நீங்கள் புரட்சிக் காலப் பகுதியில் முன்னணிக்குக் கொண்டுவர வேண்டும்.

இந்தப் பிரச்சினையில் புதிய-இஸ்க்ரா தீர்மானங்கள் (அவற்றின் தவறான ''கொள்கையின்'' காரணமாக) எடுத்துக் கொண்டுள்ள அரைமனதான, முரணுள்ள நிலையைப் பற்றிப் பேசுவது தேவையில்லை—இவற்றின் நிலை முதலாளி வர்க்கத்துக்கு எவ்வளவோ மகிழ்ச்சியளிப்பதாக இருப்பது இயல்புதான்.

## 2. மீண்டும் தோழர் மர்த்தினவ் பிரச்சினையைப் "பொருளாழமுள்ளதாகச்" செய்கிறார்

இனி இஸ்க்ராவின் 102-103ம் இதழ்களில் மர்த்தினவ் எழுதிய கட்டுரைகளைப் பார்ப்போம். எங்கெல்ஸிடமிருந்தும் மார்க்ஸிடமிருந்தும் காட்டிய பல மேற்கோள்கள் பற்றிய நம்முடைய வியாக்கியானம் தவறென்றும் தம்முடைய வியாக்கியானம் சரியென்றும் நிரூபிக்க மர்த்தினவ் எடுத்துக் கொள்கிற முயற்சிகளுக்கு நாம் பதிலளிக்கப் போவதில்லை. இந்த முயற்சிகளில் சிறிதளவுக்காயினும் பயனில்லை, மர்த்தினவின் சூழ்ச்சிகள் மிகவும் வெளிப்படையானவை, பிரச்

சினை மிகவும் தெளிவானது; எனவே இவ்விஷயத்தில் மீண்டும் கவனம் செலுத்துவதில் சுவையிராது. **பக்கூனின்வாதிகள் செய்துவரும் வேலை** எனும் எங்கெல்ஸின் குறுநூலின் முழு மொழிபெயர்ப்பையும் மார்க்ஸின் **கம்யூனிஸ்டுச் சங்கத்துக்கு மத்தியக் குழுவின் வேண்டுகோள்** (1850 மார்ச்சு) என்பதின் முழு மொழிபெயர்ப்பையும் **புரொலிட்டாரியின்** எழுத்தாளர் குழு தயாரித்து வருகிறது. அவை வெளியாகும் போது மர்த்தீனவ் முற்றுகப் பின்வாங்கியோடுகிற போக்கில் பயன்படுத்தும் எளிய தந்திரங்களை ஒவ்வொரு சிந்தனையுள்ள வாசகரும் எளிதாகக் கண்டு கொள்ள முடியும். அவர் பின்வாங்கியோடுவதை வாசகர் தெளிவாகப் புரிந்து கொள்வதற்கு மர்த்தீனவ் கட்டுரையிலிருந்து ஒரேயொரு மேற்கோள் காட்டினால் போதும்.

இதழ் 103ல் மர்த்தீனவ் சொல்கிறதாவது: ''புரட்சியை முன்னேக்கிச் செலுத்துவதற்குத் தற்காலிக அரசாங்கத்தை நிறுவுவது ஒரு சாத்தியமான, சூழ்தகுதியுள்ள வழி என்பதை **இஸ்க்ரா** 'ஒப்புக்கொள்கிறது', ஆனால் எதிர்காலத்தில் சோஷலிஸப் புரட்சிக்காக அரசு இயந்திரத்தை முற்றிலும் கைவசமாக்கிக் கொள்ளும் நோக்கத்திற்காக **முதலாளித்துவ** தற்காலிக அரசாங்கத்தில் சமூக-ஜனநாயகவாதிகள் கலந்து கொள்வது சூழ்தகுதியுள்ளதே என்பதை மறுக்கிறது'', என்று. அதாவது, அரசின் கஜானு வங்கிகள் விஷயத்தில் புரட்சிகரமான அரசாங்கத்திற்குள்ள பொறுப்பு பற்றியும், ''சிறைச்சாலைகள்'' முதலியவற்றைக் கைப்பற்றுவது அபாயகரமாகவும் அசாத்தியமாகவும் இருக்கிறதைப் பற்றியும் **இஸ்க்ரா** கொண்டிருக்கிற பயங்கள் அபத்தமானவை என்று இப்போது **இஸ்க்ரா** ஒப்புக் கொள்கிறது. ஆனால், முன்போலவே **இஸ்க்ரா** விஷயங்களைக் கலக்கி வருகிறது, ஜனநாயகச் சர்வாதிகாரத்தையும் சோஷலிஸச் சர்வாதிகாரத்தையும் குழப்பி வருகிறது. இப்படிக் கலக்கிக் குழப்புவது தவிர்க்க முடியாததாகும்; பின்வாங்கியோடுவதை மறைப்பதற்கான வழி அது.

ஆனால் **புதிய-இஸ்க்ராவின்** குழம்பிய மூளைகளிடையே மர்த்தீனவ் முதல் இடம் பெறுகிறவராக எடுப்பாகத் தெரி

கிறார்; அவர் ஆற்றலுள்ள குழம்பிய மூளை என்றுகூட சொல்லலாம். அவர் பிரச்சினையைப் ''பொருளாழமுள்ளதாகச்'' செய்யக் கஷ்டப்படுவதின் மூலமாக அதைக் குழப்பிவிடுகிறார். அதன் வழியாக அவர் எடுத்துக் கொண்டுள்ள நிலையின் பொய்மையை முற்றிலும் அம்பலமாக்கிவிடுகிற புதிய வரையறுப்புகளுக்கு அநேகமாகத் தவறாமல் ''வந்து சேருகிறார்''. ''பொருளாதாரவாதம்'' நிலவிய காலத்தில் அவர் எப்படி பிளெஹானவை ''மேலும் பொருளாழமுள்ளவராகச் செய்தார்'' என்பதையும் எப்படி ''முதலாளிகளுக்கும் அரசாங்கத்துக்கும் எதிரான பொருளாதாரப் போராட்டம்'' எனும் வரையறுப்பைப் படைத்தார் என்பதையும் நீங்கள் நினைவுபடுத்திக் கொள்ளுங்கள். இந்தப் போக்கின் பொய்மையை இதைவிட பொருத்தமாக வெளியிடக்கூடிய ஒன்றைப் ''பொருளாதாரவாத'' இலக்கியம் முழுவதிலும் காண்பது கடினமாயிருக்கும். இன்றும் அப்படியே. மார்த்தீனவ் புதிய-இஸ்க்ராவுக்காக ஆர்வத்துடன் தொண்டாற்றுகிறார். அநேகமாக அவர் வாயைத் திறக்கிற ஒவ்வொரு நேரத்திலும் புதிய-இஸ்க்ராவின் பொய்யான நிலையை மதிப்பிடுவதற்குப் புதிய, நேர்த்தியான விஷயாதாரங்களை நமக்கு வழங்குகிறார். இதழ் 102ல் லெனின் ''கண்ணுக்குத் தெரியாத முறையில் புரட்சி, சர்வாதிகாரம் பற்றிய கருத்துருவங்களை மாற்றிப் போட்டு விட்டார்'' என்று அவர் சொல்கிறார். (பக்கம் 3, பத்தி 2.)

சாராம்சத்தில் பார்த்தால், புதிய-இஸ்க்ராவாதிகள் நம் மீது சுமத்தியுள்ள குற்றச்சாட்டுகள் அனைத்தையும் இந்த ஒன்றிலே வடித்துத் தரமுடியும். உண்மைதான், இந்தக் குற்றச்சாட்டுக்காக மார்த்தீனவுக்கு நன்றி செலுத்துகிறோம்! இவ்விதமாகத் தமது குற்றச்சாட்டை அவர் வரையறுத்ததின் மூலமாகப் புதிய-இஸ்க்ராவாதிகளை எதிர்த்து நடக்கும் போராட்டத்தில் நமக்கு விலைமதிக்கொணாத சேவை புரிந்திருக்கிறார்! புரொலிட்டாரி மீது நடத்தும் தாக்குதல்களை மேலும் ''பொருளாழமுள்ளதாகச்'' செய்வதற்கும் இந்தத் தாக்குதல்களைப் பற்றி ''உண்மையாகவே கோட்பாடுள்ள'' வரையறுப்பு அளிப்பதற்கும் மார்த்தீனவை மேலும் அடிக்கடி

எங்களைத் தாக்க விடுங்கள் என்று இஸ்க்ரா ஆசிரியர்களை நாம் மன்றுடிக் கேட்டுக் கொள்ள வேண்டும். ஏனெனில் எவ்வளவுக்கெவ்வளவு கோட்பாடுரீதியில் மர்த்தீனவ் விவாதிக்க முயற்சி எடுத்துக் கொள்கிருரோ அவ்வளவுக்கவ்வளவு அவருடைய வாதங்கள் மோசமாகத் தெரிகின்றன, அவ்வளவுக்கவ்வளவு தெளிவாக அவர் புதிய-இஸ்க்ரா போக்கிலுள்ள ஓட்டைகளை வெளிப்படுத்துகிருர், அவ்வளவுக்கவ்வளவு வெற்றிகரமாக அவர் தம் மீதும் தம்முடைய நண்பர்கள் மீதும் பயனுள்ள reductio ad absurdum போதனுமுறை அறுவை சிகிச்சையை (புதிய-இஸ்க்ராவின் கோட்பாடுகளை அபத்தமாக்கிவிடும் வேலையை) செய்கிருர்.

வ்பெரியோத் பத்திரிகையும் புரொலிட்டாரி பத்திரிகையும் ''மாற்றிப் போடக் கூடிய முறையில்'' புரட்சி, சர்வாதிகாரம் பற்றிய கருத்துருவங்களைப் பயன்படுத்துகின்றனவாம். இப்படி ''மாற்றிப் போடுவது'' இஸ்க்ரா விரும்பவில்லையாம். அப்படித்தான், மதிப்புமிக்க தோழர் மர்த்தீனவ்! உங்களை அறியாமலே ஒரு பேருண்மையைச் சொல்லியிருக்கிறீர்கள். இஸக்ரா புரட்சியினின்று பின்னடைந்து வால்பிடித்துச் செல்கிறது, அதன் பணிகளை ஓஸ்வபஷ்தேனியே முறையில் வரையறுக்க நழுவிச் செல்கிறது, ஆனுல் வ்பெரியோதும் புரொலிட்டாரியும் ஜனநாயகப் புரட்சியை முன்னேக்கிச் செலுத்தக் கூடிய கோஷங்களைக் கொடுத்துவருகின்றன எனும் நம்முடைய வாதத்தை உங்களுடைய புதிய வரையறுப்பைக் கொண்டு நிரூபித்திருக்கிறீர்கள்.

இது உங்களுக்குப் புரியாத விஷயமா, தோழர் மர்த்தீனவ்? இந்தப் பிரச்சினை முக்கியமானது, எனவே உங்களுக்கு விபரமான விளக்கம் தர முயற்சிப்போம்.

தனிச் சொத்துடைமையையும் பண்ட உற்பத்திமுறையையும் அங்கீகரிப்பதை முற்றுக—அவற்றின் வரம்புகளைத் தாண்டிச் செல்லும் திறமிலாமல்—ஆதரித்து நிற்கிற பல சமுதாய வர்க்கங்களும் குழுக்களும் பகுதிகளும் சூழ்நிலைமைகளின் பலத்தால் நிர்ப்பந்திக்கப்பட்டு எதேச்சாதிகார முறையும் நிலப்பிரபுத்துவ முறை முழுவதும் பயனற்றவை என்று அங்கீகரிக்கும்படி கட்டாயப்படுத்தப்பட்டு சுதந்தரத்

திற்கான கோரிக்கையில் சேருகின்றன. இதிலேதான் ஜன நாயகப் புரட்சியின் முதலாளித்துவத் தன்மை வெளிப்படு கிறது. ''சமுதாயம்'' கோருகிற—நிலப்பிரபுக்களும் முத லாளிகளும் சொற்களை (சும்மா சொற்களில்தாம்!) வெள்ள மாகப் பொழிந்து ஆதரித்துப் பேசும்—இந்தச் சுதந்தரத் தின் முதலாளித்துவத் தன்மை மேலும் தெளிவாகத் தன்னைக் காட்டிக் கொண்டு வருகிறது. அதே நேரத்தில் தொழிலாளி வர்க்கம் விடுதலைக்காக நடத்தும் போராட்டத்துக்கும் முத லாளி வர்க்கம் விடுதலைக்காக நடத்தும் போராட்டத்துக்கும் இடையேயுள்ள, பாட்டாளி வர்க்க ஜனநாயகத்துவத்துக் கும் மிதவாதிகளின் ஜனநாயகத்துவத்துக்கும் இடையே யுள்ள அடிப்படையான வேற்றுமையும் மேலும் தெளிவாகி வருகிறது. தொழிலாளி வர்க்கமும் அதன் வர்க்க உணர் வுள்ள பிரதிநிதிகளும் முன்னேக்கி நடந்து இந்தப் போராட் டத்தை முன்னேக்கிச் செலுத்தி வருகிருர்கள், அவர்கள் அதை முழுமையாக நடத்தி முடிக்கப் பயப்படவில்லை என்பது மட்டுமல்ல, ஜனநாயகப் புரட்சியின் கடைசி எல்லைக்கு அப் பாலும் நெடுந்தொலைவுக்குப் போகவும் முயன்று வருகிருர் கள். முரணுள்ள, தன்னலமுள்ள முதலாளி வர்க்கம் சுதந்தரம் பற்றிய கோஷங்களைப் பாசாங்குடன் ஏற்றுக் கொள்கிறது, அரைகுறையாகத்தான் ஏற்றுக்கொள்கிறது. சுதந்தரத்தின் முதலாளித்துவ நண்பர்களுடைய பாசாங்கு எந்த எல்லைக்கு அப்பால் தொடங்குகிறது, அல்லது சுதந்தரத்தின் முதலா ளித்துவ நண்பர்கள் அதைக் காட்டிக் கொடுப்பது எந்த எல்லைக்குஅப்பால்தொடங்குகிறதுஎன்று ஏதாவதொரு தனிப் பட்ட கோடு போட்டோ (ஸ்தரவேர் தீர்மானத்திலோ மா நாட்டுக்காரர்களின் தீர்மானத்திலோ இருப்பவை போன்ற) குறிப்பிட்ட ''விஷயாம்சங்களைத்'' தயாரித்தோ நிலைநாட்டப் பார்க்கும் முயற்சிகள் அனைத்தும் தவிர்க்க முடியாதபடி தோல்வியடையும். ஏனெனில், (எதேச்சாதிகாரமுறைக்கும் பாட்டாளி வர்க்கத்துக்கும்) இருதலைக் கொள்ளி எறும்பு போல் மத்தியில் சிக்கிக் கொண்டிருக்கும் முதலாளி வர்க்கம் ஆயிரம் வழிவகைகளிலே தன்னுடைய நிலையையும் கோ ஷங்களையும் மாற்றிக் கொள்ளும் திறம் உடையதாகும்,

எப்பொழுது பார்த்தாலும் பேரமாடியபடியே ஓர் அங்கு லத்துக்கு இடதுசாரியிலோ ஓர் அங்குலத்துக்கு வலதுசாரியி லோ நகர்வதின் மூலம் தன்னைச் சரிப்படுத்திக் கொள்ளும் திறம் உடையதாகும். பாட்டாளி வர்க்க ஜனநாயகத்துவத் தின் பணி இப்படிப்பட்ட உயிரற்ற ''விஷயாம்சங்களைப்'' புனைந்து கொண்டிருப்பதல்ல, அதன் பணி வளர்ந்து வரும் அரசியல் நிலைமையை இடைவிடாமல் விமர்சித்துவருவதா கும், முதலாளி வர்க்கத்தின் எதிர்பார்க்கவியலாத புதிய புதிய முரண்களையும் துரோகங்களையும் அம்பலப்படுத்தி வரு வதாகும்.

சட்டவிரோதமாக வெளிவந்த இலக்கியத்தில் திரு. ஸ்து ரூவே வெளியிட்டுள்ள அரசியல் உரைகளின் வரலாற்றை நினைவூட்டிக் கொள்ளுங்கள், அவரை எதிர்த்து சமூக-ஜன நாயகவாதம் நடத்திய போர் வரலாற்றை நினைவூட்டிக் கொள்ளுங்கள், பாட்டாளி வர்க்க ஜனநாயகத்துவத்தின் காவலனை சமூக-ஜனநாயகவாதம் இந்தப் பணிகளை எப்படி நிறைவேற்றியிருக்கிறது என்று தெளிவாகக் கண்டு கொள் வீர்கள். ''உரிமைகளும் அதிகாரமுள்ள ஜெம்ஸ்துவோவும்'' என்கிற முற்றிலும் ஷீப்பவ் பாணி கோஷத்துடன் திரு. ஸ்து ரூவே தொடங்கினர் (ஜார்யாவில்[81] நான் எழுதிய **ஜெம்ஸ்து வோவைத் துன்புறுத்துகிறவர்களும் மிதவாதத்தின் ஹானி பால்களும்** எனும் கட்டுரையைப் பார்க்க). சமூக-ஜனநாயக வாதம் அவரை அம்பலப்படுத்தி ஒரு திட்டவட்டமான அரசி யல்சட்டவாத வேலைத் திட்டத்தை நோக்கித் தள்ளிச் சென் றது. மிகுந்த வேகத்துடன் புரட்சிகரமான நிகழ்ச்சிகள் முன் னேறியதால் இந்தத் ''தள்ளுதல்கள்'' பயன் கண்ட போது ஜனநாயகத்துவத்தின் அடுத்த பிரச்சினைக்குப் போராட்டம் நிலை மாறிச் சென்றது, அதாவது, வெறுமே பொதுப்படை யான அரசியல் சட்டம் என்றில்லாமல் எல்லோருக்கும் சம வாக்குரிமை, நேரடித் தேர்தல்கள், இரகசிய வாக்குப் பதிவு ஆகியவற்றையும் வழங்கும் அரசியல் சட்டம் பற்றிய பிரச்சினைக்குப் போராட்டம் மாறிச் சென்றது. ''எதிரியிட மிருந்து'' இந்தப் புதிய நிலையை நாம் ''கைப்பற்றிய'' போது (ஒஸ்வபஷ்தேனியே சங்கம் எல்லோருக்கும் வாக்குரிமை

எனும் நிலையை ஏற்றுக் கொண்ட போது) நாம் மேலும் முன்தள்ளிக் கொண்டு செல்லத் தொடங்கினேம்; இரு சபை முறையிலுள்ள பாசாங்கையும் பொய்மையையும் அம்பலப் படுத்தினேம், ஒஸ்வபஷ்தேனியே சங்கம் எல்லோருக்கும் வாக் குரிமை எனும் நிலையை முழுவதாக அங்கீகரிக்காமலிருப்பதை யும் அம்பலப்படுத்தினேம்; அவர்களின் முடியரசுவாதத்தைச் சுட்டிக்காட்டினேம், அவர்களின் ஜனநாயகத்துவத்திலுள்ள பேரமாடும் இயல்பை அம்பலப்படுத்தினேம். அல்லது, வேறு வார்த்தைகளில் சொல்வதானுல், பணமூட் டையை வழிபடும் ஒஸ்வபஷ்தேனியே வீரர்கள் மகத்தான ருஷ்யப் புரட்சியின் நலன்களை விலைபேசி முடிப்பதை அம்பலப்படுத்தினேம்.

கடைசியாக, எதேச்சாதிகாரமுறையின் கடும் பிடிவாத மும் உள்நாட்டுப் போரின் மாபெரும் முன்னேற்றமும் முடி யரசுவாதிகள் ருஷ்யாவில் விளைத்த துன்பத்தின் புகலற்ற நிலையும் மிகவும் மரத்துப்போன மண்டையிலும் உறைக்கத் தொடங்கின. புரட்சி உண்மை நிகழ்ச்சி ஆயிற்று. இனிமேல் புரட்சியை அங்கீகரிப்பதற்குப் புரட்சியாளனுக இருக்க வேண்டியதில்லை என்ருகிவிட்டது. எதேச்சாதிகார அரசாங் கம் நம் கண்ணெதிரே உண்மையிலே சிதைந்தது, தொடர்ந்து சிதைந்து வருகிறது. சட்டபூர்வமான பத்திரிகையில் (திரு. கிரெதெஸ்கூல் என்கிற) ஒரு மிதவாதி நியாயமாகவே குறிப் பிட்டது போல் அந்த அரசாங்கத்திற்குக் கீழ்ப்படுவதை மறுக்கும் நிலை எதார்த்த உண்மையாயிற்று. எதேச்சாதிகார முறை வெளிப்பார்வைக்கு வலுவுள்ளதாகத் தோன்றினுலும் செயல்திறமற்றதாகக் காட்டிக் கொண்டுள்ளது. வளர்ந்து வரும் புரட்சியையொட்டிய நிகழ்ச்சிகள் உயிரோடு அழுகி வரும் இந்தப் புல்லுருவி வகைப்பட்ட அமைப்பை அப்படி யே ஒதுக்கித் தள்ளத் தொடங்கியுள்ளன. எதார்த்தத்தில் உருப்பெற்று வரும் உறவுமுறைகளை உள்ளபடியே எடுத்துக் கொண்டு தங்கள் நடவடிக்கைகளுக்கு (மேலும் சரியாகச் சொல்வதென்ருல், தங்களுடைய நேர்மைக்கேடான அரசி யல் பேரங்களுக்கு) ஆதாரமாகக் கொள்ளும்படி நிர்ப்பந் திக்கப்பட்டு மிதவாத முதலாளித்துவ நபர்கள் புரட்சியை

அங்கீகரிக்க வேண்டியிருப்பதின் அவசியத்தைக் காணத் தொடங்கியுள்ளனர். அப்படிச் செய்யக் காரணம் அவர்கள் புரட்சியாளர்கள் என்பதல்ல, அவர்கள் புரட்சியாளர்கள் அல்ல என்றபோதிலும் அப்படிச் செய்கிறார்கள். அவசியத்தை முன்னிட்டு, தங்களுடைய சித்தத்தையும் மீறி அப்படிச் செய்கிறார்கள். புரட்சி வெற்றி பெறுவதைக் கண்டு சினந்து கனல் தெறிக்கப் பார்க்கிறார்கள்; பேரம் பேசி முடிக்க விரும்பாமல் ஜீவமரணப் போராட்டத்தை விரும்பும் எதேச்சாதிகார முறையின் மேல் புரட்சிவாதம் எனும் குற்றச்சாட்டை வீசுகின்றனர். அவர்கள் பிறவித் தரகர்கள், எனவே போராட்டத்தையும் புரட்சியையும் வெறுக்கிறார்கள். என்றபோதிலும் புரட்சி எனும் நிலத்தின் மேல் நிற்குமாறு சூழ்நிலைமைகள் அவர்களைக் கட்டாயப்படுத்துகின்றன. ஏனெனில் அவர்களின் காலுக்கடியில் வேறு நிலம் எதுவும் இல்லை.

மிகவும் அறிவூட்டத்தக்க, மிகவும் கோமாளித்தனமான காட்சியைப் பார்த்து வருகிறோம். முதலாளித்துவ மிதவாதத்தின் விபச்சாரிகள் புரட்சி பீதாம்பரத்தால் அலங்கரித்துக் கொள்ள முயன்று வருகின்றனர். ஒஸ்வபஷ்தேனியே பேர்வழிகள் — risum teneatis, amici!* — இந்த ஒஸ்வபஷ்தேனியே பேர்வழிகள் புரட்சியின் பேரால் பேசத் தொடங்கியுள்ளனர்! தங்களுக்குப் "புரட்சியைப் பற்றி பயமெதுவும் இல்லை" என்று நம்மிடம் உறுதி கூறத் தொடங்கியுள்ளனர் (ஒஸ்வபஷ்தேனியே, இதழ் 72ல் திரு. ஸ்துரூவே)!!! "புரட்சிக்குத் தலைமை தாங்குவதற்கு" உரிமை கோரிக் குரலெழுப்புகின்றனர்!!!

இது குறிபொருள்மிக்க நிகழ்ச்சித்தோற்றமாகும். இது முதலாளித்துவ மிதவாதத்தில் ஏற்பட்டுள்ள முன்னேற்றத்தை மட்டும் இனங்காட்டவில்லை, அதைவிடத் தானும் மேலாகப் புரட்சி இயக்கத்தின்—தன்னை அங்கீகரிக்கும்படி கட்டாயப்படுத்தியுள்ள இயக்கத்தின்—உண்மையான வெற்றிகளில் ஏற்பட்டுள்ள முன்னேற்றத்தை இது இனங்காட்டுகிறது. எதேச்சாதிகாரமுறை மிகவும் ஆட்டங்கண்டுவிட்

* சிரிப்பை அடக்கிக் கொள்ளுங்கள், நண்பர்களே!

டிருப்பதினுல் புரட்சியின் பக்கம் நிற்பதிலேதான் தனக்கு அதிக அனுகூலமுண்டு என்று முதலாளி வர்க்கமுங்கூட உணரத் தொடங்கியுள்ளது. என்றபோதிலும், மறுபுறத்தில், இயக்கம் முழுவதும் புதிய, மேலும் உயர்வான மட்டத்தை எட்டியிருப்பதற்குச் சான்றளிக்கும் இந்த நிகழ்ச்சித்தோற்றம் தன் முறைக்குப் புதிய, மேலும் உயர்வான பணிகளையும் நம்முன் வைக்கிறது. எந்த ஒரு முதலாளித்துவச் சித்தாந்தியின் தனிப்பட்ட நேர்மை எப்படியிருந்த போதிலும் சரி, முதலாளி வர்க்கம் புரட்சியை அங்கீகரிப்பது உளப்பூர்வமானதாக இருக்க முடியாது. இயக்கத்தின் மேலும் உயர்வான இந்தக் கட்டத்தினுள்ளேயுங்கூட தன்னலத்தையும் முரண் தன்மையையும் பேரம் பேசும் பழக்கத்தையும் அற்பத்தனமான, பிற்போக்கான ஏய்ப்புகளையும் முதலாளி வர்க்கத்தால் கொண்டுவராமல் இருக்க முடியாது. இன்று நாம் புரட்சியின் ஸ்தூலமான உடனடிப் பணிகளை வேறு விதமாக வரையறுக்க வேண்டும்—நம் வேலைத்திட்டத்தின் பேரால், நம் வேலைத்திட்டத்தை விரிவாக்கும் வகையில். நேற்றைய தினம் போதுமானதாயிருந்தது இன்று போதாததாகியுள்ளது. ஒரு முன்னேறிய ஜனநாயகக் கோஷம் எனும் வகையில் புரட்சியை அங்கீகரிக்கச் சொல்லும் கோரிக்கை நேற்றைய தினம் ஒருக்கால் போதுமானதாக இருந்திருக்கலாம். இன்று அது போதாது. புரட்சி திரு. ஸ்துரூவேயையுங்கூட தன்னை அங்கீகரிக்கும்படி கட்டாயப்படுத்தியுள்ளது. முன்னணி வர்க்கம் இப்போது இந்தப் புரட்சியின் அவசர அவசியமான பணிகளின் அசல் உள்ளடக்கத்தைக் கறாராக வரையறுத்தாக வேண்டும். ஸ்துரூவே கூட்டத்தார் புரட்சியை அங்கீகரிக்கும் பொழுதே ஒரு அமைதியான விளைவு சாத்தியம், அரசதிகாரத்தை எடுத்துக் கொள்ளும்படி நிக்கலாய் மன்னன் “ஒஸ்வபஷ்தேனியே” கனவான்களை அழைப்பான் என்றெல்லாம் பழைய பல்லவியையே பாடத் தொடங்கி, தங்களுடைய முட்டாள்தனத்தைக் காட்டிக் கொள்கின்றனர். தங்களுக்கு அபாயமில்லாமல் புரட்சியைப் பலவீனப்படுத்திக் காட்டிக் கொடுப்பதற்காகத்தான் ஒஸ்வபஷ்தேனியே பேர்வழிகள் புரட்சியை அங்கீகரிக்கிறார்கள். பாட்டாளி வர்க்கத்துக்கும் எல்லா

மக்களுக்கும் ''புரட்சி'' எனும் கோஷத்தின் போதாமையை விளக்கிக் காட்டுவது இன்று நம் கடமையாகிறது. புரட்சியின் அசல் உள்ளடக்கத்தைப் பற்றி ஒரு தெளிவான, ஐயந்திரிபுக்கிடமற்ற, முரணற்ற, உறுதிமிக்க வரையறுப்பு வைத்துக் கொள்வதின் அவசியத்தை நாம் புலப்படுத்த வேண்டும். புரட்சியின் ''நிர்ணயமான வெற்றியைச்'' சரிவர வெளியிட முடிகிற ஒரே கோஷமான பாட்டாளி வர்க்கத்தின், விவசாயி மக்களின் புரட்சிகரமான ஜனநாயகச் சர்வாதிகாரம் எனும் கோஷந்தான் இந்த வரையறுப்பை அளிக்கிறது.

சொற்களைக் கேடாகப் பயன்படுத்துவது அரசியலில் மிகவும் வழக்கம். எடுத்துக்காட்டாக, ''சோஷலிஸ்டு'' எனும் பெயரை ஆங்கிலேய முதலாளித்துவ மிதவாதத்தின் ஆதரவாளர்கள் அடிக்கடி சொந்தமாக்கிக் கொண்டார்கள் (''இன்று நாமனைவருமே சோஷலிஸ்டுகள்தான்'' —"We all are socialists now" — என்று ஹார்க்கார்ட் சொன்னார்); பிஸ்மார்க்கின் ஆதரவாளர்களும் போப்பாண்டவர் பதின்மூன்றும் லியோவின் நண்பர்களும் அதேபோல் அடிக்கடி சொந்தமாக்கிக் கொண்டார்கள். ''புரட்சி'' எனும் சொல்லும் கேடாகப் பயன்படுத்திக் கொள்வதற்கு முற்றிலும் இடமளிக்கிறது. இயக்கத்தின் ஒரு குறிப்பிட்ட வளர்ச்சிக் கட்டத்தில் இப்படிக் கேடாகப் பயன்படுத்தப்படுவது தவிர்க்க முடியாததாகும். திரு. ஸ்துரூவே புரட்சியின் பேரால் பேசத் தொடங்கிய போது நாம் தியேரை நினைவூட்டிக் கொள்ளாமல் இருக்க முடியவில்லை. பிப்ரவரி புரட்சி நடப்பதற்குச் சில நாட்களுக்கு முன் இந்த அரக்கக் குறளி, முதலாளி வர்க்கத்தினரின் அரசியல் ஊழலின் நிறையுருவான இவர், மக்களிடையே புரட்சிப் புயல் திரண்டு வருவதை உணர்ந்து தான் புரட்சிக் கட்சியைச் சேர்ந்தவன் என்று நாடாளுமன்றத்திலே அறிவித்தார்! (மார்க்ஸ் எழுதிய பிரான்ஸில் உள்நாட்டுப் போர் பார்க்க). புரட்சிக் கட்சியிலே ஒஸ்வபஷ்தேனியே சேருவதின் அரசியல் குறிபொருளும் அப்படியே தியேருடையதைப் போல்தான். ருஷ்யாவின் தியேர்கள் தாங்கள் புரட்சிக் கட்சியைச் சேர்ந்தவர்கள் என்று பேசத் தொடங்கும் போது புரட்சி எனும் கோஷம் போதாதாகிவிட்டது,

பொருளற்றுவிட்டது, அது எந்தப் பணிகளையும் வரையறுக்க வில்லை என்றுதான் அர்த்தம். ஏனெனில் புரட்சி உண்மை நிகழ்ச்சியாகிவிட்டது, பல்வேறு வகைப்பட்ட நபர்கள் கூட்டம் கூட்டமாக அதன் பக்கம் வந்து கொண்டிருக்கிறார் கள்.

சொல்லப்போனால், மார்க்ஸியப் பார்வைநிலையில் புரட்சி என்பது என்ன? காலாவதியாகிவிட்ட அரசியல் மேற்கட்டு மானத்தைப் பலத்தைக் கொண்டு இடித்துத்தள்ளுவது; அதற்கும் புதிய உற்பத்தி உறவுகளுக்கும் இடையேயுள்ள முரண்பாடு ஒரு குறிப்பிட்ட தருணத்தில் அதை இற்று விழும்படி செய்தது. எதேச்சாதிகாரமுறைக்கும் முதலாளித் துவ ருஷ்யாவின் கட்டுமானம் முழுவதற்கும், அதன் மற்றும் முதலாளித்துவ-ஜனநாயக வளர்ச்சிக்குரிய எல்லாத் தேவை களுக்கும் இடையேயுள்ள முரண்பாடு நொறுங்கி அதை விழச் செய்திருக்கிறது.இந்த முரண்பாடு நீண்ட காலத்துக்குச் செயற்கையாக நிலைநிறுத்தப்பட்டு வந்ததால் அதன் வீழ்ச்சி யும் மிகக் கடுமையானதாகும். மேற்கட்டுமானம் ஒவ்வொரு கணுவிலும் வெடிப்புற்று வருகிறது, அழுத்தம் தாங்க முடி யாமல் பலவீனப்பட்டு வருகிறது. மிகப் பலவாக வேறுபட்ட வர்க்கங்களின், குழுக்களின் பிரதிநிதிகள் மூலமாக மக்கள் இன்று தங்கள் சொந்த முயற்சியினால் ஒரு புதிய மேற்கட்டு மானத்தைக் கட்டிக் கொள்ள வேண்டும். ஒரு குறிப்பிட்ட வளர்ச்சிக் கட்டத்தில் பழைய மேற்கட்டுமானம் பயனற்ற தென்று எல்லோருக்கும் தெரிந்துவிடுகிறது. எல்லோரும் புரட்சியை அங்கீகரிக்கிறார்கள். எந்த வர்க்கங்கள் இந்தப் புதிய மேற்கட்டுமானத்தைக் கட்ட வேண்டும், எப்படிக் கட்ட வேண்டும் என்று வரையறுப்பதே இன்றுள்ள பணி. இதை வரையறுக்காவிட்டால் புரட்சிக் கோஷம் தற்சமயம் பொருளற்ற வெற்றிச் சொல்லாகும். ஏனெனில், எதேச் சாதிகாரமுறையின் பலவீனமானது மன்னர் குடும்பத்தின ரையும் **மஸ்கோவ்ஸ்கியே வேதமஸ்தி**யையுங்கூட[82] ''புரட்சி யாளர்களாகச்'' செய்கிறது! இதை வரையறுக்காவிட்டால் முன்னணி வர்க்கத்தின் முன்னணி ஜனநாயகப் பணிகள் பற்றி பேச்சே இருக்க முடியாது. ''பாட்டாளி வர்க்கத்தின், விவ

சாயி மக்களின் ஜனநாயகச் சர்வாதிகாரம்'' எனும் கோஷம் இந்த வரையறுப்பைக் கொடுக்கிறது. புதிய மேற்கட்டுமானத்தின் புதிய ''கட்டடக்காரர்கள்'' எந்த வர்க்கங்களை நம்பி நிற்க முடியும், நம்பி நிற்க வேண்டும் என்று இக்கோஷம் வரையறுக்கிறது, புதிய மேற்கட்டுமானத்தின் தன்மையை (சோஷலிஸச் சர்வாதிகாரத்திலிருந்து வேறுபட்ட ''ஜனநாயகச்'' சர்வாதிகாரம்) வரையறுக்கிறது, இக்கட்டுமானத்திற்கான வழிமுறைகளை (சர்வாதிகாரம், அதாவது, பலவந்தமான எதிர்ப்பைப் பலவந்தமாக நசுக்குவது, மக்களின் புரட்சிகரமான வர்க்கங்களை ஆயுதபாணியாக்குவது) வரையறுக்கிறது. புரட்சிகரமான ஜனநாயகச் சர்வாதிகாரம் எனும் இக்கோஷத்தையும் புரட்சிகரமான இராணுவம் எனும் கோஷத்தையும் புரட்சிகரமான அரசாங்கம் எனும் கோஷத்தையும் புரட்சிகரமான விவசாயிக் கமிட்டிகள் எனும் கோஷத்தையும் இன்று அங்கீகரிக்க மறுக்கிறவர்கள் புரட்சியின் பணிகளைப் புரிந்து கொள்வதில் முற்றிலும் தவறுகிறார்கள், இன்றைய புதிய நிலைமை தோற்றுவித்துள்ள புதிய, மேலும் உயர்வான பணிகளை வரையறுக்க முடியாமல் இருக்கிறார்கள், அல்லது மக்களை ஏமாற்றுகிறார்கள், புரட்சியைக் காட்டிக் கொடுக்கிறார்கள், ''புரட்சி'' எனும் கோஷத்தைக் கேடாகப் பயன்படுத்துகிறார்கள்.

முன்னே சொன்னதற்குத் தோழர் மர்த்தீனவும் அவரது நண்பர்களும் எடுத்துக்காட்டுகளாவர். பின்னே சொன்னதற்குத் திரு. ஸ்துரூவேயும் ''அரசியல்சட்ட-ஜனநாயக'' ஜெம்ஸ்துவோ கட்சி முழுவதும் எடுத்துக்காட்டுகளாவர்.

தோழர் மர்த்தீனவ் மிகவும் அறிவுக்கூர்மை படைத்தவர்; எனவே, சர்வாதிகாரம் எனும் கோஷத்தைக் கொண்டு புரட்சியின் பணிகளை வரையறுக்க வேண்டியது புரட்சியின் வளர்ச்சிக்கு அவசியமாகிவிட்ட நேரம் பார்த்து நாம் சர்வாதிகாரம், புரட்சி பற்றிய கருத்தினங்களை ''மாற்றிப் போடத்தக்கவையாகச்'' செய்துள்ளதாகக் குற்றஞ்சாட்டினார். தோழர் மர்த்தீனவை மீண்டும் துரதிர்ஷ்டம் பிடித்துவிட்டது, அவர் பின்னால் விடப்பட்டுவிட்டார், கடைசிக்கு முந்திய கட்டத்தில் ஒதுக்கப்பட்டுவிட்டார், ''ஒஸ்வபஷ்தேனியே''

எட்டியுள்ள தரத்தில் விடப்பட்டுள்ளார், ஏனெனில் புரட்சியை (சொல்லளவில்) அங்கீகரிப்பதும் பாட்டாளி வர்க்கத்தின், விவசாயி மக்களின் ஜனநாயகச் சர்வாதிகாரத்தை (அதாவது, செயலளவில் புரட்சியை) அங்கீகரிக்க மறுப்பதும் இன்று ஒஸ்வபஷ்தேனியேயின் அரசியல் நிலையை எடுத்துக் கொள்வதற்குச் சமம்—அதாவது, மிதவாத முடியரசுவாத முதலாளி வர்க்கத்தினரின் நலன்களுக்கு உகந்ததாகும். திரு. ஸ்துரூவே மூலமாக மிதவாத முதலாளி வர்க்கத்தினர் புரட்சியை ஆதரிப்பதாகத் தெரிவித்துக் கொண்டு வருகின்றனர். வர்க்க உணர்வுள்ள பாட்டாளி வர்க்கம் புரட்சிகரமான சமூக-ஜனநாயகவாதிகள் மூலமாகப் பாட்டாளி வர்க்கத்தின், விவசாயி மக்களின் சர்வாதிகாரத்தைக் கோரி வருகிறது. இந்தக் கட்டத்தில் புதிய-இஸ்க்ராவின் போலி அறிஞர் சர்ச்சையில் குறுக்கிட்டு ''சர்வாதிகாரம், புரட்சி பற்றிய கருத்துக்களை 'மாற்றிப் போடச்' செய்யத் துணியாதே!'' என்று கத்துகிறார். சரிதான், புதிய-இஸ்க்ராவாதிகள் எடுத்துக் கொண்டுள்ள பொய்யான நிலை அவர்களை ஒஸ்வபஷ்தேனியே போக்குக்கு இடைவிடாமல் வால்பிடித்து வரும்படி செய்திருப்பது உண்மையே அல்லவா?

ஒஸ்வபஷ்தேனியே ஆசாமிகள் ஜனநாயகத்துவத்தை அங்கீகரிப்பதில் படிப்படியாக மேலேறி வருகிறார்கள் (சமூக-ஜனநாயகவாதிகள் தார்க்குச்சி போடாமல் இது நடந்துவிடவில்லை) என்று காட்டினோம். முதலில் நமக்கும் அவர்களுக்கும் இடையே இருந்த பிரச்சினை ஷீப்பவ் வாதமா (உரிமைகளும் அதிகாரமுள்ள ஜெம்ஸ்துவோவும்) அரசியல்சட்ட வாதமா என்பது. பிறகு, வரம்புக்குட்பட்ட தேர்தலா எல்லோருக்கும் வாக்குரிமையா என்பது. அதன் பிறகு, புரட்சியை அங்கீகரிப்பதா எதேச்சாதிகார முறையுடன் பேரம் பேசி முடித்துக் கொள்வதா என்பது. கடைசியாக இப்போது, பாட்டாளி வர்க்கத்தின், விவசாயி மக்களின் சர்வாதிகாரம் இல்லாமல் புரட்சியை அங்கீகரிப்பதா ஜனநாயகப் புரட்சியில் இந்த வர்க்கங்களின் சர்வாதிகாரம் வேண்டும் எனும் கோரிக்கையை அங்கீகரிப்பதா என்பது. ஒஸ்வபஷ்தேனியே ஆசாமிகள் (இன்று இருக்கிறவர்களாயினும் சரி, அல்லது

முதலாளித்துவ ஜனநாயகவாதிகளின் இடதுசாரியைச் சேர்ந்து அவர்களின் வாரிசுகளாயினும் சரி) மற்ெறாரு படியிலும் ஏறி வருவது—அதாவது, காலப் போக்கில் (ஒருக்கால் தோழர் மர்த்தினவ் அடுத்த படியில் ஏறி வருவதற்குள்) சர்வாதிகாரம் எனும் கோஷத்தையும் அங்கீகரிப்பது—சாத்தியமே, பெரும்பாலும் சாத்தியந்தான். ருஷ்யப் புரட்சி தொடர்ந்து முன்னேறி நிர்ணயமான வெற்றி பெறுமேயானால் தவிர்க்கமுடியாதபடி இது நடக்கும். அப்போது சமூக-ஜனநாயகவாதத்தின் நிலே என்னவாக இருக்கும்? தற்காலத்திய புரட்சியின் முழு வெற்றி ஜனநாயகப் புரட்சியின் முடிவையும் சோஷலிஸப் புரட்சிக்கான தீவிரமான போராட்டத்தின் துவக்கத்தையும் குறிப்பதாயிருக்கும். விவசாயி மக்களின் தற்காலத்திய கோரிக்கைகளே நிறைவேற்றுவது, பிற்போக்கை முற்ருக முறியடிப்பது, ஜனநாயகக் குடியரசு பெறுவது—இவை முதலாளி வர்க்கத்தின் (மற்றும் சிறு முதலாளி வர்க்கத்தின்) புரட்சிவாதத்தின் இறுதி எல்லேயைக் குறிக்கும், பாட்டாளி வர்க்கத்தின் சோஷலிஸத்திற்கான உண்மையான போராட்டத்தின் துவக்கத்தையும் குறிக்கும். எவ்வளவுக்கெவ்வளவு ஜனநாயகப் புரட்சி முழுமையாக இருக்கிறதோ அவ்வளவுக்கவ்வளவு விரைவாகவும் பரவலாகவும் தெளிவாகவும் உறுதியானதாகவும் இந்தப் புதிய போராட்டத்தின் வளர்ச்சி இருக்கும். ''ஜனநாயகச்'' சர்வாதிகாரம் எனும் கோஷம் தற்காலப் புரட்சியின் வரலாற்று வரம்புள்ள தன்மையையும், எல்லா விதமான ஒடுக்கு முறையிலிருந்தும் சுரண்டலிலிருந்தும் தொழிலாளி வர்க்கம் முற்றிலும் விடுதலே பெறுவதற்காகப் புதிய ஆட்சிமுறையின் அடிப்படையில் ஒரு புதிய போராட்டத்தை நடத்த வேண்டியதின் அவசியத்தையும் வெளியிடுகிறது. வேறு வார்த்தைகளில் சொல்வதென்ருல், ஜனநாயகப் போக்குள்ள முதலாளி வர்க்கத்தினரோ சிறுமுதலாளி வர்க்கத்தினரோ அடுத்த படியில் ஏறுகிற காலத்தில், புரட்சி மட்டுமின்றி புரட்சியின் முழு வெற்றியும் சாதித்து முடிந்த உண்மை நிகழ்ச்சியாகிவிட்ட காலத்தில், நாம் ஜனநாயகச் சர்வாதிகாரம் எனும் கோஷத்திலிருந்து பாட்டாளி வர்க்கத்தின்

சோஷலிஸச் சர்வாதிகாரம்—அதாவது, முழுமையான சோஷலிஸப் புரட்சி—எனும் கோஷத்துக்கு ''மாறிச் செல்வோம்'' (அப்போதும் ஒருக்கால் புதிய மர்த்தீனவ்களும் எதிர்கால மர்த்தீனவ்களும் அச்சமுற்ற கூக்குரல் எழுப்புவார்கள்).

## 3. சர்வாதிகாரம் பற்றிய கொச்சையான முதலாளி வர்க்கக் கருத்தும் மார்க்ஸியத்தின் கருத்தும்

*1848*ன் **புதிய ரைன் பத்திரிகையிலிருந்து** மார்க்ஸின் கட்டுரைகளை எடுத்து மேரிங் பிரசுரிக்கையில், அவற்றிற்கு எழுதிய குறிப்புகளில் முதலாளித்துவப் பிரசுரங்கள் இந்தப் பத்திரிகையைப் பற்றித் தெரிவித்த குறைகளில் ஒன்று ''ஜனநாயகத்தைச் சாதிப்பதற்கு ஒரே சாதனம் சர்வாதிகாரத்தை உடனடியாகப் புகுத்த வேண்டும்'' என்று இந்தப் பத்திரிகை கோரியதாகச் சொல்லப்பட்டதுதான் என்று மேரிங் கூறுகிறார் (Marx' *Nachlass*, தொகுதி 3, பக்கம் 53). கொச்சையான முதலாளி வர்க்கப் பார்வைநிலையிலிருந்து பார்க்கும் போது சர்வாதிகாரம் ஜனநாயகம் எனும் கருத்துகள் ஒன்றுக்கொன்று விலக்கானவை. வர்க்கப் போராட்டத்தின் தத்துவத்தைப் புரிந்து கொள்ளத் தவறுவதாலும், அரசியல் அரங்கில் பல்வேறு முதலாளி வர்க்க வட்டங்களும் குழுக்களும் அற்பச் சச்சரவுகளில் ஈடுபடுவதைக் கண்டு பழகிப் போனதாலும், சர்வாதிகாரம் என்றால் ஜனநாயக உரிமைகள், உத்தரவாதங்கள் அனைத்தையும் ரத்து செய்தல், எல்லா வகையான தான்தோன்றித்தனம், ஒரு சர்வாதிகாரியின் தனி நலன்களுக்காக எல்லா விதங்களிலும் அதிகாரத்தைக் கேடாகப் பயன்படுத்தல் என்று முதலாளித்துவ நபர் புரிந்து கொள்கிறார். மர்த்தீனவ் **புதிய-இஸ்க்ராவில்** தம்முடைய ''புதிய இயக்கத்தின்'' முடிவில், லெனின் ''தமக்கு அதிர்ஷ்டம் அடிக்குமா என்று பார்க்கப் பெரிதும் விரும்புகிறார்'' என்பதினால்தான் சர்வாதிகாரம் பற்றிய

கோஷத்தின் மீது வ்பெரியோத் பத்திரிகைக்கும் புரொலிட்டாரி பத்திரிகைக்கும் பற்றுதல் இருப்பதாகக் கூறுகிருர் (இஸ்க்ரா, இதழ் 103, பக்கம் 3, பத்தி 2). உண்மையில் சொன்னுல், இந்தக் கொச்சையான முதலாளி வர்க்கக் கருத்து தான் மர்த்தீனவின் கட்டுரைகளில் வெளிப்படுத்தப்படுகிறது. சர்வாதிகாரத்தைப் பற்றிப் பிரச்சாரம் செய்வதற்காகப் புதிய ரைன் பத்திரிகைக்கு எதிராகச் சாட்டப்படும் முதலாளிவர்க்கக் குற்றச் சாட்டுகளின் தரத்தில் முற்றிலும் வைக்கத்தக்கதாய் இந்த வசீகரமான விளக்கம் இருக்கிறது. புரட்சி, சர்வாதிகாரம் பற்றிய கருத்துருவங்களை ''மாற்றிப் போடுவதாக'' மார்க்ஸையும் கூடத்தான் (''சமூக-ஜனநாயகவாதிகளல்ல'', முதலாளித்துவ மிதவாதிகள்) குற்றஞ் சாட்டினுர்கள். தனி நபரின் சர்வாதிகாரத்தினின்று வேறுபட்ட நிலையில் வர்க்கச் சர்வாதிகாரம் என்பதின் பொருள் என்ன, சோஷலிஸ்டு சர்வாதிகாரத்தின் பணிகளினின்று வேறுபட்ட நிலையில் ஜனநாயகச் சர்வாதிகாரத்தின் பணிகள் என்ன என்று மர்த்தீனவுக்கு விளக்குவதற்குப் புதிய ரைன் பத்திரிகையின் கருத்துக்களைக் கவனிப்பதில் தவறில்லை.

புதிய ரைன் பத்திரிகை 1848 செப்டம்பர் 14ல் எழுதியதாவது: ''புரட்சிக்குப்பின் ஒவ்வொரு தற்காலிக அரசு அமைப்புக்கும் ஒரு சர்வாதிகாரம், வலுவுள்ள சர்வாதிகாரம், அவசியமாகிறது. சர்வாதிகாரி என்ற முறையில் செயலாற்றவில்லை, பழைய நிறுவனங்களின் மீதமிச்சங்களை உடனடியாக நொறுக்கி எறியவில்லை என்று காம்ப்ஹாவுஸனைத் துவக்கத்திலிருந்தே நாம் குறை கூறி வந்திருக்கிறேம் (அவர் 1848 மார்ச்சு 18க்குப் பின் அமைச்சரவையின் தலைவர்). திரு. காம்ப்ஹாவுஸன் அரசியல்சட்டவாதப் பிரமைகளில் மூழ்கி மயங்கிக் கிடக்கையில் தோற்கடிக்கப்பட்ட கட்சி (பிற்போக்கின் கட்சி) அதிகாரவர்க்கம், இராணுவம் ஆகியவற்றில் தன் நிலைகளைப் பலப்படுத்திக் கொண்டது, இங்கும் அங்குமாக பகிரங்கமான போராட்டங்களிலும் இறங்கத் தொடங்கியது.''[83]

புதிய ரைன் பத்திரிகையில் காம்ப்ஹாவுஸன் அமைச்சரவையைப் பற்றி வெளியான நீண்ட கட்டுரைகளில் விபர

மாக விளக்கப்பட்டதனைத்தையும் இந்தச் சொற்கள் ஒரு சில கூற்றுகளில் சுருக்கித் தருகின்றன என்று மேரிங் நியாயமாகக் குறிப்பிடுகிறார். மார்க்ஸின் சொற்கள் நமக்குச் சொல்வதென்ன? ஒரு தற்காலிகப் புரட்சி அரசாங்கம் சர்வாதிகார முறையில் செயலாற்றித் தீர வேண்டும் (இக்கூற்றை இஸ்க்ராவினால் அறவே புரிந்துகொள்ள முடியவில்லை, ஏனெனில் சர்வாதிகாரம் எனும் கோஷத்தைக் கண்டு அது வெட்கப்படுகிறது), அப்படிப்பட்ட சர்வாதிகாரத்தின் பணி பழைய நிறுவனங்களின் மீதமிச்சங்களை நொறுக்கித் தள்ள வேண்டியதே (ருஷ்யாவின் சமூக-ஜனநாயகத் தொழிலாளர் கட்சியின் மூன்றாவது காங்கிரஸ் எதிர்ப்புரட்சியை எதிர்க்கும் போராட்டத்தைப் பற்றி போட்ட தீர்மானத்தில் இதைத்தான் தெளிவாகக் கூறியிருக்கிறது; மாநாட்டின் தீர்மானத்தில் இது விடப்பட்டுள்ளதை மேலே காட்டினோம்). மூன்றாவதாக, கடைசியாக, புரட்சியும் பகிரங்கமான உள்நாட்டுப் போரும் நிலவும் காலத்தில் ''அரசியல்சட்டவாதப் பிரமைகளை'' வைத்திருந்ததற்காக முதலாளித்துவ ஜனநாயகவாதிகளை மார்க்ஸ் கண்டித்தார் என்று இச்சொற்களிலிருந்து தெரிகிறது. 1848 ஜூன் 6ம் தேதிய **புதிய ரைன் பத்திரிகை**யில் வெளிவந்த கட்டுரையிலிருந்து இச்சொற்களின் பொருள் குறிப்பாகத் தெளிவாகிறது. மார்கஸ் எழுதினார்: ''ஒரு தேசிய அரசியல் நிர்ணய சபை முதன்முதலில் ஒரு செயலாற்றலுள்ள, புரட்சிகரமான செயலாற்றலுள்ள, சபையாக இருக்க வேண்டும். ஆனால், ஃபிராங்ஃபுர்ட் சபை அரசாங்கத்தைச் செயலாற்றிவர அனுமதித்துவிட்டு நாடாளுமன்ற முறை பற்றிய பள்ளிப் பாடங்கள் கற்பதில் முனைந்திருக்கிறது. இந்த அறிவுசான்ற சபை ஆழ்ந்த யோசனையின்பின் மிகச் சிறந்த நிகழ்ச்சி நிரலையும் மிகச் சிறந்த அரசியல் சட்டத்தையும் உருவாக்கிக் கொள்வதில் வெற்றி பெறுவதாக வைத்துக் கொள்வோம். ஆனால் இதற்கிடையே ஜெர்மன் அரசாங்கம் துப்பாக்கிக் கத்தியை நிகழ்ச்சி நிரலில் வைத்துவிட்டிருந்தால் அச்சபையின் மிகச் சிறந்த நிகழ்ச்சி நிரலாலோ மிகச் சிறந்த அரசியல் சட்டத்தினாலோ என்ன பயன்?'' என்று.[84]

*சர்வாதிகாரம் என்கிற கோஷத்தின் பொருள் இதுதான். ''அரசியல் நிர்ணய சபையை அமைப்பது பற்றிய முடிவை'' நிர்ணயமான வெற்றி என்று வர்ணிக்கும், அல்லது ''மிகத் தீவிரமான புரட்சிகர எதிர்க்கட்சியாக இருந்து வருமாறு'' நம்மை அழைக்கும் தீர்மானங்களைப் பற்றி மார்க்ஸின் கண்ணோட்டம் என்னவாக இருந்திருக்கும் என்று இதிலிருந்து நாம் முடிவுகட்ட முடியும்!*

*தேசங்களின் வாழ்வில் முக்கியமான பிரச்சினைகள் பலத்தைக் கொண்டுதான் தீர்க்கப்படுகின்றன. பிற்போக்கான வர்க்கங்களே வழக்கமாக முதன்முதலில் வன்முறையையும் உள்நாட்டுப் போரையும் கைக்கொள்கின்றன. அவைதாம் முதன்முதலில் ''துப்பாக்கிக் கத்தியை நிகழ்ச்சி நிரலில் வைப்பவை''. அப்படித்தான் ருஷ்ய எதேச்சாதிகாரமுறை ஜனவரி 9லிருந்து முறைமையுடன் விடாப்பிடியாக எங்கும் செய்துவிட்டது, செய்து வந்திருக்கிறது. அப்படிப்பட்ட நிலைமை தோன்றியிருப்பதினுல், அரசியல் நிகழ்ச்சி நிரலில் துப்பாக்கிக் கத்தி முக்கியமான அம்சமாக ஆகியிருப்பதால், புரட்சியெழுச்சி அவசர அவசியமாகிவிட்டிருப்பதால், அரசியல்சட்டப் பிரமைகளும் நாடாளுமன்ற முறை பற்றிய பள்ளிப் பாடங்களைக் கற்பதுவும் வெறுமே முதலாளி வர்க்கம் புரட்சிக்குத் துரோகம் செய்வதை மறைக்கும் திரையாகின்றன, முதலாளி வர்க்கம் புரட்சியிலிருந்து ''பின்வாங்கி வருகிற'' உண்மையை மறைக்கும் திரையாகின்றன. அப்படி ஆகிறபோது, சர்வாதிகாரம் என்கிற கோஷத்தைத்தான் உண்மையாகவே புரட்சிகரமான வர்க்கம் முன்வைத்துத் தீரவேண்டும்.*

*இந்தச் சர்வாதிகாரத்தின் பணிகளைப் பற்றிய பிரச்சினை குறித்து மார்க்ஸ்* **புதிய ரைன் பத்திரிகையில்** *எழுதியதாவது: ''காலாவதியாகிவிட்ட அரசாங்கங்களின் பிற்போக்கான முயற்சிகளை எதிர்த்துத் தேசிய சபை சர்வாதிகார முறையிலே செயலாற்றியிருக்க வேண்டும்; அதன் வழியாகப் பொதுஜன அபிப்பிராயத்தின் பலத்தை அது சம்பாதித்துக் கொண்டிருக்கும். அந்தப் பலத்தின் முன்னே எல்லாத் துப்பாக்கிக் கத்திகளும் கட்டைகளும் நொறுங்கிவிடும்....*

ஆனால் இந்தச் சபை ஜெர்மன் மக்களைத் தன்னோடு அழைத்துச் செல்வதற்குப் பதிலாக, அல்லது மக்களோடு செல்வதற்குப் பதிலாக மக்கள் அலுத்துக் கொள்ளும்படி செய்கிறது'' என்று.[85] மார்க்ஸின் அபிப்பிராயத்தில், ''ஜெர்மனியில் எதார்த்தத்தில் இருந்து வரும் அரசமைப்பிலிருந்து மக்களின் மேலாதிக்கம் எனும் கோட்பாட்டிற்கு முரணான தனைத்தையும் தேசிய சபை ஒழித்திருக்க வேண்டும்'', அதன் பிறகு ''தான் நிற்கும் புரட்சிகரமான களத்தைப் பலப்படுத்தியிருக்க வேண்டும், புரட்சி வென்றளித்த மக்களின் மேலாதிக்கத்தை எல்லாத் தாக்குதல்களினின்றும் பாதுகாத்திருக்க வேண்டும்.''[86]

எனவே, 1848ல் மார்க்ஸ் ஒரு புரட்சிகரமான அரசாங்கத்துக்கு அல்லது சர்வாதிகாரத்துக்கு வைத்த பணிகள் உள்ளடக்கத்தில் முதன்முதலில் ஒரு **ஜனநாயகப்** புரட்சியேயாகும்: அதாவது, எதிர்ப்புரட்சியை எதிர்த்துப் பாதுகாப்பு, மக்களின் மேலாதிக்கத்துக்கு முரணானதனைத்தையும் உண்மையில் ஒழிப்பது. இது புரட்சிகர-ஜனநாயக சர்வாதிகாரம் தவிர வேறில்லை.

மேலே போவோம்: மார்க்ஸ் அபிப்பிராயத்தில், எந்த வர்க்கங்கள் இந்தப் பணியை (மக்களின் மேலாதிக்கம் எனும் கோட்பாட்டைச் செயலளவில் முற்றுகச் செயல்படுத்துவது, எதிர்ப்புரட்சியின் தாக்குதல்களை முறியடிப்பது) சாதித்திருக்க முடியும், சாதித்திருக்க வேண்டும்? ''மக்கள்'' என்று மார்க்ஸ் பேசுகிறார். ஆனால் ''மக்களின்'' ஒற்றுமை பற்றிய சிறுமுதலாளித்துவப் பிரமைகளை எதிர்த்தும் மக்களுக்குள்ளே வர்க்கப் போராட்டம் இல்லாமை பற்றிய சிறுமுதலாளித்துவப் பிரமைகளை எதிர்த்தும் எப்போதும் ஈவிரக்கமின்றி மார்க்ஸ் போராடி வந்தார் என்பது நமக்குத் தெரியும். மார்க்ஸ் ''மக்கள்'' எனும் சொல்லைப் பயன்படுத்தும்போது அதன் வழியாக வர்க்க வேறுபாடுகளை மெருகிட்டு மறைக்காமல் புரட்சியை முடித்துக் கொடுக்கும் திறமுள்ள திட்டவட்டமான பகுதிகளை ஒன்றுபடுத்தினர்.

மார்ச் 18ல் பெர்லின் பாட்டாளி வர்க்கத்தின் வெற்றிக்குப்பின் **புதிய ரைன் பத்திரிகை** எழுவியதாவது: புரட்சியின்

*விளைவுகள் இரு அம்சங்களை நிரூபித்தன: ''ஒரு புறத்தில் மக்களை ஆயுதபாணியாக்கல், சங்கம் அமைக்கும் உரிமை, மக்களின் மேலாதிக்கத்தை உண்மையாகச் சாதித்தல்; மறு புறத்தில், முடியரசையும் காம்ப்ஹாவுஸன்—ஹான்ஸிமான் அமைச்சரவையையும்—அதாவது பெரு முதலாளி வர்க்கத் தார் பிரதிநிதிகளின் அரசாங்கம்—நீடித்து வைத்திருத்தல். ஆக, புரட்சி இரு வகையான விளைவுகளைப் பெற்றிருந்தது, அவை பிரிந்து செல்வது தவிர்க்க முடியாதது. மக்கள் வெற்றி பெற்றிருந்தார்கள்; நிர்ணயமான ஜனநாயகத் தன் மையுள்ள சுதந்தரங்களை வென்றிருந்தார்கள்; ஆனல் உட னடி அரசதிகாரம் அவர்கள் கைக்கு வராமல் பெருமுதலாளி வர்க்கத்தாரின் கைக்கு வந்துவிட்டது. சுருங்கச் சொன்னல், புரட்சி நிறைவு பெறவில்லை. மக்கள் பெருமுதலாளி வர்க் கத்தார் பிரதிநிதிகளை அமைச்சரவை அமைக்க விட்டார் கள். இந்தப் பெருமுதலாளி வர்க்கத்தார் பிரதிநிதிகள் பழைய பிரஷ்ய பிரபுவம்சத்தினரோடும் அதிகார வம்சத் தினரோடும் கூட்டணி ஏற்படுத்திக் கொண்டு தங்களுடைய விருப்பத்தை உடனே காட்டிக் கொண்டார்கள். அர்னிம், கானிட்ஸ், ஷ்வேரின் ஆகியோர் அமைச்சரவையில் சேர்ந்த னர்.*

**''என்றென்றும் புரட்சி-எதிர்ப்புள்ள மேல்தட்டு முதலாளி வர்க்கத்தினர் மக்களிடமுள்ள பயத்தால்—அதாவது தொழிலாளி களிடமும் ஜனநாயகப் போக்கான முதலாளி வர்க்கத்தாரிடமும் உள்ள பயத்தால்—பிற்போக்காளர்களுடன் காத்துக் கொள்ளும் தன்மையுடையதும் தாக்கும் தன்மையுடையதுமான கூட்டணியை ஏற்படுத்திக் கொண்டார்கள்.''** *(கொட்டை எழுத்திட்டது நாம்.)*[87]

*எனவே, ''அரசியல் நிர்ணய சபையை அமைப்பதற்காக முடிவு செய்வது'' மட்டுமல்லாமல் அதை உண்மையிலேயே கூட்டுவதுங்கூட புரட்சியின் நிர்ணயமான வெற்றிக்குப் போ தாது! ஆயுதமேந்திய போராட்டத்தில் அரைகுறையான வெற்றி பெற்ற பிறகுங்கூட (1848 மார்ச் 18ல் பெர்லின் தொழிலாளர்கள் துருப்புக்களின் மீது வெற்றி பெற்றது)*

ஒரு ''முழுமை பெருத'' புரட்சி, ''முடிவுக்கு கொண்டு செல்லப்படாத புரட்சி'' சாத்தியமே. அப்படியானல், அதன் முழுநிறைவு எதைப் பொறுத்திருக்கும்? அரசதிகாரம் நேரடியாக யார் கையில் போய்ச் சேருகிறது என்பதைப் பொறுத்து இருக்கிறது—பெத்ருன்கேவிச், ரோதிச்செவ் வகையருக்களின் (காம்ப்ஹாவுஸன், ஹான்ஸிமான் வகையருக்களின்) கைகளுக்கா, அல்லது **மக்களின்** (அதாவது தொழிலாளிகளின், ஜனநாயகப் போக்கான முதலாளி வர்க்கத்தாரின்) கைகளுக்கா என்பதைப் பொறுத்து இருக்கிறது. முதல் வழக்கில், முதலாளி வர்க்கத்திடம் அரசதிகாரம் இருக்கும்; பாட்டாளி வர்க்கத்துக்கு—''விமர்சனச் சுதந்தரமும்'' ''மிகத் தீவிரமான புரட்சிகர எதிர்க்கட்சியாக இருந்து வரும்'' சுதந்தரமும் இருக்கும். வெற்றி பெற்றவுடனே முதலாளி வர்க்கம் பிற்போக்காளர்களுடன் கூட்டணி ஏற்படுத்திக் கொள்ளும் (ருஷ்யாவிலும் தவிர்க்க முடியாதபடி இது நடக்கும்—எடுத்துக்காட்டாக, செயின்ட் பீட்டர்ஸ்பர்க் தொழிலாளர்கள் துருப்புக்களோடு தெருப் போர் புரிந்து ஓர் அரைகுறையான வெற்றியை மட்டும் பெற்று பெத்ருன்கேவிச் வகையருக்களை அரசாங்கம் அமைக்க விடுவர்களேயானல்). இரண்டாம் வழக்கில், புரட்சிகர-ஜனநாயக சர்வாதிகாரம்—அதாவது, புரட்சியின் முழுவெற்றி—சாத்தியப்படும்.

இனி பாக்கியிருப்பது ''ஜனநாயகப் போக்கான முதலாளி வர்க்கத்தார்'' (demokratische Bürgerschaft) என்பதற்கு மார்க்ஸ் உண்மையிலே என்ன பொருள் கொண்டிருந்தார் என்பதை மேலும் சரிநுட்பமாக வரையறுப்பது தான்; பெருமுதலாளி வர்க்கத்தாரிடமிருந்து வேறுபடுத்திக் காட்டும் நிலையில் அதையும் தொழிலாளிகளையும் சேர்த்து அவர் ''மக்கள்'' என்று குறிப்பிட்டார் அல்லவா?

*1848 ஜூலை 29ல்* **புதிய ரைன் பத்திரிகையில்** வெளிவந்த ஒரு கட்டுரையின் பின்வரும் பகுதி இந்தக் கேள்விக்குத் தெளிவாக விடையளிக்கிறது: ''...1848ல் நடந்த ஜெர்மன் புரட்சி 1789ல் நடந்த பிரெஞ்சுப் புரட்சியின் போலியேயாகும்.

*''1789 ஆகஸ்டு 4ல், பஸ்தீல் சிறைச்சாலையை நொறுக்கி மூன்று வாரங்கள் ஆனபின், ஒரே நாளில் பிரெஞ்சு மக்கள் எல்லா நிலப்பிரபுத்துவச் சுமைகளையும் தூக்கியெறிந்தார்கள்.*

*''1848 ஜுலை 11ல், மார்ச்சு தெரு அரண்கள் எழுப்பி நான்கு மாதங்கள் ஆனபின், நிலப்பிரபுத்துவச் சுமைகள் ஜெர்மன் மக்களை முறியடித்தன.* Teste Gierke cum Hansemanno.*

*''1789ஐச் சேர்ந்த பிரெஞ்சு முதலாளி வர்க்கம் தன்னுடைய நேச சக்தியான விவசாயி மக்களை ஒரு கணமேனும் நட்டாற்றில் விடவில்லை. தன்னுடைய ஆட்சி கிராமப்புறத்தில் நிலப்பிரபுத்துவத்தை ஒழிப்பதில் ஆதாரப்பட்டிருக்கிறது என்றும் ஒரு சுதந்தரமான, நிலமுள்ள* (grundbesitzenden) *விவசாயி வர்க்கத்தைப் படைப்பதில் ஆதாரப்பட்டிருக்கிறது என்றும் அதற்குத் தெரிந்திருந்தது.*

*''1848ஐச் சேர்ந்த ஜெர்மன் முதலாளி வர்க்கம் சிறிதும் மனவுறுத்தல் இல்லாமல் தனது மிகவும் இயல்பான நேச சக்தியாகிய, தனது சதையோடு சதையாகவுள்ள விவசாயிகளுக்குத் துரோகம் செய்து வருகிறது; விவசாயிகள் இல்லாமல் அது பிரபுக்களை எதிர்த்து நிற்க முடியாது.*

---

* *''சாட்சிகள்: திரு. கிர்க்கேயும் திரு. ஹான்ஸிமானும்.'' ஹான்ஸிமான் பெருமுதலாளி வர்க்கத்தார் கட்சியைப் பிரதிநிதித்துவப்படுத்தி அமைச்சராக இருந்தவர் (இவருடைய ருஷ்யப் பதிப்பு: துரூபெத்ஸ்கோய் அல்லது ரோதிச்செவ் போன்றவர்கள்); கிர்க்கே ஹான்ஸிமான் அமைச்சரவையில் நிலத் துறை அமைச்சராக இருந்தவர். இவர் ''நிலப்பிரபுத்துவச் சுமைகளை ஒழிப்பதற்கு'' என்று ஒரு ''தைரியமான'' திட்டம் தயாரித்தார், ''நஷ்டஈடின்றி'' ஒழிக்கப் போவதாகவும் சொன்னார்; ஆனால் உண்மையிலே பார்க்கும் பொழுது, முக்கியமற்ற சிறுசுமைகளை ஒழித்துவிட்டு முக்கியமானவற்றைக் காத்துப் பேணுவதற்கோ நஷ்டஈடு வழங்குவதற்கோ திட்டமிட்டார். திரு. கிர்க்கே ருஷ்யாவின் கப்லுக்கோவ், மனுயீலவ், ஹெர்த்ஸன்ஷ்டைன் இன்னும் இவர்களைப்போல் விவசாயிகளின் நண்பர்கள் என்று சொல்லிக் கொள்ளும் முதலாளித்துவ மிதவாதிகளைப் போன்றவர்; இவர்கள் ''விவசாயிகளின் நிலவுடைமையை விரிவுபடுத்துவதை'' விரும்புகிறார்களாம், ஆனால் நிலப்பிரபுக்களின் மனத்தைப் புண்படுத்த விரும்பவில்லையாம்.*

''நிலப்பிரபுத்துவ உரிமைகளின் நீடிப்பு, (மாயமான) மீட்பு என்கிற மாறுவேடத்தில் அவை நீடித்திருக்க அனுமதி —இதுதான் 1848ம் வருடத்திய ஜெர்மன் புரட்சியின் விளைவு. மலையைக் கெல்லி எலியைப் பிடித்த கதையாயிற்று.''[88]

இது மிகவும் அறிவூட்டத்தக்க பகுதியாகும். இது நான்கு முக்கியமான முன்கூற்றுகளை நமக்கு அளிக்கிறது: 1) முடிவு பெறாத ஜெர்மன் புரட்சிக்கும் முடிவு பெற்ற பிரெஞ்சுப் புரட்சிக்கும் இடையே உள்ள வேறுபாடு இதுதான்: ஜெர்மன் முதலாளி வர்க்கம் பொதுவாக ஜனநாயகத்துவத்துக்குத் துரோகம் செய்தது மட்டுமல்ல, மற்றவையுடன் கூடவே விவசாயி மக்களுக்கும் துரோகம் செய்தது. 2) விவசாயி மக்களைக் கொண்ட ஒரு சுதந்தரமான வர்க்கத்தைப் படைப்பது ஜனநாயகப் புரட்சியின் நிறைமுடிவுக்கு அடிப்படையாகும். 3) இப்படிப்பட்ட வர்க்கத்தைப் படைப்பது என்பதின் பொருள் நிலப்பிரபுத்துவச் சுமைகளை ஒழித்தல், நிலப்பிரபுத்துவ முறையை ஒழித்தல் என்பதாகும். எனினும் இது இன்னும் சோஷலிஸப் புரட்சி என்று பொருள்படாது. 4) முதலாளி வர்க்கத்தின்—அதாவது, ஜனநாயகப் போக்கான முதலாளி வர்க்கத்தின்—''மிகவும் இயல்பான'' நேச சக்தி விவசாயிகளே. அவர்கள் இல்லாமல் அது பிற்போக்கை ''எதிர்த்து நிற்க முடியாது''.

ஸ்தூலமான தேசிய நிலைமைகளை மாற்றிப் போட்டும், நிலப்பிரபுத்துவ முறைக்குப் பதிலாக பண்ணையடிமை முறை என்று வைத்துக் கொண்டும் கவனித்தால் இந்தக் கூற்றுகள் அனைத்தும் 1905ஐச் சேர்ந்த ருஷ்யாவுக்கு முற்றிலும் பொருந்தும். மார்க்ஸ் விளக்கிய வகையில் ஜெர்மன் அனுபவத்தை நாம் கற்றுக் கொள்வதின் மூலமாக நாம் சந்தேகமின்றிப் புரட்சியின் நிர்ணயமான வெற்றிக்குரிய கோஷமாக எடுக்க முடிகிற ஒரே கோஷம்: பாட்டாளி வர்க்கத்தின், விவசாயி மக்களின் புரட்சிகர-ஜனநாயகச் சர்வாதிகாரம், என்பதுதான். எதிர்த்து வரும் பிற்போக்காளர்களுக்கும் துரோகத்தனமான முதலாளி வர்க்கத்துக்கும் மாறுபட்ட நிலையில் 1848ல் மார்க்ஸ் வைத்த ''மக்கள்'' எனப்பட்டதில் பாட்டாளி வர்க்கமும் விவசாயி மக்களும் முக்கியமான இணைக்

கூறுகளாகும் என்பதில் ஐயமில்லை. ருஷ்யாவிலுங்கூட மித வாத முதலாளி வர்க்கத்தினரும் ஒஸ்வபஷ்தேனியே சங்கக் கனவான்களும் விவசாயி மக்களுக்குத் துரோகம் செய்து வருகிறார்கள், துரோகம் செய்வார்கள் என்பதில்—அதாவது, அவர்கள் போலிச் சீர்திருத்தங்களோடு நின்றுவிடுவார்கள், நிலப்பிரபுக்களுக்கும் விவசாயி மக்களுக்கும் இடையே நடக் கும் நிர்ணயமான போராட்டத்தில் நிலப்பிரபுக்களின் பக்கம் நிற்பார்கள் என்பதில்—ஐயமில்லை. இந்தப் போராட்டத் தில் பாட்டாளி வர்க்கம் ஒன்றுதான் கடைசிவரை விவசாயி களை ஆதரித்து நிற்கும் திறமுடையது. கடைசியாக, ருஷ்யா விலுங்கூட விவசாயிகள் போராட்டத்தின் வெற்றி—அதா வது, நிலம் முழுவதையும் விவசாயி மக்களுக்கு மாற்றிக் கொடுத்துவிடுவது—ஒரு முழுமையான ஜனநாயகப் புரட்சி யைக் குறிக்கும், முடிவுவரை கொண்டு செல்லப்பட்ட புரட்சி யின் சமுதாய அடிப்படையாக இருக்கும்; என்றபோதிலும் இது எவ்வகையிலும் சோஷலிஸப் புரட்சியாகவோ, சிறு முதலாளி வர்க்கத்தினரின் சித்தாந்திகளான சோஷலிஸ்டு-புரட்சியாளர்கள் பேசும் ''சமுதாயமயமாக்கலோ'' ஆகாது. விவசாயிகளின் புரட்சியெழுச்சி, ஜனநாயகப் புரட்சியின் வெற்றி, ஜனநாயகக் குடியரசின் அடிப்படையில் சோஷ லிஸத்திற்கான ஒரு நிர்ணயமான, உண்மையான போராட் டத்துக்கு வழியைச் செப்பனிட்டுத் தரும், அவ்வளவுதான். இந்தப் போராட்டத்தில், நிலம்படைத்த வர்க்கம் என்கிற வகையில் விவசாயி மக்களும் அதே துரோகத்தனமான, திடமற்ற பாத்திரம் வகிப்பார்கள்—இன்று முதலாளி வர்க் கத்தினர் ஜனநாயகத்திற்கான போராட்டத்தில் வகித்து வரும் பாத்திரம் மாதிரி. இதை மறப்பது சோஷலிஸத்தை மறப்பதாகும், பாட்டாளி வர்க்கத்தின் உண்மையான நலன் கள் பணிகள் பற்றி தன்னையும் மற்றவர்களையும் வஞ்சிப்ப தாகும்.

1848ல் மார்க்ஸ் கொண்டிருந்த கருத்துக்களை முன்வைப் பதில் குறைபாடு எதுவும் இல்லாமலிருக்கும் பொருட்டு அக்காலத்திய ஜெர்மன் சமூக-ஜனநாயகவாதத்துக்கும் (அல் லது அக்காலத்து மொழியில் சொல்வதென்றால், பாட்டாளி

வர்க்கத்தின் கம்யூனிஸ்டுக் கட்சிக்கும்) தற்காலத்திய ருஷ்ய சமூக-ஜனநாயகவாதத்துக்கும் இடையேயுள்ள முக்கியமான வேற்றுமையைக் குறித்துக் கொள்வது அவசியம். மேரிங் பின்வருமாறு சொல்கிருர்:

''அரசியல் அரங்கில் 'ஜனநாயகத்தின் பத்திரிகையாகப்' **புதிய ரைன் பத்திரிகை** தோன்றியது. அதன் கட்டுரைகள் அனைத்திலும் இழையோடிய கருத்தைத் தவருகப் புரிந்து கொள்வதற்கு இடமே கிடையாது. எனினும், நேரடி அர்த்தத்தில் முதலாளி வர்க்கத்தின் நலன்களுக்கு எதிரான பாட்டாளி வர்க்கத்தின் நலன்களைவிட எதேச்சாதிகார முறைக்கும் நிலப்பிரபுத்துவ முறைக்கும் எதிரான முதலாளித்துவப் புரட்சியின் நலன்களை அது ஆதரித்துப் போராடியது. புரட்சி நடந்து வந்த காலத்தில் ஒரு சுதந்தரமான தொழிலாளி வர்க்க இயக்கத்தைப் பற்றி அந்தப் பத்திரிகையில் காணக்கூடியது அற்பசொற்பமாகத்தான் உள்ளது—என்றபோதிலும், அத்தோடு கூடவே மோல், ஷாப்பர் ஆகியோரை ஆசிரியர்களாகக் கொண்டு கொலோன் தொழிலாளர் சங்கத்தின்[89] தனிப் பத்திரிகை ஒன்று வாரம் இரு முறை வெளிவந்து கொண்டிருந்ததை நாம் மறக்கலாகாது. எப்படியிருந்தபோதிலும், **புதிய ரைன் பத்திரிகை** தன் காலத்திலிருந்த ஜெர்மன் தொழிலாளி வர்க்க இயக்கத்தின் மீது கவனம் செலுத்தியது குறைவாயிருந்த விஷயம் தற்கால வாசகனின் கண்ணைப் பறிக்காமலிருக்க முடியாது—இவ்வளவுக்கும் இந்த இயக்கத்தின் மிகச் சிறந்த ஆதரவாளரான ஸ்டெஃபான் போர்ன் என்பவர் பாரிஸிலும் பிரஸ்ஸெல்ஸிலும் மார்க்ஸ், எங்கெல்ஸ் ஆகியோரின் மாணுக்கராக இருந்தார், 1848ல் அவர்களுடைய பத்திரிகையின் பெர்லின் நிருபராகவும் இருந்தார். தொழிலாளிகளிடையே தாம் செய்து வந்த கிளர்ச்சியைப் பற்றி மார்க்ஸும், எங்கெல்ஸும் எதிர்ப்பாக ஒரு வார்த்தையேனும் சொன்னதேயில்லை என்று போர்ன் தமது **நினைவுகளில்** கூறுகிருர். என்றபோதிலும், குறைந்தபட்சம் இந்தக் கிளர்ச்சியின் வழிமுறைகளைப் பற்றி அவர்கள் அதிருப்தி கொண்டிருந்தது சாத்தியமே என்று பின்னல் எங்கெல்ஸ் வெளியிட்ட கூற்றுகளிலிருந்து தெரிகிறது. அவர்

களின் அதிருப்தி நியாயமானதே, ஏனெனில் ஜெர்மனியின் பெரும் பகுதியில் இன்னமும் பாட்டாளி வர்க்கத்தினுடைய அறவே வளர்ச்சியற்றிருக்கும் வர்க்க உணர்வுக்கு போர்ன் நிறைய விட்டுக் கொடுக்க வேண்டியிருந்தது; கம்யூனிஸ்டு அறிக்கையின் நிலையிலிருந்து பார்க்கும் போது இப்படி விட்டுக் கொடுத்ததானது விமர்சனத்தின் எதிரே நிற்காது. அவர்களின் அதிருப்தி நியாயமற்றும் இருந்தது, ஏனெனில் அப்படியிருந்தும் போர்னுல் தம் கிளர்ச்சியைச் சார்புநோக்கில் உயர்வான தரத்தில் வைத்திருக்க முடிந்தது.... முதலாளித்துவப் புரட்சியை முடிந்தவரை தொலைவுக்குத் தள்ளிச் செலுத்துவதுதான் தொழிலாளி வர்க்கத்தின் முதன்மையான நலன் என்று மார்க்ஸும் எங்கெல்ஸும் நினைத்தது வரலாற்றுரீதியிலே, அரசியல்ரீதியிலே சரிதான் என்பதில் சந்தேகமேயில்லை.... என்றுலுங்கூட, மிகவும் ஒளிநிறைந்த சிந்தனையாளர்களின் கருத்தோட்டங்களையுங்கூட தொழிலாளிவர்க்க இயக்கத்தின் சாதாரண உள்ளுணர்வு திருத்த முடியும் என்பதற்கு ஒரு குறிப்பிடத்தக்க சான்று கிடைத்தது: 1849 ஏப்ரலில் ஒரு தனி தொழிலாளர் நிறுவனம் வேண்டும் என்று அவர்கள் [மார்க்ஸ் எங்கெல்ஸ்] அறிவித்து, குறிப்பாகக் கிழக்கு எல்பே (கிழக்கு பிரஷ்யாவைச் சேர்ந்த) பாட்டாளி வர்க்கம் தயாரித்து வந்த தொழிலாளர் காங்கிரஸில் கலந்து கொள்வது என்று முடிவு செய்தனர்.''

ஆக, 1849 ஏப்ரலில்தான், புரட்சிகரமான பத்திரிகை அநேகமாக ஓராண்டாக வெளிவந்து கொண்டிருந்த பிறகு தான் (புதிய ரைன் பத்திரிகை 1848 ஜூன் 1ல் வெளிவரத் தொடங்கியது), மார்க்ஸும் எங்கெல்ஸும் ஒரு தனி தொழிலாளர் நிறுவனம் இருப்பதற்கு ஆதரவு தெரிவித்தனர்! அதுவரை அவர்கள் சுதந்தரமான தொழிலாளர் கட்சியுடன் எந்த அமைப்பு வகைப்பட்ட பிணைப்பும் இல்லாமல் வெறுமே ஒரு ''ஜனநாயகவாதத்தின் பத்திரிகையை'' நடத்திக் கொண்டிருந்தனர்! நமது தற்காலப் பார்வை நிலையிலிருந்து பார்க்கும் போது இது ஒரு அரக்கத்தனமான, அசாத்தியமான உண்மையாகத் தோன்றினுலும், இது அக்காலத்திய ஜெர்மன் சமூக-ஜனநாயகக் கட்சிக்கும் இன்றைய ருஷ்யா

வின் சமூக-ஜனநாயகத் தொழிலாளர் கட்சிக்கும் இடையே யுள்ள மாபெரும் வேற்றுமையைத் தெளிவாகக் காட்டு கிறது. ஜெர்மன் ஜனநாயகப் புரட்சியில் (பொருளாதாரத் துறையிலும் அரசியல் துறையிலும்—அரசு வகையில் ஒற்று மையின்மை—1848ல் ஜெர்மனி பிற்பட்ட நிலையில் இருந்த காரணத்தால்) இயக்கத்தின் பாட்டாளி வர்க்க முனைப்புக் கூறுகள், பாட்டாளி வர்க்கப் போக்கு எவ்வளவு குறைவாக இருந்தது என்று இது காட்டுகிறது. இக்காலத்திலும் இதற்குச் சற்றுப் பிறகுங்கூட ஒரு சுதந்தரமான பாட்டாளி வர்க்கக் கட்சியின் தேவை பற்றி மார்க்ஸ் திரும்பத் திரும்பச் சொல்லிக்கொண்டிருந்ததை மதிப்பிடுகையில்இதை(எடுத்துக் காட்டாக, பிளெஹானவ் மறக்கிறது போல்) மறக்கக் கூடாது. அநேகமாக ஓராண்டுக்குப் பிறகுதான், ஜனநாயகப் புரட்சியின் அனுபவத்தின் விளைவாக மட்டுமே, மார்க்ஸ் இந்த நடைமுறை முடிவுக்கு வந்து சேர்ந்தார்—அந்த அள வுக்கு அக்காலத்திய ஜெர்மனியில் சூழல் முழுவதும் குறுகிய போக்குள்ளதாயும் சிறுமுதலாளித்துவப் போக்குள்ளதாயும் இருந்தது. நமக்கு இந்த முடிவானது சர்வதேச சமூக-ஜனநா யகவாதத்தின் அரை நூற்றுண்டு அனுபவத்தின் நன்கு தெரிந்த திடமான ஆதாயமாகும்—இந்த ஆதாயத்தின் அடிப்படை யில் நாம் ருஷ்யாவின் சமூக-ஜனநாயகத் தொழிலாளர் கட்சி யை அமைக்கத் தொடங்கினோம். எடுத்துக்காட்டாக, நம் விஷயத்தில் பாட்டாளி வர்க்கத்தின் சமூக-ஜனநாயகக் கட் சிக்கு அப்பாற்பட்டதாய் புரட்சிகரமான பாட்டாளி வர்க்கப் பத்திரிகைகள் பற்றிய பேச்சுக்கே இடம் இருக்க முடி யாது, அல்லது வெறுமே 'ஜனநாயகவாதத்தின் பத்திரிகை யாக' ஒரு கணமேனும் வெளிவருகிற பிரச்சினையும் இருக்க முடியாது.

ஆனால், மார்க்ஸ்—போர்ன் இடையே அற்பமாக வெளிப் படத் தொடங்கியிருந்த வேறுபாடு, நம் புரட்சியில் ஜன நாயக நீரோட்டத்திலுள்ள பாட்டாளி வர்க்கப் போக்கு எவ் வளவுக்கெவ்வளவு மிக வலுவாக வெளிப்படுத்திக் கொண் டிருக்கிறதோ அவ்வளவுக்கவ்வளவு அதிக வளர்ச்சியுற்ற வடிவத்தில் இருக்கிறது. ஸ்தெஃபான் போர்ன் நடத்தி வந்த

கிளர்ச்சியைக் குறித்து மார்க்ஸும் எங்கெல்ஸும் கொண்டிருந்த சாத்தியமான அதிருப்தியைப்பற்றி மேரிங் மிதமிஞ்சிய மெத்தனத்துடனும், தட்டிக்கழிக்கும் முறையிலும் பேசுகிருர். 1885ல் எங்கெல்ஸ் போர்னைப் பற்றி எழுதியதைப் பாருங்கள் (*Enthüllungen über den Kommunisten prozess zu Köln*, Zürich, 1885*):

கம்யூனிஸ்டுச் சங்கத்தின்[90] உறுப்பினர்கள் எல்லாவிடங்களிலும் தீவிர ஜனநாயக இயக்கத்தின் தலைமையில் இருந்தார்கள், அதன் வழியாகப் புரட்சிகரமான நடவடிக்கைக்குச் சங்கம் ஒரு மிகச் சிறந்த பள்ளி என்று நிரூபித்தார்கள். ''சங்கத்தின் செயலூக்கமுள்ள உறுப்பினராகப் பாரிஸிலும் பிரஸ்ஸெல்ஸிலும் வேலை செய்த ஸ்தெஃபான் போர்ன் எனும் அச்சு கோக்கும் தொழிலாளி பெர்லினில் 'தொழிலாளர் சங்கத்தை' (Arbeiterverbrüderung) நிறுவினார், அது கணிசமாகப் பரந்து விரிந்து 1850 வரை இருந்தது. போர்ன் ஓர் ஆற்றல் மிக்க இளைஞர். எனினும் அரசியல் பிரமுகர் ஆவதிலே மிதமிஞ்சிய அவசரம் காட்டினார். கூட்டம் சேர்ப்பதற்காகப் பலபட்டறைக் கும்பலோடெல்லாம் (Kreti und Plethi) 'உறவாடி வந்தார்'. சண்டையிட்டு வரும் போக்குகளில் ஒற்றுமையையும் பெருங் குழப்பத்தில் ஒளியையும் அவரால் கொண்டுவர முடியவில்லை. எனவே, சங்கத்தின் அதிகாரபூர்வமான பிரசுரங்களில் கம்யூனிஸ்டு அறிக்கையின் கருத்துக்கள் தொடர்பின்றிக் கைவினைஞர் சங்க (கில்டு) நினைப்புகளோடும் விருப்பங்களோடும் லுயீ பிளாங், புரூதோன் கருத்துத் துணுக்குகளோடும் காப்பு முறைக்கு ஆதரவளிப்பதோடும் கலந்து குழப்பிவிடப்பட்டிருந்தன. சுருங்கச் சொன்னால், அவர்கள் எல்லோரையும் திருப்திப்படுத்த விரும்பினார்கள் (Allen alles sein). குறிப்பாக, வேலைநிறுத்தங்களும் தொழிற்சங்கங்களும் உற்பத்தியாளர்களின் கூட்டுறவுச் சங்கங்களும் துவக்கப்பெற்றன. இப்படிப்பட்ட விஷயங்களை நிரந்தரமான அடிப்படையில் நடை

---

* கொலோன் கம்யூனிஸ்டு வழக்கு பற்றிய அம்பலங்கள், ஜூரிச், 1885.—ப-ர்.

முறையில் நிறுவுவதற்கான களத்தை அரசியல் வெற்றிகள் மூலமாக முதலில் வென்று கொள்வதே எல்லாவற்றிற்கும் மேலாக உள்ள பிரச்சினை என்பதை மறந்து விட்டார்கள். [கொட்டையெழுத்திட்டது நாம்.] பின்னுல், பிற்போக்கின் வெற்றிகளால் இந்தச் சங்கத்தின் தலைவர்கள் புரட்சிகரமான போராட்டத்தில் நேரடியாகக் கலந்து கொள்வதின் அவசியத்தை உணரத் தொடங்கிய போது, அவர்களைச் சுற்றிச் சூழ்ந்து திரண்டிருந்த அறிவு முதிராத கும்பல் இயல்பாகவே அவர்களை நட்டாற்றில் விட்டுச் சென்றது. 1849 மே மாதம் டிரெஸ்டனில் நிகழ்ந்த புரட்சியெழுச்சியில் போர்ன் கலந்து கொண்டார், அதிர்ஷ்டவசமாகத் தப்பிக்கவும் செய்தார். எனினும், பாட்டாளி வர்க்கத்தின் மாபெரும் அரசியல் இயக்கத்துக்கு மாறுபட்ட நிலையில் தொழிலாளர் சங்கம் ஒரு தனித்து நிற்கும் சங்கமாகவே காட்டிக் கொண்டது. அது பெரும்பாலும் காகிதத்திலேதான் இருந்தது, அற்பமான பங்கும் வகித்தது, எனவேதான் அதை நசுக்குவது அவசியம் என்று பிற்போக்கு 1850 வரை கருதவில்லை. அதன் கிளைகளும் பல வருடங்களுக்குப் பின்னரே நசுக்கப்பட்டன. போர்ன் (அவர் உண்மைப் பெயர் Buttermilch*) அரசியல் பிரமுகர் ஆவதற்குப் பதிலாக ஒரு சாதாரண ஸ்விஸ் நாட்டுப் பேராசிரியராகிவிட்டார். அவர் இப்போது மார்க்ஸைக்

* முதல் பதிப்பிற்கு எங்கெல்ஸை மொழிபெயர்த்தபோது நான் ஒரு தவறு செய்தேன். Buttermilch [மோர்—ப-ர்.] எனும் சொல்லை பெயர்ச் சொல்லாக எடுத்துக் கொள்ளாமல் பொதுச் சொல்லாக எடுத்துக் கொண்டேன். இதைக் கண்டு மென்ஷிவிக்குகள் வெகுவாக மகிழ்ச்சியடைந்தது இயல்புதான். நான் ''எங்கெல்ஸை மேலும் ஆழப்படுத்திவிட்டதாகக்'' கல்த்ஸோவ் எழுதினுர் (இரண்டு ஆண்டுகள் எனும் கட்டுரைத் தொகுதியில் மீண்டும் பிரசுரிக்கப்பட்டது). பிளெஹானவ் தவாரிஷ்[91] பத்திரிகையில் இதை இப்போதுங்கூட நினைவூட்டுகிருர். சுருங்கச் சொன்னுல், ஜெர்மனியில் 1848ல் தொழிலாளி வர்க்க இயக்கத்திலிருந்த இரண்டு போக்குகள்—போர்ன் போக்கும் (நமது ''பொருளாதாரவாதம்'' போன்றது) மார்க்ஸியப் போக்கும்—பற்றிய பிரச்சினையை மெருகிட்டு மறைப்பதற்கு இது ஒரு நேர்த்தியான சாக்காக இருந்தது. எதிராளியின் தவற்றைப்

கைவினைஞர் சங்க மொழியில் மொழிபெயர்ப்பதில்லை. நற்பண்புள்ள ரெனனைச் சொற்பெருக்குள்ள ஜெர்மன் நடையில் மொழிபெயர்க்கிறார்.''[92]

இப்படித்தான் ஜனநாயகப் புரட்சியில் சமூக-ஜனநாயகவாதத்தின் இரண்டு போர்த்தந்திரங்கள் பற்றி எங்கெல்ஸ் தீர்ப்பளித்தார்!

நமது புதிய-இஸ்க்ராவாதிகளும் ''பொருளாதாரவாதத்தின்'' பக்கம் சாய்கிறார்கள். ''வெளிச்சம் கண்டு வருவதற்காக'' அவர்களை முடியரசுவாத முதலாளி வர்க்கத்தினர் புகழ்ந்து கொள்ளும் அளவுக்கு அவர்கள் நியாயப் புத்தியற்ற ஆர்வம் காட்டி அதன் பக்கம் சாய்கிறார்கள். அவர்களுங்கூட தங்களைச் சுற்றி ஒரு பலபட்டறைக் கும்பலைத் திரட்டிக் கொள்கிறார்கள்; ''பொருளாதாரவாதிகளை'' முகத்துதி செய்கிறார்கள்; ''முன்முயற்சி'', ''ஜனநாயகம்'', ''தனியுரிமை'', என்றெல்லாம் கோஷமிட்டு அறிவு முதிராத மக்கள் திரளை வாய்வீச்சு மூலமாக ஈர்த்து வருகிறார்கள். அவர்களின் தொழிலாளர் சங்கங்களுங்கூட ஹிளெஸ்தக்கோவ்[93] மாதிரியான புதிய-இஸ்க்ராவின் தாள்களிலேதான் இருக்கின்றன. அவர்களின் கோஷங்களும் தீர்மானங்களும் ''பாட்டாளி வர்க்கத்தின் மாபெரும் அரசியல் இயக்கத்தின்'' பணிகளை அதே போல் புரிந்து கொள்ளத் தவறுகிறதைக் காட்டுகின்றன.

1905 ஜூன்—ஜூலையில்
எழுதப்பட்டது

நூல் திரட்டு,
தொகுதி 11,
பக்கங்கள் 1-131

1905 ஜூலை, ஜினீவாவில்
ரு.ச.ஜ.தொ. கட்சியின்
மத்தியக் குழு இதைத்
தனி புத்தகமாக வெளியிட்டது

---

(போர்ன் பெயர் சம்பந்தப்பட்டதாயிருந்த போதிலும்) பயன்படுத்துவது முற்றிலும் இயல்புதான், அதற்கு மேலுங்கூட. எனினும் இரண்டு போர்த்தந்திரங்கள் பற்றிய பிரச்சினையின் சாரப் பொருளை மெருகிட்டு மறைப்பதற்கு மொழிபெயர்ப்பின் திருத்தத்தைப் பயன்படுத்திக் கொள்வது அசல் பிரச்சினையைத் தட்டிக் கழிப்பதாகும். (1907 பதிப்புக்கு ஆசிரியர் எழுதிய குறிப்பு.—ப-ர்.)

# கட்சி நிறுவனமும் கட்சி இலக்கியமும்

அக்டோபர் புரட்சியைத்[94] தொடர்ந்து ருஷ்யாவில் சமூக-ஜனநாயகப் பணிக்குத் தோன்றியிருக்கும் புதிய நிலைமைகள் கட்சி இலக்கியம் குறித்த பிரச்சினையை முன்னிலைக்குக் கொண்டு வந்திருக்கின்றன. சட்டவிரோதமான பத்திரிகைகள், சட்டபூர்வமான பத்திரிகைகள் என்னும் பாகுபாடு—நிலப்பிரபுத்துவ,எதேச்சாதிகார ருஷ்யாவின் சகாப்தத்தினது அந்தச் சோகமிக்க பாரம்பரியம்—மறையத் தொடங்கியிருக்கிறது. இன்னமும் அது மடிந்துவிடவில்லை, இல்லவே இல்லை. நமது தலைமை அமைச்சரின் கபட நாடக அரசாங்கம் இன்னமும் தாண்டவமாடிக் கொண்டுதான் இருக்கிறது—ஆகவே **இஸ்வேஸ்தியா சவேத்தா ரபோச்சிஹ் தெப்புத் தாத்தவ்**[95] ''சட்டவிரோதமான'' முறையிலேதான் அச்சிடப் படுகின்றது. ஆனல் அரசாங்கத்தால் தடுத்து நிறுத்த முடியாத ஒன்றுக்குத் ''தடை விதிக்கும்'' இந்த அசட்டு முயற்சிகள், அரசாங்கத்தை மானமிழக்கச் செய்கின்றனவே ஒழிய, தார்மிக வழியில் அதற்கு மேலும் பல உதைகள் விழச் செய்கின்றனவே ஒழிய, வேறு பலன் தரவில்லை.

சட்டவிரோதமான பத்திரிகைகள், சட்டபூர்வமான பத்திரிகைகள் என்னும் பாகுபாடு இருந்து வந்த வரையில், கட்சிப் பத்திரிகைகளா, கட்சி சார்பில்லாப் பத்திரிகைகளா என்கிற பிரச்சினை மிகவும் சுலபமாகவும், மிகவும் பொய்யான, சிதைவுற்ற முறையிலும் தீர்மானிக்கப்பட்டு வந்தது. சட்டவிரோதமான பத்திரிகைகள் எல்லாம் கட்சிப் பத்திரிகைகளாய் இருந்தன—இவற்றை வெளியிட்ட நிறுவனங்களும்

இவற்றை நடத்திய குழுக்களும் நடைமுறைக் கட்சி ஊழியர்களது குழுக்களுடன் ஏதேனும் ஒருவழியில் இணைந்திருந்தன. சட்டபூர்வமான பத்திரிகைகள் யாவும் கட்சி சார்பில்லாத் தனமாய் இருந்தன—ஏனெனில் கட்சியைச் சார்ந்திருத்தல் என்பது தடைக்குட்பட்டதாக இருந்தது—ஆயினும் இந்தப் பத்திரிகைகளும் ஏதேனும் ஒரு கட்சியைத் ''தழுவுகிறவையாகவே'' இருந்தன. இயற்கைக்கு முரணான கூட்டுகளும், விசித்திர ''சகவாசங்களும்'', தலைமறைவுக்காக வேண்டியிருந்த பொய்யான ஏற்பாடுகளும் தவிர்க்க முடியாதனவாய் இருந்தன. கட்சிக் கருத்தோட்டங்களை வெளிப்படுத்த விரும்பியோர் வலிந்து அனுசரிக்க வேண்டியிருந்த தன்னடக்கமும் தயக்கமும், இந்தக் கருத்தோட்டங்களின் நிலைக்கு உயராதோரும் உண்மையில் கட்சி ஆட்களல்லாதோரும் ஆகியவர்களது முதிர்ச்சியில்லாச் சிந்தனை அல்லது நெஞ்சுறுதியின்மையுடன் இணைந்து கலக்கலாயின.

மறைபொருளான மொழிக்கும் எழுத்துத் துறை அடிவருடித்தன்மைக்கும் அடிமையின் பேச்சுக்கும் சித்தாந்தத் துறைக் கொத்தடிமைத்தனத்துக்குமான கேடுகெட்ட ஒரு காலம் அது! ருஷ்யாவில் உயிருள்ளவையும் புது மலர்ச்சி கொண்டவையுமான யாவற்றையும் நெரித்துத் திணரடித்த இந்தக் கொடுஞ் சூழ்நிலைக்குப் பாட்டாளி வர்க்கம் முடிவு கட்டியிருக்கிறது. ஆனால் இதுகாறும் பாட்டாளி வர்க்கம் ருஷ்யாவுக்குப் பாதியளவு சுதந்திரமே வென்றிருக்கிறது.

புரட்சி இன்னும் நிறைவுற்றுகவில்லை. புரட்சியைத் தோற்கடிக்க இனிமேல் ஜாரிசம் போதிய பலமுடையதாய் இல்லை; அதேபோதில் ஜாரிசத்தைத் தோற்கடிக்க இன்னமும் புரட்சி போதிய பலம் பெற்றுகவில்லை. பகிரங்கமான, ஒளிவு மறைவில்லாத, நேரடியான, முரணற்ற கட்சி மனப்பான்மையானது தலைமறைவான, இரகசிய, ''ராஜதந்திர'', சூழ்ச்சிகரச் ''சட்ட முறைமையுடன்'' சேர்ந்திருக்கும் இயற்கைக்கு ஒவ்வாத இந்த இணைவு, எங்கும் யாவற்றிலும் செயல்படும் ஒரு காலத்தில், இப்பொழுது நாம் வாழ்ந்து வருகிறோம். இயற்கைக்கு ஒவ்வாத இந்த இணைவு நம்முடைய செய்தியேட்டிலும் தனது கைவரிசையைக் காட்டுகிறது:

இடைநிலையான மிதவாத-முதலாளித்துவச் செய்தியேடுகள் வெளிவராமல் தடை செய்யும்படியான சமூக-ஜனநாயகக் கொடுங்கோன்மை என்பதாய்த் திருவாளர் குச்கோவ் எவ்வளவுதான் நையாண்டி செய்தபோதிலும், உண்மை என்னவெனில் ருஷ்யாவின் சமூக-ஜனநாயகக் கட்சியினுடைய மத்திய ஏடாகிய புரொலிட்டாரி போலீஸ் தாண்டவமாடும் எதேச்சாதிகார ருஷ்யாவின் இழுத்து மூடிப் பூட்டப்பட்ட கதவுகளுக்கு வெளியேதான் இன்னமும் இருந்து வருகிறது.

நிற்க, பாதி அளவுக்கு நடைபெற்றிருக்கும் இந்தப் புரட்சி நம் எல்லோரையும் புதிய வழிகளில் யாவற்றையும் ஒழுங்கமைக்க உடனே வேலை தொடங்குமாறு வற்புறுத்துகின்றது. இன்று இலக்கியமானது, ''சட்டபூர்வமாய்'' வெளிவருவதுங்கூட, பத்தில் ஒன்பது பங்குக்குக் கட்சி இலக்கியமாகிவிட முடியும். அது கட்சி இலக்கியமாகிவிடவும் வேண்டும். முதலாளித்துவப் பழக்கவழக்கங்களிலிருந்து, லாபமடிக்கும் வாணிப நெறியிலான முதலாளித்துவப் பத்திரிகைகளிலிருந்து, முதலாளித்துவ எழுத்துத் துறையோரின் தன்னல முன்னேற்ற நாட்டம், தனிநபர் மனப்பான்மை, ''உயர்குலப் பாங்குடைத்த அராஜகவாதம்'', லாபவேட்டை ஆகியவற்றிலிருந்து வேறுபட்டு, இவற்றுக்கு நேர்மாருய், சோஷலிசப் பாட்டாளி வர்க்கம் கட்சி இலக்கியம் என்னும் கோட்பாட்டை முன்வைத்து, இந்தக் கோட்பாட்டை வளர்த்துச் சென்று, சாத்தியமான அளவுக்குப் பூரணமாகவும் நிறைவாகவும் இதை நடைமுறைக்குக் கொண்டுவர வேண்டும்.

கட்சி இலக்கியம் என்னும் கோட்பாடு என்பதென்ன? சோஷலிசப் பாட்டாளி வர்க்கத்துக்கு, இலக்கியமானது தனி ஆட்கள் அல்லது குழுக்கள் செல்வம் திரட்டிக் கொள்வதற்குரிய ஒரு சாதனமாய் இருக்க முடியாது என்பது மட்டுமல்ல இக்கோட்பாடு; உண்மையில் இலக்கியமானது பாட்டாளி வர்க்கத்தின் பொது இலட்சியத்தைச் சாராத ஒன்ருய், தனி ஆள் முயற்சியாய் இருக்க முடியாது என்பதும் ஆகும். கட்சி சார்பில்லா மனப்பாங்குடைய எழுத்தாளர்கள் ஒழிக! இலக்கியத் துறை மீமனிதர்கள் (supermen)

ஒழிக! இலக்கியமானது பாட்டாளி வர்க்கத்தினது பொது இலட்சியத்தின் ஒரு பகுதியாக வேண்டும், தொழிலாளி வர்க்கம் அனைத்தின் அரசியல் உணர்வு கொண்ட முன்னணிப் படை அனைத்தாலும் இயக்கப்படும் தனியொரு மாபெரும் சமூக-ஜனநாயகப் பொறியமைவைச் சேர்ந்த "பல் சக்கரமும் திருகும்" ஆகிவிட வேண்டும். ஒழுங்கமைந்த, திட்டமிடப்பட்ட, ஒருமித்த சமூக-ஜனநாயகக் கட்சிப் பணியில் இலக்கியம் ஒரு கூறு ஆகிவிட வேண்டும்.

"உவமைகள் எல்லாம் நொண்டிகள்தான்" என்பது ஜெர்மன் பழமொழி. இலக்கியத்தைப் பல் சக்கரத்துடனும், உயிருள்ள ஓர் இயக்கத்தை ஒரு பொறியமைவுடனும் ஒப்பிடும் என்னுடைய உவமையும் இத்தகையதுதான். ஆவேசமான அறிவுத்துறையினர் சிலர் இப்படிப்பட்ட உவமை குறித்து ஆத்திரக் கூச்சல் எழுப்புவார்கள் என்பதை நான் அறிவேன் —கருத்துக்கள் தங்குதடையின்றி களம் புகுந்து போராடுவதையும், விமர்சனம் செய்வதற்குரிய சுதந்திரத்தையும், இலக்கியப் படைப்பு சுதந்திரத்தையும் இன்ன பிறவற்றையும் இது மதியாது கேவலப்படுத்துகிறது என்றும், உயிரற்றதாக்குகிறது என்றும், "அதிகாரவர்க்க நெறிமுறையாக்குகிறது" என்றும் இன்ன பலவாறுகவும் இவர்கள் கூச்சலிடுவார்கள். இப்படிப்பட்ட கூச்சல்கள் எல்லாம் உண்மையில் முதலாளித்துவ அறிவுத்துறையோரது தனிநபர் மனப்பான்மையின் ஒரு வெளியீடே அன்றி, அதற்குமேல் ஒன்றுமல்ல. இலக்கியமானது வேறு எதனிலும் அரிதாகவே இயந்திரவியல் பாங்கிலான சீராக்கத்துக்கோ, சரிமட்டமாக்குதலுக்கோ உட்படக் கூடியது, பெரும்பான்மைக்குச் சிறுபான்மை கீழ்ப்படியும் விதிக்கு இணங்கக் கூடியது என்பதில் ஐயமில்லை. அதே போல இந்தத் துறையில், அவரவரது தனிப்பட்ட முன்முயற்சிக்கும், தனிப்பட்ட விருப்பப் போக்குக்கும், மற்றும் சிந்தனைக்கும் கற்பனைக்கும், வடிவத்துக்கும் உள்ளடக்கத்துக்கும் நிச்சயமாய் அதிக வாய்ப்பும் வசதியும் அளிக்க வேண்டும் என்பதிலும் ஐயமில்லை. இவை யாவும் மறுக்க முடியாதவையே; ஆனால் இவை யாவும் தெளிவுபடுத்துவது என்னவெனில், பாட்டாளி வர்க்கக் கட்சியினுடைய இலட்சியத்

தின் எழுத்துத் துறையை இயந்திரவியல் பாங்கிலே அதன் பிற துறைகளுக்கு முழுதொத்ததாய்க் கொள்ளலாகாது என் பதே. இந்த உண்மை, எழுத்துத் துறை பிரிக்கவொண்ணுத படி பிற துறைகளுடன் இணைந்து, தவருமலும் அவசியமாக வும் சமூக-ஜனநாயகக் கட்சிப் பணியின் ஒரு கூருகிவிட வேண்டுமென்ற கோட்பாட்டை — முதலாளித்துவ வர்க்கத் துக்கும் முதலாளித்துவ ஜனநாயகத்துக்கும் அன்னியமாக வும் விசித்திரமாகவும் இருக்கும் இந்தக் கோட்பாட்டை— கொஞ்சமும் மறுக்கவில்லை. பத்திரிகைகள் பல்வேறு கட்சி நிறுவனங்களுடைய முரசங்களாகிவிட வேண்டும்; இந்தப் பத்திரிகைகளின் எழுத்தாளர்கள் நிச்சயமாய் இந்நிறுவனங் களின் உறுப்பினர்களாகிவிட வேண்டும். பதிப்பகங்களும் புத்தகக் கிடங்குகளும், புத்தகக் கடைகளும் படிப்பறை களும், நூலகங்களும் இவற்றையொத்த நிலையங்களும்— யாவும் கட்சியினுடைய கட்டுப்பாட்டின் கீழ் இருந்தாக வேண்டும். நிறுவன வழியில் ஒழுங்கமைந்த சோஷலிசப் பாட்டாளி வர்க்கம் இந்த வேலை அனைத்தையும் கண்காணிக்க வேண்டும்; அதன் முழுப் பரிமாணத்திலும் அதை மேற்பார் வையிட வேண்டும்; ஜீவ சக்தி வாய்ந்த பாட்டாளி வர்க்க இலட்சியத்தின் உயிர் அருவியை அதனுள், ஆரம்பத்திலிருந்து முடிவு வரை, விதிவிலக்கு ஏதுமின்றி, பாய்ந்து பரவச் செய்ய வேண்டும்; இவ்விதம் அது, எழுதுவது எழுத்தாள ரின் வேலை, படிப்பது வாசகரின் வேலை என்கிற அரை-ஒப்லோ மவ்,[96] அரை-கடைக்காரர் மனப்பான்மையிலான அந்தப் பழைய ருஷ்யக் கோட்பாட்டின் வேர்களை அடியோடு கெல்லி யெறிய வேண்டும்.

ஆசியப் பாணியிலான தணிக்கை முறையாலும் ஐரோப் பிய முதலாளித்துவ வர்க்கத்தாலும் குலைத்துக் கெடுக்கப் பட்டிருக்கும் எழுத்துப் பணியை இவ்வாறு மாற்றியமைப் பது ஒரே அடியில் உடனடியாகவே செய்து முடிக்கப்படக் கூடுமென நாம் ஆலோசனை கூறவில்லை. ஒரே மாதிரியாய் வரையறுக்கப்பட்ட எவ்வகையான ஏற்பாட்டையோ, ஒரு சில ஆணைகளின் மூலம் தீர்வு காண்பதையோ ஆதரித்து வா தாடும் எண்ணம் ஒருபோதும் எமக்கு இல்லை. தயாராய் முன்

கூட்டியே வகுத்தமைக்கப்பட்ட திட்டங்கள் இங்கு சிறிதும் பொருந்தக் கூடியவையல்ல. செய்ய வேண்டியது என்ன வெனில், நமது கட்சி பூராவும், அனைத்து ருஷ்யாவின் அரசியல் உணர்வு படைத்த சமூக-ஜனநாயகப் பாட்டாளி வர்க்கம் பூராவும் இந்தப் புதிய பணியை உணர்ந்து, இதைத் தெளிவாய் வரையறை செய்து கொண்டு, எங்கும் இதை நிறைவேற்ற முற்பட வேண்டும். பண்ணையடிமைத் தணிக்கை முறையின் சிறைக்கூடத்திலிருந்து வெளிப்பட்டு வரும் நாம், முதலாளித்துவ-கடைக்காரருக்கு உரித்தான எழுத்துத் துறை உறவுகளின் கைதிகளாவதற்கு விரும்பவில்லை, கைதிகளாகவும் மாட்டோம். சுதந்திரமான பத்திரிகைகளை —போலீசிடமிருந்து மட்டுமல்ல, மூலதனத்திலிருந்தும், தன்னல முன்னேற்ற நாட்டத்திலிருந்தும், இன்னும் முக்கியமாய் முதலாளித்துவ-அராஜகவாதத் தனிநபர் போக்கிலிருந்தும் விடுபட்ட சுதந்திரமான பத்திரிகைகளை—நிறுவ விரும்புகிறோம், இவ்வாறே நிறுவவும் செய்வோம்.

கடைசியில் கூறப்பட்டது முரணுரையாக, அல்லது வாசகரை அவமதிப்பதாய்த் தோன்றலாம். என்ன இது!—என்று அறிவுத்துறையாளர், சுதந்திரத்தின் ஆர்வமிக்க இந்த ஆதரவாளர் கூச்சலிடக் கூடும். என்ன, எழுத்துப் பணியைப் போன்ற மென்மையான, தனிமனிதத் தன்மையதான ஒரு செயலைக் கூட்டுக் கட்டுப்பாட்டுக்கு உட்படுத்த விரும்புகிறீர்களே! விஞ்ஞானம், தத்துவஞானம், அல்லது அழகியல் பிரச்சினைகளைப் பெரும்பான்மை வாக்குகள் மூலம் தொழிலாளர்கள் தீர்மானிக்க வேண்டும் என்கிறீர்களே! முழுக்க முழுக்க தனிமனிதத் தன்மையதான சித்தாந்தப் பணி முழுக்க முழுக்க சுதந்திரமானதாய் இருக்க வேண்டும் என்பதை மறுக்கிறீர்களே!

கனவான்களே, பதறுதீர்கள்! முதலாவதாக, இங்கு நாம் விவாதிப்பது கட்சி இலக்கியம் குறித்தும், கட்சிக் கட்டுப்பாட்டுக்கு அது கீழ்ப்படிய வேண்டியது குறித்தும். தாம் விரும்புகிறபடி, தடை ஏதுமின்றி, எழுதவும் பேசவும் ஒவ்வொருவருக்கும் உரிமை உண்டு. அதேபோதில், பலரது விருப்பபூர்வமான இணைவாகிய ஒவ்வொரு நிறுவனத்துக்கும்

(கட்சியும் அடங்கலாய்), கட்சியின் பெயரை உபயோகித்துக் கொண்டு கட்சிக்கெதிரான கருத்தோட்டங்களை ஆதரித்து நிற்கும் உறுப்பினர்களை வெளியே தள்ளுவதற்கும் உரிமை உண்டு. பேச்சுச் சுதந்திரமும் பத்திரிகைச் சுதந்திரமும் முழு நிறைவாகவே இருக்க வேண்டும். அதேபோதில் நிறுவனச் சுதந்திரமும் முழுநிறைவாகவே இருக்க வேண்டும். ஆசை தீர நீங்கள் கூச்சல் போடுவதற்கும், பொய் கூறுவதற்கும், எழுதுவதற்கும், பேச்சுச் சுதந்திரத்தின்படி உங்களுக்கு முழு உரிமை அளிக்கக் கடமைப்பட்டிருக்கிறேன். அதே போல, இந்த அல்லது அந்தக் கருத்தோட்டத்தை ஆதரித்து நிற்போருடன் நிறுவன வழியில் இணைவதற்கோ, விலகிக் கொள்வதற்கோ, நிறுவனச் சுதந்திரத்தின்படி எனக்கு நீங்கள் முழு உரிமை அளிக்கக் கடமைப்பட்டிருக்கிறீர்கள். கட்சி என்பது விருப்பபூர்வமான இணைவாகிய நிறுவனமாகும்; கட்சிக்கெதிரான கருத்தோட்டங்களை ஆதரித்துச் செயல்படுவோரை விலக்கித் தன்னைச் சுத்தம் செய்து கொள்ளாவிடில், தவிர்க்க முடியாதபடி இந்த நிறுவனம் முதலில் சித்தாந்த வடிவிலும், பிறகு அமைப்பு வடிவிலும் சிதைவுறவே செய்யும். கட்சிக்கும் கட்சி-எதிர்ப்புக்கும் இடையிலுள்ள எல்லைக் கோட்டை நிர்ணயம் செய்வதற்குக் கட்சியின் வேலைத்திட்டமும், போர்த்தந்திரம் பற்றிய கட்சித் தீர்மானங்களும், கட்சியின் விதிகளும், கடைசியாக, பாட்டாளி வர்க்கத்தின் விருப்பபூர்வமான சர்வதேசக் கூட்டமைப்புகளின் வடிவிலான சர்வதேச சமூக-ஜனநாயகத்தின் அனுபவம் அனைத்தும் உள்ளன. இந்த சர்வதேசச் சமூக-ஜனநாயகமானது, முழு அளவுக்கு முரணில்லாதவை அல்லாத, முற்றிலும் மார்க்ஸியத் தன்மை உடைத்திராத, முழுமையாய்ச் சரியானவை என்று சொல்ல முடியாத தனிப்பட்ட கூறுகளையும் போக்குகளையும் தனது கட்சிகளுக்குள் இடையறாது கொண்டு வந்து சேர்த்துக் கொள்கிறது; அதேபோது இடையறாது அவ்வப்பொழுது தனது அணிகளைச் ''சுத்திகரிப்பு'' செய்து கொள்கிறது. முதலாளித்துவ ''விமர்சன சுதந்திரத்தின்'' ஆதரவாளர்களே, கட்சியின் உள்ளே, நாங்களும் இப்படித் தான் செய்து கொள்வோம். இப்பொழுது நாங்கள் திடுதிப்

பென திரளான மக்களின் கட்சியாகி வருகின்றேம், திடுமென பகிரங்க நிறுவனமாய் மாறிச் செல்கின்றேம்; முரண் நிலையான (மார்க்ஸியக் கண்ணேட்டத்திலிருந்து) பலரும் எங்களுடன் வந்துசேர்ந்து கொள்வது தவிர்க்க முடியாததாகும்; கிறித்துவர்கள் சிலருங்கூட, மாயவாதிகள் சிலருங்கூட எங்களுடன் வந்து சேர்ந்து கொள்ளலாம். எங்கள் வயிறுகள் ஆரோக்கியமானவை, நாங்கள் மலைகளை ஒத்த உறுதி வாய்ந்த மார்க்சியவாதிகள். முரண்பாடுடைய இக்கூறுகளை எங்கள் வயிறுகள் செரித்துக் கொள்ளக் கூடியவையே. கட்சியின் உள்ளேயான இந்தச் சிந்தனைச் சுதந்திரமும் விமர்சனச் சுதந்திரமும், கட்சிகள் எனப்படும் அந்த விருப்பபூர்வமான நிறுவனங்களில் மக்களை ஒழுங்கமைவு பெறச் செய்வதற்குரிய சுதந்திரம் குறித்து ஒருபோதும் எங்களை மறந்துவிடச் செய்ய மாட்டா.

இரண்டாவதாக, முதலாளித்துவத் தனிநபர் மனப்பான்மையோராகிய உங்களுக்கு இதை நாங்கள் சொல்லியாக வேண்டும்: முழுமுதலான சுதந்திரம் என்பதாய் நீங்கள் பேசுவது முழுக்க முழுக்க கபடமான புரட்டே ஆகும். பணத்தின் வல்லமையை அடிப்படையாய்க் கொண்ட ஒரு சமுதாயத்தில், உழைக்கும் திரளான மக்கள் வறுமையில் வதைய ஒரு சில செல்வந்தர்கள் புல்லுருவிகளாய் வாழும் ஒரு சமுதாயத்தில் மெய்யான, பயனுள்ள "சுதந்திரம்" இருக்கவே முடியாது. திருவாளர் எழுத்தாளரே, உங்களுடைய முதலாளித்துவப் பதிப்பகத்தார் சம்பந்தமாய் நீங்கள் சுதந்திரமானவராகவா இருக்கிறீர்கள்? உங்களுடைய முதலாளித்துவ ரசிகர் பெருமக்கள் சம்பந்தமாய் — சட்டங்களிலும்* ஓவியங்களிலும் ஆபாசத்தையும், "புனித" நாடகக் கலைக்கு "அனுபந்தமாய்" விபசாரத்தையும் அளிக்குமாறு உங்களைக் கோரும் இவர்கள் சம்பந்தமாய்—சுதந்திரமானவராகவா இருக்கிறீர்கள்? முழுமுதலான இந்தச்சுதந்திரம் முதலாளித்துவ

* மூலத்தில் ஏற்பட்ட அச்சுப்பிழையாகவே இருக்க வேண்டும் இது. 'ரம்காஹ்' (சட்டங்கள்) என்பதாய் இருப்பது, சந்தர்ப்பத்தைக் கொண்டு பார்க்கையில் 'ரமானஹ்' (நாவல்கள்) என்பதாகவே இருக்க வேண்டும்.—(ப-ர்.)

அல்லது அராஜகவாதத் தொடராகும் (உலகக் கண்ணோட்டம் என்ற முறையில் அராஜகவாதமானது உட்புறம் வெளிப்புறமாய் மாற்றப்பட்ட முதலாளித்துவத் தத்துவ ஞானமே ஆகும்). யாராலும் சமுதாயத்தில் இருந்து கொண்டு, அதேபோதில் சமுதாயத்திலிருந்து சுதந்திரமாயும் இருப்பது முடியாத காரியம். முதலாளித்துவ எழுத்தாளர் அல்லது கலைஞர் அல்லது நடிகையின் சுதந்திரம் எல்லாம், பண மூட்டைக்கு, லஞ்ச ஊழலுக்கு, விபசாரத்துக்குக் கீழ்ப்பட்டியும் முகமூடி பூண்ட (அல்லது கபடமாய் முகமூடி இடப்பட்ட) சார்புநிலையே அன்றி வேறல்ல.

சோஷலிஸ்டுகளாகிய நாங்கள் இந்தக் கபடத்தை அம்பலம் செய்கிறோம், பொய்யான பெயர்ச் சீட்டைக் கிழித்தெறிகிறோம் —நாங்கள் இதைச் செய்வது வர்க்கச் சார்பில்லாத கலை, இலக்கியத்தை வந்தடைவதற்காக அல்ல (வர்க்கங்கள் இல்லாத சோஷலிசச் சமுதாயத்தில் மட்டுமே இது சாத்தியம்); உண்மையில் முதலாளித்துவ வர்க்கத்துடன் பிணைப்பு கொண்டு, சுதந்திரமானதாய்க் கபட வேடம் போடும் இந்த இலக்கியத்தை, **பகிரங்கமாய்ப்** பாட்டாளி வர்க்கத்துடன் பிணைப்பு கொண்டு மெய்யாகவே சுதந்திரமானதாய் இருக்கும் இலக்கியத்திலிருந்து வேறுபடுத்திக் காட்டுவதற்காக இதைச் செய்கிறோம்.

பின்னது சுதந்திரமான இலக்கியமாய் இருக்கும், ஏனெனில் சோஷலிசம் என்னும் கருத்தும் உழைப்பாளி மக்களுடனை ஒத்துணர்வும் — பேராசையோ, தன்னல முன்னேற்ற நாட்டமோ அல்ல — இதன் அணி வரிசைகளுடன் மேலும் மேலும் புதிய சக்திகளைக் கொண்டுவந்து சேர்க்கும். இது சுதந்திரமான இலக்கியமாய் இருக்கும், ஏனெனில் இது நாட்டின் அரும்பும் மலரும் நாட்டின் பலமும் எதிர்காலமும் ஆகிய லட்சோப லட்சமாகிய, கோடானு கோடியாகிய உழைப்பாளி மக்களுக்குப் பணி புரியும் — சலிப்புற்றுவிட்ட நாயகிகளுக்கு அல்ல, ஊதிப் பருத்துச் சீரழிந்து வதையும் சோர்வுற்றுவிட்ட ''மேல் மட்டத்துப் பத்தாயிரத்துக்கு'' அல்ல. இது சுதந்திரமான இலக்கியமாய்த் திகழ்ந்து, சோஷலிசப் பாட்டாளி வர்க்கத்தின் அனுபவத்தையும் அதன் உயிர்

ஆற்றல் வாய்ந்த பணியையும் கொண்டு, மனிதகுலத்தின் புரட்சி சிந்தனையின் உச்சி முடியாய் விளங்குவதை மேலும் செழுமைப்படுத்தும்; கடந்த காலத்தின் அனுபவத்துக்கும் (சோஷலிசத்தின் வளர்ச்சியை, அதன் தொடக்கக் கால, கற்பனுவாத வடிவங்களிலிருந்தான இந்த வளர்ச்சியை நிறைவு பெறச் செய்யும் விஞ்ஞான சோஷலிசத்துக்கும்), நிகழ் கால அனுபவத்துக்கும் (தொழிலாளித் தோழர்களது தற்போதைய போராட்டத்துக்கும்) இடையில் நிரந்தரமான செயற்பாடு ஏற்படச் செய்யும்.

ஆகவே, தோழர்களே, வேலையைத் தொடங்குவோம்! ஒரு புதிய, கடினமான பணி நம்மை எதிர்நோக்குகிறது. ஆனால் இப்பணி மாண்பு மிக்கது, நன்றிக்குரியது — சமூக-ஜனநாயகத் தொழிலாளி வர்க்க இயக்கத்துடன் இரண்டறக் கலந்த விரிவான, மிகப் பல வடிவங்களிலுமான, விதம் விதமான, பல்வேறுபட்டதான எழுத்துத் துறையைத் ஒழுங்கமைத்திடும் பணி இது. சமூக-ஜனநாயக இலக்கியம் அனைத்தும், கட்சி இலக்கியமாகிவிட வேண்டும். ஒவ்வொரு செய்தியேடும் சஞ்சிகையும் பதிப்பகமும் இன்ன பிறவும் உடனடியாகத் தனது பணியினைத் திருத்திப் புத்தமைத்துக் கொள்ளமுற்பட்டாக வேண்டும், ஏதேனும் ஒரு வடிவில் இந்த அல்லது அந்தக் கட்சி நிறுவனத்துடன் அது ஒருசேர இணைந்துவிடும்படியான ஒரு நிலைக்கு இந்தப் புத்தமைப்பு இட்டுச் சென்றாக வேண்டும்.அப்பொழுதுதான் ''சமூக-ஜனநாயக'' இலக்கியம் மெய்யாகவே இப்பெயரைச் சூட்டிக் கொள்வதற்குரிய தகுதியைப் பெற முடியும்; அப்பொழுதுதான் அது தனது கடமையை நிறைவேற்றக் கூடியதாகி, முதலாளித்துவச் சமுதாயத்தின் கட்டுக்கோப்பிற்குள் இருக்கும் போதுங்கூட முதலாளித்துவ அடிமை நிலையிலிருந்து உடைத்துக் கொண்டு வெளியே வந்து, மெய்யாகவே முன்னேறிய, முழுக்க முழுக்க புரட்சிகரமான வர்க்கத்தோடு இரண்டறக் கலக்க முடியும்.

நோவயா ஷீஸ்ன், இதழ் 12,<br>1905 நவம்பர் 13<br>கையொப்பம்: நி. லெனின்

நூல் திரட்டு,<br>தொகுதி 12,<br>பக்கங்கள் 99-105

## ஐரோப்பிய ஐக்கிய நாடுகள் வேண்டும் எனும் முழக்கத்தைப் பற்றி

நம் கட்சியின் வெளிநாட்டுக் குழுக்களின் மாநாடு[97] ஒன்று ''ஐரோப்பிய ஐக்கிய நாடுகள்'' எனும் முழக்கம் பற்றிய பிரச்சினையை—அதன் பொருளாதார அம்சத்தைப் பற்றிப் பத்திரிகைகளில் விவாதம் நடக்கும் வரை—தள்ளிப் போடத் தீர்மானித்துவிட்டது என்று சொத்ஸியால்-டெமக்ராட்[98] பத்திரிகையின் இதழ் 40ல் அறிவித்தோம்.

நம் மாநாட்டில் இந்தப் பிரச்சினையைப் பற்றிய விவாதம் முற்றிலும் ஒருசார்பான அரசியல் தன்மையே பெற்றிருந்தது. மத்தியக் குழுவின் அறிக்கை இந்த முழக்கம் முற்றிலும் அரசியல் வகைப்பட்டது என்று வரையறுத்தது (''உடனடி அரசியல் முழக்கம்...'' என்று அதில் சொல்லப்படுகிறது) ஒருக்கால் இதற்கு ஓரளவுக்குக் காரணமாக இருக்கலாம். அது குடியரசு வகைப்பட்ட ஐரோப்பிய ஐக்கிய நாடுகள் எனும் முழக்கத்தை முன்வைத்தது மட்டுமல்ல; ''ஜெர்மனி, ஆஸ்திரியா, ருஷ்யா ஆகிய நாடுகளின் முடியரசுகளைப் புரட்சி மூலமாகத் தூக்கியெறிவது என்று இல்லாத பொழுது'' இந்த முழக்கம் பொருளற்றது, பொய்யானது என்றும் குறிப்பாக வலியுறுத்தியது.

இந்த முழக்கத்தின் அரசியல் மதிப்பீட்டின் வரம்புகளுக்குள் நிறுத்தி இந்தப் பிரச்சினையை முன்வைப்பதை ஆட்சேபிப்பது—அதாவது, அது சோஷலிஸப் புரட்சி முழக்கத்தை மறைக்கிறது, பலவீனப்படுத்துகிறது என்றெல்லாம் விவாதிப்பது—முற்றிலும் தவறாகும். உண்மையான ஜனநாயகத் தன்மை பெற்ற அரசியல் மாற்றங்கள், குறிப்பாக அரசியல்

புரட்சிகள், எப்போதும் எந்த நிலைமைகளிலும் எவ்வழக்கிலும் சோஷலிஸப் புரட்சி முழக்கத்தை மறைக்கவோ பலவீனப்படுத்தவோ முடியாது. மாருக, அவை எப்போதும் அந்த சோஷலிஸப் புரட்சியை மேலும் நெருங்கக் கொண்டு வரும், அதன் அடிப்படையை விரிவுபடுத்தும், சோஷலிஸப் போராட்டத்தில் புதிது புதிதாகச் சிறுமுதலாளித்துவப் பகுதிகளையும் அரைப்பாட்டாளி வர்க்க மக்கள் திரள்களையும் இழுத்துவிடும். மறு புறத்தில், சோஷலிஸப் புரட்சியின் வழிப்போக்கிலே அரசியல் புரட்சிகள் தவிர்க்கமுடியாதவையாகும். சோஷலிஸப் புரட்சியைத் தனியொரு செய்கையாகக் கருதக் கூடாது. கொந்தளிப்பான அரசியல், பொருளாதார அதிர்ச்சிகளும் மிகவும் தீவிரமான வர்க்கப் போராட்டமும் உள்நாட்டுப் போரும் புரட்சிகளும் எதிர்ப்புரட்சிகளும் கொண்ட காலப்பகுதியாகவே அதைக் கருத வேண்டும்.

குடியரசு வகைப்பட்ட ஐரோப்பிய ஐக்கிய நாடுகள் எனும் முழக்கம் — ருஷ்ய முடியரசைத் தலைமையாகக் கொண்ட மிகவும் பிற்போக்கான ஐரோப்பிய மூன்று முடியரசுகளைப் புரட்சி மூலமாகத் தூக்கியெறிவதோடு சேர்ந்து வருமேயாஞல்—அரசியல் முழக்கம் என்கிற வகையில் அது முற்றிலும் வெல்லற்கரியதாகும். எனினும், அதே நேரத்தில் அதன் பொருளாதார உள்ளடக்கம், குறிபொருள் பற்றிய மிக முக்கியமான பிரச்சினை இருந்துவரத்தான் செய்கிறது. ஏகாதிபத்தியத்தின் பொருளாதார நிலைமைகளின் நிலையிலிருந்து பார்க்கும் போது—அதாவது, மூலதன ஏற்றுமதி, மற்றும் காலனிகள் வைத்துக் கொண்டுள்ள ''நாகரிகமான'' ''முன்னேறிய'' அரசுகள் உலகத்தைப் பங்கு போட்டுக் கொண்டிருப்பது ஆகியவற்றின் நிலையிலிருந்து பார்க்கும் போது — ஐரோப்பிய ஐக்கிய நாடுகள் எனப்பட்டது முதலாளித்துவத்தின்கீழ் சாத்தியமற்றது அல்லது பிற்போக்கானது.

மூலதனம் சர்வதேசமயமாகிவிட்டது, ஏகபோகமயமாகிவிட்டது. ஒரு சில பெரும் அரசுகள் — அதாவது, தேசங்களைப் பெருமளவில் கொள்ளையடித்து ஒடுக்கி வருவதில் வெற்றிபெற்றுவரும் அரசுகள்—உலகத்தைப் பங்குபோட்டுக்

கொண்டுள்ளன. ஐரோப்பாவின் நான்கு பெரும் அரசுகளான பிரிட்டன், பிரான்ஸ், ருஷ்யா, ஜெர்மனி ஆகியவற்றின் மொத்த மக்கள்தொகை 25 கோடியிலிருந்து 30 கோடி வரை ஆகும். அவற்றின் மொத்த நிலப்பரப்பு 70 லட்சம் சதுர கிலோமீட்டர் ஆகும். அவற்றின் வசமுள்ள காலனிகளின் மொத்த மக்கள்தொகை அநேகமாக 50 கோடி (49 கோடியே 45 லட்சம்), மொத்த நிலப்பரப்பு 6 கோடியே 46 லட்சம் சதுர கிலோமீட்டர்—அதாவது, அநேகமாக உலகத்தின் பரப்பில் பாதியாகும் (ஆர்க்டிக், அன்டார்க்டிக் பிரதேசங்கள் நீங்கலாக 13 கோடியே 30 லட்சம் சதுர கிலோமீட்டர்). இத்துடன் சீனு, துருக்கி, பாரசீகம் ஆகிய மூன்று ஆசிய நாடுகளையும் சேர்த்துக் கொள்ளுங்கள். ''விடுதலைப்'' போர் நடத்தி வருகிறதாகச் சொல்லும் ஜப்பான், ருஷ்யா, பிரிட்டன், பிரான்ஸ் என்கிற கொலைகாரர்கள் அந்த மூன்று ஆசிய நாடுகளை இன்று கொஞ்சங்கொஞ்சமாகத் துண்டாடி வருகிறுர்கள். அந்த மூன்று ஆசிய நாடுகளை அரைக்காலனிகள் என்று சொல்லலாம் (உண்மையிலே இன்று அவை 90 சதவீதத்துக்குக் காலனிகளே). அவற்றின் மொத்த மக்கள் தொகை 36 கோடி, மொத்த நிலப்பரப்பு 1 கோடியே 45 லட்சம் சதுர கிலோமீட்டர் (அநேகமாக ஐரோப்பாவைப் போல் ஒன்றரை மடங்கு பரப்புள்ளது).

மேலும், பிரிட்டனும் பிரான்ஸும் ஜெர்மனியும் வெளிநாடுகளில் 7,000 கோடி ரூபிளுக்குக் குறையாமல் முதலீடு செய்துள்ளன. இந்த வள்ளிசான தொகையிலிருந்து ''நியாயமான'' இலாபமாக வருடந்தோறும் 300 கோடி ரூபிளுக்கு அதிகமாகப் பெற்று வருகின்றன. இந்த வேலையைச் செய்து வரும் கோடீஸ்வரர்களின் தேசியக் கமிட்டிகளுக்கு அரசாங்கங்கள் என்று பெயராம்; அவற்றிடம் இராணுவப்படைகளும் கப்பற்படைகளும் உள்ளன; அவை அந்தக் கோடீஸ்வரர்களின் பிள்ளைகளுக்கும் உடன்பிறப்புக்களுக்கும் காலனிகளிலும் அரைக்காலனிகளிலும் வைஸ்ராய் என்றும், கான்ஸல் என்றும், தூதர் என்றும், எல்லா வகைப்பட்ட அதிகாரிகள் என்றும், பாதிரிகள் என்றும் இரத்தம் உறிஞ்சும் பிற அட்டைகளுக்கும் வேலை போட்டுக் கொடுக்கின்றன.

இப்படித்தான் முதலாளித்துவத்தின் உச்ச வளர்ச்சி சகாப்தத்தில் ஒரு சில பெரும் அரசுகள் உலக மக்கள் தொகையில் சுமார் 100 கோடி மக்களைக் கொள்ளையடிப்பது ஒழுங்கமைக்கப்பட்டுள்ளது. வேறெந்த ஒழுங்கமைப்பும் முதலாளித்துவத்தின்கீழ் சாத்தியமில்லை. காலனிகளையும் ''செல்வாக்கு மண்டலங்களையும்'' மூலதன ஏற்றுமதியை யும் கைவிடுவதா? அது சாத்தியம் என்று நினைக்கிறவன், ஞாயிறு தோறும் பணக்காரர்களிடம் கிறித்துவ மதத்தின் உயரிய கோட்பாடுகளைப் பற்றிப் பிரச்சாரம் செய்து லட்ச லட்சமாக இல்லாவிட்டாலும் சில நூறுகளையாவது ஏழை களுக்குக் கொடுங்கள் என்று உபதேசிக்கும் பாதிரியின் தரத் துக்குத் தாழ்ந்துவிடுகிறவன் என்றே பொருள்.

முதலாளித்துவத்தின்கீழ் ஐரோப்பிய ஐக்கிய நாடுகள் என்பது காலனிகளைப் பங்குபோடுவதற்குரிய உடன்பாடு என்பதற்குச் சமம். ஆனல், முதலாளித்துவத்தின்கீழ் பலத் தைத் தவிர பங்குபோடுவதற்கான வேறெந்த அடிப்படை யும் கோட்பாடும் சாத்தியமில்லை. ஒரு கோடீஸ்வரன் ஒரு முதலாளித்துவ நாட்டின்''தேசிய வருமானத்தை''''போட்ட மூலதனத்துக்குத்'' தகவுப்பொருத்தமாக அல்லாமல் (போ னஸையும் சேர்த்துக் கொள்ளுங்கள், அப்போதுதான் மிகப் பெரிய மூலதனம் தன்னுடைய பங்குக்கு மேலாகவே பெறக் கூடும்) யாருடனும் பங்கிட்டுக் கொள்ள முடியாது. முத லாளித்துவம் என்பது உற்பத்திச் சாதனங்களில் தனியுடை மையாகும், உற்பத்தியில் அராஜகமாகும். அப்படிப்பட்ட அடிப்படையில் வருமானத்தை ''நியாயமாகப்'' பிரித்துக் கொடுப்பதைப் பற்றிப் பேசுவது புரூதோன்வாதமாகும், முட்டாள்தனமான சிறுமுதலாளித்துவ நினைப்பாகும். ''பலத் துக்குத் தகவுப்பொருத்தமாயல்லாமல்'' வேறு விதத்தில் பங்கீடு செய்து கொள்ள முடியாது; மற்றும் பொருளாதார வளர்ச்சியின் போக்கில் பலம் மாறுகிறது. 1871ஐத் தொ டர்ந்து ஜெர்மனியின் பலப் பெருக்கத்தின் விகிதம் பிரான் ஸைவிட, பிரிட்டனைவிட மூன்று நான்கு மடங்கு வேகமாக இருந்தது, ஜப்பானுடையது ருஷ்யாவைவிட சுமார் பத்து மடங்கு வேகமாக இருந்தது. ஒரு முதலாளித்துவ அரசின்

உண்மையான பலத்தைச் சோதிப்பதற்குப் போர் தவிர வேறு வழி ஒன்றுங்கிடையாது, இருக்கவும் முடியாது. போர் தனியுடைமையின் அடிப்படைகளுடன் முரண்படவில்லை— மாறாக, அது அந்த அடிப்படைகளின் நேரடியான, தவிர்க்க முடியாத விளைவேயாகும். முதலாளித்துவத்தின் கீழ் தனித் தனி தொழிலமைப்புகளின், தனித்தனி அரசுகளின் சீரான பொருளாதார வளர்ச்சி என்பது சாத்தியமில்லை. முதலாளித் துவத்தின்கீழ், தொழிலில் நெருக்கடிகளும் அரசியலில் போர் களும் எனும் வழியிலல்லாமல் காலத்துக்குக் காலம் கலைக் கப்படும் சமநிலையை மீண்டும் நிலைநிறுத்துவதற்கு வேறு வழி கிடையாது.

உண்மைதான், முதலாளிகளிடையே, அரசுகளிடையே தற்காலிகமான உடன்பாடுகள் சாத்தியமே. இந்த அர்த்தத் தில் ஐரோப்பிய முதலாளிகளிடையே உடன்பாடு என்கிற வகையில் ஐரோப்பிய ஐக்கிய நாடுகள் என்பது சாத்திய மே.... ஆனால் எந்த நோக்கத்திற்காக? ஐரோப்பாவில் சோஷலிஸத்தைக் கூட்டாகச் சேர்ந்து நசுக்குவதற்காக, ஜப்பானுக்கும் அமெரிக்காவுக்கும் எதிராகக் கூட்டாகச் சேர்ந்து காலனிக் கொள்ளையைக் காப்பாற்றிக் கொள்வதற் காக. தற்போதைய காலனிப் பிரிவினையில் ஜப்பானும் அமெ ரிக்காவும் தங்களுக்குரிய பங்கு கிடைக்காதபடி வஞ்சிக்கப் பட்டுள்ளன; இப்போது கிழடுதட்டி வரும் பிற்பட்ட நிலையில் உள்ள முடியரசுவாத ஐரோப்பாவைவிட சென்ற ஐம்பது ஆண்டுகளில் அமெரிக்கா, ஜப்பான் ஆகியவற்றின் பலம் அளவிடற்கரிய வேகத்துடன் வளர்ந்திருக்கிறது. அமெரிக் காவுடன் ஒப்புநோக்கும் போது மொத்தத்தில் ஐரோப்பா பொருளாதாரத் தேக்கத்தையே குறிக்கிறது. தற்காலத் திய பொருளாதார அடிப்படையில், அதாவது முதலாளித்து வத்தின்கீழ், ஐரோப்பிய ஐக்கிய நாடுகள் என்பது மேலும் விரைவாக நடைபெறும்அமெரிக்காவின் வளர்ச்சியைத் தடுத்து நிறுத்துவதற்குப் பிற்போக்குச் சக்திகள் ஏற்படுத்திக் கொள் ளும் அமைப்பைத்தான் குறிக்கும். ஜனநாயகம் சோஷலிஸம் எனும் இலட்சியங்கள் ஐரோப்பாவுடன் மட்டும் இணைத்துப் பேசி வந்த காலம் மலையேறிவிட்டது.

உலக ஐக்கிய நாடுகள் (ஐரோப்பிய நாடுகள் மட்டுமல்ல) என்பதுதான்—கம்யூனிஸத்தின் முழுமையான வெற்றியானது ஜனநாயக வகைப்பட்டது உள்ளிட்ட அரசு அனைத்தும் முற்றாக மறைந்துவிடச் செய்யும் காலம் வரும் வரை—நாம் சோஷலிஸத்துடன் இணைத்துப் பேசும் தேசங்களின் ஒருமைப்பாட்டுக்கும் சுதந்தரத்துக்கும் வாய்த்த அரசு வடிவமாகும். இருந்தாலும், ஒரு தனி முழக்கம் என்கிற வகையில் உலக ஐக்கிய நாடுகள் என்பது சரியாக இராது. முதற் காரணம், அது சோஷலிஸத்துடன் ஒன்றுகலந்துவிடுகிறது; இரண்டாவது காரணம், அம்முழக்கம் ஒரு தனி நாட்டில் சோஷலிஸம் வெற்றி பெறுவது சாத்தியமில்லை எனும் தவறான கருத்தை உண்டாக்கிவிடலாம், மேலும் அப்படிப் பட்ட நாட்டுக்கும் மற்ற நாடுகளுக்கும் இடையேயுள்ள உறவுகளைப் பற்றித் தவறான கருத்துக்களையும் உண்டாக்கி விடலாம்.

சீரற்ற பொருளாதார, அரசியல் வளர்ச்சி முதலாளித்துவத்தின் கட்டாய விதியாகும். எனவே, முதலில் சில முதலாளித்துவ நாடுகளிலோ ஒரு தனி நாட்டிலோ சோஷலிஸம் வெற்றி பெறுவது சாத்தியமே. அந்த நாட்டின் வெற்றி வாகை சூடிய பாட்டாளி வர்க்கம் முதலாளிகளின் தனியுடைமையைப் பறித்துவிட்டுத் தங்களுடைய சொந்த சோஷலிஸ உற்பத்தியை ஒழுங்கமைத்தபின் பாக்கியிருக்கும் முதலாளித்துவ உலகத்துக்கு எதிரே எழுந்து நிற்கும்—மற்ற நாடுகளிலுள்ள ஒடுக்கப்பட்ட வர்க்கங்களைத் தன்னுடைய இலட்சியத்தின்பால் ஈர்த்து வரும், அந்நாடுகளில் முதலாளிகளுக்கு எதிராகப் புரட்சியெழுச்சிகளைக் கிளப்பிவிடும், தேவைப் பட்டால் சுரண்டும் வர்க்கங்களையும் அவர்களின் அரசுகளையும் எதிர்த்து ஆயுத பலத்தையும் பயன்படுத்தும். முதலாளி வர்க்கத்தைத் தூக்கியெறிவதில் பாட்டாளி வர்க்கம் வெற்றி பெற்றுள்ள சமுதாயத்தின் அரசியல் வடிவம் ஜனநாயகக் குடியரசாக இருக்கும்; அது அந்தந்த நாட்டின் அல்லது நாடுகளின் பாட்டாளி வர்க்கச் சக்திகளை இன்னும் சோஷலிஸத்தின் பக்கம் வராமலிருக்கும் அரசுகளுக்கு எதிராக மேன்மேலும் ஒன்றுகுவித்து வரும். ஒடுக்கப்பட்ட வர்க்கத்தின்,

பாட்டாளி வர்க்கத்தின் சர்வாதிகாரம் இல்லாமல் வர்க்கங்களை ஒழிப்பது சாத்தியமில்லை. பிற்பட்ட அரசுகளை எதிர்த்து சோஷலிஸக் குடியரசுகள் ஏறக்குறைய நீண்ட, விடாப்பிடியான போராட்டம் நடத்தாமல் சோஷலிஸத்தில் சுதந்தரமாக நாடுகள் ஒன்றுபடுவது சாத்தியமில்லை.

இக்காரணங்களுக்காகத்தான், ருஷ்யாவின் சமூக-ஜனநாயகத் தொழிலாளர் கட்சியின் வெளிநாட்டுக் குழுக்களின் மாநாட்டில் திரும்பத் திரும்ப விவாதித்த பிறகும், அந்த மாநாட்டைத் தொடர்ந்தும் ஐரோப்பிய ஐக்கிய நாடுகள் வேண்டும் என்னும் முழக்கம் தவறு என்று மத்தியப் பத்திரிகையின் ஆசிரியர்கள் முடிவு செய்துள்ளனர்.

சொத்ஸியால்-டெமக்ராட், இதழ் 44,
1915 ஆகஸ்டு 23

நூல் திரட்டு,
தொகுதி 26,
பக்கங்கள் 351-55

# சோஷலிஸப் புரட்சியும் தேசங்களின்* சுயநிர்ணய உரிமையும் (ஆய்வுரைகள்)

## 1. ஏகாதிபத்தியமும் சோஷலிஸமும் ஒடுக்கப்பட்ட தேசங்களின் விடுதலையும்

ஏகாதிபத்தியம் என்பது முதலாளித்துவ வளர்ச்சியின் உச்சக் கட்டம். மிக முன்னேறிய நாடுகளில் மூலதனமானது தேசிய அரசுகளின் எல்லைகளுக்கு அப்பாலும் விரிந்து, போட்டிக்குப் பதிலாக ஏகபோகத்தை நாட்டி, சோஷலிஸத்தை அடைவதற்கான புறநிலை முதனிலைகள் அனைத்தையும்

* மார்க்ஸியத் தத்துவத்தில் தேசம் (nation) என்பது நிலப் பரப்பு, பொருளாதார உறவுகள், மொழி, கலாசாரம், மனப் பாங்கு இவற்றில் காணும் சில தனித்தன்மைகள் ஆகியவற்றின் அடிப்படையில் மக்களிடையே வரலாற்று வழியில் உருவாகிய ஒற்றுமையைக் குறிக்கிறது. முதலாளித்துவப் பொருளாதாரத்துக்குரிய உறவுகள் உருவாகிய போது தேசிய இனத்தை (nationality) காட்டிலும் மேலான சமூக-வரலாற்று வழிப்பட்டதாகிய தேசம் உருவாகி வளர்கிறது. மனித இனம் (race), குலம் (tribe), மதம், அரசு ஆகியவற்றிலிருந்து தேசத்தை வேறுபடுத்திப் புரிந்து கொள்ள வேண்டும்.

தேசங்கள் பலவழிகளில் உருப்பெறுகின்றன. ஐரோப்பாவில் ஏற்கெனவே நிலவிய பெருந் தேசிய இனங்களின் அடிப்படையில் தேசங்கள் தோன்றின. ஒருசில சூழ்நிலைகள் முழுவளர்ச்சி பெறாத போது தேசங்கள் உண்டாகின்றன. எடுத்துக்காட்டாக, ஆசியாவிலும் ஆப்பிரிக்காவிலும், விடுதலைப் போராட்டக் காலத்திலும், குறிப்பாக விடுதலை அடைந்த பின்னரும் தேசங்கள் உருவாகும் நிகழ்ச்சிப் போக்கு நடைபெறுகிறது. தேசங்கள் உண்டாதல் எல்லாத் தேசிய இனங்களுக்குரிய தவிர்க்கவொண்ணா ஒரு விதியன்று, எண்ணிக்கையில் குறைவான தேசிய இனங்கள், ஏற்கெனவே நிலவி வரும் பெருந் தேசங்களுடன் ஒன்றிணைதல் அடிக்கடி

தோற்றுவித்திருக்கிறது. ஆகவே மேற்கு ஐரோப்பாவிலும் அமெரிக்க ஐக்கிய நாடுகளிலும் முதலாளித்துவ அரசாங் கங்களைக் கவிழ்த்து, முதலாளி வர்க்கத்தின் உடைமைகளைப் பறிமுதல் செய்வதற்கான பாட்டாளி வர்க்கப் புரட்சிப் போராட்டம் இன்றைய நிகழ்ச்சி நிரலில் இடம்பெற்றுள் ளது. வர்க்க முரண்பாடுகளை மிகப் பெரிய அளவில் தீவிரப் படுத்துவது மூலமாகவும், டிரஸ்டுகள், உயர்வான வாழ்க் கைச் செலவு ஆகியவற்றால் பொருளாதார துறையிலும், இராணுவ ஆதிக்கம் வளர்வது, முன்னைவிட அடிக்கடி நிகழும் போர்கள்,முன்னிலும் அதிக பலம் வாய்ந்த பிற்போக்குச் சக்தி கள், தேசிய ஒடுக்கல் முறையையும் காலனிக் கொள்ளை யையும் மேலும் வலுப்படுத்தி விரிவுபடுத்துவது ஆகியவற் றால் அரசியல் துறையிலும் ஒருங்கே பொதுமக்களுடைய வாழ்க்கை நிலைமைகளை மோசமாக்குவதின் மூலமாகவும் ஏகா திபத்தியம்இப்போராட்டத்தை நடத்தும்படி பொதுமக்களைக் கட்டாயப்படுத்துகிறது. வெற்றி பெற்ற சோஷலிஸம் முழு மையான ஜனநாயகத்தைக் கட்டாயம் ஏற்படுத்த வேண் டும்; ஆகவே தேசங்களிடையில் முழுச் சமத்துவத்தை ஏற் படுத்துவதோடு நில்லாமல் ஒடுக்கப்பட்ட தேசங்களின் சுய நிர்ணய உரிமை, அதாவது தடையேதுமில்லாமல் சுதந்தி ரமாக அரசியல் வழியில் பிரியும் உரிமை நிலவும்படியும் செய்ய வேண்டும். அடிமைப்பட்ட தேசங்களை விடுதலை

---

நடைபெறும் ஒரு நிகழ்ச்சியாகும். சோஷலிஸப் புரட்சி, முத லாளித்துவத் தேசங்களை சோஷலிஸத் தேசங்களாகப் புனர மைப்பு செய்வதற்கான நிலைமைகளையும் அடித்தளத்தையும் தோற்றுவிக்கிறது. ஒன்றைவிட்டு ஒன்று பிரிவது அல்ல, ஒன் றுடன் ஒன்று இணைதலே சோஷலிஸத் தேசங்களின் அடிப் படைக் கூறு. தேசியத் தனித்தன்மைகளையும் வேறுபாடுகளை யும் குறைத்து மதிப்பிடுவதோ, மிகைப்படுத்தி மதிப்பிடு வதோ எவ்வகையிலும் கூடாது, இவை மறையும் முற்போக் கான நிகழ்ச்சிப்போக்கிற்கு எவ்விதத்திலும் முட்டுக்கட்டை போடக் கூடாது என்றும், அதேபொழுதில் இந்நிகழ்ச்சிப் போக்கைச் செயற்கையாகவே முடுக்கிவிடவும் கூடாது என்றும் சோவியத் யூனியன் கம்யூனிஸ்டுக் கட்சியின் வேலைத் திட்டம் வலியுறுத்துகிறது.—ப-ர்.

செய்வோம் என்றும், அவைகளுடன் சுதந்திரமான, ஐக்கியத்தின் அடிப்படையில்—சுதந்திரமான ஐக்கியம் என்ற சொல் பிரியும் உரிமையில்லாவிடில் பொய்யானது—உறவுகளை அமைத்துக் கொள்வோம் என்றும் தற்போது மட்டுமின்றி, புரட்சியின் போதும் புரட்சி வெற்றிபெற்ற பின்னரும் தம் செயல்களனைத்திலும் நிரூபிக்காத சோஷலிஸ்டுக் கட்சிகள் சோஷலிஸத்துக்குத் துரோகம் செய்பவை ஆகும்.

ஜனநாயகம் என்பதும் அரசின் ஒருவித வடிவம்தான். அரசு மறையும் பொழுது இதுவும் மறைந்து போகத்தான் வேண்டும். ஆனால் இறுதி வெற்றி பெற்ற, திடமாக அமைக்கப்பட்ட சோஷலிஸத்திலிருந்து முழுநிறைவான கம்யூனிஸத்துக்கு மாற்றம் நிகழும் பொழுதுதான் இது நடைபெறும்.

## 2. சோஷலிஸப் புரட்சியும் ஜனநாயகத்துக்கான போராட்டமும்

சோஷலிஸப் புரட்சி என்பது ஒரே ஒரு தனிச்செயல் அல்ல; ஒரு முனையிலான ஒரே ஒரு தனி போரும் அல்ல; கூர்மையான வர்க்கச் சச்சரவுகள் கொண்ட ஒரு சகாப்தம் அது; எல்லா முனைகளிலும், அதாவது பொருளாதார, அரசியல் பிரச்சினைகள் அனைத்திலும் நடக்கும் தொடர்ச்சியான நீண்ட போர்கள் கொண்டது அது; முதலாளி வர்க்கத்தின் உடைமைகள் பறிமுதல் செய்யப்படுவதில்தான் அப்போர்கள் முடிவுபெற முடியும். ஜனநாயகத்துக்கான போராட்டம் சோஷலிஸப் புரட்சியிலிருந்து பாட்டாளி வர்க்கத்தைத் திசை திருப்பவும் அல்லது அப்புரட்சியை மறைத்து மங்கச் செய்யவும் திறமை வாய்ந்தது என்று கருதுவது அடிப்படைத் தவறாகும். அதற்கு மாறாக, வெற்றியுற்ற சோஷலிஸம் முழுமையான ஜனநாயகத்தைச் செய்து முடிக்காமல் எவ்வாறு இருக்க முடியாதோ அதேபோல ஜனநாயகத்துக்காக எல்லா முனைகளிலும், முரண்பாடுகளின்றி, புரட்சிகரப் போராட்டம் நடத்தாமல் பாட்டாளி வர்க்கம் முதலாளி வர்க்கத்தின் மீது வெற்றி கொள்ளத் தன்னைத் தயார் செய்து கொள்ள முடியாது.

ஜனநாயக வேலைத்திட்டத்தின் பிரிவுகளில் ஒன்றை, எடுத்துக்காட்டாகத் தேசங்களின் சுயநிர்ணயம் என்பதை, ஏகாதிபத்தியத்தின்கீழ் இது ''நிறைவேற முடியாதது'' என்றோ, ''பொய்த் தோற்றம்'' என்றோ கூறி நீக்கிவிடுவது கூடப் பெரிய தவறாகிவிடும். முதலாளித்துவத்தின் கட்டமைப்புக்குள் தேசங்களின் சுயநிர்ணய உரிமை நிறைவேற்ற முடியாதது என்ற வாதத்தை எவ்வித நிபந்தனைக்கும் உட்பட்டதல்ல என்ற பொருளாதார அர்த்தத்திலோ அல்லது நிபந்தனைக்குட்பட்டது என்ற அரசியல் அர்த்தத்திலோ புரிந்து கொள்ள முடியும்.

முதலாவது அர்த்தத்தில் எடுத்துக் கொண்டால் அது அடிப்படையான தத்துவார்த்தத் தவறாகும். முதன் முதலாக, அந்த அர்த்தத்தில் உழைப்புப் பணம் அல்லது நெருக்கடிகளை ஒழித்தல் முதலியன முதலாளித்துவத்தின்கீழ் நிறைவேற்ற முடியாதவை. தேசங்களின் சுயநிர்ணயமும் அதே மாதிரி நிறைவேற்ற முடியாதது என்பது முழுக்க முழுக்கத் தவறு. இரண்டாவதாக, இந்தப் பொருளில் ''நிறைவேற்ற முடியாதது'' என்கிற வாதத்தை மறுப்பதற்கு 1905ல் ஸ்வீடனிலிருந்து நார்வே பிரிந்ததே, அந்த ஓர் எடுத்துக்காட்டே போதும். மூன்றாவதாக, ஜெர்மனி, பிரிட்டன் போன்ற அரசுகளுக்கு இடையிலான அரசியல் உறவுகளிலும் பொதுப் போர்த்தந்திர முறை உறவுகளிலும் ஏதாவது சிறிய மாறுதல் ஏற்பட்டால்கூட போலந்து, இந்தியா முதலிய நாடுகள் இன்றோ நாளையோ புதிய அரசுகளாக உருவாவது ''நிறைவேற்றக் கூடியது'' ஆகும் என்பதை மறுப்பது மடமை ஆகும். நான்காவதாக, விரிந்து பரவத் துடித்துக் கொண்டிருக்கும் நிதி மூலதனமானது எந்த ஒரு நாட்டினுடையவும், ''சுயேச்சையான'' நாட்டினதுங்கூட, சுதந்திரமிக்க ஜனநாயக அல்லது குடியரசு அரசாங்கத்தையும், அதன் தேர்ந்தெடுக்கப்பட்ட அதிகாரிகளையும் ''சுதந்திரமாக'' விலைகொடுத்து வாங்கவோ அல்லது கைக் கூலி கொடுத்து வசப்படுத்தவோ முடியும். அரசியல் ஜனநாயகத் துறையில் எந்தவிதமான சீர்திருத்தங்களையும் செய்வதன் மூலம் நிதி மூலதனத்தின் ஆதிக்கத்தை, பொதுவாக மூலதனத்தின் ஆதிக்கத்தை,

அகற்றிவிட முடியாது; சுயநிர்ணயம் என்பது முற்றிலும் இத்துறையைத்தான் சேர்ந்தது. அரசியல் ஜனநாயகம் என்பது வர்க்க ஒடுக்குமுறைக்கும் வர்க்கப் போராட்டத்துக்கும் உரிய முன்னைவிடச் சுதந்திரமானதும், பரவலானதும், தெளிவானதுமான வடிவமாக இருக்கிறதின் முக்கியத்துவத்தை நிதி மூலதனத்தின் ஆதிக்கம் சிறிதும் சிதைப்பதில்லை. எனவே முதலாளித்துவத்தின்கீழ் அரசியல் ஜனநாயகத்துக்கான கோரிக்கைகளில் ஒன்று பொருளாதார வழியில் ''நிறைவேற்றப்பட முடியாதது'' என்று கூறும் வாதங்கள் அனைத்தும் முதலாளித்துவம், அரசியல் ஜனநாயகம் ஆகியவற்றின் பொதுவான, அடிப்படை உறவுமுறைகளை மொத்தத்தில் தத்துவார்த்த வழியில் தவருக வரையறை செய்வதாகின்றன.

இரண்டாவது அர்த்தத்தில் கூறப்படும் வன்கூற்று முற்றும் பெருமளவும் சரிநுட்பமற்றதாகவும் இருக்கிறது. இதற்குக் காரணம், தேசங்களின் சுயநிர்ணய உரிமை மட்டுமின்றி, அரசியல் ஜனநாயகத்துக்கான எல்லா அடிப்படைக் கோரிக்கைகளுமே ஏகாதிபத்தியத்தின் கீழ் ஓரளவுக்குத்தான் ''நிறைவேற்றப்படக் கூடியது'', அதுவும் ஒரு முழுமையற்ற திரிந்த முறையில், விதிவிலக்கு என்ற வகையில் (உதாரணம்: 1905ல் ஸ்வீடனிலிருந்து நார்வே பிரிந்தது) மட்டுமே அவை ''நிறைவேற்றப்படக் கூடியது''. காலனிகள் உடனடியாக விடுதலை பெற வேண்டும் என்று எல்லாப் புரட்சிகரச் சமூக-ஜனநாயகவாதிகளும் கோருகிருர்களே அது கூட, வரிசைத் தொடரான புரட்சிகள் இல்லாமல் முதலாளித்துவத்தின்கீழ் ''நிறைவேற்றப்பட முடியாததே''. ஆனுல் இதைக் காரணமாகக் கொண்டு சமூக-ஜனநாயகவாதிகள் இக்கோரிக்கைகள் அனைத்துக்காகவும் உடனடியாக, மிகவும் உறுதியாகப் போராடுவதை விட்டுவிட வேண்டும் என்றுகிவிடாது—அப்படி விட்டுவிடுவதானது முதலாளி வர்க்கத்தின், பிற்போக்கின் நோக்கத்தை ஈடேற்றுவதாகும்; ஆனுல் அதற்கு மாருக, இக்கோரிக்கைகளை முறையாக வகுத்து, புரட்சிகரமான முறையில்—சீர்திருத்தவாதமுறையில் அல்லாமல்—அவற்றை நிறைவேற்றுவது அவசியம் என்றுகிறது; முதலாளித்துவச்

சட்டமுறை வரம்புக்குள் நாம் கட்டுண்டு விடக் கூடாது, அவற்றை உடைத்தெறிய வேண்டும்; நாடாளுமன்றத்தில் வாய்ச்சொல் கண்டனத்தோடு, உரைகள் நிகழ்த்துவதோடு திருப்தி அடைந்துவிடக் கூடாது, பொது மக்களை முடிவு காணத்தக்க போராட்டங்களில் ஈடுபடும்படி ஈர்க்க வேண்டும்; ஒவ்வொரு அடிப்படை ஜனநாயகக் கோரிக்கையையும், முதலாளி வர்க்கத்தின் மீது நேரடியான பாட்டாளி வர்க்கத் தாக்குதல் வரை, அதாவது முதலாளி வர்க்கத்தின் உடமைகளைப் பறிமுதல் செய்யும் சோஷலிஸப் புரட்சி வரை விரிவாக்கித் தீவிரப்படுத்தி வர வேண்டும். ஒரு பெரிய வேலை நிறுத்தம், அல்லது தெரு ஆர்ப்பாட்டம், அல்லது பட்டினிக் கலகம், அல்லது இராணுவ எழுச்சி, அல்லது காலனிப் புரட்சி ஆகிய எந்த ஒரு காரணத்தால் மட்டுமே சோஷலிஸப் புரட்சி வெடித்தெழலாம் என்பது அல்ல; டிரைஃபஸ் வழக்கு[99], ஸாபெர்ன் நிகழ்ச்சி[100] போன்ற எந்தவொரு அரசியல் நெருக்கடியின் விளைவாகவோ அன்றி ஒரு ஒடுக்கப்பட்ட தேசம் பிரிந்து போவது பற்றிய பொது வாக்கெடுப்பு சம்பந்தமாகவோ, மற்றபடியோ அது வெடித்தெழலாம்.

ஏகாதிபத்தியத்தின்கீழ் தேசிய ஒடுக்கல்முறை தீவிரமடைகிறது, ஆதலால் சமூக-ஜனநாயகவாதிகள் தேசங்கள் பிரிந்து செல்லும் உரிமைக்கான—முதலாளி வர்க்கத்தினர் மொழியில் ''கற்பனை''—போராட்டத்தை நிராகரிக்க வேண்டும் என்பதல்ல பொருள்; மாறாக, முதலாளி வர்க்கத்துக்கெதிரான பொது மக்களின் நடவடிக்கைக்கும், புரட்சிகரத் தாக்குதல்களுக்கும் விளைநிலமாக இத்துறையில் எழும் பூசல்களையும் கூட மேலும் அதிகமாகப் பயன்படுத்திக் கொள்ள வேண்டும்.

### 3. சுயநிர்ணய உரிமையின் முக்கியத்துவமும் கூட்டாட்சியுடன் அதன் உறவும்

தேசங்களின் சுயநிர்ணய உரிமை என்பது அரசியல் வழியில் சுதந்திரம் பெறும் உரிமையை, ஒடுக்கும் தேசத்திலிருந்து அரசியல் வழியில் சுதந்திரமாகப் பிரிந்து போகும்

உரிமை ஒன்றைத்தான் குறிக்கிறது. திட்டவட்டமாகச் சொன்னுல், அரசியல் ஜனநாயகம் என்ற இந்தக் கோரிக் கையின் உட்பொருள், பிரிந்து போவதற்காகக் கிளர்ச்சி செய்ய முழுச் சுதந்திரமும் பிரிந்து போகும் தேசம் பிரிந்து போவது பற்றிய பிரச்சினைக்குப் பொது வாக்கெடுப்பு மூலம் முடிவு எடுப்பதற்கான சுதந்திரமும் என்பதுதான். எனவே இந்தக் கோரிக்கையும், பிரிய வேண்டும், துண்டாக வேண் டும், சிறு அரசுகள் அமைய வேண்டும் என்கிற கோரிக்கை யும் சமமல்ல. எல்லாவிதமான தேசிய ஒடுக்கலையும் எதிர்க் கும் போராட்டத்தின் முரணற்ற வெளியீட்டைத்தான் அது குறிக்கிறது. ஒரு ஜனநாயக அரசமைப்பு பிரிந்து போவதற் கான முழுச் சுதந்திரத்தை எவ்வளவுக்கெவ்வளவு அதிகமாக அளித்திருக்கிறதோ, அவ்வளவுக்கவ்வளவு பிரிவினைக்கான விருப்பம் தெரிவிப்பதும் அதில் ஆர்வம் காட்டுவதும் நடை முறையில்குறையும்; ஏனென்ருல் பொருளாதாரமுன்னேற்றம், மக்களின் நலன்கள் என்ற இரு நோக்குநிலைகளினின்று பார்த் தாலும் பேரரசுகளில் மறுக்க முடியாத அனுகூலங்கள் இருக் கின்றன; மேலும், முதலாளித்துவத்தின் வளர்ச்சியோடு இந்த அனுகூலங்களும் அதிகரிக்கின்றன. சுயநிர்ணய உரி மையை ஏற்றுக் கொள்வது, ஒரு கோட்பாடு என்ற முறையில் கூட்டாட்சியை ஏற்றுக் கொள்வதற்குச் சமமல்ல. ஒருவர் அக்கோட்பாட்டை உறுதியாக எதிர்ப்பவராகவும், ஜனநாயக மையப்பாட்டை ஆதரிப்பவராகவும் இருக்கலாம்; ஆயினும், முழுமையான ஜனநாயக மையப்பாட்டை அடைவதற்குரிய ஒரே வழி என்ற முறையில் தேசங்களின் ஏற்றத் தாழ்வுகளை விடக் கூட்டாட்சி நல்லதென்று விரும்பலாம். இதே கண் ணோட்டத்துடன்தான் மையவாதியான மார்க்ஸ், ஆங்கிலே யர்கள் அயர்லாந்தை வன்முறையில் அடிமைப்படுத்தி வைத் திருந்ததைவிட அயர்லாந்தும் இங்கிலாந்தும் சேர்ந்த ஒரு கூட்டாட்சி மேலானது என்று கருதினர்.

சோஷலிஸத்தின் குறிக்கோள் மனித சமுதாயம் சின்னஞ் சிறு அரசுகளாகப் பிரிந்துள்ளதையும் தேசங்களின் எல்லா விதமான தனிமைப்பட்ட நிலையையும் முடிவுக்குக் கொண்டு வருவது தேசங்களை மேலும் நெருங்கி வரச் செய்வது என்

பதோடு மட்டுமல்லாமல், அவற்றை ஒருமைப்படுத்துவதும் அதன் நோக்கமாகும். இந்த நோக்கத்தை அடைவதற்காகத் தான் நாம் இரண்டு காரியங்களைச் செய்ய வேண்டும். ஒரு புறம், ''பண்பாடு-தேசியத் துறைகளில் சுயாட்சி[101]'' என்பதைப் பற்றி ரென்னர், ஓட்டோ பௌவர் ஆகியவர்களது கருத்தின் பிற்போக்குத் தன்மையை மக்களுக்கு விளக்க வேண்டும்; மறுபுறம், பொதுவான தெளிவற்ற சொற்றொடர்களிலல்ல, அர்த்தமற்ற வாய்வீச்சுகளிலல்ல, சோஷலிஸத்தை அடைந்த பின்னர் கவனிக்க வேண்டிய பிரச்சினை என்று அதை ''ஒதுக்கி வைத்துவிடும்'' முறையிலல்ல, ஒடுக்கும் தேசங்களிலுள்ள சோஷலிஸ்டுகளின் பாசாங்குத் தனத்தையும் கோழைத் தனத்தையும் தனிவகையில் கவனத்தில் கொண்டு தெளிவாகவும் துல்லியமாகவும் வரையறுக்கப்பட்ட அரசியல் வேலைத்திட்டத்தில் ஒடுக்கப்பட்ட தேசங்களின் விடுதலையைக் கோர வேண்டும். எவ்வாறு ஒடுக்கப்பட்ட வர்க்கத்தின் சர்வாதிகாரம் என்ற இடைநிலைக் கால கட்டத்தின் மூலமாகத்தான் வர்க்கங்களை மனித சமுதாயம் ஒழிக்க முடியுமோ அதேபோல, ஒடுக்கப்பட்ட எல்லாத் தேசங்களுக்கும் முழு விடுதலை என்ற—அதாவது, பிரிந்து போவதற்கான சுதந்திரம் உண்டு என்ற—இடைநிலைக் கால கட்டத்தின் மூலம்தான் தேசங்களின் தவிர்க்க முடியாத ஒன்றிணைப்பை அடைய முடியும்.

### 4. புரட்சிகர-பாட்டாளி வர்க்க முறையில் தேசங்களின் சுயநிர்ணயப் பிரச்சினையை முன்வைத்தல்

தேசங்களின் சுயநிர்ணயக் கோரிக்கையை மட்டுமின்றி, நமது குறைந்தபட்ச ஜனநாயக வேலைத்திட்டத்தின் எல்லா அம்சங்களையும்கூடச் சிறு முதலாளி வர்க்கத்தினர் நீண்ட காலத்திற்கு முன்பே, பதினேழாம், பதினெட்டாம் நூற்றாண்டுகளிலேயே முன்வைத்திருக்கிறார்கள். மேலும் கற்பனை முறையில்தான் இன்னமும் அவற்றை எல்லாம் முன்வைத்து

வருகிருர்கள்; ஏனென்ருல் வர்க்கப் போராட்டத்தையும் ஜனநாயகத்தின் கீழ் அது தீவிரமடைதலையும் அவர்கள் காணத் தவறுகிருர்கள், ''அமைதியான'' முதலாளித்துவத் தில் அவர்கள் நம்பிக்கை வைத்திருக்கிருர்கள். ஏகாதிபத் தியத்தின் கீழ் சம உரிமையுடைய தேசங்களின் ஐக்கியம் சாத்தியமாகும் என்ற கற்பனுவாதத்தின் இயல்பு இதுவேதான்—இக்கற்பனுவாதம் மக்களை ஏமாற்றுகிறது, காவுத்ஸ்கிவாதி களால் ஆதாரிக்கப்படுகிறது. இந்தச் சிறு முதலாளித்துவ, சந்தர்ப்பவாதக் கற்பனுவாதத்துக்கு எதிராக, ஏகாதிபத்தி யத்தின்கீழ் ஒடுக்கும் தேசங்கள், ஒடுக்கப்படும் தேசங்கள் என்று பிரிக்கப்படுவது அடிப்படையானது, கவனிக்கத்தக்க முக்கியம் வாய்ந்தது, தவிர்க்க முடியாதது என்ற கூற்றை சமூக-ஜனநாயகவாதிகளின் வேலைத்திட்டம் எடுத்துரைக்க வேண்டும்.

பிற நாடுகளைக் கைப்பற்றி இணைத்துக் கொள்வதற் கெதிராகவும், பொதுப்படையாகத் தேசங்களின் சம உரிமை களுக்கு ஆதரவாகவும் அமைதிவாதியாகிய முதலாளி வர்க் கத்தினன் வழக்கமாகத் திரும்பத் திரும்பச் சொல்லக் கூடிய அதே பொதுவான, ஒரே மாதிரியான சொற்களை ஒடுக்கும் தேசங்களின் பாட்டாளி வர்க்கம் தானும் கூறுவதுடன் நின்றுவிடக் கூடாது. தேசிய ஒடுக்குமுறையின் அடிப்படை யில் ஏற்படுத்தப்பட்ட ஒரு அரசின் எல்லைகளைப் பற்றிய பிரச்சினையில்—ஏகாதிபத்திய முதலாளி வர்க்கத்துக்கு இப் பிரச்சினை மிகவும் ''கசப்பானது''—பாட்டாளி வர்க்கம் மௌனமாயிருக்க முடியாது. ஒரு குறிப்பிட்ட அரசின் எல்லைகட்குள் ஒடுக்கப்பட்ட தேசங்கள் பலவந்தமாகப் பிடித்து வைத்துக் கொள்ளப்பட்டிருக்கிறதற்கு எதிராகப் பாட்டாளி வர்க்கத்தால் போராடாமல் இருக்க முடியாது, அதாவது சுயநிர்ணய உரிமைக்காகப் போராடாமல் இருக்க முடியாது. ''தங்களது'' தேசத்திஞல் ஒடுக்கப்படும் காலனி களுக்கும் தேசங்களுக்கும் அரசியல் வழியில் பிரிந்து போகும் சுதந்திரம் தரப்பட வேண்டும் என்று பாட்டாளி வர்க்கம் கோர வேண்டும். இல்லாவிட்டால் பாட்டாளி வர்க்கச் சர்வ தேசியம் என்பது வெற்றுவார்த்தையாக இருக்கும்; ஒடுக்கப்

பட்ட தேசத்தின் தொழிலாளர்கட்கும் ஒடுக்கும் தேசத்தின் தொழிலாளர்கட்கும் இடையில் நம்பிக்கையோ அல்லது வர்க்க ஒருமைப்பாடோ அப்பொழுது சாத்தியமில்லை; சீர்திருத்தவாதிகளும் காவுத்ஸ்கிவாதிகளும் சுயநிர்ணயத்தை ஆதரித்து, அதே சமயத்தில் ''தமது சொந்த'' தேசத்திஞல் ஒடுக்கப்பட்டு, ''தம்முடைய சொந்த'' அரசுக்குள் பலவந்தமாகப் பிடித்து வைக்கப்பட்டுள்ள தேசங்களைப் பற்றி மௌனமாக இருக்கிருர்களே, இவர்களின் பாசாங்குத்தனமும் அப்பொழுது அம்பலப்படுத்தப்படாமல் இருந்துவிடும்.

மற்ருரு பக்கத்தில், ஒடுக்கப்பட்ட தேசத்தின் தொழிலாளர்களுக்கும் ஒடுக்கும் தேசத்தின் தொழிலாளர்களுக்கும் இடையிலான முழுமையான, நிபந்தனையற்ற ஒற்றுமையை—நிறுவன ஒழுங்கமைப்பு ஒற்றுமை உட்பட—ஆதரித்துக் காத்து, செயல்படுத்துவது ஒடுக்கப்பட்ட தேசத்தைச் சேர்ந்த சோஷலிஸ்டுகள் குறிப்பாகச் செய்ய வேண்டியதாகும். இதைச் செய்யாமல், பாட்டாளி வர்க்கத்தின் சுதந்திரமான கொள்கையை ஆதரித்துக் காப்பது சாத்தியமில்லை; முதலாளி வர்க்கத்தினரின் எல்லாவிதமான சூழ்ச்சிகளையும் துரோகத்தையும் ஏமாற்றுவித்தைகளையும் எதிர்த்து மற்ற நாடுகளின் பாட்டாளி வர்க்கத்துடன் தங்களது வர்க்க ஒருமைப்பாட்டை ஆதரித்துக் காப்பதும் சாத்தியமில்லை. தொழிலாளர்களை ஏமாற்றுவதற்காகத் தேசிய விடுதலை பற்றிய முழக்கங்களை ஒடுக்கப்பட்ட தேசங்களின் முதலாளி வர்க்கத்தினர் விடாப்பிடியாக உபயோகித்து வருகிருர்கள்; ஆதிக்கம் செலுத்தும் தேசத்தின் முதலாளி வர்க்கத்துடன் பிற்போக்குத் தனமான ஒப்பந்தங்களைச் செய்து கொள்வதற்காகத் தங்களது உள்நாட்டுக் கொள்கையில் இம்முழக்கங்களை அவர்கள் பயன்படுத்துகிருர்கள் (எடுத்துக்காட்டாக: யூதர்களையும் உக்ரேனியர்களையும் ஒடுக்குவதற்காக ஆஸ்திரியாவிலும் ருஷ்யாவிலும் உள்ள போலந்துக்காரர்கள் பிற்போக்குடன் ஒப்பந்தம் செய்து கொள்கிருர்கள்); தங்களது அயல்நாட்டுக் கொள்கையில், தங்களது கொள்ளைத் திட்டங்களை நிறைவேற்றிக் கொள்வதற்காகப் போட்டி ஏகாதிபத்திய அரசுகளுள் ஒன்றுடன் ஒப்பந்தம் செய்து கொள்ள

அவர்கள் முயல்கிறார்கள் (சிறு பால்கன் அரசுகளின் கொள்கைப் போக்கு, முதலியன).

ஒரு ஏகாதிபத்திய நாட்டுக்கு எதிரான தேசிய விடுதலைப் போராட்டத்தை இன்னொரு "பெரிய" வல்லரசு தனது சொந்த ஏகாதிபத்திய நோக்கங்களுக்காகக் குறிப்பிட்ட சூழ்நிலைகளில் பயன்படுத்திக் கொள்ளக்கூடும் எனும் ஒரு காரணம்கூட சமூக-ஜனநாயகவாதிகள் தேசங்களின் சுயநிர்ணய உரிமையங்கீகாரத்தை மறுக்கும்படிக் கட்டாயப்படுத்தாது ஏனெனில் இதேபோல் அரசியல் ஏமாற்றுக்காகவும் நிதிக் கொள்ளைக்காகவும் பல தடவை முதலாளித்துவ வர்க்கத்தினர் குடியரசு முழக்கங்களைப் பயன்படுத்துகிறார்கள் (உதாரணம்: லத்தீன் நாடுகளில்). எனினும் இந்தக் காரணத்துக்காக சமூக-ஜனநாயகவாதிகள் தங்களது குடியரசுக் கொள்கையை விட்டுவிடப் போவதில்லை.*

---

* "தாய்நாட்டைப் பாதுகாப்பது" என்பதை இது உட்கிடையாகக் கொண்டுள்ளது என்ற காரணத்தைக் கொண்டு சுயநிர்ணய உரிமையை மறுப்பது முற்றிலும் நகைக்கத்தக்கது என்பது சொல்லாமலே விளங்கும். "தாய்நாட்டைப் பாதுகாப்பதைச்" சரியென்று சாதிப்பதற்கென்று, 1914-16ம் ஆண்டு காலத்து சமூக-தேசியவெறியர்கள் ஜனநாயகக் கோரிக்கைகளைப் பற்றியும் (உதாரணமாக, அதன் குடியரசுவாதம் பற்றி) தேசிய ஒடுக்குமுறைக்கெதிரான எப்போராட்டத்தையும் வகுப்பது பற்றியும் பேசும் பொழுதெல்லாம் அதே உரிமையுடன், அதாவது அதேபோன்று விளையாட்டாகப் பேசுகின்றனர். தனிப்பட்ட ஒவ்வொரு போரின் திட்டவட்டமான வரலாற்றுச் சிறப்பியல்புகளைப் பகுத்தாய்ந்தே மார்க்ஸியமானது ஐரோப்பாவில் நடைபெற்ற மாபெரும் பிரெஞ்சுப் புரட்சி அல்லது காரிபல்டியின் போர்கள் போன்றவை தாயகத்தைப் பாதுகாப்பதை நோக்கமாகக் கொண்டவை என்றும், 1914-16ம் ஆண்டுகளின் ஏகாதிபத்திய யுத்தம் தாயகத்தின் பாதுகாப்பை நோக்கமாகக் கொள்ளவில்லை என்றும் முடிவுசெய்கிறதே அன்றி எந்த ஒரு "பொதுக் கோட்பாட்டையோ" அல்லது ஒரு வேலைத்திட்டத்தின் எந்த ஒரு அம்சத்தையோ கொண்டு இவ்வாறு முடிவு செய்யவில்லை.

## 5. தேசியப் பிரச்சினை பற்றி மார்க்ஸியமும் புருதோனியமும்

*விதிவிலக்கின்றி ஒவ்வொரு ஜனநாயகக் கோரிக்கையும் சார்பற்ற தனித்த வெளியீடு அல்ல, நிலப்பிரபுத்துவத்துக்கெதிராக முதலாளி வர்க்கத்தால் தலைமை தாங்கி நடத்தப்படும் பொதுமக்கள் போராட்டத்தின் வரலாற்று வழிப்பட்ட வெளியீடே என்று சிறு முதலாளித்துவ ஜனநாயகவாதிகளுக்கு மாருக மார்க்ஸ் கருதினுர். இக்கோரிக்கைகள் அனைத்துமே விதிவிலக்கின்றி, குறித்த சூழ்நிலைகளில், தொழிலாளர்களை ஏமாற்றுவதற்காக முதலாளி வர்க்கத்தினரின் கருவிகளாகப் பயன்பட முடியும், பயன்பட்டிருக்கின்றன. இவ் விஷயத்தில் அரசியல் ஜனநாயகத்தின் கோரிக்கைகளில் ஒன்றை—குறிப்பாக, தேசங்களின் சுயநிர்ணயத்தை—தனிப்பட்டதாக எடுத்துக் கொண்டு, மற்றவைகளுக்கு எதிரானதாக அதை வைப்பது தத்துவார்த்த வழியில் அடிப்படையான தவருகும். நடைமுறையில், பாட்டாளி வர்க்கமானது ஜனநாயகக் கோரிக்கைகளுக்கான—குடியரசு ஒன்றை நிறுவ வேண்டும் என்ற கோரிக்கையையும் விலக்கிவிடாமல்—தனது போராட்டத்தை, முதலாளி வர்க்கத்தைக் கவிழ்ப்பதற்கான தனது புரட்சிப் போராட்டத்துக்குக் கீழ்ப்பட்டதாக வைத்துக் கொண்டால்தான் அது தனது சுதந்திர நிலையைக் காப்பாற்றிக் கொள்ள முடியும்.*

*''சமுதாயப் புரட்சி என்ற பெயரில்'' தேசியப் பிரச்சினையை ''மறுத்தார்கள்'' புருதோன்வாதிகள். ஆனுல் அதற்கு மாருக மார்க்ஸ், முன்னேறிய நாடுகளில் பாட்டாளி வர்க்கப் போராட்டத்தின் நலன்களை முதலில் கருத்தில் கொண்டு, பிற தேசங்களை ஒடுக்குகின்ற எந்த ஒரு தேசம் சுதந்திரமாயிருக்க முடியாது என்ற அடிப்படையான சர்வதேசிய, சோஷலிஸக் கோட்பாட்டுக்கு முதலிடம் தந்தார். ஜெர்மனியில் வெற்றிவாகை சூடிய ஜனநாயகம் ஜெர்மானியர்களால் ஒடுக்கப்பட்ட தேசங்களுக்கு விடுதலை பிரகடனம் செய்து அப் பிரகடனத்தை நிறைவேற்றும்படி 1848ல் ஜெர்மன் தொழி*

லாளர்களின் புரட்சி இயக்கத்தின் நலன்களைக் கருத்தில் கொண்டு மார்க்ஸ் கோரினார். அதே போல ஆங்கிலேயத் தொழிலாளர்களின் புரட்சிப் போராட்டத்தின் நலன்களைக் கருத்தில் கொண்டு, இங்கிலாந்திலிருந்து அயர்லாந்து பிரிய வேண்டும் என்று 1869ல் மார்க்ஸ் கோரினார்; ஆனாலும் ''பிரிவுக்குப் பிறகு ஒருவேளை கூட்டாட்சி ஏற்படலாம்'' என்று அத்துடன் கூறினார்.[102] இந்தக் கோரிக்கையை முன் வைத்துத்தான் மார்க்ஸ் ஆங்கிலேயத் தொழிலாளர்களுக் குச் சர்வதேசிய உணர்வை உண்மையில் ஊட்டி வந்தார். இம்முறையில்தான் அவர் சந்தர்ப்பவாதிகளையும் முதலாளித் துவச் சீர்திருத்தவாதத்தையும் எதிர்த்து இந்த வரலாற்றுப் பணிக்குப் புரட்சித் தீர்வு ஒன்றைக் காட்ட முடிந்தது—அரை நூற்றாண்டு ஆகியும், அவர்கள் இன்றுங்கூட அயர்லாந்து ''சீர்திருத்தத்தை'' நிறைவேற்றவில்லை. சிறிய தேசங்களுக்குப் பிரிந்து போகும் சுதந்திரம் கற்பனைத்துவமானது, நிறைவேற்ற முடியாதது என்பது பற்றியும் பொருளாதாரக் குவிப்பு மட்டுமின்றி அரசியல் குவிப்புங்கூட முற்போக்கா னது என்பது பற்றியும் கூச்சலிடும் மூலதனத்தை ஆதரித்துப் புகழ்வோருக்கு மாறாக இம்முறையில்தான் மார்க்ஸால், ஏகாதி பத்திய அல்லாத வழியில் இக்குவிப்பின் முற்போக்குத் தன்மையையும், வன்முறையின் அடிப்படையில் அன்றி, அனைத்து நாடுகளையும் சேர்ந்த பாட்டாளி வர்க்கத்தினரின் சுதந்திரமான ஐக்கியத்தின் அடிப்படையில் தேசங்களின் ஒன்றுபடுதலையும் ஆதரித்துப் பாதுகாக்க முடிந்தது. இவ் வழியில்தான், தேசங்களின் சமவுரிமை, சுயநிர்ணயம் ஆகி யவற்றை வெறும் பேச்சளவிலும் பல நேரங்களில் கபட மனத்துடனும் அங்கீகரிப்போருக்கு மாறாக தேசியப் பிரச்சி னையிலும்கூட பொது மக்களின் புரட்சிகரமான நடவடிக் கையை மார்க்ஸால் முன்வைக்க முடிந்தது. 1914-16ம் ஆண்டு களின் ஏகாதிபத்தியப் போரும், அதன் விளைவாக வெளிக்கு வந்த சந்தர்ப்பவாதிகளின், காவுத்ஸ்கிவாதிகளின் மிகவும் இழிவான கபடவாதமும் மார்க்ஸின் கொள்கை சரியானது என்பதைத் தெள்ளத் தெளிவாக உறுதிப்படுத்திவிட்டன. இக்கொள்கை எல்லா முன்னேறிய நாடுகளுக்கும் முன்

னுதாரணமாக விளங்க வேண்டும், ஏனெனில் அவை ஒவ்வொன்றும் மற்ற தேசங்களை ஒடுக்குகின்றன.*

## 6. தேசங்களின் சுயநிர்ணயம் பற்றிய பிரச்சினையில் மூன்றுவித நாடுகள்

இது பொருத்தவரை நாடுகளை மூன்று முக்கிய விதங்களாகப் பிரிக்க வேண்டும்.

முதலாவதாக, மேற்கு ஐரோப்பாவைச் சேர்ந்த முன்னேறிய முதலாளித்துவ நாடுகளும் அமெரிக்க ஐக்கிய நாடுகளும். இந்நாடுகளில் முதலாளித்துவ-முற்போக்கான தேசிய இயக்கங்கள் நெடு நாட்களுக்கு முன்பே முடிவுக்கு வந்துவிட்டன. இந்த ''மாபெரும்'' தேசங்கள் ஒவ்வொன்றும் காலனிகளிலும் தனது நாட்டிலும் உள்ள மற்ற தேசங்களை ஒடுக்குகிறது. பத்தொன்பதாம் நூற்றாண்டில் அயர்லாந்து சம்பந்தமாக ஆங்கிலேயப் பாட்டாளி வர்க்கத்தின் கட

---

* சில மக்களினங்களது தேசிய இயக்கத்தை, உதாரணமாக 1848ம் ஆண்டின் செக் மக்களின் இயக்கத்தை, மார்க்ஸ் எதிர்த்தார். அண்மையில் ஜெர்மன் தேசியவெறியினராகிய லெஞ்ச் என்பவர் *Die Glocke* சஞ்சிகையின்[103] இதழ்கள் 8-9ல் அதைச் சுட்டிக்காட்டி, மார்க்ஸியத்தின் நோக்கு நிலையிலிருந்து தேசங்களின் சுயநிர்ணயத்தை அங்கீகரிக்க வேண்டியதன் அவசியத்தை மறுத்தார். ஆனால் இது சரியல்ல; ஏனென்றால், 1848ல் ''பிற்போக்குத்'' தேசங்களையும் புரட்சிகர-ஜனநாயகத் தேசங்களையும் வேறுபடுத்தத் தேவையான வரலாற்று, அரசியல் காரணங்கள் இருந்தன. மார்க்ஸ் முதலில் கூறப்பட்ட தேசங்களைக் கண்டனம் செய்து, பிந்தியவற்றை ஆதரித்தது சரியே. ஜனநாயகக் கோரிக்கைகளுள் ஒன்றான சுயநிர்ணய உரிமையானது ஜனநாயகத்தின் பொதுவான நலன்களுக்குக் கீழ்ப்பட்டதாக இருக்க வேண்டும். 1848லும் அதற்கடுத்த ஆண்டுகளிலும் ஜாரிஸத்தை எதிர்த்துப் போராடுவதில்தான் இந்தப் பொதுவான நலன்கள் அடங்கியிருந்தன.

மைகள் என்னவோ, அவையே இந்த ஆளும் தேசங்களைச் சேர்ந்த பாட்டாளி வர்க்கத்தின் கடமைகளும் ஆகும்.*

இரண்டாவதாக, கிழக்கு ஐரோப்பா—ஆஸ்திரியா, பால்கன் நாடுகள், குறிப்பாக ருஷ்யா. இங்கு இருபதாம் நூற்றுண்டுதான் முதலாளித்துவ-ஜனநாயகத் தேசிய இயக்கங்களைப் பெருமளவுக்கு வளர்த்து, தேசியப் போராட்டத்தைத் தீவிரப்படுத்தியது. இந்நாடுகளின் பாட்டாளி வர்க்கமானது தேசங்களின் சுயநிர்ணய உரிமைக்கு ஆதரவாகப் போராடுவதன் வாயிலாக அன்றி தனது நாட்டில் முதலாளித்துவ-ஜனநாயகப் புனரமைப்பு நிறைவு எய்துவதற்கும், மற்ற நாடுகளின் சோஷலிஸப் புரட்சிக்கு உதவுவதற்குமான தனது பணிகளை நிறைவேற்ற முடியாது. இதில் மிகவும் கடினமான, மிகவும் முக்கியமான பணியானது, ஒடுக்கும் தேசங்களின்

* 1914-16ம் ஆண்டுகளின் போரிலிருந்து ஒதுங்கி நின்ற சிறிய அரசுகள் சிலவற்றில்—உதாரணமாக, ஹாலந்திலும் ஸ்விட்ஸர்லாந்திலும்—முதலாளி வர்க்கத்தினர் ''தேசங்களின் சுயநிர்ணயம்'' என்ற முழக்கத்தை அதிகமாகப் பயன்படுத்தி ஏகாதிபத்திய போரில் பங்கு கொள்வதை மெய்ப்பிக்கிருர்கள். இத்தகைய நாடுகளின் சமூக-ஜனநாயகவாதிகளை சுயநிர்ணயத்தையே மறுக்கத் தூண்டிய நோக்கங்களில் இதுவும் ஒன்று. ஏகாதிபத்தியப் போரில் ''தாய்நாட்டைப் பாதுகாப்பது'' என்பதை மறுக்கும் சரியான பாட்டாளி வர்க்கக் கொள்கை தவறுன வாதங்களைக் கொண்டு ஆதரிக்கப்படுகிறது. தத்துவார்த்த வழியில் அதன் விளைவு மார்க்ஸியத்தைத் திருத்துவதாகும்; நடைமுறையில் இது ஒரு தனிவகையான சிறு தேசிய இனக் குறுகிய மனப்பான்மைக்கும் ''பெருவல்லரசுகளான'' தேசங்களால் அடிமைப்படுத்தப்பட்டிருக்கும் தேசங்களின் கோடிக்கணக்கான மக்களை மறக்கும்படியான ஒரு நிலைக்கும் இட்டுச் செல்லுவதாகும். தோழர் கோர்ட்டர் தனது ஏகாதிபத்தியம், போர், மற்றும் சமூக-ஜனநாயகவாதம் என்னும் மிகச் சிறந்த சிறுநூலில் தேசங்களின் சுயநிர்ணயக் கோட்பாட்டைத் தவருக மறுக்கிருர். ஆனுல், டச்சு இந்தியத் தீவுகளுக்கு ''அரசியல், தேசிய விடுதலை'' உடனடியாகத் தரப்பட வேண்டும் என்று அவர் கோரி, இக்கோரிக்கையை முன்வைத்து அதற்காகப் போராட மறுக்கும் டச்சு சந்தர்ப்பவாதிகளை அம்பலப்படுத்துகையில் அதைச் செயல்முறையில் சரியாகக் கையாளுகிருர்.

தொழிலாளர்களது வர்க்கப் போராட்டத்தை ஒடுக்கப்பட்ட தேசங்களின் தொழிலாளர்களது போராட்டத்துடன் ஒன்று படுத்தல்தான்.

மூன்ருவதாக, சீனு, பாரசீகம், துருக்கி போன்ற அரைக் காலனி நாடுகளும் இதர காலனி நாடுகள் அனைத்தும். இந்நாடுகளின் மொத்த மக்கட்தொகை 100 கோடி. இந் நாடுகளில் முதலாளித்துவ-ஜனநாயக இயக்கங்கள் இப்பொழுதுதான் தொடங்கியுள்ளன; அல்லது அவை முடிவு பெற இன்னும் நெடுநாட்கள் பிடிக்கும். சோஷலிஸ்டுகள், இழப்பீடோ நிபந்தனைகளோ அற்ற, காலனிகளின் உடனடியான விடுதலை மட்டும் கோருவது கூடாது—ஆம், இந்தக் கோரிக்கை அதன் அரசியல் பொருளில் சுயநிர்ணய உரிமையை அங்கீகரித்தல் என்பது தவிர வேறெதுவும் இல்லை; சோஷலிஸ்டுகள் இந்நாடுகளில் முதலாளித்துவ-ஜனநாயக, தேசிய விடுதலை இயக்கங்களின் மிகவும் புரட்சிகரமான கூறுகளைத் தீர்மானமான வகையில் ஆதரிக்க வேண்டும், தங்களை ஒடுக்கும் ஏகாதிபத்திய அரசுகளுக்கு எதிரான இக்கூறுகளின் எழுச்சிக்கும், ஒரு புரட்சிப் போர் இருக்குமேயாளுல் இப் போருக்கும், உதவ வேண்டும்.

## 7. சமூக-தேசியவெறியும் தேசங்களின் சுயநிர்ணயமும்

ஏகாதிபத்திய சகாப்தமும் 1914-16ம் ஆண்டுகளின் போரும் முன்னேறிய நாடுகளில் தேசியவெறிவாதத்துக்கும் தேசியவாதத்துக்கும் எதிரான போராட்டப் பணியின் தேவையை வலியுறுத்தி முன்வைத்தன. தேசங்களின் சுயநிர்ணயப் பிரச்சினை பற்றி சமூக-தேசியவெறியர்கள் மத்தியில்—''தாய்நாட்டின் பாதுகாப்பு'' என்ற கோட்பாட்டைப் பயன்படுத்தி இந்தப் போரின் ஏகாதிபத்திய, பிற்போக்குத் தன்மையை மூடி மறைக்கும் சந்தர்ப்பவாதிகள், காவுத்ஸ்கிவாதிகள் ஆகியோரின் மத்தியில்—இரண்டு முக்கியமான வகையினர் காணப்படுகின்றனர்.

ஒரு பக்கத்தில், முதலாளி வர்க்கத்தினரின் வெளிப்படையான ஏவலாளர்களை நாம் காண்கிறோம்; ஏகாதிபத்தியமும் அரசியல் குவிப்பும் முற்போக்கானவை என்று கூறி, பிறநாடுகளைக் கைப்பற்றி இணைத்துக் கொள்வதை இவர்கள் ஆதரிக்கிறார்கள்; சுயநிர்ணய உரிமை என்பது கற்பனையானது, மாயக் காட்சி போன்றது, சிறுமுதலாளித்துவத் தன்மை கொண்டது என்றெல்லாம் கூறி, அதை அங்கீகரிக்க மறுக்கிறார்கள். ஜெர்மனியில் குனெவ், பார்வஸ், தீவிரச் சந்தர்ப்பவாதிகள் ஆகியோரும், இங்கிலாந்தில் சில ஃபேபியன்களும்[104] தொழிற் சங்கத் தலைவர்களும், ருஷ்யாவில் ஸெம்கோவ்ஸ்கி, லீப் மன், யுர்க்கேவிச் முதலிய சந்தர்ப்பவாதிகளும் இவ்வகையைச் சேர்ந்தவர்கள்தான்.

மறு பக்கத்தில், காவுத்ஸ்கிவாதிகளை நாம் காண்கிறோம். வண்டர்வேல்டேயும், ரெனொடேலும், பிரிட்டனையும் பிரான்ஸையும் சேர்ந்த பல அமைதிவாதிகளும், இன்னும் பலரும் இவ்வகையினர்தாம். முதல்வகை ஆட்களுடன் ஒற்றுமையை இவர்கள் விரும்புகிறார்கள்; வெறும் சொல்லளவிலும் கபடவாதமாகவும் இவர்கள் சுயநிர்ணய உரிமையை ஆதரித்த பொழுதிலும் நடைமுறையில் முதல் வகையினருடன் ஒன்றுபடுகின்றனர். அரசியல் வழியில் தனியே பிரிந்து போவதற்குரிய சுதந்திரம் பற்றிய கோரிக்கை ''அளவு கடந்தது'' ("zu viel verlangt": *1915, மே 21ந் தேதிய Die Neue Zeit* இல்[105] Kautsky) என்று இவர்கள் கருதுகிறார்கள்; குறிப்பாக ஒடுக்கும் தேசங்களின் சோஷலிஸ்டுகள் புரட்சிகரமான போர்த்தந்திரங்களை மேற்கொள்வதன் தேவையை இவர்கள் வற்புறுத்தவில்லை; அதற்கு மாறாக அவர்களது புரட்சிக் கடமைகளை மூடிமழுப்பி, அவர்களது சந்தர்ப்பவாதத்தை மெய்ப்பித்து, அவர்கள் மக்களை ஏய்ப்பதை எளிதாக்குகிறார்கள்; தங்கள் ஆட்சிக்குள் முழு உரிமை பெறாத தேசங்களை வன்முறையில் பிடித்து வைத்திருக்கும் அரசுகளின் **எல்லைக்கோடுகள்** பற்றிய பிரச்சினையை விட்டே விலகிச் செல்லுகிறார்கள்.

இரு வகையினருமே ஒரே அளவில் சந்தர்ப்பவாதிகள் தான்; அயர்லாந்தை உதாரணமாகக் கூறி மார்க்ஸ் விளக்கிய

போர்த்தந்திரத்தின் தத்துவார்த்த முக்கியத்துவத்தையும் நடைமுறை இன்றியமையாமையையும் புரிந்து கொள்ளும் திறனை அவர்கள் அறவே இழந்து மார்க்ஸியத்தைக் களங்கப்படுத்துகிருர்கள்.

பிறநாடுகளைக் கைப்பற்றி இணைத்துக்கொள்ளும் பிரச்சினையை எடுத்துக் கொண்டால், போரின் காரணமாக இப் பிரச்சினை குறிப்பாக உடனடிக் கவனம் செலுத்த வேண்டிய தொன்ருக ஆகிவிட்டது. ஆனுல் பிறநாடுகளைக் கைப்பற்றி இணைத்துக் கொள்ளுதல் என்ருல் என்ன? பிறநாடுகளைக் கைப் பற்றி இணைத்துக் கொள்வதை எதிர்த்து ஆட்சேபிப்பதானது தேசங்களின் சுயநிர்ணயத்தை ஏற்றுக் கொள்வதாகிறது, அல்லது தற்பொழுதைய நிலைமையை ஆதரித்துப் பேசும் அமைதிவாதிகளின் வாய்ச்சொல்லை அடிப்படையாகக் கொண்டு எவ்வித வன்முறையையும்—புரட்சிகரமான வன் முறையையும்கூட — எதிர்க்குமொன்ருகிறது என்பதைக் காண்பது மிகவும் எளிது. அத்தகைய வாய்ச்சொல் அடி வேரிலேயே தவருனது; மார்க்ஸியத்துக்கொவ்வாதது.

## 8. அடுத்துவரும் காலத்தில் பாட்டாளி வர்க்கத்தின் திட்டவட்டமான பணிகள்

சோஷலிஸப் புரட்சியானது கூடிய விரைவில் தொடங் கலாம். அப்பொழுது ஆட்சியைக் கைப்பற்றுதல், வங்கி களைப் பறிமுதல் செய்தல், முதலிய பல சர்வாதிகார நட வடிக்கைகள் ஆகிய உடனடிப் பணிகள் பாட்டாளி வர்க் கத்தை எதிர்நோக்கி நிற்கும். இத்தகைய நேரத்தில் முத லாளி வர்க்கத்தினர்—அதிலும் குறிப்பாக ஃபேபியன், காவுத்ஸ்கிவாத வகையைச் சேர்ந்தஅறிவுத்துறையினர்—ஒரு வரம்புக்குட்பட்ட ஜனநாயக நோக்கங்களை மட்டும் புரட்சி யினுள் புகுத்தி அதைப் பிளவுபடுத்தவும் தடை செய்யவும் முயல்வார்கள். முதலாளி வர்க்க ஆட்சியின் அடிப்படை களைப் பாட்டாளி வர்க்கம் தகர்க்க ஆரம்பிக்கும் பொழுது நிலவும் நிலைமைகளில் எல்லாவிதத் தூய்மையான ஜனநா

யகக் கோரிக்கைகளும் ஓரளவுக்குப் புரட்சியைத் தடை செய்வதாக இயங்கக் கூடும். ஆயினும், எல்லா ஒடுக்கப்பட்ட மக்களுக்கும் விடுதலைப் பிரகடனம் செய்து, இதை அளிக்க வேண்டியது (அதாவது, அவர்களுடைய சுயநிர்ணய உரிமை) சோஷலிஸப் புரட்சியில் மிகமிக உடனடித் தேவை ஆகும். ஜெர்மனியில் 1848ல் அல்லது ருஷ்யாவில் 1905ல் முதலாளித்துவ-ஜனநாயகப் புரட்சி வெற்றி பெறுவதற்கு அது எவ்வாறு உடனடித் தேவை வாய்ந்ததாக விளங்கியதோ அதே போலத்தான் சோஷலிஸப் புரட்சியின் பொழுதும் விளங்கும்.

சோஷலிஸப் புரட்சி தொடங்குவதற்கு இன்னும் ஐந்து, பத்து அல்லது அதற்கும் அதிகமான ஆண்டுகள் பிடிக்கலாம். அப்போதைய நிகழ்ச்சி நிரலில் சோஷலிஸ்டுகளாகிய தேசிய வெறியினரும் சந்தர்ப்பவாதிகளும் தொழிலாளர் கட்சியைச் சேர்ந்திருத்தல் என்பதையும், 1914-16ம் ஆண்டுகளில் அவர்கள் அடைந்த வெற்றிக்குச் சமமான வெற்றியுறுதல் என்பதையும் சாத்தியமற்றதாக்கும் ஒரு புரட்சிகரமான உணர்வை பொது மக்களிடம் தூண்டும் பணி இடம் பெறும். காலனிகளுக்கும் அயர்லாந்துக்கும் பிரிந்து போகும் உரிமை வேண்டும் என்று கோராத பிரிட்டிஷ் சோஷலிஸ்டுகள்; காலனிகளுக்கும், அல்ஸேஸ், டென்மார்க், போலந்து மக்களுக்கும் பிரிந்து போகும் உரிமை வேண்டும் என்று கோராத, தேசிய ஒடுக்கல் முறைக்கெதிராகப் போராடுவதற்காகத் தமது புரட்சிப் பிரச்சாரத்தையும் புரட்சிகரப் பொது மக்கள் நடவடிக்கைகளையும் நேரடியாகப் பயன்படுத்தாத, ஸர்பெர்ன் நிகழ்ச்சி போன்றவற்றைப் பயன்படுத்தி ஒடுக்கும் தேசத்தைச் சேர்ந்த பாட்டாளி வர்க்கத்தினரிடையே தலைமறைவான பிரச்சாரம் செய்வதையும் தெரு ஆர்பாட்டங்களையும் புரட்சிகரப் பொது மக்கள் நடவடிக்கைகளையும் மேற்கொள்ளத் தவறுகிற ஜெர்மன் சோஷலிஸ்டுகள்; பின்லாந்து, போலந்து, உக்ரேய்ன முதலியவற்றுக்குப் பிரிந்து போகும் உரிமை தரப்பட வேண்டுமென்று கோராத ருஷ்ய சோஷலிஸ்டுகள் ஆகியோர் தேசியவெறியினராகவும் இரத்தக்கறை படிந்து அழுக்கடைந்த ஏகாதிபத்திய முடி

யரசுகளின், ஏகாதிபத்திய முதலாளி வர்க்கத்தினரின் ஏவலர் களாகவும் நடந்து கொள்கிறார்கள் என்று சோஷலிஸ்டுகள் பொது மக்களுக்கு விளக்கிக் கூற வேண்டும்.

### 9. சுயநிர்ணயத்தின்பால் ருஷ்ய, போலந்து சமூக-ஜனநாயகவாதமும் இரண்டாவது அகிலமும் கடைப்பிடிக்கும் போக்கு

சுயநிர்ணயப் பிரச்சினைபற்றி ருஷ்யாவின் புரட்சிகரச் சமூக-ஜனநாயகவாதிகளுக்கும் போலந்து சமூக-ஜனநாயக வாதிகளுக்கும் இடையிலான வேற்றுமைகள் 1903லேயே, ருஷ்யாவின் சமூக-ஜனநாயகத் தொழிலாளர் கட்சியின் வேலைத்திட்டத்தை அங்கீகரித்த காங்கிரஸிலேயே வெளிப் படையாகத் தோன்றிவிட்டன—அக்காங்கிரஸில்தான் போ லந்து சமூக-ஜனநாயகவாதிகளது பிரதிநிதிகள் ஆட்சேபித்த போதிலும் தேசங்களின் சுயநிர்ணய உரிமையைக் கூறும் 9வது பாரா வேலைத்திட்டத்தில் சேர்த்துக் கொள்ளப்பட் டது. அப்பொழுதிலிருந்து ஒருமுறைகூட வேலைத்திட்டத் திலிருந்து 9வது பாராவை நீக்கிவிட வேண்டும், அல்லது அதற்குப் பதிலாக வேறொரு வாசகத்தைப் புகுத்த வேண் டும் என்ற தங்கள் யோசனையைத் தமது கட்சியின் பெயரால் போலந்து சமூக-ஜனநாயகவாதிகள் திருப்பிக் கூறியது கிடையாது.

மொத்த மக்கட்தொகையில் 57 விழுக்காடுகளுக்கும் குறையாத—10 கோடிக்கு மேற்பட்ட—மக்கட்தொகை யைக் கொண்ட ஒடுக்கப்பட்ட தேசங்களையுடைய ருஷ்யாவில், இந்தத் தேசங்கள் பெரும்பாலும் நாட்டின் எல்லைப் பகுதி களில் உள்ள ருஷ்யாவில், இந்தத் தேசங்களில் பல பெரிய-ருஷ்யர்களைவிட பண்பாட்டுத் தரத்தில் உயர்ந்ததாய் இருக் கும் ருஷ்யாவில், அரசியல் அமைப்பு மிகவும் அநாகரிகமாக வும் மத்தியகாலத் தன்மையுடையதாகவும் இருக்கும் ருஷ்யா வில், முதலாளித்துவ-ஜனநாயகப் புரட்சி இன்னும் நிறைவு பெறாத ருஷ்யாவில் ஜாரிஸத்தினால் ஒடுக்கப்பட்ட தேசங்கள்

தங்கு தடையின்றி சுதந்திரமாகப் பிரிந்து போகும் உரிமையுடையன என ஏற்றுக் கொள்வது என்பது அவர்களுடைய ஜனநாயக, சோஷலிஸ நோக்கங்கள் பெயரால் சமூக-ஜனநாயகவாதிகளுக்கு நிபந்தனையற்ற கட்டாயமாகிறது. 1912 ஜனவரியில் மீண்டும் நிறுவப்பட்ட[106] நமது கட்சி, 1913ல் நிறைவேற்றிய ஒரு தீர்மானத்தின் மூலம் சுயநிர்ணய உரிமையை மீண்டும் வலியுறுத்தி, மேலே கூறப்பட்ட அதே திட்டவட்டமான பொருளில் விளக்கியது.[107] 1914-16ல் முதலாளி வர்க்கத்தினர் மத்தியிலும் சந்தர்ப்பவாத சோஷலிஸ்டுகளின் (ருபனேவிச், பிளெஹானவ், நாஷே தேலோ சஞ்சிகை[108] வகையறு) மத்தியிலும் தலைவிரித்தாடிய பெரிய-ருஷ்யத் தேசியவெறியானது இக்கோரிக்கையை நாம் இன்னும் அதிகமாக வலியுறுத்துவதற்கும், அதை ஏற்க மறுப்பவர்கள் நடைமுறையில் பெரிய-ருஷ்யத் தேசியவெறிக்கும் ஜாரிஸத்துக்கும் ஆதரவு தருகிறார்கள் என்ற உண்மையை உணர்ந்து கொள்வதற்கும் நம்மைத் தூண்டுகிறது. சுயநிர்ணய உரிமைக்கெதிரான நடவடிக்கைகளுக்கு நம் கட்சி சிறிதும் பொறுப்பேற்க அழுத்தந்திருத்தமாக மறுக்கிறது என்பதைத் தெரிவித்துக் கொள்கிறது.

தேசியப் பிரச்சினை பற்றி போலந்து சமூக-ஜனநாயகவாதிகளின் நிலையை விளக்கும் அண்மைகாலத்திய வரையறுப்பில் (ஸிம்மர்வால்டு மகாநாட்டில்[109] போலந்து சமூக-ஜனநாயகவாதிகளின் அறிவிப்பு) கீழ்வரும் கருத்துக்கள் அடங்கியிருக்கின்றன:

இழப்பீடு பற்றி வரப்போகிற சூதாட்டத்தில் பணயங்கள் என்ற முறையில் ''போலந்து பிரதேசங்களை'' ஜெர்மன் அரசாங்கமும் மற்ற அரசாங்கங்களும் கருதுவதை அந்த அறிவிப்பு கண்டனம் செய்கிறது; இவ்வரசாங்கங்கள் ''போலந்து மக்கள் தங்களது விதியைத் தாங்களே தீர்மானித்துக் கொள்ளும் வாய்ப்பைப் பறிக்கின்றன'' என்று அது கூறுகிறது. ''ஒரு முழுநாடு திரும்பத் திரும்ப வெட்டப்பட்டு, துண்டு துண்டாக விநியோகம் செய்யப்படுவதை எதிர்த்துப் போலந்து சமூக-ஜனநாயகவாதம் தனது ஆட்சேபத்தைத் தீர்மானமாகவும் ஆழ்ந்த முறையிலும் தெரிவித்துக் கொள்

கிறது''... ''ஒடுக்கப்பட்ட மக்களை விடுதலை செய்யும் பொறுப்பை'' ஹோஹன்ஸோலர்ன் குலத்திடம் ஒப்படைத்து விட்ட சோஷலிஸ்டுகளை அது வெறுப்புடன் கண்டிக்கிறது. சர்வதேசப் புரட்சிகரப் பாட்டாளி வர்க்கம் நடத்தப் போகிற இந்தப் போராட்டத்தில், சோஷலிஸத்திற்கான போராட்டத்தில், பங்கு கொண்டால்தான் ''தேசிய ஒடுக்கல் முறை என்ற தளைகள் அறுபடும், எல்லாவகையான அந்நிய மேலாதிக்கம் ஒழிக்கப்படும், வெவ்வேறு நாட்டு மக்களின் கூட்டணியில் முழு உரிமை பெற்ற ஒரு உறுப்பினராகப் போலந்து மக்கள் எல்லாத் துறைகளிலும் தடையின்றி முன்னேற வழி திறக்கும்'' என்ற தனது திடநம்பிக்கையை அது வெளியிடுகிறது. ''போலந்து மக்களுக்குப்'' போரானது ''இரு வகையில் சகோதரக்கொலை'' என்பதையும் அந்த அறிவிப்பு ஏற்கின்றது. (சர்வதேச சோஷலிஸ்டுக் கமிஷனின் அறிக்கை[110], இதழ் 2, செப்டம்பர் 27, 1915, பக்கம் 15; அகிலமும் போரும் என்ற கட்டுரைத் திரட்டு, பக்கம் 97ல் ருஷ்ய மொழி பெயர்ப்பைக் காணலாம்.)

இந்த அடிப்படைக் கருத்துக்கள் தேசங்களின் சுயநிர்ணய உரிமையை ஏற்றுக் கொள்வதிலிருந்து உட்கருத்தில் வேறுபடவில்லை; இரண்டாவது அகிலத்தின் பெரும்பான்மையான வேலைத்திட்டங்கள், தீர்மானங்கள்[111] ஆகியவற்றைக் காட்டிலும் இவை அரசியல் வரையறுப்புகளின் தெளிவின்மையும் உறுதியின்மையும் கொண்டதாக இருக்கின்றன என்பதே அவற்றின் குறை. துல்லியமான அரசியல் வரையறுப்புகளிலும் இக்கருத்துக்களை வெளியிடுவதற்கும் முதலாளித்துவ அமைப்புக்கோ அல்லது சோஷலிஸ அமைப்புக்கு மட்டுமோ இக்கருத்துக்கள் பொருத்தமானது என்பதைக் காட்டுவதற்கும் செய்யும் ஒவ்வொரு முயற்சியும் தேசங்களின் சுயநிர்ணயத்தை மறுப்பதில் போலந்து சமூக-ஜனநாயகவாதிகள் செய்யும் தவற்றை இன்னும் தெளிவாக விளக்கும்.

தேசங்களின் சுயநிர்ணயத்தை ஏற்றுக் கொண்ட 1896ம் ஆண்டின் லண்டன் சர்வதேச சோஷலிஸ்டுக் காங்கிரஸ் தீர்மானத்தில் மேலே கூறப்பட்ட ஆய்வுரைகளை அடிப்படையாகக் கொண்டு கீழ்வருவனவற்றைப் பற்றிய ஆணைக்

குறிப்புகள் சேர்த்துக் கொள்ளப்பட வேண்டும்: (1) ஏகாதிபத்தியத்தின்கீழ் இக்கோரிக்கை முன்வைக்கப்படுவதின் இன்றியமையாத் தேவை; (2) இக்கோரிக்கை உள்ளிட்ட அரசியல் ஜனநாயகக் கோரிக்கைகள் எல்லாவற்றின் அரசியல் சார்புத் தன்மையும் வர்க்க உள்ளடக்கமும்; (3) ஒடுக்கும் தேசங்களைச் சேர்ந்த சமூக-ஜனநாயகவாதிகளின் திட்டவட்டமான பணிகளையும் ஒடுக்கப்பட்ட தேசங்களைச் சேர்ந்த சமூக-ஜனநாயகவாதிகளின் திட்டவட்டமான பணிகளையும் வேறுபடுத்திக் காட்டுவதன் தேவை; (4) சந்தர்ப்பவாதிகளும் காவுத்ஸ்கிவாதிகளும் சுயநிர்ணயத்தை முன்னுக்குப் பின் முரணான முறையில், வெறும் சொல்லளவில் ஏற்றுக் கொள்வது, எனவே அரசியல் முக்கியத்துவத்தில் பார்ப்பின் அது வெறும் வேடம், கபடம்; (5) ''தங்களது சொந்த'' தேசங்களால் ஒடுக்கப்படும் காலனிகளுக்கும் தேசங்களுக்கும் பிரிந்து போகும் உரிமை வேண்டும் என்று கோராத சமூக-ஜனநாயகவாதிகள், குறிப்பாக ஆதிக்கம் வகிக்கும் தேசங்களைச் சேர்ந்த (பெரிய-ருஷ்ய, ஆங்கிலோ-அமெரிக்க, ஜெர்மானிய, பிரெஞ்சு, இத்தாலிய, ஜப்பானிய முதலிய) சமூக-ஜனநாயகவாதிகள், நடைமுறையில் தேசியவெறியினர்களுடன் இணைத்தவர்கள்; (6) முதலாளித்துவ அரசாங்கங்களைக் கவிழ்ப்பதற்கும் சோஷலிஸத்தை அடைவதற்குமான புரட்சிகரப் பொது மக்கட் போராட்டத்துக்கு இந்தக் கோரிக்கைக்கான போராட்டத்தையும் அரசியல் ஜனநாயகத்தின் எல்லா அடிப்படைக் கோரிக்கைகளுக்குமான போராட்டத்தையும் நேரடியாகக் கீழ்ப்படுத்துவதன் தேவை.

சிறு தேசங்களின் கண்ணோட்டத்தை, குறிப்பாக தேசியவாத முழக்கங்களால் மக்களை ஏமாற்றும் போலந்து முதலாளி வர்க்கத்தை எதிர்த்துப் போராடுவதன் விளைவாக சுயநிர்ணயத்தையே தவருகவே மறுக்கும் போலந்து சமூக-ஜனநாயகவாதிகளின் கண்ணோட்டத்தை அகிலத்தில் புகுத்துவது தத்துவார்த்த தவருகும்; இது மார்க்ஸியத்தை விட்டுவிட்டு புரூதோனியத்தை ஏற்றுக் கொள்வதாகும்; நடைமுறையில் ஆதிக்கம் வகிக்கும் தேசங்களின் மிகவும் ஆபத்

தான தேசியவெறியையும் சந்தர்ப்பவாதத்தையும் நம்மை யுமறியாமல் ஆதரிப்பதாகும்.

ரு.ச.ஜ.தொ. கட்சியின் மத்திய ஏடாகிய
சொத்ஸியால்-டெமக்ராட்டின் ஆசிரியர் குழு

**பின்குறிப்பு.** *Die Neue Zeit* பத்திரிகையின் இப்பொழுது வெளிவந்த 1916, மார்ச்சு 3ந் தேதி இதழில் காவுத்ஸ்கி படுமோசமான ஜெர்மன் தேசியவெறியின் பிரதிநிதியாகிய ஆஸ்டர்லித்ஸுக்கு கிறித்துவச் சமரச உணர்வுடன் கை கொடுக்கிறுர். ஹிண்டன்பர்குக்கும் இரண்டாம் வில்ஹெல முக்கும் குற்றேவல் செய்வதற்காக ஹாப்ஸ்பர்க் மன்னர் களின் ஆஸ்திரியாவிலுள்ள ஒடுக்கப்பட்ட தேசங்களுக்குப் பிரிந்து போகும் சுதந்திரத்தை மறுக்கும் அதே நேரத்தில் ருஷ்யப் போலந்துக்குப் புரிந்து போகும் உரிமை வேண்டும் என்பதை ஏற்றுக் கொள்கிறுர். காவுத்ஸ்கிவாதி தன்னைத் தானே வெளிப்படுத்திக் காட்டுவதற்கு மிகவும் நல்ல வழி தான்!

1916 ஜனவரி-பிப்ரவரியில்
எழுதப் பெற்றது

1916 ஏப்ரல், *Vorbote*,
இதழ் 2ல் வெளிவந்தது

நூல் திரட்டு,
தொகுதி 27,
பக்கங்கள் 252-66

## பதிப்பாளர் குறிப்புகள்

1 வரலாற்றில் கார்ல் மார்க்ஸ் தத்துவத்துக்கு விதிக்கப்பட்ட வருங்காலம் எனும் கட்டுரையைக் கார்ல் மார்க்ஸின் 30வது மரண தினத்தை ஒட்டி லெனின் எழுதினர்.—20.

2 பிரான்ஸிலும் இத்தாலியிலும் ஜெர்மனியிலும் ஆஸ்திரியாவிலும் ஹங்கேரியிலும் 1848-49ம் ஆண்டுகளில் நடைபெற்ற முதலாளித்துவ-ஜனநாயகப் புரட்சிகளும் முதலாளித்துவப் புரட்சிகளும் இங்கே குறிக்கப்படுகின்றன.—20.

3 பாரிஸ் கம்யூன்—1871ல் நடந்த புரட்சியின் விளைவாகப் பாரிஸ் நகரத் தொழிலாளர்களால் தோற்றுவிக்கப்பட்ட தொழிலாளி வர்க்க அரசாங்கம். வரலாற்றில் இது முதலாவது பாட்டாளி வர்க்கச் சர்வாதிகாரமாக விளங்கிற்று. மார்ச்சு 18 முதல் மே 28 வரை 72 நாட்கள் பாரிஸ் கம்யூன் நீடித்தது.—20.

4 நரோதியம்—ருஷ்யப் புரட்சிகர இயக்கத்தில் 1860-70களிடையே தோன்றிய ஒரு சிறுமுதலாளித்துவப் போக்கு. நரோதியவாதிகள் எதேச்சாதிகார முறையை ஒழிக்கவும் நிலப்பிரபுக்களின் நிலத்தை விவசாயிகளுக்குக் கொடுக்கவும் விரும்பினர்கள். ருஷ்யாவில் தவிர்க்க முடியாதவாறு முதலாளித்துவ உறவுகள் வளர்ந்து வருவதை அவர்கள் மறுத்தனர். எனவே, முக்கியமான புரட்சிச் சக்தி தொழிலாளி வர்க்கமல்ல விவசாயி மக்களே என்று கருதினர். சோஷலிஸத்தின் கரு கிராமக் கூட்டுச் சமூகத்தில் இருக்கிறதாக நினைத்தார்கள். ஜாராட்சியை எதிர்த்துப் போராடும்படி விவசாயிகளைத் தட்டியெழுப்புவதற்காக அவர்கள் ''மக்களிடம்'' (மக்கள் என்பதற்கு

ருஷ்ய மொழியில் நரோத் என்பார்கள்; எனவேதான் நரோதியவாதிகள் என்று பெயர் பெற்றனர்) சென்றூர்கள். ஆனுல் அவர்களிடம் ஆதரவு கிடைக்கவில்லே.

1880-90களிலும் நரோதியவாதிகள் ஜாராட்சியுடன் சமரசம் செய்து கொள்ளும் பாதையில் இறங்கினர், மற்ருேர் உழைப்பைச் சுரண்டுகிறவர்களாகிய பணக்கார விவசாயிகளின் (குலாக்குகள்) நலன்களே வெளியிட்டனர், மார்க்ஸியத்தை எதிர்த்துப் போராடினர்.—21.

5 முதலாவது அகிலம் (சர்வதேசத் தொழிலாளர் சங்கம்) —வரலாற்றில் பரந்த, புரட்சிகரத் தன்மையுடைய கார்ல் மார்க்ஸால் 1864ல் நிறுவப்பட்ட முதலாவது பாட்டாளி வர்க்கச் சர்வதேச அமைப்பு. தொழிலாளர்களின் சர்வதேச நிறுவனத்துக்கும் பாட்டாளி வர்க்கத்தின் சோஷலிஸத்திற்கான போராட்டத்துக்கும் முதலாவது அகிலம் அடித்தளம் இட்டது. இதைச் செய்ததன் மூலம் முதலாவது அகிலம் தனது பணியை நிறைவேற்றியது. நடைமுறையில் 1872ல் அதன் நடவடிக்கை முடிவடைந்தது. 1876ல் அதிகாரபூர்வமாக அது கலேக்கப்பட்டது.—22.

6 1905-07ல் நடந்த ருஷ்யப் புரட்சி, பல நாடுகளில் தேசிய விடுதலே இயக்கங்களின் வளர்ச்சி மீது பெருஞ் செல்வாக்கு செலுத்தியது.

19ம் நூற்றுண்டின் இறுதியில் தோன்றிய துருக்கிய முதலாளித்துவ-புரட்சிகர இயக்கம், ருஷ்யப் புரட்சியின் செல்வாக்கின் கீழ் 1908ல் தனது உச்சநிலேயை அடைந்தது. இளந் துருக்கியவாதிகள் தலேமை தாங்கிய இராணுவ எழுச்சியின் விளேவாக 1876ல் ஆண்டிய அரசியல் சட்டம் மீண்டும் அமுலாக்கப்பட்டது, நாடாளுமன்றம் கூட்டப்பட்டது.

இரானில் (பாரசீகத்தில்) ருஷ்யாவில் நடந்த 1905-07 புரட்சிக்குப் பிற்பாடு நிலப்பிரபுத்துவத்துக்கும் ஏகாதிபத்தியத்துக்கும் எதிரான புரட்சிகர இயக்கம் தீவிரமடைந்தது. வர்த்தக-தொழில் துறை முதலாளித்துவ வர்க்கத்தினர் இயக்கத்துக்குத் தலேமை தாங்கினர். புரட்சியின் போக்கிலே பாரசீக வரலாற்றில் முதலாவது நாடாளுமன்றம் கூட்டப்பட்டது, 1906ல் அது அரசியல் சட்டத்தை வகுத்தது. அந்த அரசியல் சட்டம் சில மாற்றங்களுடன் இதுவரை செயல்பட்டு வருகிறது. அன்னிய ஏகாதிபத்தியவாதிகளின் தலேயீட்டினுல் பாரசீகப்

புரட்சி தோற்கடிக்கப்பட்டது. பிரிட்டனும் ருஷ்யாவும் பாரசீகத்தைச் செல்வாக்கு மண்டலங்களாகப் பிரித்து விட்டு, புரட்சியின் ஆதாயங்களை ஒழித்துக் கட்டின.

1905-11ல் சீனுவில், முதலாளித்துவ வர்க்கத்தினர் அரசியல் சட்டத்துக்கும் பிரதேசங்களின் சுயநிர்ணயத்துக்கும் ஆன போராட்டத்தை நடத்தி வந்தார்கள், ஏகாதிபத்தியத்துக்கு எதிரான போராட்டம் என்னும் முழக்கத்தை முன்வைத்தார்கள். அதே ஆண்டுகளில் விவசாயிகள், தொழிலாளிகள் நடுவில் புரட்சிகர இயக்கம் தீவிரமடைந்தது. 1911ல் மஞ்சூரிய அரசவம்சம் ஆட்சியிலிருந்து நீக்கப்பட்டு சீன குடியரசாகப் பிரகடனம் செய்யப்பட்டது. புரட்சிகரச் சமூக-ஜனநாயகவாதியான ஸுன் யாட்-ஸென் குடியரசின் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். ஆனால் எதிர்ப்புரட்சி சக்திகளின் நிர்ப்பந்தத்தினால் அவர் பதவியிலிருந்து விலக்கப்பட்டு, குடியரசுத் தலைவராக யுவான் ஷிக்-கய் ஆனார். நாட்டில் எதிர்ப்புரட்சி வழிப்பட்ட இராணுவ சர்வாதிகாரம் நிறுவப்பட்டது.—23.

7 **மார்க்ஸியத்தின் மூன்று தோற்றுவாய்களும் மூன்று உள்ளடக்கக் கூறுகளும்** என்ற கட்டுரையைக் கார்ல் மார்க்ஸின் 30வது மரண தினத்தை ஒட்டி லெனின் எழுதினார்.—26.

8 **டூரிங்குக்கு மறுப்பு. திருவாளர் ஒய்கேன் டூரிங் அவர்கள் விஞ்ஞானத்தில் நிகழ்த்திய கவிழ்ப்பு** என்ற ஃபி. எங்கெல்ஸின் நூல் இங்கே குறிக்கப்படுகிறது.—28.

9 **இளம் ஹெகல்வாதிகள் அல்லது இடதுசாரி ஹெகல்வாதிகள்**—ஜெர்மன் கருத்துமுதல்வாதத் தத்துவஞானத்தில் ஹெகல் போக்கைச் சேர்ந்த இடதுசாரிப் பிரிவின் பிரதிநிதிகள்.

மார்க்ஸும் எங்கெல்ஸும் தொடக்கத்தில் இளம் ஹெகல்வாதிகளுடன் இணைந்தனர், பிற்பாடு அந்தப் போக்கின் தத்துவஞானத்தை எல்லாவகையிலும் விமர்சனத்திற்குட்படுத்தினர், அதன் வர்க்கத் தன்மையுடைய வேர்களை வெளிப்படுத்தி, விஞ்ஞானத் தொடர்பற்ற அதன் தன்மையை நிரூபித்துக் காட்டினர்.—37.

10 **புருதோனியம்**—விஞ்ஞானத்தன்மை அற்ற, மார்க்ஸியத்துக்கு முரணான சிறுமுதலாளித்துவ சோஷலிஸத்தில் ஒரு போக்கு. பிரெஞ்சு அராஜகவாதியான ஜொஸேஃப் புருதோன் இதன் சித்தாந்தவாதி. பெரிய முதலாளித்துவ

*உடைமைகளைப் புரூதோன் சிறுமுதலாளித்துவ நிலையில் நின்று விமர்சனம் செய்தார். சின்னஞ்சிறு தனிவுடைமையாளர்களை என்றும் நிலைத்து நீடிக்கச் செய்ய நினைத்து, ''மக்கள்'' வங்கிகளையும் ''பரிமாற்ற'' வங்கிகளையும் அமைக்க வேண்டுமென்று கருதினார். இவற்றின் துணை கொண்டு தொழிலாளர்கள் உற்பத்திச் சாதனங்களைப் பெற்று தொழில் வினைஞர்களாகித் தமது உற்பத்திப் பொருள்கள் ''நியாய விலைக்கு'' விற்பனையாவதற்கு ஏற்பாடு செய்து கொள்ள முடியுமென்று வாதாடினார். பாட்டாளி வர்க்கத்திற்குள்ள வரலாற்றுப் பணியைப் புரிந்து கொள்ளத் தவறிய அவர், வர்க்கப் போராட்டத்தையும் பாட்டாளி வர்க்கப் புரட்சியையும் பாட்டாளி வர்க்கச் சர்வாதிகாரத்தையும் மறுத்தார். அராஜகவாத நிலையிலிருந்து அரசே தேவையில்லை என்றார். மார்க்ஸ் தமது* **மெய்யறிவின் வறுமை** *எனும் நூலில் புரூதோனியத்தைத் தீவிரமாகக் கண்டித்து விமர்சனம் செய்தார்.—37.*

11 **பக்கூனின்வாதம்**—*மி. அ. பக்கூனின் என்பவரது பெயரால் அழைக்கப்பட்ட போக்கு. பக்கூனின் அராஜகவாதத்தின் சித்தாந்தவாதி, மார்க்ஸியத்துக்கும் விஞ்ஞான சோஷலிஸத்துக்கும் கடும் பகைவர். எல்லா வகை அரசையும் மறுப்பதும் பாட்டாளி வர்க்கத்தின் வரலாற்று முக்கியத்துவம் வாய்ந்த பாத்திரத்தைப் புரிந்து கொள்ளாமையும் பக்கூனின்வாதத்தின் அடிப்படைக் கோட்பாடாக விளங்கியது. பக்கூனின்வாதிகளின் எண்ணப்படி மக்களின் கலக எழுச்சிகள் ஒரே சொடுக்கில் நிகழ்ந்து முடிகின்றன; ''தலைசிறந்த'' நபர்களைக் கொண்ட இரகசியப் புரட்சிச் சங்கம் இந்தக் கலக எழுச்சிகளுக்குத் தலைமை வகித்து நடத்த வேண்டும். சதிகளும் திடீர்க் கலக எழுச்சிகளும் பயங்கர நடவடிக்கைகளும் கொண்ட அவர்களது போர்த்தந்திரம் குருட்டுச் சாகசம் நிறைந்ததாகவும் எழுச்சிகள் பற்றிய மார்க்ஸியப் போதனைக்கு எதிராகவும் இருந்தது. பக்கூனின் தனது கருத்துக்களை சர்வதேசத் தொழிலாளர் இயக்கத்தின்மீது சுமத்த முயற்சி செய்தார். ஜெனரல் கவுன்சிலைக் கைப்பற்றுவதைக் குறிக்கோளாக வைத்துக் கொண்டு அவர் முதலாவது அகிலத்தில் சேர்ந்தார். கலைக்கும் நடவடிக்கைகளுக்காக, 1872ம் ஆண்டில் ஹேக் நகரில் நடந்த பேராயத்தில், முதலாவது அகிலத்திலிருந்து விலக்கப்பட்டார்.—37.*

12 **நவீன-கான்ட்டியவாதிகள்** — முதலாளித்துவத் தத்துவ ஞானத்திலுள்ள பிற்போக்குப் பிரிவைச் சேர்ந்தவர்கள். இது 19ம் நூற்ருண்டின் நடுவில் ஜெர்மனியில் தோன்றியது. அதன் ஆதரவாளர்கள் கான்ட்டின் தத்துவஞானத்தில் மிகவும் பிற்போக்கான, கருத்துமுதல்வாதக் கூறுகளை மேற்கொண்டு, அதிலுள்ள பொருள்முதல்வாதக் கூறுகளை எதிர்த்தனர். ''கான்ட்டுக்குத் திரும்பு'' என்பதாய் முழங்கி நவீன-கான்ட்டியவாதிகள் கான்ட்டின் கருத்துமுதல்வாதத்தை உயிர்ப்பிக்க முயன்றனர், வரலாற்று வழிப்பட்ட இயக்கவியல் பொருள்முதல்வாதத்துக்கு எதிராகப் போராடினர்.—39.

13 1908-09ம் ஆண்டுகளில் வி.இ. லெனின் **பொருள்முதல்வாதமும் அனுபவவாத விமர்சனமும்** எனும் நூலை எழுதினர். இதில் அவர் திருத்தல்வாதத்தைக் கடுமையாக விமர்சித்தார்.—41.

14 **அரசியல்சட்ட-ஜனநாயகக் கட்சி** (காடேட்டுகள்) — ருஷ்ய மிதவாத-முடியரசுவாத முதலாளி வர்க்கத்தினரின் முதன்மையான கட்சியாக இருந்தது. இக்கட்சி 1905ல் நிறுவப்பட்டது. முதலாளி வர்க்கத்தினர், ஜெம்ஸ்துவோ உறுப்பினர்களான நிலப்பிரபுக்கள், முதலாளித்துவப் படிப்பாளர் பகுதியினர் அதில் சேர்ந்திருந்தனர். காடேட்டுகள் சட்டத்துக்குட்பட்ட முடியரசைக் கோருவதற்கு மேல் செல்லவில்லை. முதலாவது உலகப் போரின் போது அவர்கள், ஜார் அரசாங்கத்தின் நாடுபிடிக்கும் கொள்கையை ஆதரித்தார்கள். 1917 பிப்ரவரியில் நடந்த முதலாளித்துவ-ஜனநாயகப் புரட்சியின் போது காடேட்டுகள் முடியரசைக் காப்பாற்ற முயன்றனர். முதலாளித்துவ தற்காலிக அரசாங்கத்தில் தலைமை பதவிகள் வகித்த அவர்கள் மக்களுக்குப் பகைமையான எதிர்ப்புரட்சிக் கொள்கையைக் கடைப்பிடித்தார்கள்.—46.

15 **மில்லிரான் போக்கு**—பிரெஞ்சு சோஷலிஸ்டுச் சீர்திருத்தவாதி மில்லிரான் (Millerand) பெயரைப் பெற்ற சமூக-ஜனநாயகவாதத்தில் சந்தர்ப்பவாதப் போக்கு. 1899ல் மில்லிரான் பிரெஞ்சுப் பிற்போக்கு முதலாளித்துவ அரசாங்கத்தில் சேர்ந்து கொண்டு அதன் மக்களுக்குப் பகைமையான கொள்கையைச் செயல்படுத்த உதவினுர். இது திருத்தல்வாதமும் துரோகமும் என்றும் சமூக-சீர்திருத்தவாதிகள் முதலாளித்துவ அரசாங்கத்தில் சேர்ந்ததன் மூலமாக முதலாளி வர்க்கத்தினரின் மறைவுத்

திரையாகச் செயல்பட்டனர் என்றும் அவர்களின் துணை கொண்டு அவ்வரசாங்கம் மக்களை ஏமாற்றியது என்றும் லெனின் குறிப்பிட்டார்.—46.

16 **கெட்டின் ஆதரவாளர்கள்** (Guesdists)—*19ம் நூற்றுண்டின் இறுதியிலும் 20ம் நூற்றுண்டின் தொடக்கத்திலும் பிரெஞ்சு சோஷலிஸ்டு இயக்கத்தில் ழூல் கெட்டு, போல் லஃபார்க் ஆகியோர் தலைமையில் செயல்பட்ட புரட்சிகர மார்க்ஸியப் போக்கு. 1882ல் செயின்ட் எத்தியேன் காங்கிரஸில் பிரெஞ்சு தொழிலாளர் கட்சி பிளவுபட்டபின், கெட்டின் ஆதரவாளர்கள் பழைய பெயருடன் தனியானதொரு கட்சியை நிறுவினர்.*

*1901ல் ழூல் கெட்டு தலைமை தாங்கிய புரட்சிகர வர்க்கப் போராட்டத்தின் ஆதரவாளர்கள் பிரான்ஸின் சோஷலிஸ்டுக் கட்சியை நிறுவினர் (இக்கட்சியின் உறுப்பினர்கள் கட்சியின் தலைவருடைய பெயரில் கெட்டுவாதிகள் என்று அழைக்கப்பட்டனர்). 1905ல் கெட்டுவாதிகள் சீர்திருத்தவாத வழிப்பட்ட பிரெஞ்சு சோஷலிஸ்டுக் கட்சியில் ஒன்றுப்பட்டனர். ஏகாதிபத்திய உலகப் போரின் போது (1914-18) இக்கட்சியின் தலைவர்கள் தொழிலாளி வர்க்கத்துக்குத் துரோகம் செய்து சமூக-தேசியவெறிக் கொள்கையைக் கடைப்பிடித்தார்கள்.*

**ழொரேஸ் ஆதரவாளர்கள்** (Jauresists)—*பிரெஞ்சு சோஷலிஸ்டு ழான் ழொரேஸின் ஆதரவாளர்கள். ழான் ழொரேஸ் பிரெஞ்சு சோஷலிஸ்டு இயக்கத்தின் வலதுசாரி, சீர்திருத்தவாதப் பிரிவுக்குத் தலைமை தாங்கினர். ழொரேஸ்வாதிகள் மார்க்ஸியத்தின் அடிப்படைக் கோட்பாடுகளைப் பரிசீலிக்க வேண்டும் என்று கோரினர்கள், பாட்டாளி வர்க்கம் முதலாளி வர்க்கத்துடன் ஒத்துழைக்க வேண்டும் என்று உபதேசித்தார்கள். 1902ல் அவர்கள் பிரெஞ்சு சோஷலிஸ்டுக் கட்சியை நிறுவினர்; இக்கட்சி சீர்திருத்தவாதப் போக்கைக் கடைப்பிடித்தது.*

**புருஸ் ஆதரவாளர்கள்** (Broussists) *அல்லது சாத்தியப்பாடுவாதிகள் (புருஸ், மலோன் முதலியோர்)—பிரெஞ்சு சோஷலிஸ்டு இயக்கத்தில் 1880-90களில் தோன்றிய சிறுமுதலாளித்துவ, சீர்திருத்தவாதப் போக்கு. பாட்டாளி வர்க்கத்தின் புரட்சிகர வேலைத்திட்டத்தையும் போர்த்தந்திரத்தையும் அவர்கள் மறுத்தனர்; தொழிலாளர் இயக்கத்தின் சோஷலிஸக் குறிக்கோளை*

மறைக்க முயற்சித்தனர்; தொழிலாளர் போராட்டத்தைச் ''சாத்தியப்பாடுள்ள'' (possible) நோக்கங்களை அடைவதற்கான வரம்புக்குள் கட்டுப்படுத்தி வைக்க வேண்டும் என்று கோரினர் (அதிலிருந்து ''சாத்தியப்பாடுவாதிகள்'' எனும் பெயர் தோன்றியது). சாத்தியப்பாடுவாதிகளின் செல்வாக்கு பெரும்பாலும் பிரான்ஸின் பின்தங்கிய பகுதிகளிலும் வளர்ச்சி குன்றிய தொழிலாளர் பகுதியினர் மீதும் இருந்தது.

பிற்பாடு சாத்தியப்பாடுவாதிகளில் பெரும்பாலோர் ழான் ழொரேஸின் தலைமையில் நிறுவப்பட்ட சீர்திருத்தவாத வழிப்பட்ட பிரெஞ்சு சோஷலிஸ்டுக் கட்சியில் சேர்ந்தார்கள்.—48.

17 **பிரிட்டிஷ் சமூக-ஜனநாயகச் சம்மேளனம்** (The Social-Democratic Federation) 1884ல் நிறுவப்பட்டது. சீர்திருத்தவாதிகளும் அராஜகவாதிகளும் மற்றும் ஆங்கிலேய சோஷலிஸ்டு இயக்கத்தின் இடதுசாரிப் பிரிவினராகிய புரட்சிகரச் சமூக-ஜனநாயகவாதிகளும் மார்க்ஸியத்தின் ஆதரவாளர்களும் இதில் இருந்தனர். இச்சம்மேளனத்தின் வறட்டுத் தத்துவவாதத்தையும் குறுங்குழுவாதத்தையும் எங்கெல்ஸ் கண்டித்து இது பிரிட்டிஷ் தொழிலாளர் இயக்கத்திலிருந்து பிரிந்து நிற்பதற்காகவும், தொழிலாளர் இயக்கத்தின் சிறப்பு இயல்புகளைப் புரிந்து கொள்ள முடியாதிருப்பதற்காகவும் இதை விமர்சித்தார். சமூக-ஜனநாயகச் சம்மேளனத்துக்கு 1907ல் சமூக-ஜனநாயகக் கட்சி என்று பெயரிடப்பட்டது. இக்கட்சி சுயேச்சைத் தொழிற் கட்சியின் இடதுசாரிக் கூறுகளுடன் சேர்ந்து 1911ல் பிரிட்டிஷ் சோஷலிஸ்டுக் கட்சி ஆயிற்று. பிரிட்டிஷ் கம்யூனிஸ்டுக் கட்சி அமைக்கப்படுவதற்கு 1920ல் பிரிட்டிஷ் சோஷலிஸ்டுக் கட்சியும் கம்யூனிஸ்டு ஒற்றுமைக் குழுவும் முக்கியப் பங்காற்றின.—48.

18 **பிரிட்டிஷ் சுயேச்சைத் தொழிற் கட்சி** (The Independent Labour Party) — இங்கிலாந்தில் வேலைநிறுத்தப் போராட்டமும் பிரிட்டிஷ் தொழிலாளி வர்க்கம் முதலாளித்துவக் கட்சிகளைச் சாராது சுயேச்சையாகச் செயல்பட வேண்டுமென்ற இயக்கமும் தீவிரமடைந்த போது, 1893ல் துவக்கப்பட்ட சீர்திருத்தவாதக் கட்சியாகும். தொழிற் சங்கங்களின் உறுப்பினர்களும், ஃபேபியன்களின் (குறிப்பு 104ஐப் பார்க்கவும்) செல்வாக்குக்கு

உட்பட்ட படிப்பாளர் பகுதியினரும் சிறுமுதலாளி வர்க்கத்தினரும் அதில் சேர்ந்து கொண்டனர். முதலாளித்துவக் கட்சிகளைச் சாராத ஒரு சுதந்திரமான நிலை அதற்குள்ளது என்று அவர்கள் உரிமை கொண்டாட்டினர் என்றபோதிலும் உண்மையில் இது சோஷலிஸத்திலிருந்து தான் ''சுயேச்சையானது'' என்றும் மிதவாதத்தையே பெரிதும் ''சார்ந்திருக்கிறது'' என்றும் லெனின் அதைப் பற்றி எழுதினர். முதலாவது உலகப் போரின் போது அது மையவாத நிலையை அனுசரித்தது, பிற்பாடு சமூக-தேசியவெறிக் கொள்கையை கடைப்பிடிக்கத் தொடங்கியது. —48.

19 **முழுமையாளர்கள்** (integralists)—ஒரு வகைச் சிறு முதலாளித்துவ சோஷலிஸமான ''முழுமையான'' சோஷலிஸம் என்பதன் ஆதரவாளர்கள். இத்தாலிய சோஷலிஸ்டுக் கட்சியில் மையவாதப் போக்கினராய் இருந்த இவர்கள் இந்நூற்றுண்டின் தொடக்கத்தில் சில பிரச்சினைகளில் கடைக்கோடியான சந்தர்ப்பவாத நிலையைக் கடைப்பிடித்த, பிற்போக்குவாத முதலாளி வர்க்கத்தினருடன் ஒத்துழைத்து வந்த சீர்திருத்தவாதிகளை எதிர்த்துப் போராடினர்.—48.

20 **மென்ஷிவிக்குகள்** — ருஷ்ய சமூக-ஜனநாயகவாதத்தில் நிலவிய சந்தர்ப்பவாதப் போக்கைச் சேர்ந்தோர். மென்ஷிவிக்குகள் (சிறுபான்மையோர்) என்ற பெயரை அவர்கள் ருஷ்யாவின் சமூக-ஜனநாயகத் தொழிலாளர் கட்சியின் இரண்டாவது காங்கிரஸில் (1903) பெற்றனர். இந்தக் காங்கிரஸின் இறுதியில் கட்சியின் மத்திய அமைப்புகளுக்கு நடைபெற்ற தேர்தலில் இவர்கள் காங்கிரஸ் பிரதிநிதிகளிடமிருந்து சிறுபான்மை வாக்குகளையே பெற்றனர். லெனின் தலைமையில் அமைந்த புரட்சிகர சமூக-ஜனநாயகவாதிகள் பெரும்பான்மை வாக்குகளைப் பெற்று, போல்ஷிவிக்குகள் (பெரும்பான்மையோர்) என்று அழைக்கப்படலாயினர்.

மென்ஷிவிக்குகள் கட்சியின் புரட்சி வேலைதிட்டத்தையும் புரட்சியில் பாட்டாளி வர்க்கத்தின் தலைமைப் பாத்திரத்தையும் தொழிலாளி வர்க்கத்துக்கும் விவசாயி மக்களுக்கும் இடையிலான கூட்டணியையும் எதிர்த்தனர். மிதவாத முதலாளித்துவ வர்க்கத்தாருடன் சமரசம் செய்து கொள்ளும் கொள்கையை அனுசரித்தனர்.

*1905-07ம் ஆண்டுப் புரட்சி தோல்வியுற்றபின் சட்ட விரோதமாக இயங்கி வந்த புரட்சிகரக் கட்சியை ஒழித்திட முயன்றனர். 1912 ஜனவரியில் நடந்த ரு.ச.ஜ. தொ. கட்சியின் ஆருவது அனைத்து ருஷ்ய மாநாட்டில் மென்ஷிவிக்குகள் கட்சியிலிருந்து விலக்கப்பட்டனர்.*

*1917 பிப்ரவரியில் நடைபெற்ற முதலாளித்துவ-ஜனநாயகப் புரட்சியைத் தொடர்ந்து மென்ஷிவிக்குகள் முதலாளித்துவத் தற்காலிக அரசாங்கத்தின் உறுப்பினர்களாகி, அதன் ஏகாதிபத்தியக் கொள்கையை ஆதரித்தனர்; மூண்டுவந்த பாட்டாளி வர்க்கப் புரட்சியை எதிர்த்துப் போராடினர்.*

*அக்டோபர் சோஷலிஸப் புரட்சிக்குப் பிறகு மென்ஷிவிக்குகள் வெளிப்படையாகவே எதிர்ப்புரட்சிக் கட்சியாகி சோவியத் ஆட்சியதிகாரத்தை எதிர்த்துச் சதிகளும் கலகங்களும் செய்தனர்.—48.*

21 ''புரட்சிகர சிண்டிக்கலிஸம்''—*19ம் நூற்ருண்டின் இறுதியில் சில மேற்கு ஐரோப்பிய நாடுகளில் தொழிலாளி வர்க்க இயக்கத்தில் தோன்றிய சிறு முதலாளித்துவ, அரை அராஜகவாதப் போக்கு. அதன் ஆதரவாளர்கள் தொழிலாளி வர்க்க அரசியல் போராட்டத்தின் தேவையை மறுத்தனர்; புரட்சி இல்லாமலே தொழிற் சங்கங்கள் தொழிலாளர்களது பொது வேலைநிறுத்தத்தின் மூலம் முதலாளித்துவத்தை வீழ்த்திவிடலாம், பொருளாதாரத்தைத் தமது பிடிக்குள் கொண்டுவந்துவிடலாமென்று கருதினர்.—48.*

22 ஜெர்மன் சமூக-ஜனநாயகவாதிகளின் ஹனேவர் காங்கிரஸ் *1899 அக்டோபர் 9—14ல் நடைபெற்றது. நிகழ்ச்சி நிரலின் முதன்மையான பிரச்சினையாகிய ''கட்சியின் அடிப்படைக் கருத்துக்கள், போர்த்தந்திரம் ஆகியவற்றின் மீதான தாக்குதல்'' பற்றி ஔகுஸ்ட் பெபெல் சொற்பொழிவு ஆற்றினுர். அவரது உரை, மார்க்ஸியக் கருத்துக்களைப் பாதுகாத்தல் எப்படி, உண்மையிலேயே சோஷலிஸத் தன்மையுடைய தொழிலாளர் கட்சிக்காகப் போராடுதல் எப்படி என்பதற்கு வெகுநாட்களுக்கு முன்னுதாரணமாய் இருக்கும் என்று லெனின் எழுதினுர். இந்தக் காங்கிரஸ் பெர்ன்ஷ்டைனுடைய திருத்தல்வாதக் கருத்துக்களைக் கண்டித்த போதிலும் பெர்ன்ஷ்டைன் வாதத்தை விரிவான விமர்சனத்துக்கு உட்படுத்தவில்லை.—53.*

23 ரபோச்சயா மீசில் (''தொழிலாளர் சிந்தனை'') —''பொருளாதாரவாதிகளின்'' (குறிப்பு 27ஐப் பார்க்கவும்) செய்தியேடு. 1897 அக்டோபருக்கும் 1902 டிஸம்பருக்கும் இடையில் வெளியிடப்பட்டது.—55.

24 1895லும் இன்னும் முக்கியமாய் 1896லும் நடைபெற்ற பீட்டர்ஸ்பர்க் தொழிலாளர்களின், பெரும்பாலும் நெசவாளிகளின், வேலைநிறுத்தங்களை லெனின் இங்கு குறிப்பிடுகிறார். ''தொழிலாளி வர்க்கத்தினரின் விடுதலைக்கான போராட்டக் குழு'' அவற்றுக்குத் தலைமை தாங்கியது. பீட்டர்ஸ்பர்க் வேலைநிறுத்தங்கள் மாஸ்கோவிலும் ஏனைய ருஷ்ய நகரங்களிலும் தொழிலாளி வர்க்க இயக்கத்தைக் கிளர்ந்தெழச் செய்தன. ஜாரிஸ்டு அரசாங்கத்தை, ஆலைச் சட்டங்களை மறுபரிசீலனை செய்ய முடுக்கியதோடன்றி, 1897 ஜூன் 2 (14, முன்னால் குறிக்கப்படும் தேதி பழைய ருஷ்ய காலண்டர்படி, அடைப்புக் குறிகளில் குறிக்கப்படுவது சர்வதேசியக் காலண்டர்படியான தேதி) ஆலைச் சட்டத்தைப் பிறப்பிக்கும்படியும் இவை நிர்ப்பந்தித்தன; இச்சட்டம் ஆலைகளில் பதினொன்றரை மணி நேரத்துக்கு மேல் வேலை நாள் நீடிக்கக் கூடாது என வரம்பிட்டது.—57.

25 பஷி-புஜூக் கும்பல் — 18-19ம் நூற்றாண்டுகளில் துருக்கி இராணுவத்திலிருந்த ஒரு நிரந்தரமற்ற படைப்பிரிவினர். கட்டுப்பாடின்மைக்கும் கொடுமைக்கும் கொள்ளையிடலுக்கும் பெயர் பெற்றவர்கள்.—58.

26 முதலாம் ரு.ச.ஜ.தொ. கட்சிக் காங்கிரஸின் ஆணைக்கிணங்கவும் ரு.ச.ஜ.தொ. கட்சி மத்தியக் குழுவின் சார்பாகவும் 1898ல் வெளியிடப்பட்ட ருஷ்யாவின் சமூக-ஜனநாயகத் தொழிலாளர் கட்சியின் அறிக்கையை இது குறிக்கிறது. அரசியல் சுதந்திரத்துக்காகவும் எதேச்சாதிகாரமுறையைத் தூக்கியெறிவதற்காகவும் போராடுவதை ருஷ்யாவின் சமூக-ஜனநாயகவாதிகளின் முதன்மையான பணியாக இவ்வறிக்கை வகுத்துத் தொழிலாளி வர்க்க இயக்கத்தின் பொதுப் பணிகளுடன் அரசியல் போராட்டத்தையும் இணைத்தது.—59.

27 ''பொருளாதாரவாதப் போக்கு'' அல்லது ''பொருளாதாரவாதம்''—பத்தொன்பதாம் நூற்றாண்டின் இறுதியிலும் இருபதாம் நூற்றாண்டின் துவக்கத்திலும் ருஷ்யச் சமூக-ஜனநாயகவாதத்தில் தோன்றிய ஒரு சந்தர்ப்பவாதப்

போக்கு. ருஷ்யாவில் ரபோச்சயா மீசில் செய்தியேடும் (1897-1902) வெளிநாடுகளில் ரபோச்சியே தேலோ சஞ்சிகையும் (1899-1902) அதன் பத்திரிகைகளாக இருந்தன.

மிதவாத முதலாளி வர்க்கத்தினர்தான் அரசியல் போராட்டத்தை நடத்த வேண்டும் என்று ''பொருளாதாரவாதிகள்'' அடித்துப் பேசி, சம்பள உயர்வு, வேலை நிலைமைகளின் மேம்பாடு முதலியவற்றிற்கான பொருளாதாரப் போராட்டத்தோடு தொழிலாளி வர்க்கத்தின் பணிகளை வரம்பிட்டுத் தளையிட்டனர். அவர்கள் தொழிலாளி வர்க்கக் கட்சிக்குரிய தலைமைப் பாத்திரத்தை நிராகரித்தனர், இயக்கத்தின் தன்னியல்பான நிகழ்வுப் போக்கைப் பார்த்து வருவதே, நிகழ்ச்சிகளைப் பதிவு செய்வதே கட்சியின் வேலை என்று கருதினர். வர்க்கத் தன்மையுள்ள, புரட்சிகரப் பாதையிலிருந்து தொழிலாளி வர்க்கம் விலகி முதலாளி வர்க்கத்தினரின் அரசியல் வாலாக மாற வேண்டும் எனும் அபாயத்தைப் ''பொருளாதாரவாதம்'' குறித்தது. ''பொருளாதாரவாதத்தை'' எதிர்த்துப் போராடுவதில் லெனின் தலைமையிலான இஸ்க்ரா முக்கியமான பங்காற்றியது. லெனின் எழுதிய **என்ன செய்ய வேண்டும்?** எனும் நூல், ''பொருளாதாரவாதத்தைச்'' சித்தாந்த வழியில் தோல்வியுறச் செய்தது.—60.

28 ரபோச்சியே தேலோ (''தொழிலாளர் இலட்சியம்'')— ருஷ்ய சமூக-ஜனநாயகவாதிகளின் வெளிநாட்டுக் குழுவின் சஞ்சிகை; 1899 ஏப்ரல் முதல் 1902 பிப்ரவரி வரை ஜினீவாவில் வெளியிடப்பட்டது. ரபோச்சியே தேலோவின் ஆசிரியர் குழு ''பொருளாதாரவாதிகளின்'' வெளிநாட்டு மையமாக இருந்தது. ரபோச்சியே தேலோ தொழிலாளி வர்க்கத்தின் மார்க்ஸியக் கட்சியை நிறுவுவது பற்றிய இஸ்க்ராவின் திட்டத்தை வெளிப்படையாக எதிர்த்தது; தொழிற்சங்கவாதக் கொள்கையைப் பின்பற்ற வேண்டும் என்று கோரியது; விவசாய மக்களின் புரட்சிகர ஆற்றலை மறுத்தது.—61.

29 லிஸ்தோக் ரபோச்சிகோ தேலா (''ரபோச்சியே தேலோவின் துண்டுப்பிரசுரம்'')—ரபோச்சியே தேலோ சஞ்சிகையின் இணைமலர் இது. 1900 ஜூன் முதல் 1901 ஜூலை வரை ஜினீவாவில் வெளியிடப்பட்டது.—61.

30 இஸ்க்ரா (''தீப்பொறி'')—சட்டவிரோதமாக வெளியிடப்பட்ட முதலாவது அனைத்து ருஷ்ய மார்க்ஸியப் பத்திரிகை; 1900ல் இதை லெனின் நிறுவினார். தொழிலாளி வர்க்கத்தின் புரட்சிகரமான மார்க்ஸியக் கட்சியைப் படைப்பதில் இது நிர்ணயமான பாத்திரம் வகித்தது.

லெனினுடைய இஸ்க்ராவின் முதல் இதழ் 1900 டிஸம்பரில் லைப்ஸிக் நகரில் வெளிவந்தது. பிந்தைய இதழ்கள் மியூனிக் நகரிலிருந்தும் லண்டனிலிருந்தும் ஜினீவாவிலிருந்தும் வெளிவந்தன.

லெனின், பிளெஹானவ், மார்த்தவ், அக்ஸெல்ரோடு, பத்ரேஸவ், ஸஸூலிச் ஆகியோர் அதன் ஆசிரியராக இருந்தார்கள். செயலளவில் இஸ்க்ராவின் தலைமை ஆசிரியராகவும் நிர்வாகியாகவும் வி.இ. லெனின் இருந்தார்.

கட்சிச் சக்திகளை ஒன்றுபடுத்துவதிலும் கட்சி ஊழியர்களின் அணியை உருவாக்கி அவர்களை இயக்கத்தில் சேர்ப்பதிலும் இஸ்க்ரா மையமாக ஆயிற்று.

லெனினுடைய முன்முயற்சியினாலும் அவரது நேரடிப் பணி மூலமும் இஸ்க்ராவின் ஆசிரியர் குழு கட்சிக்காக ஒரு வேலைத்திட்ட மசோதாவை வரைந்து, 1903 ஜூலை — ஆகஸ்டில் நடைபெற்ற ரு.ச.ஜ.தொ. கட்சியின் இரண்டாவது காங்கிரஸுக்கு ஏற்பாடு செய்தது. இக்காங்கிரஸ் உண்மையில் புரட்சிகரமான மார்க்ஸியக் கட்சியை ருஷ்யாவில் தோற்றுவித்தது. இரண்டாவது காங்கிரஸுக்குச் சிறிது பிறகு, மென்ஷிவிக்குகள் இஸ்க்ராவைப் பிடித்துக் கொண்டனர்; 52ம் இதழ் தொடங்கி இப்பத்திரிகை புரட்சிகர மார்க்ஸியவாதிகளின் பத்திரிகையாக இருந்த நிலையை இழந்துவிட்டது. பழைய, புரட்சித்தன்மையுடைய இஸ்க்ராவிலிருந்து வேறுபடுத்துவதற்காக லெனின் அதற்குப் புதிய, சந்தர்ப்பவாத இஸ்க்ரா என்று பெயரிட்டார்.—61.

31 1901 பிப்ரவரி—மார்ச்சு மாதங்களில் பீட்டர்ஸ்பர்க், மாஸ்கோ, கீவ், கார்க்கவ், காஸான், யாரஸ்லாவல், வார்ஸோ, பேலஸ்தோக், தோம்ஸ்க், ஒதேஸ்ஸா, மற்றும் பிற பல ருஷ்ய நகரங்களில் நடந்த தொழிலாளர், மாணவர் திரளின் புரட்சி நடவடிக்கையை இது குறிக்கிறது. அரசியல் ஆர்ப்பாட்டங்கள், கூட்டங்கள், வேலை நிறுத்தங்கள் நடைபெற்றன.

கல்விச்சாலைகளினுள் சுதந்திரம் வேண்டும் எனும் கோரிக்கையின் அடிப்படையில் 1900-01 காலத்தில் தோன்றிய மாணவர் இயக்கம் ஜார் அரசாங்கத்தின் பிற்

போக்கான கொள்கையை எதிர்க்கும் புரட்சிகரமான அரசியல் நடவடிக்கைகளின் தன்மை பெற்றது. முன்னணியிலுள்ள ருஷ்யத் தொழிலாளிகளின் ஆதரவும் ருஷ்யச் சமுதாயத்தின் அனைத்துப் பகுதிகளின் ஆதரவும் அதற்குக் கிடைத்தது.

ஒரு மாணவர் கூட்டத்தில் பங்கெடுத்துக் கொண்டதற்காகக் கீவ் பல்கலைக்கழகத்தைச் சேர்ந்த 183 மாணவர்கள் வலுக்கட்டாயமாக இராணுவச் சேவையில் சேர்க்கப்பட்டதே 1901 பிப்ரவரி—மார்ச்சு மாத ஆர்ப்பாட்டங்களுக்கும் வேலைநிறுத்தங்களுக்கும் நேரடிக் காரணமாகும். புரட்சி இயக்கத்தில் கலந்து கொண்டவர்கள் மீது அரசாங்கம் அடக்குமுறையைச் செலுத்தியது. பீட்டர்ஸ்பர்க் காஸான் மாதாகோவில் முன் 1901 மார்ச்சு 4 (17)ல் நடந்த ஆர்ப்பாட்டம் மிருந்த மிருகத்தனத்துடன் நசுக்கப்பட்டது. 1901 பிப்ரவரி—மார்ச்சு நிகழ்ச்சிகள் ருஷ்யாவில் புரட்சி வளர்ந்து வருவதைக் காட்டின; அரசியல் முழக்கங்களுடன் நடைபெற்ற இயக்கத்தில் தொழிலாளர்கள் பங்கெடுத்தார்கள் எனும் உண்மை பெரும் முக்கியத்துவம் பெற்றுள்ளது.—66.

32 **என்ன செய்ய வேண்டும்? (நம் இயக்கத்தின் சூடேறியப் பிரச்சினைகள்)** எனும் வி.இ. லெனின் எழுதிய நூல் இங்கே குறிப்பிடப்படுவது. 1902 மார்ச்சு மாதத்தில் டிட்ஸ் பதிப்பகத்தார் இதை ஷ்டுட்கார்ட்டில் வெளியிட்டனர். —66.

33 **ஜெம்ஸ்துவோ**—ஜாராட்சி ருஷ்யாவின் மத்தியப் பிராந்தியங்களில் பிரபுவம்சத்தினர் தலைமையில் 1864ல் அமுலாக்கப்பட்ட வட்டார சுயநிர்வாகம். ஜெம்ஸ்துவோக்களின் அதிகார எல்லை வட்டாரப் பொருளாதாரப் பிரச்சினைகளுக்குள் மட்டுமே (மருத்துவமனைகள் கட்டுதல், சாலைகள் அமைத்தல், புள்ளிவிவரங்கள் தொகுத்தல், காப்பீடு முதலியன) வரையறுக்கப்பட்டிருந்தது. அவற்றின் செயல்கள் கவர்னர்களதும் உள்துறை அமைச்சரகத்தினதும் கண்காணிப்பில் நடந்தன. அரசாங்கத்துக்குப் பிடிக்காத தீர்மானங்களை கவர்னர்களும் உள்துறை அமைச்சரகமும் தடைசெய்ய முடிந்தது.—71.

34 **யூழ்னி ரபோச்சி** (''தெற்கத்திய தொழிலாளி'')—1900 ஜனவரி முதல் 1903 ஏப்ரல் வரை அதே பெயர் கொண்ட குழுவால் சட்டவிரோதமாக வெளிவந்த சமூக-ஜன

நாயகவாதப் பத்திரிகை. ''பொருளாதாரவாதத்தையும்'' பயங்கரவாதத்தையும் எதிர்த்துப் போராடிய இது திரளான மக்கள் பங்கெடுக்கும் புரட்சி இயக்கம் வேண்டுமென்று வற்புறுத்தியது.

**யூழ்னி ரபோச்சிக் குழு** பெரும் புரட்சி வேலையைச் செய்தது. அதே சமயம் மிதவாத முதலாளி வர்க்கத்தினரின்பாலும் விவசாய இயக்கத்தின்பாலும் உறவுநிலை பற்றிய பிரச்சினைகளில் அது சந்தர்ப்பவாதப் போக்கைப் பின்பற்றியது; **இஸ்க்ராவைத்** தவிர மேலும் ஒரு அனைத்து ருஷ்யப் பத்திரிகை வேண்டுமெனும் பிரிந்து போகும் தன்மையுள்ள திட்டத்தை முன்வைத்தது.—74.

35 ரு.ச.ஐ.தொ. கட்சியின் முதலாவது காங்கிரஸ் 1898ல் நடந்தது.—79.

36 **உழைப்பு விடுதலைக் குழு**—1883ல் ஜினீவா நகரில் பிளெஹானவ் நிறுவிய முதன்முதலான ருஷ்ய மார்க்ஸியக் குழு. இக்குழு ருஷ்யாவில் மார்க்ஸியத்தைப் பரப்புவதில் பெரும் பணி புரிந்தது. பிளெஹானவ் (1883லும் 1885லும்) எழுதிய ருஷ்யச் சமூக-ஜனநாயகவாதிகளின் இரண்டு நகல் வேலைத்திட்டங்களை இக்குழு வெளியிட்டது. ருஷ்யாவில் சமூக-ஜனநாயகவாதக் கட்சியைத் தோற்றுவிக்கத் தயாரிப்புச் செய்வதிலும் தோற்றுவிப்பதிலும் இவை ஒரு முக்கியத்துவம் வாய்ந்த படியாக விளங்கின. **உழைப்பு விடுதலைக் குழு** சர்வதேசத் தொழிலாளர் இயக்கத்துடன் தொடர்புகள் ஏற்படுத்திக் கொண்டது. இரண்டாவது அகிலத்தின் (பாரிஸ் மாநகரில் 1889ல் நடந்த) முதல் காங்கிரஸிலிருந்து அதன் எல்லாக் காங்கிரஸ்களிலும் ருஷ்ய சமூக-ஜனநாயகவாதத்தின் பிரதிநிதியாகக் கலந்து கொண்டது. எனினும் இக்குழு பெருந் தவறுகளும் செய்தது: அது மிதவாத முதலாளி வர்க்கத்தினரின் பாத்திரத்தை மிகையாக மதிப்பிட்டது, பாட்டாளி வர்க்கப் புரட்சியில் ஒரு துணைச் சக்தி எனும் வகையில் விவசாயிகளின் புரட்சித் தனத்தைக் குறைத்து மதிப்பிட்டது. பிற்காலத்தில் பிளெஹானவும் பிற குழு உறுப்பினர்களும் மென்ஷிவிக் கருத்துக்களைத் தழுவி நின்றதற்கு இந்தத் தவறுகள் கருவாக இருந்தன.—84.

37 **ஜனநாயகப் புரட்சியில் சமூக-ஜனநாயகவாதத்தின் இரண்டு போர்த்தந்திரங்கள்** எனும் நூலை வி.இ. லெனின் 1905 ஜூன் — ஜூலை இடையில் எழுதினார். அதாவது, ருஷ்யாவின் சமூக-ஜனநாயகத் தொழிலாளர் கட்சியின்

மூன்ருவது காங்கிரஸ் லண்டனிலும், அதே காலத்தில் மென்ஷிவிக்குகளின் மாநாடு ஜினீவாவிலும் நடந்துமுடிந்த பின் இது எழுதப்பட்டது. ''மென்ஷிவிக்குகளோடுள்ள அடிப்படையான போர்த்தந்திர வேற்றுமைகள் ஏற்கெனவே திட்டமுறையான வழியில் இங்கே முன்வைக்கப் பட்டுள்ளன. லண்டனில் நடந்த வசந்த காலத்திய ரு.ச.ஜ.தொ. கட்சியின் மூன்ருவது காங்கிரஸின் (போல்ஷிவிக்) தீர்மானங்களும் ஜினீவாவில் நடந்த மென்ஷிவிக் மாநாட்டின் தீர்மானங்களும் இந்த வேற்றுமைகளுக்கு இறுதி வடிவம் தந்து, பாட்டாளி வர்க்கப் பணிகள் எனும் பார்வை நிலையிலிருந்து முதலாளித்துவப் புரட்சியைப் பற்றி மதிப்பீடு செய்வதில் அடிப்படையான வேற்றுமைக்குக் கொண்டுபோய் விட்டன'' என்று லெனின்இந்நூலின் குறிபொருளைப் பற்றிஎழுதிஞர்.லெனினுடைய இந்நூல் வெளியிடுவது பெரும் முக்கியத்துவம் வாய்ந்த நிகழ்ச்சியாகக் கட்சிக்கு விளங்கியது.—86.

38 **பத்தியோம்கின் கோமகன்** எனும் கவசப் போர் கப்பலில் எழுச்சி 1905 ஜூன் 14 (27)ல் தொடங்கியது. கப்பல் ஒதேஸ்ஸாவுக்கு வந்த போது அங்கே பொது வேலைநிறுத்தம் நடந்து வந்தது. அக்காலத்தில் ரு.ச.ஜ.தொ. கட்சியின் ஒதேஸ்ஸா நிறுவனத்தில் தலைமை தாங்கிய மென்ஷிவிக்குகள் கப்பல் படையினருடன் கூடவே செயல்படாமல் தொழிலாளர்களை நிறுத்துவதில் வெற்றி பெற்றனர். **பத்தியோம்கின்** ஒதேஸ்ஸாவை விட்டு வெளியேற வேண்டியதாயிருந்தது.பதிஞெரு நாட்கள் கருங்கடலில் சுற்றித் திரிந்து, உணவுப் பொருளும் எரிபொருளும் தீர்ந்து போய் இது ருமேனியாவுக்கு வந்து அதிகாரிகளிடம் சரணடைய வேண்டியதாயிற்று. பெரும்பான்மையான கப்பல் படையினர் வெளிநாடுகளிலேயே தங்கிவிட்டனர். ருஷ்யாவுக்குத் திரும்பி வந்தவர்கள் கைதுசெய்யப்பட்டு தண்டிக்கப்பட்டனர்.

**பத்தியோம்கின்** எழுச்சி தோல்வியில் முடிந்தது. என்ற போதிலும், மிகப் பெரிய போர்க்கப்பலின் படையினர் புரட்சியின் பக்கம் வந்துவிட்டதானது எதேச்சாதிகார-எதிர்ப்புப் போராட்டத்தின் வளர்ச்சியில் ஒரு முக்கியமான முன்னேற்றப் படியைக் குறித்தது.—86.

39 (ஜினீவாவிலிருந்து வெளிவந்த) **புரொலிட்டாரி** (''பாட்டாளி'') — சட்டவிரோதமான போல்ஷிவிக் வாரப் பத்திரிகை. ரு.ச.ஜ.தொ.கட்சியின் மூன்ருவது காங்கிரஸ்

*தீர்மானத்தின்படி அக்கட்சியின் மையப் பத்திரிகையாக நிறுவப்பெற்றது. 1905 ஏப்ரல் 27 (மே 10)ல் நடந்த மத்தியக் குழுவின் முழுகூட்டம் நிறைவேற்றிய தீர்மானத்தின்படி இதன் தலைமை ஆசிரியராக லெனின் நியமிக்கப்பட்டார்.* **புரொலிட்டாரி** *ஜினீவாவிலிருந்து 1905 மே 14 (27) முதல் நவம்பர் 12 (25) வரை வெளிவந்தது. இது லெனின் வழிப்பட்ட பழைய* **இஸ்க்ராவின்** *நிலையில் நின்றது.*

*லெனின் இதில் சுமார் 90 கட்டுரைகளை எழுதினார், பத்திரிகையின் நிர்வாகியாகவும் ஆசிரியராகவும் பெரிதும் வேலை செய்தார்.* **புரொலிட்டாரி** *ருஷ்யாவின் தொழிலாளர் இயக்கத்துடன் நெருங்கிய தொடர்பு கொண்டது. புரட்சிகர இயக்கத்தில் நேரடியாகப் பங்கெடுத்த தொழிலாளர்களின் தகவல்களும் கட்டுரைகளும் இதில் வெளியிடப்பட்டன.—86.*

40 *பின்லாந்தில் 1905 டிஸம்பர் 29 முதல் 1906 ஜனவரி 6 வரை நடந்த சோஷலிஸ்டு-புரட்சியாளர் கட்சியின் முதலாவது காங்கிரஸில் அக்கட்சியின் வேலைத்திட்டம் நிறைவேற்றப்பட்டது.*

**சோஷலிஸ்டு-புரட்சியாளர் கட்சியினர்**—*ருஷ்யாவில் 1901 இறுதியிலும் 1902 துவக்கத்திலும் பல்வேறு நரோதியக் குழுக்களும் வட்டங்களும் ஒன்றுகலந்ததின் விளைவாகத் தோன்றிய ஒரு சிறுமுதலாளித்துவக் கட்சி.*

*சோஷலிஸ்டு-புரட்சியாளர்கள் பாட்டாளி வர்க்கத்தினருக்கும் விவசாயி மக்களுக்கும் இடையே உள்ள வர்க்கத்தன்மையதான வேறுபாடுகளைக் காணத் தவறினர். விவசாயி மக்களிடையே உள்ள வர்க்கப் பிளவையும் வர்க்கப் பகைமையையும் மெருகிட்டு மறைத்தனர், புரட்சியில் பாட்டாளி வர்க்கத்தின் தலைமைப் பாத்திரத்தை நிராகரித்தனர்.*

*சோஷலிஸ்டு-புரட்சியாளர்களின் நிலத்துறை வேலைத்திட்டம் தனியார் நிலவுடைமையை ஒழித்தலையும், சமமான பங்கீடு என்னும் அடிப்படையில் நிலம் கிராமச் சமூகங்கள் கையில் மாற்றப்படுதலையும் பலவிதமான கூட்டுறவுச்சங்கங்களின் வளர்ச்சியையும் குறிக்கோளாகக் கொண்டது. ''நிலத்தைப் பொதுவுடைமையாக்கும்'' திட்டமென இவ்வேலைத்திட்டத்தை சோஷலிஸ்டு-புரட்சியாளர்கள் காட்ட முயன்றபோதிலும் சோஷலிஸக் கூறுகள் எவையும் இதில் இல்லை. ஏனெனில் லெனின் சுட்டிக் காட்டியது போல தொழிலாளி வர்க்கத்தின் ஆட்சி*

யதிகாரத்தை நிறுவாமலும் எல்லாவித அடிப்படை உற்பத்திச் சாதனங்களும் (வங்கிகள், பெரும் நிறுவனங்கள், இருப்புப்பாதைகள்) தொழிலாளி வர்க்கத்தின் கைகளுக்கு மாறுத வரையிலும் தனியார் நிலவுடைமையை ஒழித்தல் மட்டும் மூலதனத்தின் ஆட்சியையும் பொது மக்களின் வறுமையையும் ஒழிக்க முடியாது. நிலப்பிரபுத்துவ உடைமை முறையை ஒழிப்பதற்கான போராட்டம் ஒன்றே இவ்வேலைத்திட்டத்தில் முற்போக்கானதாய் இருந்தது — இக்கோரிக்கை முதலாளித்துவ-ஜனநாயகப் புரட்சியின் போது விவசாயி மக்களின் விருப்பங்களையும் ஆசைகளையும் புறநிலை வகையில் வெளியிட்டது.

முதல் உலக ஏகாதிபத்தியப் போரின் போது பெரும்பான்மை சோஷலிஸ்டு-புரட்சியாளர்கள் சமூக-தேசிய வெறி நிலையை மேற்கொண்டனர்.

1917 பிப்ரவரியில் நடந்த முதலாளித்துவ ஜனநாயகப் புரட்சிக்குப் பிறகு சோஷலிஸ்டு-புரட்சியாளர் கட்சியினரும் மென்ஷிவிக்குகளும் முதலாளிகள்-நிலப்பிரபுக்களின் எதிர்ப்புரட்சிகரமான தற்காலிக அரசாங்கத்தின் பிரதான தூண்களாய்ச் செயல்பட்டனர். சோஷலிஸ்டு-புரட்சியாளர் கட்சியின் தலைவர்களும் அவ்வரசாங்கத்தில்அமைச்சர்பதவிகளை வகித்தனர்(கேரென்ஸ்கி, செர்னேவ், அவ்க்ஸேன்தியெவ்). நிலப்பிரபுக்களது நிலவுடைமை முறையை ஒழிக்க வேண்டுமென்ற விவசாயிகளது கோரிக்கைக்கு ஆதரவளிப்பதை சோஷலிஸ்டு-புரட்சியாளர் கைவிட்டுவிட்டனர். தற்காலிக அரசாங்கத்திலிருந்து அவர்களின் அமைச்சர்கள், நிலப்பிரபுக்களின் பண்ணைகளைக் கைப்பற்றி வந்த விவசாயிகளுக்கு எதிராகத் தண்டனைப் படைகளை அனுப்பி வைத்தார்கள்.

1917 நவம்பர் இறுதியில் இடதுசாரி சோஷலிஸ்டு-புரட்சியாளர்கள் தனிக் கட்சியொன்றை ஆரம்பித்தார்கள்.

ருஷ்யாவில் வெளிநாட்டுத் தலையீட்டின் போதும் உள்நாட்டுப் போரின் போதும் சோஷலிஸ்டு-புரட்சியாளர் கட்சியினர் எதிர்ப்புரட்சி நடவடிக்கைகளில் ஈடுபட்டனர்; வெளிநாட்டு படையினர், எதிர்ப்புரட்சியாளர்கள் ஆகியோருக்கு வெளிப்படையாகவே ஆதரவளித்தனர்; எதிர்ப்புரட்சிகரமான சதிகளில் கலந்து கொண்டனர்; சோவியத் அரசு, கம்யூனிஸ்டுக் கட்சி ஆகியவற்றின் தலைவர்களுக்கு எதிரான பயங்கரவாதச் செயல்களுக்குத் திட்டமிட்டு ஏற்பாடு செய்தனர்.—87.

41 ஒஸ்வபஷ்தேனியே (''விடுதலை'') — ருஷ்ய மிதவாத முதலாளி வர்க்கத்தினரின் பிரதிநிதியான பி. ஸ்துருவேயை ஆசிரியராகக் கொண்டு 1902 ஜூன் 18 (ஜூலை 1) முதல்1905அக்டோபர் 5 (18) வரை வெளிநாட்டிலிருந்து வெளிவந்து கொண்டிருந்த திங்களிருமுறைப் பத்திரிகை; மிதவாதப் பத்திரிகையாகிய இது மிதவாத-முடியரசுவாதக் கருத்துக்களை விடாமல் பிரச்சாரம் செய்து வந்தது. 1903ல் இப்பத்திரிகையைச் சூழ்ந்து ''ஒஸ்வபஷ்தேனியே சங்கம்'' தோன்றி 1904 ஜனவரியில் திட்டமான உருவம் பெற்று 1905 அக்டோபர் வரை இருந்து வந்தது. பின்னுல் இந்தச் சங்கத்தின் உறுப்பினர்களும் அரசியல் சட்டவாத ஜெம்ஸ்துவோ உறுப்பினர்களும் ''அரசியல்சட்ட-ஜனநாயகக் கட்சி'' (காடேட்டுகள்)—ருஷ்யாவில் மிதவாத-முடியரசுவாத முதலாளி வர்க்கத்தினரின் தலைமையான கட்சி—உருவாதற்கு (1905 அக்டோபர்) மூலக்கருவாக இருந்தனர்.—89.

42 புதிய-''இஸ்க்ரா''வாதம்—புதிய, சந்தர்ப்பவாதப் போக்குள்ள இஸ்க்ராவின் ஆதரவாளர்கள், மென்ஷிவிக்குகள் (குறிப்பு 20ஐப் பார்க்கவும்). —89.

43 ரு.ச.ஜ.தொ. கட்சியின் மூன்ருவது காங்கிரஸ் லண்டனில் 1905 ஏப்ரலில் 12—27 (ஏப்ரல் 25—மே 10) போல்ஷிவிக்குகளால் ஏற்பாடு செய்யப்பட்டு,லெனின் தலைமையில் நடந்தது. மென்ஷிவிக்குகள் காங்கிரஸில் கலந்து கொள்ள மறுத்து ஜினீவாவில் தமது மாநாட்டைக் கூட்டினர்.

ருஷ்யாவில் வளர்ந்து வந்த புரட்சியின் அடிப்படைப் பிரச்சினைகளை விவாதித்து, பாட்டாளி வர்க்கம், அதன் கட்சி ஆகியவற்றின் பணிகளைக் காங்கிரஸ் வரையறுத்தது.

முதலாளித்துவ-ஜனநாயகப் புரட்சியில் கட்சியின். ஆதாரக் கொள்கையையும் போர்த்தந்திரத்தையும் காங்கிரஸ் வரையறுத்தது. கட்சியின் முதன்மையான, உடனடிப் பணியாக ஆயுதமேந்திய புரட்சியெழுச்சிக்கு ஏற்பாடு செய்வதை அது முன்வைத்தது.

மக்களின் ஆயுதமேந்திய புரட்சியெழுச்சியினது வெற்றியின்விளைவாகத் தற்காலிகப்புரட்சிகரஅரசாங்கம் நிறுவப்பட வேண்டுமென்றும், இப்படி நிறுவப்பட்ட அரசாங்கம் எதிர்ப்புரட்சியின் எதிர்ப்பை ஒடுக்கவும் ரு.ச.ஜ.தொ.கட்சியின் குறைந்தபட்சவேலைத்திட்டத்தை

(குறிப்பு 60ஐப் பார்க்கவும்) நிறைவேற்றி சோஷலிஸப் புரட்சிக்கான மாற்றத்திற்குரிய சூழ்நிலைகளைத் தயார்ப்படுத்தவும் வேண்டுமென்றும் காங்கிரஸ் சுட்டிக் காட்டியது.

காங்கிரஸ் மென்ஷிவிக்குகளின் நடத்தையையும், கட்சி நிறுவனம், போர்த்தந்திரம் பற்றிய பிரச்சினைகளில் அவர்களுக்குள்ள சந்தர்ப்பவாதத்தையும் கண்டித்தது. மூன்றுவது காங்கிரஸ் ரு.ச.ஜ.தொ. கட்சியின் புதிய மையப் பத்திரிகையான **புரொலிட்டாரியை** நிறுவுவது பற்றி தீர்மானித்தது. 1905 ஏப்ரல் 27 (மே 10)ல் நடந்த மத்தியக் குழுவின் முழுக்கூட்டத்தில் அதன் தலைமை ஆசிரியராக லெனின் நியமிக்கப்பட்டார்.

ரு.ச.ஜ.தொ. கட்சியின் மூன்றுவது காங்கிரஸ் மாபெரும் வரலாற்று முக்கியத்துவம் வாய்ந்தது. அது போல்ஷிவிக்குகளின் முதலாவது காங்கிரஸாக இருந்தது. அது கட்சிக்கும் தொழிலாளி வர்க்கத்துக்கும், ஜனநாயகப் புரட்சியில் வெற்றி பெறுவதற்கான போராட்ட வேலைத்திட்டத்தை வரையறுத்து அளித்தது.—90.

44 **புலீகின் கமிஷன்**—ஜார் மன்னர் ஆணையின் பேரில் 1905 பிப்ரவரி 18 (மார்ச்சு 3)ல் உள்துறை அமைச்சர் புலீகின் தலைமையில் அமைக்கப்பட்ட தனிக் கமிஷன். இதில் பெரும் நிலப்பிரபுக்களும் பிற்போக்கான பிரபுவம்சப் பிரதிநிதிகளும் இருந்தனர். ஆலோசனை சபையாகிய அரசு டூமாவைக் கூட்டுவதற்கான மசோதாவையும் டூமா தேர்தல்களுக்கான ஒழுங்குமுறை விதிகளையும் தயாரிப்பது அதன் பணியாய் இருந்தது.

இந்த டூமா தேர்தல்கள் நடத்தப்படவில்லை. பெருக்கெடுத்து வந்த புரட்சியும் அக்டோபர் மாத அரசியல் வேலைநிறத்தமும் புலீகின் டூமாவை அடித்துச் சென்று விட்டது.—93.

45 **1905, ஜனவரி 9** — அன்று ஜார் மன்னரிடம் ஒரு விண்ணப்பம் கொடுப்பதற்காகக் குளிர்கால அரண்மனையை நோக்கி வந்த பீட்டர்ஸ்பர்க் தொழிலாளர்களின் அமைதியான ஆர்ப்பாட்டத்தின் மீது ஜாராணையின் பேரில் மிருகத்தனமான துப்பாக்கிப் பிரயோகம் நடந்தது. ஆயுதமேதுமில்லாமல் அமைதியாக வந்த தொழிலாளர்கள் இவ்வாறு ஈவிரக்கமின்றி படுகொலை செய்யப்பட்டதை எதிர்த்து ருஷ்யா முழுவதிலும் ''எதேச்சாதிகார முறை ஒழிக!'' எனும் முழக்கத்தின்கீழ் திரள்திரளான

*மக்களின் அரசியல் வேலைநிறுத்தங்களும் ஆர்ப்பாட்டங்களும் துவங்கின. ஜனவரி 9ம் நாளத்திய நிகழ்ச்சி 1905-1907 புரட்சியின் துவக்கமாகும்.—110.*

46 **ஃபிராங்ஃபுர்ட் நாடாளுமன்றம்** — *ஜெர்மனியில் 1848 மார்ச்சு புரட்சிக்குப்பின் கூட்டப்பட்ட அனைத்து ஜெர்மன் தேசிய சபை. மைன் நதியிலுள்ள ஃபிராங்ஃபுர்ட் நகரில் 1848 மே 18ல் அது தனது வேலையைத் தொடங்கிற்று. அரசியல் துறைப் பிளவை நீக்குவதும் அனைத்து ஜெர்மன் அரசியல்சட்டத்தை வகுப்பதும் அதற்குமுன் இருந்த முதன்மையான கடமையாகும். ஆனால் பெரும்பான்மையில் இருந்த மிதவாதிகளின் கோழைத்தனத்தாலும் ஊசலாட்டத்தினாலும், சிறுமுதலாளித்துவ இடதுசாரியினரின் உறுதியின்மையினாலும் முரண்பாட்டு நிலையினாலும், இந்த சபை நாட்டில் மேலதிகாரத்தை மேற்கொள்ளப் பயந்தது. 1848-49 ஜெர்மன் புரட்சியின் அடிப்படையான பிரச்சினைகளில் உறுதியுடன் நிற்க இதனால் முடியவில்லை. 1849 ஜூலையில் ஃபிராங்ஃபுர்ட் நாடாளுமன்றம் கலைக்கப்பட்டது.—112.*

47 **புதிய ரைன் பத்திரிகை** (*Neue Rheinische Zeitung*) — *கொலோன் நகரத்திலிருந்து 1848 ஜூன் 1 முதல் 1849 மே 19 வரை வெளிவந்த நாளேடு. மார்க்ஸ், எங்கெல்ஸ் இருவரும் அதன் நிர்வாகிகளாக இருந்தனர். கார்ல் மார்க்ஸ் அதன் தலைமை ஆசிரியர்.* **புதிய ரைன் பத்திரிகை** *''புரட்சிகரப் பாட்டாளி வர்க்கத்தின் தலைசிறந்த, தன்னிகரற்ற பத்திரிகையாக விளங்கிற்று'' என்று லெனின் கூறினார்.—112.*

48 **சொத்ஸியால்-டெமக்ராட்** *(''சமூக-ஜனநாயகவாதி'') — 1905 ஏப்ரல் 7 (20) முதல் நவம்பர் 13 (26) வரை டிஃப்ளிஸ் நகரிலிருந்து ஜார்ஜிய மொழியில் வெளிவந்த மென்ஷிவிக் பத்திரிகை. அதன் ஆசிரியர் ஜார்ஜிய மென்ஷிவிக்குகளின் தலைவரான என். ஜொர்தானியா.—115.*

49 **கறுப்பு நூற்றுவர்** — *புரட்சி இயக்கத்தை எதிர்த்துப் போராடுவதற்காக ஜாரிஸ்டுப் போலீஸ் நிறுவிய முடியரசுவாதக் கும்பல்கள். இவர்கள் புரட்சியாளர்களைக் கொலை புரிந்தனர்; முற்போக்கான அறிவுத்துறையினரைத் தாக்கினர்; யூதர்களுக்கு எதிரான வன்முறைகளை நடத்தினர்.—117.*

50 **ஷீப்பவ் பாணியிலான அரசியல் சட்டம்** — ஜெம்ஸ்துவோ வின் வலதுசாரிப் பிரிவின் மிதவாதத் தலைவரான தி.நி. ஷீப்பவ் தயாரித்த அரசியல் அமைப்புத் திட்டத்தின் நக லுக்கு லெனின் வைத்த பெயர். புரட்சியின் பரப்பெல்லை யைக் கட்டுப்படுத்துவதற்காகவும் அதே நேரத்தில் ஜார் அரசாங்கத்திடமிருந்து ஜெம்ஸ்துவோக்களுக்குச் சில சலுகைகளைப் பெறுவதற்காகவும் ஜார் மன்னருக்குக் கீழ்ப்பட்ட ஒரு பிரதிநிதித்துவ ஆலோசனை சபையை ஏற்படுத்தலாம் என்று ஷீப்பவ் திட்டமிட்டார். இந்தப் பேரத்தின் மூலமாக மிதவாதிகள் மக்களை ஏமாற்றவும், முடியரசை நீடித்து நிறுத்தவும், அதே நேரத்தில் தங் களுக்குச் சில அரசியல் உரிமைகளைப் பெற்றுக் கொள்ள வும் விரும்பினார்கள்.—*119.*

51 **''சட்டபூர்வமான மார்க்ஸியம்''** — 1890களில் ருஷ்யா வின் முதலாளித்துவ-மிதவாதப் படிப்பாளிப் பகுதியின ரிடையே இருந்த சமுதாய-அரசியல் போக்கு. மார்க்ஸி யத்தின் ஆதரவாளர்கள் என்று பிரகடனம் செய்து கொண்டு ''சட்டபூர்வமான மார்க்ஸியவாதிகள்'' நிலப் பிரபுத்துவ அமைப்பு முறைக்குப் பதிலாக முதலாளித் துவ அமைப்பு முறை வருவதின் தவிர்க்கமுடியாத் தன் மையைப் பற்றிய தத்துவத்தை மட்டும் மார்க்ஸியப் போதனையிலிருந்து எடுத்துக் கொண்டார்கள்; முதலா ளித்துவ வீழ்ச்சியின், சோஷலிஸப் புரட்சியின் தவிர்க்க முடியாத் தன்மை பற்றிய போதனை, சோஷலிஸத்துக்கு மாறிச் செல்வது பற்றிய போதனை எனும்படியான மார்க்ஸியத்தின் ''புரட்சிகரமான ஆன்மாவை'' அவர் கள் முற்றாக நிராகரித்தனர். பிற்காலத்தில், அவர்கள் மார்க்ஸியத்துக்குப் பகைவர்களாயினர், முதலாளித்துவக் காடேட்டு கட்சியின் உறுப்பினர்களாயினர்.—*123.*

52 **ருஸ்கயா ஸ்தரினு** (''ருஷ்யாவின் பழங்காலம்'') — 1870 முதல் 1918 வரை பீட்டர்ஸ்பர்கில் வெளிவந்த வர லாற்றுத் துறை மாதப் பத்திரிகை. —*127.*

53 மார்க்ஸ் எழுதிய **ஃபாயர்பாக் பற்றிய ஆய்வுரைகள்** (*Theses on Feuerbach*) இங்கே குறிப்பிடப்படுகின்றன. —*128.*

54 **''பொதுவான மறுவினியோகம்''** — விவசாயி மக்கள் மிக வும் விரும்பிய முழக்கமாகும். ஜார் ஆட்சியின்கீழ் நிலம்

*அனைத்தும் மறுவினியோகம் செய்யப்பட வேண்டும் என்று இது கோரிற்று.—135.*

55 **ரூஸ்கியே வேதமஸ்தி** *(''ருஷ்யப் பதிவேடு'') — 1863-1918 இடையே மாஸ்கோவிலிருந்து வெளிவந்த பத்திரிகை; மிதவாத அறிவுத்துறையினரின் கருத்துக்களை வெளியிட்டது.*

**ஸின் ஒத்தேச்செஸ்துவா** *(''தந்தையர் நாட்டின் புதல்வன்'')—1856-1900 இடையிலும் 1904 நவம்பர் 18 (டிஸம்பர் 1) முதல் 1905 டிஸம்பர் 2 (15) வரையிலும் பீட்டர்ஸ்பர்கிலிருந்து வெளிவந்த மிதவாத நாளேடு.*

**நாஷா ஷிஸ்ன்** *(''நம் வாழ்வு'') — 1904 நவம்பர் 6 (19) முதல் 1906 ஜுலை 11 (24) வரை பீட்டர்ஸ்பர்கிலிருந்து விட்டு விட்டு வெளியான மிதவாத நாளேடு.*

**நாஷீ தினீ** *(''நம் நாட்கள்'')—1904 டிஸம்பர் 18 (31) முதல் 1905 பிப்ரவரி 5 (18) வரை பீட்டர்ஸ்பர்க் மிதவாத நாளேடு. 1905 டிஸம்பர் 7 (20)ல் இது மறுபடியும் வெளியிடத் தொடங்கி இரண்டு இதழ்கள் மட்டும் வெளிவந்தன.—140.*

56 **கூட்டில் அடைந்த மனிதர்** *(Man in the Muffler) — இதே தலைப்பில் வெளிவந்த சேகவ் கதையில் வரும் கதாநாயகன். புனைவுகளையோ முன்முயற்சிகளையோ அடியோடு வெறுக்கும் குறுகிய மனப்பான்மையுள்ள, தன்னலத்தில் மட்டும் வேட்கை கொள்ளும் நபரைக் குறிக்கும் பாத்திரம்.—143.*

57 *மார்க்ஸ் எழுதிய* **முதலாளி வர்க்கமும் எதிர்ப்புரட்சியும்** *எனும் கட்டுரையைப் பார்க்கவும்.—152.*

58 **ஜிராண்டுவாதிகளும் ஜாக்கொபின்வாதிகளும்**—*18ம் நூற்றாண்டின் இறுதியில் நடந்த பிரெஞ்சு முதலாளித்துவப் புரட்சியின்போது முதலாளி வர்க்கத்திடையே இருந்த இரண்டு அரசியல் பிரிவுகள்.* **ஜிராண்டுவாதிகள்** *மிதவாத முதலாளி வர்க்கத்தினரின் நலன்களை வெளியிட்டு புரட்சிக்கும் எதிர்ப்புரட்சிக்கும் இடையே ஊசலாடினர், முடியரசுடன் உடன்பாடு காண முயன்றனர்.*

**ஜாக்கொபின்வாதிகள்**—*மிகவும் தீவிரப் போக்குள்ள முதலாளி வர்க்கத்தினரும் புரட்சிகரமான ஜனநாயகவாதிகளும் இவ்வாறு அழைக்கப்பட்டனர், அவர்கள் எதேச்சாதிகார முறையையும் நிலப்பிரபுத்துவ முறையை*

யும் ஒழிக்க வேண்டுமெனும் கோரிக்கையை முரணின்றி ஆதரித்துப் போராடினர். ஜாக்கொபின் சர்வாதிகாரத்தை நிறுவுவதற்கு இட்டுச்செல்லும் 1793 மே 31—ஜூன் 2ல் நிகழ்ந்த மக்களின் புரட்சியெழுச்சிக்கு ஜாக்கொபின்வாதிகள் தலைமை தாங்கினர்.

சமூக-ஜனநாயகவாதத்தின் ஜிராண்டுவாதிகளாக மென்ஷிவிக்குகளை லெனின் அழைத்தார்.—153.

59 ஜார் மன்னர் இரண்டாம் நிக்கலாய் 1905 ஜூன் 6 (19) அன்று ஜெம்ஸ்துவோ உறுப்பினர்களின் பிரதிநிதிக் குழுவினருக்கு அளித்த பேட்டியை இது குறிக்கிறது. ஜார் மன்னருடன் உடன்பாடு செய்து கொண்டு ''புதுப்பிக்கப்பட்ட அரசுக் கட்டுக்கோப்பை'' நிறுவும் பொருட்டு மக்கள் பிரதிநிதிகளைக் கூட்டும்படி வேண்டிக் கொள்ளும் ஒரு விண்ணப்பத்தை அவர்கள் ஜாரிடம் கொடுத்தனர்.—153.

60 1903ல் ரு.ச.ஜ.தொ. கட்சியின் இரண்டாவது காங்கிரஸில் ஏற்கப்பட்ட கட்சி வேலைத்திட்டம் குறைந்தபட்ச வேலைத்திட்டம், அதிகப்பட்ச வேலைத்திட்டம் ஆகிய இரு பகுதிகளைக் கொண்டது. அதிகப்பட்ச வேலைத்திட்டத்தில், சோஷலிஸ்டுப் புரட்சி, பாட்டாளி வர்க்கச் சர்வாதிகாரத்தை நிறுவுவது, சோஷலிஸச் சமுதாயத்தைக் கட்டமைப்பது ஆகிய தொழிலாளர் வர்க்கத்தின் இறுதிக் குறிக்கோளை வரையறுத்தது. குறைந்தபட்ச வேலைத்திட்டத்தில், ஜார் ஆட்சியை ஒழித்தல், ஜனநாயகக் குடியரசை நிறுவுதல், எட்டு மணி நேர வேலை நாளைச் செயல்படுத்தல், கிராமப்புறத்தில் நிலப்பிரபுத்துவத்தின் மீதமிச்சங்கள் எல்லாவற்றையும் ஒழித்தல் ஆகிய உடனடிக் கோரிக்கைகளை உள்ளடங்கியது.—154.

61 மிதவாதிகள் பால் எடுக்க வேண்டிய உறவுநிலை பற்றி அ. நி. பத்ரேஸவ் (ஸ்தரவேர்) கொண்டுவந்த தீர்மானத்தை இது குறிக்கிறது. 1903ல் ரு.ச.ஜ.தொ. கட்சியின் இரண்டாவது காங்கிரஸ் இத்தீர்மானத்தை நிறைவேற்றியது.—155.

62 ருஷ்ய-ஜப்பான் போர் நடந்த போது 1905 மே 14—15 (27—28) அன்று ஸுஷிமா தீவுக்கருகில் நடந்த கப்பற் போரை இது குறிப்பிடுகிறது. இதில் ருஷ்யக் கப்பற்படை தோற்றது.—158.

63 ''நாடாளுமன்ற மூடத்தனம்'' எனும் சொற்றொடரை லெனின் நூல்களில் அடிக்கடி காணலாம். இதை மார்க்ஸும் எங்கெல்ஸும் முதலில் பயன்படுத்தினர்.

நாடாளுமன்ற முறை முழு வல்லமையுடையது, எல்லா நிலைமைகளிலும் நாடாளுமன்ற நடவடிக்கை ஒன்றுதான் அரசியல் போராட்டத்திற்குரிய மிக முக்கியமான வடிவம் என்று கருதிய சந்தர்ப்பவாதிகளைக் குறிப்பதற்கு லெனின் இச்சொற்றொடரைப் பயன்படுத்தினர்.—162.

64 1895 அக்டோபர் 6—12 இடையே பிரெஸ்லா நகரில் நடந்த ஜெர்மன் சமூக-ஜனநாயகக் கட்சியின் காங்கிரஸில் நிலப்பிரச்சினை பற்றிய நகல் வேலைத்திட்டத்தின் மீது நடந்த விவாதங்களில் வெளிப்பட்ட கருத்து வேற்றுமைகளை இது குறிப்பிடுகிறது. அந்நகலில் பல பெருந்தவறுகள் இருந்தன. பாட்டாளி வர்க்கக் கட்சியை ''அனைத்து மக்களையும் தழுவிய கட்சியாக'' மாற்றும் போக்கு அவற்றில் ஒன்றாகும். சந்தர்ப்பவாதிகள் மட்டுமின்றி பெபெலும் லீப்க்னெஹ்டும் கூட அதை ஆதரித்தனர். காங்கிரஸில் காவுத்ஸ்கியும், ஸெத்கினும் பிற சமூக-ஜனநாயகவாதிகளும் நகல் நிலப்பிரச்சினை வேலைத்திட்டத்தைக் கடுமையாக விமர்சித்தனர். பெரும்பான்மையான வாக்குகளால் இந்நகல் நிராகரிக்கப்பட்டது.—165.

65 ஃபிராங்ஃபுர்ட் பத்திரிகை (*Frankfurter Zeitung*) — இது பெரும் பங்கு மார்க்கெட் தரகர்களின் நாளேடு; மைன் நதிக்கரையிலுள்ள ஃபிராங்ஃபுர்ட் நகரிலிருந்து 1856 முதல் 1943 வரை வெளிவந்தது. 1949ல் பொது ஃபிராங்ஃபுர்ட் பத்திரிகை (*Frankfurter Allgemeine Zeitung*) எனும் தலைப்பில் அது மறுபடியும் வெளிவரத் தொடங்கிற்று.—177.

66 பாரிஸ் கம்யூனின் முந்திய உறுப்பினர்களைக் கொண்ட பிளாங்கீவாதிகளின் (Blanquists) லண்டன் குழு 1874ல் வெளியிட்ட வேலைத்திட்டத்தை இங்கே லெனின் குறிப்பிடுகிறார்.

பிரெஞ்சு சோஷலிஸ்டு இயக்கத்தில் தலைசிறந்த புரட்சியாளரும் பிரெஞ்சு கற்பனா கம்யூனிஸத்தின் சிறந்த பிரதிநிதியுமான லூயீ ஒளகுஸ்ட் பிளாங்கீ என்பவரின் தலைமையின்கீழ் இருந்த ஒரு அரசியல் போக்கின் ஆதரவாளர்கள் பிளாங்கீவாதிகள்.

இவர்கள் ''பாட்டாளி வர்க்கப் போராட்டத்தின் மூலமாக அல்லாமல் ஒரு சிறுபான்மையான அறிவுத் துறையாளர் குழுவின் சதிவேலை மூலமாக கூலியடிமை முறையிலிருந்து மனிதகுலத்தை விடுவிக்கலாம்'' என்று எதிர்பார்த்தார்கள் என்று லெனின் எழுதினுர். புரட்சிகரமான கட்சியின் நடவடிக்கைகளுக்குப் பதிலாக ஒரு சில சதிவேலைக்காரர்களின் சதியை வைத்தார்கள். ஒரு புரட்சியெழுச்சி வெற்றி பெறுவதற்குத் தேவையான திட்டவட்டமான சூழ்நிலையை இவர்கள் கணக்கில் எடுத்துக் கொள்ளவில்லை, மக்களோடு பிணைப்புகள் வைத்துக் கொள்வதை புறக்கணித்தார்கள்.—*189.*

67 *1871*ம் ஆண்டிய பாரிஸ் கம்யூனின் போது தியேர் தலைமையிலமைந்த எதிர்ப்புரட்சி அரசாங்கம் வெர்சேய் எனும் பாரிஸ் நகர்ப்புறத்தைத் தன் ஆட்சித் தளமாகக் கொண்டது.—*189.*

68 ஜெர்மன் சமூக-ஜனநாயகக் கட்சியின் எர்ஃபுர்ட் வேலைத் திட்டம் *1891* அக்டோபரில் எர்ஃபுர்ட் நகரில் நடந்த காங்கிரஸில் நிறைவேற்றப்பட்டது. கோத்தா வேலைத் திட்டத்தை விட (*1875*) இது ஓர் அடி முன்னுல் இருந்தது. முதலாளித்துவ உற்பத்தி முறை அழிந்து சோஷலிஸ உற்பத்தி முறை வருவது தவிர்க்க முடியாதது எனும் மார்க்ஸியத் தத்துவம் அவ்வேலைத்திட்டத்தின் அடிப்படையாக இருந்தது. தொழிலாளி வர்க்கம் அரசியல் போராட்டத்தை நடத்துவதின் அவசியத்தை அது வலியுறுத்தியது, இந்தப் போராட்டத்தில் கட்சியின் தலைமைப் பாத்திரம் முதலியவற்றை எல்லாம் வரையறுத்தது. எனினும் அவ்வேலைத்திட்டத்தில் சந்தர்ப்பவாதத்திற்குச் சில மோசமான சலுகைகள் தரப்பட்டிருந்தன. 1891, சமூக-ஜனநாயகவாத நகல் வேலைத்திட்டம் பற்றிய விமர்சனத்திற்கு அளிக்கும் பங்கு என்பதில் எங்கெல்ஸ் இந்நகலை விரிவாக விமர்சித்தார். பாட்டாளி வர்க்கச் சர்வாதிகாரப் பிரச்சினையை இது தட்டிக் கழித்ததானது இவ்வேலைத்திட்டத்தின் முதற் பெரும் குறைபாடு என்றும் சந்தர்ப்பவாதத்திற்கு அளிக்கப்பட்ட பேடித்தனமான சலுகை என்றும் லெனின் குறிதிஞர்.—*198.*

69 எங்கெல்ஸ் எழுதிய வருங்கால இத்தாலிய புரட்சியும் சோஷலிஸ்டுக் கட்சியும் என்பதைப் பார்க்கவும்.—*199.*

70 *Credo*—நம்பிக்கைச் சின்னம், வேலைத்திட்டம், உலகப் பார்வைநிலை. 1899ல் ''பொருளாதாரவாதிகளின்'' குழு ஒன்று வெளியிட்ட அறிக்கையின் பெயர் இது. அந்த அறிக்கை ருஷ்யப்''பொருளாதாரவாதிகளின்'' சந்தர்ப்ப வாதக் கருத்துகளை வெளியிட்டது. ''பொருளாதாரவாதிகள்'' பாட்டாளி வர்க்கத்தின் சுதந்திரமான அரசியல் பாத்திரத்தை மறுத்தனர், தொழிலாளி வர்க்கத்துக்குத் தனி அரசியல் கட்சி வேண்டாம் என்று கூறினர். —213.

71 மார்க்ஸ் எழுதிய **சட்டம் பற்றிய ஹெகலிய தத்துவஞானம் பற்றிய விமர்சனம்** எனும் நூலில் வரும் சொற்களை இது குறிப்பிடுகிறது.—214.

72 *L' Humanité* (''மனிதகுலம்'')—பிரெஞ்சு சோஷலிஸ்டுக் கட்சியின் நாளேடாக ழான் ழொரேஸால் 1904ல் நிறுவப்பட்டது. 1905ல் ருஷ்யாவில் மூண்டெழுந்த புரட்சியை அது வரவேற்றது. முதலாவது உலகப் போரின் போது (1914-18) *L' Humanité* தேசியவெறி நிலையில் நின்ற பிரெஞ்சு சோஷலிஸ்டுக் கட்சியின் வலதுசாரியினரின் கையில் இருந்தது.

1920 டிஸம்பரில் டூர் நகரில் நடந்த காங்கிரஸில் பிரெஞ்சு சோஷலிஸ்டுக் கட்சி பிளவுபட்டு பெரும்பான்மையினர் கம்யூனிஸ்டுக் கட்சியை அமைத்தபின் இது கம்யூனிஸ்டுக் கட்சியின் பத்திரிகையாயிற்று.—217.

73 இது 1904-05ல் நடந்த ருஷ்யா-ஜப்பான் போரைக் குறிப்பிடுகிறது. இப்போரில் ஜாரிஸ்டு ருஷ்யா தோல்வியுற்றது.—219.

74 1871 பாரிஸ் கம்யூன் கவுன்ஸிலில் லுயீ எழேன் வர்லேன் (*Varlin*) கலந்து கொண்டதை இது குறிப்பிடுகிறது; அவர் பிரெஞ்சுத் தொழிலாளர் இயக்கத்தின், முதலாவது அகிலத்தின் முக்கியப் பிரதிநிதி.—232.

75 **ருஷ்யாவின் சமூக-ஜனநாயகத் தொழிலாளர் கட்சியின் இரண்டாவது காங்கிரஸ்** 1903 ஜூலை 17 (30) முதல் ஆகஸ்டு 10 (23) வரை நடந்தது. லெனின் தலைமை தாங்கிய **இஸ்க்ரா** புரட்சிகரமான மார்க்ஸியத்தின் அடிப்படையில் ருஷ்யாவின் சமூக-ஜனநாயகவாதிகளை ஒன்றுபடுத்துவதில் பெரும் வேலையைச் செய்து இக் காங்கிரஸைத் தயாரித்தது.

இஸ்க்ராவினுல் தயாரிக்கப்பட்ட கட்சியின் நகல் வேலைத்திட்டம் விவாதிக்கப்பட்ட போது சந்தர்ப்பவாதிகள் அதைத் தீவிரமாகத் தாக்கினர்; குறிப்பாக அவர்கள், தொழிலாளர் இயக்கத்தில் கட்சியின் தலைமைப் பாத்திரம், பாட்டாளி வர்க்கச் சர்வாதிகாரத்தின் தேவை ஆகியவற்றை மிகுந்த தீவிரத்துடன் தாக்கினர். காங்கிரஸ் சந்தர்ப்பவாதிகளின் தாக்குதலை மீறி கட்சியின் வேலைத்திட்டத்தை நிறைவேற்றியது.—233.

76 **''ஜெம்ஸ்துவோ இயக்கத்திற்கான திட்டம்''**—*1904 இலையுதிர் முதல் 1905 குளிர்காலம் வரை முதலாளித்துவ வர்க்க மிதவாதிகள் நடத்திய இயக்கத்தை ஆதரிக்கும் திட்டத்தை மென்ஷிவிக்குகள் முன்வைத்தார்கள். இவ்வியக்கத்தின் போது ஜெம்ஸ்துவோ உறுப்பினர் (குறிப்பு 33ஐப் பார்க்கவும்) மாநாடுகளையும் கூட்டங்களையும் விருந்துகளையும் நடத்தினர், இக்கூட்டங்களில் மிதவாத-அரசியல்சட்டக் கோரிக்கைகள் நிரம்பிய சொற்பொழிவுகளை ஆற்றினர்; தீர்மானங்களை நிறைவேற்றினர்.—235.*

77 *மார்க்ஸ் எழுதிய* **1848 முதல் 1850 வரையிலான பிரான்ஸில் வர்க்கப் போராட்டம்** *எனும் நூலைப் பார்க்க.—239.*

78 *லுயியோ பிரெண்டானோ (1844—1931) என்பவரின் கருத்துக்களை லெனின் குறிப்பிடுகிறார். ஜெர்மன் முதலாளித்துவப் பொருளியலாளராகிய அவர் முதலாளித்துவச் சமுதாயத்தில் ''சமூக அமைதி'' பற்றிய பிரச்சாரத்துடன் முன்வந்தார்; வர்க்கப் போராட்டம் இல்லாமல் முதலாளித்துவத்தின்கீழ் சமூக முரண்பாடுகளை நீக்க முடியும் என்று கூறினர். சீர்திருத்தவாதத் தொழிற்சங்கங்களை அமைத்து, ஆலைச் சட்டங்களை வகுத்து, தொழிலாளர் பிரச்சினைக்குத் தீர்வு காண முடியும் என்றும் இவ்வாறு தொழிலாளர் நலன்களுக்கும் முதலாளி வர்க்கத்தினரின் நலன்களுக்கும் இடையே இணக்கம் செய்ய முடியும் என்றும் பேசிவந்தார்.—250.*

79 **ஹிர்ஷ்-டுங்கர் சங்கங்கள்**—*1868ல் ஜெர்மனியில் முதலாளித்துவ முற்போக்குக் கட்சி என்பதின் ஊழியர்களான ஹிர்ஷ், டுங்கர் என்பவர்கள் அமைத்த சீர்திருத்தவாதத் தொழிற்சங்கங்கள் இவை. மூலதனத்தின் நலன்களுக்கும் உழைப்பின் நலன்களுக்கும் இடையே ''இணக்கம்'' உண்டு எனும் கருத்தை ஆதரித்துப் பேசிய இச்சங்கங்*

களின் அமைப்பாளர்கள் தொழிலாளிகளோடு கூடவே முதலாளிகளேயும் இச்சங்கங்களில் சேர்த்துக் கொள்ள முடியும் என்று கருதினர், வேலைநிறுத்தப் போராட்டங்களின் தேவையை மறுத்தனர். பரஸ்பர நல உதவிச் சங்கங்களிலும் கல்வி நிறுவனங்களிலுமே பெரும்பாலும் பணியாற்றி வந்தனர்.—251.

80 ரஸ்வேத் (''விடிவெள்ளி'')—சட்டபூர்வமான மிதவாத நாளேடு. பீட்டர்ஸ்பர்கில் 1905 மார்ச்சு 1(14) முதல் நவம்பர் 29 (டிஸம்பர் 12) வரை வெளிவந்தது.—251.

81 ஜார்யா (''உதயம்'')—மார்க்ஸிய வழிப்பட்ட விஞ்ஞான, அரசியல் சஞ்சிகை; 1901-02ல் இஸ்க்ரா ஆசிரியர்கள் இதை ஷ்டுட்கார்ட் நகரிலிருந்து வெளியிட்டனர். சர்வதேசத் திருத்தல்வாதத்தையும் ருஷ்யத் திருத்தல் வாதத்தையும் ஜார்யா விமர்சித்தது, மார்க்ஸியத் தத்துவத்தை ஆதரித்தது.—259.

82 மஸ்கோவ்ஸ்கியே வேதமஸ்தி (''மாஸ்கோ பதிவேடு'') —1756லிருந்து மாஸ்கோ பல்கலைக்கழகம் வெளியிட்டு வந்த பத்திரிகை; 1863-87ல் முடியரசு-தேசியவாதப் பத்திரிகையாக, நிலப்பிரபுக்களின், பாதிரிமார்களின் மிகமிகப் பிற்போக்கான பகுதிகளின் கருத்துக்களை வெளியிட்டது. 1905ல் அது கறுப்பு நூற்றுவரின் தலைமையான பத்திரிகையாயிற்று; அக்டோபர் புரட்சிக்குப் பின் தடை செய்யப்பட்டது.—264.

83 மார்க்ஸ் எழுதிய நெருக்கடியும் எதிர்ப்புரட்சியும்.—269.

84 மார்க்ஸ், எங்கெல்ஸ் எழுதிய ஃபிராங்ஃபுர்ட் தீவிரவாத-ஜனநாயகக் கட்சி ஃபிராங்ஃபுர்ட் இடதுசாரிகள் ஆகியோரின் வேலைத்திட்டங்கள்.—270.

85 மார்க்ஸ், எங்கெல்ஸ் எழுதிய ஃபிராங்ஃபுர்ட் தீவிரவாத-ஜனநாயகக் கட்சி ஃபிராங்ஃபுர்ட் இடதுசாரிகள் ஆகியோரின் வேலைத்திட்டங்கள்.—272.

86 எங்கெல்ஸ் எழுதிய ஃபிராங்ஃபுர்ட் சட்டசபை எனும் கட்டுரையிலிருந்து லெனின் மேற்கோள் காட்டுகிறார். —272.

87 எங்கெல்ஸ் எழுதிய புரட்சி பற்றிய பெர்லின் விவாதங்கள்.—273.

88 *மார்க்ஸ் எழுதிய* நிலப்பிரபுத்துவச் சுமைகள் ஒழிப்பு மசோதா.—*276.*

89 *கொலோன் தொழிலாளர் சங்கத்தின் பத்திரிகை முதலில் Zeitung des Arbeiter-Verein Zu Köln (''கொலோன் தொழிலாளர் சங்கத்தின் பத்திரிகை'') என்ற பெயரும் Freiheit, Brüderlichkeit, Arbeit (''சுதந்தரம், சகோதரத்துவம், உழைப்பு'') என்ற துணைத் தலைப்பும் கொண்டு 1848 ஏப்ரல் முதல் அக்டோபர் வரை வெளிவந்தது. கொலோன் தொழிலாளர் சங்கம், ரைன் பிரதேசத்தின் மற்ற தொழிலாளர் அமைப்புக்களின் செயற்பாடு பற்றிய தகவல்கள் இதில் இருந்தன. அது நின்றுபோனபின் கொலோன் தொழிலாளர் சங்கம் அப்பத்திரிகையை Freiheit, Brüderlichkeit, Arbeit என்கிற தலைப்பில் மீண்டும் துவக்கியது. இது 1849 ஜூன் 24 வரை நடுவில் சிறிதுகால இடைவெளியுடன் வெளி வந்தது.—278.*

90 கம்யூனிஸ்டுச் சங்கம் (Communist League) — *புரட்சிகரப் பாட்டாளி வர்க்கத்தின் முதலாவது சர்வதேச நிறுவனம். 1847ல் லண்டனில் புரட்சிகரப் பாட்டாளி வர்க்க நிறுவனங்களின் பிரதிநிதிகளைக் கொண்ட காங்கிரஸில் அது நிறுவப்பட்டது. மார்க்ஸும் எங்கெல்ஸும்* கம்யூனிஸ்டுச் சங்கத்தின் *மூலவர்களாகவும் தலைவர்களாகவும் இருந்தனர், அதன் சார்பில்* கம்யூனிஸ்டுக் கட்சி அறிக்கையை *எழுதினர்.* கம்யூனிஸ்டுச் சங்கம் *1852 நவம்பர் வரை இயங்கி வந்தது. அதன் தலைசிறந்த உறுப்பினர்கள் முதலாவது அகிலத்தின் தலைவர்களாக விளங்கினர். —281.*

91 தவாரிஷ் *(''தோழன்'')—1906 மார்ச்சு 15 (28) முதல் 1907 டிஸம்பர் 30 (1908 ஜனவரி 12) வரை பீட்டர்ஸ் பர்கில் வெளியான முதலாளித்துவ நாளேடு. அதிகார பூர்வமாகக் கட்சிச்சார்பற்றதாயிருந்தாலுங்கூட நடைமுறையில் இது இடதுசாரி அரசியல்சட்ட-ஜனநாயகக் (காடேட்டு) கட்சியினரின் பத்திரிகையாகவே இருந்தது, மென்ஷிவிக்குகளின் கட்டுரைகளையும் வெளியிட்டு வந்தது.—282.*

92 *எங்கெல்ஸ் எழுதிய* கம்யூனிஸ்டுச் சங்கத்தின் வரலாறு பற்றி.—*283.*

93 **ஹ்ளெஸ்தக்கோவ்**—ருஷ்ய எழுத்தாளர் நி.வ. கோகல் எழுதிய நாடகத்தில் வரும் ஆணவமிக்க தற்பெருமைக் காரன், புளுகன்.—*283.*

94 இங்கு குறிக்கப்படுவது 1905ல் நடைபெற்ற அனைத்து ருஷ்ய அக்டோபர் அரசியல் வேலைநிறுத்தம்.—*284.*

95 **இஸ்வேஸ்தியா சவேத்தா ரபோச்சிஹ் தெப்புத்தாத்தவ்** (''தொழிலாளர் பிரதிநிதிகளது சோவியத்தின் செய்தி யறிக்கை'')—பீட்டர்ஸ்பர்கின் தொழிலாளர் பிரதி நிதிகளது சோவியத்தின் அதிகாரபூர்வமான செய்தியேடு; 1905 அக்டோபர் 17 (30)லிருந்து டிசம்பர் 14 (27) வரை வெளிவந்தது. சோவியத்தின் செயற்பாடுகளைப் பற்றிய செய்திகளை இது வெளியிட்டது.—*284.*

96 **ஒப்லோமவ்** — ருஷ்ய எழுத்தாளர் இ.அ. கன்சரோவ் எழுதிய இதே பெயருடைய நாவலின் பிரதான பாத்திர மாகிய நிலப்பிரபு. மாறுத மாமூல் முறைகள், தேக்க நிலை, செயலாற்றலின்மை ஆகியவற்றின் உருவமாய் விளங்குகிறவன்.—*288.*

97 **ரு.ச.ஜ.தொ. கட்சியின் வெளிநாட்டுக் குழுக்களின் மாநாடு** பெர்ன் நகரில் 1915 பிப்ரவரி 14—19 (பிப்ரவரி 27—மார்ச்சு 4)ல் நடந்தது. லெனினுடைய முன்முயற்சி யினால் கூட்டப்பட்ட இது கட்சி முழுமையின் மாநாட் டிற்குரிய குறிபொருள் கொண்டு விளங்கிற்று. போரும் கட்சியின் பணிகளும் அதன் நிகழ்ச்சி நிரலில் முதன்மை யான பிரச்சினையாக இருந்தது. லெனின் இத்தலைப்பில் சொற்பொழிவு ஒன்று ஆற்றினர். இப்பிரச்சினை பற்றிய தீர்மானங்களில் பெர்ன் மாநாடு ஏகாதிபத்தியப் போரின் சூழ்நிலைகளிலான போல்ஷிவிக்குக் கட்சியின் கடமைகளையும் போர்த்தந்திரத்தையும் வரையறுத்தது. —*294.*

98 **சொத்ஸியால்-டெமக்ராட்** (''சமூக-ஜனநாயகவாதி'') — சட்டவிரோதமாக வெளிவந்த ரு.ச.ஜ.தொ. கட்சியின் மத்திய ஏடாகிய இது 1908 பிப்ரவரி முதல் 1917 ஜனவரி வரை வெளியிடப்பட்டது. இரண்டாவது இதழ் முதல் இது வெளிநாடுகளில் வெளியிடப்பட்டது.

ரு.ச.ஜ.தொ. கட்சியின் ஐந்தாம் (லண்டன்) காங் கிரஸில் தேர்ந்தெடுக்கப்பட்ட மத்திய குழுவின் தீர்மானத்தின்படி **சொத்ஸியால்-டெமக்ராட்டின்** ஆசிரியர் குழு போல்ஷிவிக்குகள், மென்ஷிவிக்குகள், போலந்து

சமூக-ஜனநாயகவாதிகள் ஆகியோரை உறுப்பினராகக் கொண்டிருந்தது. உண்மையில் லெனின் தலைமையில் அது வெளியிடப்பட்டது. அவரது கட்டுரைகள் பத்திரிகையில் முதலிடம் பெற்றன. லெனின் 80க்கு மேற்பட்ட கட்டுரைகளை அதற்காக எழுதினார். 1911 டிஸம்பர் முதல் லெனின் இப்பத்திரிகையின் பதிப்பாசிரியராக இருந்தார்.

பிற்போக்குவாதம் தலைதூக்கிய ஆண்டுகளிலும் புரட்சி இயக்கம் புத்துயிர் அடையத் தொடங்கிய ஆண்டுகளிலும், கட்சிக்கலைப்புவாதிகளையும் திரோத்ஸ்கிவாதிகளையும் ஒத்ஸோவ்வாதிகளையும் எதிர்த்தும், சட்டவிரோதமான மார்க்ஸியக் கட்சியைப் பாதுகாக்கவும் அதன் ஒற்றுமையை உறுதிப்படுத்தவும் திரளான மக்களுடன் அதன் பிணைப்பைப் பலப்படுத்தவும் போல்ஷிவிக்குகள் நடத்திய போராட்டத்தில் சொத்஭லியால்-டெமக்ராட் பெரும் பங்கு ஆற்றியது.

முதலாவது உலகப் போரின் போது சொத்ஸியால்-டெமக்ராட் போர், சமாதானம், புரட்சி ஆகிய பிரச்சினைகளில் போல்ஷிவிக் முழக்கங்களைப் பரவச் செய்வதில் ஈடுபட்டது.—294.

99 டிரைஃபஸ் வழக்கு — பிரெஞ்சு இராணுவத் தலைமையகத்தின் அதிகாரியான டிரைஃபஸ் என்ற யூதர் மீது பிரெஞ்சு இராணுவ அதிகாரிகளைச் சேர்ந்த பிற்போக்கு, முடியரசு வட்டாரத்தினரால் வேண்டுமென்றே 1894ல் தொடுக்கப்பட்ட ஒரு பொய் வழக்கு. அந்நிய நாட்டுக்காக வேவுபார்த்ததாகவும், அரசுக்குத் துரோகம் செய்ததாகவும் டிரைஃபஸ்மீது பொய்க்குற்றம் சுமத்தப்பட்டது. இராணுவ விசாரணைக்குப் பிறகு அவருக்கு ஆயுள் தண்டனை விதிக்கப்பட்டது. பிரான்ஸில் யூத-எதிர்ப்பு வெறியைத் தூண்டிவிடுவதற்காகவும் குடியரசு ஆட்சிமுறையைத் தாக்குவதற்காகவும் ஜனநாயக உரிமைகளை ஒழிப்பதற்காகவும் இந்தப் பொய்வழக்கை பிரெஞ்சு பிற்போக்காளர்கள் பயன்படுத்தினர். பரந்து கிளர்ந்த பொது மக்கள் இயக்கத்தின் விளைவாக அவர் 1899ல் மன்னிக்கப்பட்டார், 1906ல் அவர் குற்றமற்றவர் என்பது நிரூபிக்கப்பட்டு, இழந்த உரிமைகளைத் திரும்பவும் பெற்றார். —306.

100 ஸாபெர்ன் நிகழ்ச்சி — 1913 நவம்பரில் ஸாபெர்ன் (அல்ஸேஸ் பகுதி) நகரில் நடைபெற்றது. அல்ஸேஸ்

*மக்களிடம் ஒரு பிரஷ்ய அதிகாரி மிருகத்தனமான முறையில் நடந்து கொண்டதால் விளைந்தது. இது அவ்வட்டாரமக்களை, குறிப்பாக பிரெஞ்சு மக்களை பிரஷ்ய இராணுவ ஆட்சியாளருக்கெதிராகக் கொதித்து எழச் செய்தது.—306.*

101 **''பண்பாட்டு-தேசியத் துறைகளில் சுயாட்சி''** — *தேசியப் பிரச்சினையில் சந்தர்ப்பவாத வேலைத்திட்டம். 1890-1900களில் ஆஸ்திரிய சமூக-ஜனநாயகவாதிகளான ஓ. பௌவர், கா. ரென்னர் இருவராலும் முன்வைக்கப்பட்டது. இதன் உட்பொருள் பின் வருமாறு: ஒரு நாட்டிலுள்ள ஒரே தேசிய இனத்தைச் சேர்ந்தவர்கள், நாட்டின் எந்தப் பகுதியில் அவர்கள் வாழ்ந்தாலும் சரியே, சுயாட்சி உரிமை கொண்ட தேசிய ஒன்றியமாக அமைவார்கள். பள்ளிக்கூட விவகாரத்தையும் (வெவ்வேறு தேசிய இனத்தினரின் குழந்தைகளுக்குத் தனித்தனிப் பள்ளிகள்) பிற கல்வி, பண்பாட்டுத் துறைகளையும் அரசு அதன் நிர்வாகத்தில் முழுமையாக ஒப்படைக்கும். இந்த வேலைத்திட்டம் அமுலாக்கப்பட்டிருந்தால், ஒவ்வொரு தேசிய இனக் குழுவுக்கு உள்ளும் மதகுருமார் செல்வாக்கும், பிற்போக்குத் தேசியச் சித்தாந்தத்தின் செல்வாக்கும் வலுப்பட வகை செய்திருக்கும்; தேசிய இன அடையாளப்படி தொழிலாளிகளின் பிளவைத் தீவிரப்படுத்தி, தொழிலாளி வர்க்கத்தை ஒழுங்கமைப்பதைக் கடினமாக்கியிருக்கும். ''உள்ளும் புறமும் முதலாளித்துவத் தன்மை கொண்ட, உள்ளும் புறமும் பொய்யான'' கருத்தே அதன் அடிப்படை என்றும் ''தனிப்பட்ட அரசாங்க நிறுவனத்தின் வாயிலாக எல்லாத் தேசிய இனங்களையும் வலுவாகவும் நிலையாகவும் ஒன்றிலிருந்து மற்றொன்றை வேறாகப் பிரித்துவிடுவதே அந்தக் கருத்து'' என்றும் லெனின் சுட்டிக்காட்டி ''பண்பாட்டு-தேசியச் சுயாட்சி'' என்ற முழக்கத்தைப் பல கட்டுரைகளில் தீவிரமாக விமர்சித்தார்.—308.*

102 *கா. மார்க்ஸ் ஃபி. எங்கெல்ஸுக்கு எழுதிய கடிதத்தை (1867 நவம்பர் 2) பார்க்கவும்.—313.*

103 *Die Glocke (''மணி'')—1915 முதல் 1925 வரை முதலில் மியூனிக்கிலிருந்தும், பின்னர் பெர்லினிலிருந்தும் வெளி வந்த ஒரு சஞ்சிகை; இதன் ஆசிரியர் ஜெர்மன் சமூக-ஜனநாயகக் கட்சியின் உறுப்பினரும் சமூக-தேசியவெறியனுமான பார்வஸ் (கெல்ஃபான்ட்).—314.*

104 **ஃபேபியன்கள்** — *ஃபேபியன் கழகத்தின் உறுப்பினர்கள். இந்த ஆங்கிலேய சீர்திருத்தவாதக் கழகம் 1884ம் ஆண்டில் நிறுவப்பட்டது. கி.மு. மூன்றும் நூற்றுண்டைச் சேர்ந்த ரோமானியப் படைத் தலைவர் ஃபேபியஸ் மாக்ஸிமஸ் என்பவரின் பெயரைத் இது தனக்குச் சூட்டிக் கொண்டது. ஹனிபாலுடன் நடத்த போரில் உறுதியுடன் போரிடாமல் தட்டிக் கழித்தவாறு எதிர்பார்த்துக் காத்திருக்கும் போர்த்தந்திரத்தை மேற்கொண்டமையால் ஃபேபியஸ் மாக்ஸிமஸ் ''குன்க்டேட்டர்'' (இழுத்தடிப்பவன்) என்ற புனைபெயரைப் பெற்ருர். ஃபேபியன்கள் பெரும்பாலும் முதலாளித்துவ அறிவுத்துறையினராவர்: விஞ்ஞானிகள், எழுத்தாளர்கள், அரசியல்வாதிகள் (சிட்னி வெப்பும், பியட்ரீஸ் வெப்பும், ராம்சே மக்டொனல்ட், பர்னர்ட் ஷா முதலியோர்). பாட்டாளி மக்களின் வர்க்கப் போராட்டமும் சோஷலிஸப் புரட்சியும் இன்றியமையாதவை என்பதை ஃபேபியன்கள் மறுத்தார்கள். சிறு சீர்திருத்தங்களின் வாயிலாகவும் சமுதாயத்தைப் படிப்படியாகப் புனரமைப்பதன் மூலமாகவுமே முதலாளித்துவத்திலிருந்து சோஷலிசத்துக்கான மாற்றத்தை ஏற்பத்தலாம் என்றனர். 1900ல் ஃபேபியன் கழகம் தொழிற்கட்சியுடன் இணைக்கப்பட்டது.—317.*

105 *Die Neue Zeit (''புதிய காலம்'')—ஜெர்மன் சமூக-ஜனநாயகக் கட்சியின் தத்துவார்த்த சஞ்சிகை. 1883 லிருந்து 1923 வரை ஷ்டுட்கார்ட்டில் வெளிவந்து கொண்டிருந்தது. 1917 அக்டோபர் வரை கார்ல் காவுத்ஸ்கியும் அதன்பின் எச். குனோவும் ஆசிரியர்களாய் இருந்தனர். மார்க்ஸ், எங்கெல்ஸின் நூல்களில் பல இப்பத்திரிகையில்தான் முதன்முதல் வெளியாயின. எங்கெல்ஸ் இப்பத்திரிகைக்கு ஆலோசனைகள் கூறி உதவி வந்தார்; மார்க்ஸியத்திலிருந்து அது தடம் புரண்டு சென்றதைக் குறிப்பிட்டுப் பல முறை அதனைக் கண்டித்து விமர்சனமும் செய்தார். பெபெல், லீப்க்னெஹ்ட், லுக்ஸம்பர்க், மேரிங், ஸெத்கின், பிளெஹானவ், லஃபார்க் போன்ற 19ம் நூற்ருண்டின் இறுதியையும் 20ம் நூற்ருண்டின் துவக்கத்தையும் சேர்ந்த ஜெர்மன், சர்வதேசத் தொழிலாளர் இயக்கத்தில் முக்கியமான தலைவர்கள் அதற்கு எழுதினர். 1895ல் எங்கெல்ஸ் காலமான பிறகு, Die Neue Zeit இல் சந்தர்ப்பவாதப் போக்குள்ள கட்டுரைகள் முறையாக வெளிவரத் தொடங்கியது (எடுத்துக்காட்டாக,*

திருத்தல்வாதிகள் மார்க்ஸியத்தின் மீது தாக்குதல் தொடுப்பதைக் குறிக்கும் பெர்ன்ஷ்டைன் எழுதிய சோஷலிஸத்தின் பிரச்சினைகள் என்னும் கட்டுரைத் தொடர் இதில் வெளியிடப்பட்டது). முதலாவது உலகப் போரின் போது இச்சஞ்சிகை மையவாத நிலையில் நின்று நடைமுறையில் சமூக-தேசியவெறியர்களை ஆதரித்தது.—317.

106 ரு.ச.ஜ.தொ. கட்சியின் ஆருவது (பிராக்) அனைத்து ருஷ்ய மாநாடு இங்கு குறிக்கப்படுகிறது. இது 1912 ஜனவரி 5—17 (18—30)ல் பிராக் நகரில் நடந்தது. புதிய வகைக் கட்சியாகிய போல்ஷிவிக்குக் கட்சியைக் கட்டுவதற்காகவும் அதன் ஒற்றுமையை உறுதிப்படுத்துவதற்காகவும் இது முக்கியமான பங்கு ஆற்றியது, உண்மையில் கட்சிக் காங்கிரஸ் போல் விளங்கிற்று. லெனின் மாநாட்டின் வேலைக்குத் தலைமை தாங்கினர்; தற்காலத்திய கட்டமும் கட்சியின் பணிகளும் என்பது பற்றியும் சர்வதேச சோஷலிஸ்டு குழுவின் வேலைபற்றியும் லெனின் சொற்பொழிவு ஆற்றினர்; மற்ற பல பிரச்சினைகள் பற்றியும் உரை நிகழ்த்தினர். நிகழ்ச்சி நிரலின் முதன்மையான பிரச்சினைகளைப் பற்றிய நகல் தீர்மானங்களை வரைந்தவர் லெனின்தான். மாநாட்டில் கட்சியின் மத்தியக் குழு தேர்ந்தெடுக்கப்பட்டது. ரு.ச.ஜ.தொ. கட்சியின் பிராக் மாநாடு, போல்ஷிவிக்குகள் மென்ஷிவிக்குகளுக்கு எதிரான வரலாற்று முக்கியத்துவம் வாய்ந்த போராட்டக் காலப்பகுதி பற்றி தொகுத்துரைத்து, போல்ஷிவிக்குகளின் வெற்றியை உறுதிப்படுத்தியது. கட்சிக்கலைப்புவாதிகள் கட்சியிலிருந்து விலக்கப்பட்டார்கள். மாநாட்டுத் தீர்மானங்களின் அடிப்படையில் உள்ளூர் கட்சி அமைப்புகள் உறுதியாக ஒன்றுபட்டன. அனைத்து ருஷ்யாவையும் தழுவிய அமைப்பு என்னும் முறையில் மாநாடு கட்சியை வலுப் பெறச் செய்தது. புரட்சி வளர்ந்து வந்த சூழ்நிலைமைகளில் கட்சியின் ஆதார நெறியையும் போர்த்தந்திரத்தையும் இது வரையறுத்தது.—321.

107 கிராக்கவ் நகரின் அருகிலுள்ள பரோனின் என்னும் ஊரில் 1913 செப்டம்பர் 23 — அக்டோபர் 1 (அக்டோபர் 6—14)ல் ரு.ச.ஜ.தொ. கட்சியின் மத்தியக் குழு கூட்டிய கட்சி ஊழியர் கூட்டத்தில் நிறைவேற்றப்பட்ட தேசியப் பிரச்சினை பற்றிய தமது தீர்மானத்தை லெனின் இங்கே குறிப்பிடுகிறுர்.—321.

108 நாஷே தேலோ (''நமது பணி'') — மென்ஷிவிக்குகள்-கட்சிக்கலைப்புவாதிகளின் ஒரு மாதப் பத்திரிகை. அக்டோபர் 1914ல் மூடப்பட்டுவிட்ட நாஷா ஜார்யா (''நமது உதயம்'')என்ற பத்திரிகைக்குப் பதிலாக 1915ல் ஜனவரியில் பெத்ரொகிராதில் இது வெளியிடப்படத் தொடங்கிற்று. ருஷ்யாவில் சமூக-தேசியவெறியர்களின் முக்கியமான பத்திரிகை.—321.

109 ஸிம்மர்வால்டு அல்லது முதலாவது சர்வதேச சோஷலிஸ்டு மாநாடு 1915 செப்டம்பர் 5—8ல் நடந்தது. ஜெர்மனி, பிரான்ஸ், இத்தாலி, ருஷ்யா, போலந்து, ருமேனியா, பல்கேரியா, ஸ்வீடன், நார்வே, ஹாலந்து, ஸ்விட்சர்லாந்து ஆகிய பதினொன்று ஐரோப்பிய நாடுகளைச் சேர்ந்த 38 சோஷலிஸ்டுப் பிரதிநிதிகள் அதில் கலந்து கொண்டார்கள். ரு.ச.ஜ.தொ. கட்சி மத்தியக் கமிட்டியின் பிரதிநிதிக் குழுவிற்கு லெனின் தலைமை தாங்கினார்.

மாநாடு''ஐரோப்பாவின் பாட்டாளி வர்க்கத்துக்கு'' என்னும் அறிக்கையை நிறைவேற்றியது. லெனினும் இடதுசாரிச் சமூக-ஜனநாயகவாதிகளும் மேற்கொண்ட முயற்சிகளால் புரட்சிகர மார்க்ஸியத்தின் அடிப்படையான கோட்பாடுகள் பலவற்றை இதில் சேர்க்கப்பட்டன. மேலும், ஜெர்மன் மற்றும் பிரெஞ்சுப் பிரதிநிதிக் குழுக்களின் கூட்டு அறிக்கையையும், போர்க் கொடுமைகளுக்குப் பலியானோருடனும் அரசியல் நடவடிக்கைகளுக்காகத் துன்புறுத்தப்பட்டு வந்த போராட்ட வீரர்களுடனும் அன்பு காட்டும் தீர்மானத்தையும் அது நிறைவேற்றியது. செயற்குழுவாகிய சர்வதேச சோஷலிஸ்டு கமிஷனைத் தேர்ந்தெடுத்தது.

மாநாட்டில் ஸிம்மர்வால்டு இடதுசாரிக் குழு உருவாயிற்று. லெனின் தலைமையில் ரு.ச.ஜ.தொ. கட்சியின் பிரதிநிதிகளும், போலந்து முடியரசு, மற்றும் லித்துவேனியா ஆகிய பிரதேசத்தைச் சேர்ந்த சமூக-ஜனநாயகவாதிகளின் நிர்வாகக் குழுவின் பிரதிநிதிகளும், லாத்வியப் பிரதேசத்தைச் சேர்ந்த சமூக-ஜனநாயகவாதிகளின் மத்தியக் குழுவின் பிரதிநிதிகளும், ஸ்வீடன், நார்வே, ஸ்விஸ் இடதுசாரியினர்களின் பிரதிநிதிகளும், ஜெர்மனியின் சர்வதேசவாத சோஷலிஸ்டுகள் என்னும் குழுவின் பிரதிநிதிகளும் ஸிம்மர்வால்டு இடதுசாரிக் குழுவில் சேர்ந்தனர். இக்குழு மாநாட்டில் பெரும்பான்மையோராக இருந்த மையவாதிகளை எதிர்த்து ஊக்கத்துடன்

போராடிற்று; ஆனால் போல்ஷிவிக்குகள் மட்டும்தான் இதில் முற்றிலும் முரணற்ற நிலையைக்கடைப்பிடித்தனர். —*321*.

110 சர்வதேச சோஷலிஸ்டுக் கமிஷனின் அறிக்கை (*Bulletein Internationale Sozialistische Kommission zu Bern*) ஸிம்மர்வால்டு இடதுசாரியினரின் செயற்குழு வெளியிட்ட பத்திரிகை. இது 1915 செப்டம்பர் முதல் 1917 ஜனவரி வரை ஆங்கில, பிரெஞ்சு, ஜெர்மன் மொழிகளில் (மொத்தம் 6 இதழ்கள்) வெளிவந்தது.—*322*.

111 இரண்டாவது அகிலம்—சோஷலிஸ்டுக் கட்சிகளின் சர்வதேசச் சங்கமாக 1889ல் நிறுவப்பட்டது. ஏகாதிபத்திய சகாப்தம் தொடங்கியபோது சந்தர்ப்பவாதப் போக்குகள் இதில் மேலும் மேலும் தலைதூக்கின. 1914ல் உலகப் போர் மூண்ட போது இரண்டாவது அகிலத்தின் சந்தர்ப்பவாதத் தலைவர்கள் தம் நாடுகளின் முதலாளித்துவ அரசாங்கங்களை வெளிப்படையாகவே ஆதரிக்கத் தொடங்கினர். இரண்டாவது அகிலத்தின் செயற்பாடுகள் முடிவடைந்தன. சமூக-ஜனநாயகக் கட்சிகளின் புரட்சிகரப் பகுதியோர் மூன்றாவது அகிலத்தை அமைப்பதில் ஈடுபட்டார்கள்.—*322*.

## பெயர்க் குறிப்பகராதி

அக்கிமவ் [Akimov], (மஹ்னோவித்ஸ்)* விளதீமிர் பெத்ரோவிச் *(1872-1921)* — *ருஷ்ய சமூக-ஜனநாயகவாதி, ''பொருளாதாரவாதம்'' என்கிற போக்கின் முக்கியமான பிரதிநிதி, கடைக்கோடியான சந்தர்ப்பவாதி.—89, 65,248.*

அர்னிம்-சூக்கவ் [Arnim-Suckow], ஹென்ரிஹ் அலெக்ஸாந்தர் *(1798-1861)—பிரஷ்ய அரசுத்துறையாளர், நடுநிலை மிதவாதி, வெளித்துறை அமைச்சர் (1848 மார்ச்-ஜூன்).—273.*

ஆஸ்டர்லித்ஸ் [Austerlitz], ஃபிரீட்ரிஹ் *(1862-1931)* — *ஆஸ்திரிய சமூக-ஜனநாயகக் கட்சியின் சந்தர்ப்பவாதத் தலைவர்களில் ஒருவர்.—170.*

எங்கெல்ஸ் [Engels], ஃபிரீட்ரிஹ் *(1820-1895)* — *விஞ்ஞானக் கம்யூனிஸத்தின் மூலவர்களில் ஒருவர், சர்வதேசப் பாட்டாளி வர்க்கத்தினரின் தலைவர், ஆசான்; கார்ல் மார்க்ஸின் நண்பரும் போராட்டத் தோழரும்.—20, 28, 37, 41, 51, 53, 189, 198, 199, 210, 254, 255, 277-279, 281-283.*

ஃபாயர்பாக் [Feuerbach], லுத்விக் அண்டிரியஸ் *(1804-1872)— ஜெர்மன் தலைசிறந்த பொருள்முதல்வாதத் தத்துவஞானி, நாஸ்திகர்; மார்க்ஸியத்தின் முன்னோடிகளில் ஒருவர். அவர் ஹெகலின் தத்துவஞானத்தின் கருத்துமுதல்வாதத் தனத்தை விமர்சித்தார், சமயத்துடன்*

---

* *அடைப்புக் குறிகளில் தரப்பட்டுள்ளவை உண்மையான பெயர்களாகும்.*—ப-ர்.

*கருத்துமுதுதல்வாதத்துக்குள்ள தொடர்பைக் காட்டினார். ஆனால் சமூக நிகழ்வுத் துறையில் ஃபாயர்பாக் கருத்து முதல்வாத நிலையில் நின்றார்.—28, 128.*

**கப்போன்** [Gappon], **கியோர்கி அப்பலோனவிச்** *(1870-1906)—பாதிரி, ஸுபாத்தவ் வகை அமைப்புக்களில் பங்காற்றினார். 1905 ஜனவரி 9ல் ஜார் மன்னருக்கு மனு கொடுக்கும் நோக்கமுடைய ஊர்வலத்தில் பீட்டர்ஸ்பர்க் தொழிலாளர்களைச் சேரத் தூண்டினார். அந்த ஊர்வலத்தின் மீது துப்பாக்கிப் பிரயோகம் செய்யப்பட்டபின் கப்போன் ருஷ்யாவிலிருந்து ஓடிவிட்டார். அவரது ஆத்திரமூட்டும் நடவடிக்கைகள் அம்பலப்படுத்தப்பட்டபின் சோஷலிஸ்டு-புரட்சியாளர்கள் அவரைக் கொன்றனர்.—147.*

**கப்லுக்கோவ்** [Kablukov], **நிக்கலாய் அலெக்ஸேயெவிச்** *(1849-1919)—ருஷ்யப் பொருளியலாளர், புள்ளிவிவரவியலாளர்; மிதவாத நரோதியத்தின் ஆதரவாளர். மாஸ்கோ பல்கலைக்கழகத்தின் பேராசிரியர்.—275.*

**கல்த்ஸோவ் தி.** [Koltsov, D.], **(கின்ஸ்புர்க்), பரீஸ் அப்ராமவிச்** *(1863-1920) — ருஷ்ய சமூக-ஜனநாயகவாதி, மென்ஷிவிக்.—282.*

**காம்ப்ஹாவுஸன்** [Camphausen], **லுதொல்ஃப்** *(1803-1890)—பிரஷ்ய அரசாளர், ரைன் பிரதேசத்தைச் சேர்ந்த மிதவாத முதலாளி வர்க்கத்தினரின் தலைவர்களில் ஒருவர். 1848 மார்ச்சு முதல் ஜூன் வரை பிரஷ்யாவில் முதலாளித்துவ-மிதவாத அரசாங்கத்திற்குத் தலைமை தாங்கினார். —137, 139.*

**காரிபால்டி** [Garibaldi], **ஜுஸேப்பெ** *(1807-1882)—இத்தாலியப் புரட்சிகர ஜனநாயகவாதிகளின் பெருந் தலைவர்களில் ஒருவர், தலைசிறந்த படைத் தலைவர். 1848-67ம் ஆண்டுகளில் வெளிநாட்டு அடிமைத்தனத்துக்கு எதிராகவும் இத்தாலியை ஒன்றுசேர்ப்பதற்காகவும் இத்தாலிய மக்கள் நடத்திய போராட்டத்திற்குத் தலைமை தாங்கினார்.—311.*

**காவுத்ஸ்கி** [Kautsky], **கார்ல்** *(1854-1938) — ஜெர்மன் சமூக-ஜனநாயக இயக்கம், இரண்டாவது அகிலம் இவற்றின் தலைவர்களில் ஒருவர். ஆரம்பத்தில் மார்க்ஸியவாதி, பிற்பாடு மார்க்ஸியத்தைத் துறந்துவிட்ட ஓடுகாலி. தொழிலாளர் இயக்கத்திற்கு மிகவும் அபாயகரமான*

*சந்தர்ப்பவாதப் போக்காகிய மையவாதத்தின் (காவுத்ஸ்கிவாதத்தின்) சித்தாந்தி.—309, 310, 313, 316, 317, 324.*

**கானிட்ஸ்** [Kanitz], **ஔகுஸ்ட்** *(1783-1852) — பிரஷ்ய ஜெனரல், பிற்போக்குத் தனமுடைய நிலப்பிரபுக்கள், அதிகாரவர்க்கத்தினர் ஆகியோரின் பிரதிநிதி. 1848 மே—ஜூன் மாதங்களில் காம்ப்ஹாவுஸன் அரசாங்கத்தில் இராணுவ அமைச்சராக இருந்தார்.—273.*

**கான்ட்** [Kant], **இம்மானுவேல்** *(1724-1804) — மூலச்சிறப்புள்ள ஜெர்மன் தத்துவஞானத்திற்கு அடிகோலியவர். கான்ட்டின் தத்துவஞானம் அகநிலைக் கருத்துமுதல்வாதம், அறியொணுவாதம் ஆகியவற்றின் ஒரு வகையாகும். அதேபோதில் சுற்றியுள்ள உலகம் உண்மையில் நிலவுவது என்று அது ஏற்றுக் கொள்வதன் விளைவாக அதில் ஓரளவு பொருள்முதல்வாத அம்சங்கள் உள்ளன. —39, 41.*

**கிரிச்சேவ்ஸ்கி** [Krichevsky], **பரீஸ் நிக்கலாயெவிச்** *(1866-1919) —ருஷ்ய சமூக-ஜனநாயகவாதி, அரசியல் கட்டுரையாளர், "பொருளாதாரவாதத்தின்" தலைவர்களில் ஒருவர். ரு.ச.ஜ.தொ. கட்சியின் இரண்டாவது காங்கிரஸுக்குப் பிறகு (1903) சமூக-ஜனநாயக இயக்கத்திலிருந்து விலகினுர்.—166.*

**கிரெதெஸ்கூல்** [Gredeskul], **நிக்கலாய் அந்திரேயெவிச்** *(பிறப்பு: 1864)—ருஷ்ய வழக்கறிஞர், அரசியல் கட்டுரையாளர், காடேட்டுக் கட்சியினர். 1916ல் காடேட்டுக் கட்சியிலிருந்து விலகினுர். அக்டோபர் சோஷலிஸப் புரட்சிக்குப்பின் உயர் கல்வி நிலையங்களில் பேராசிரியராக இருந்தார்.—260.*

**கிர்க்கே** [Gierke] *— மிதவாதி, பிரஷ்யாவின் நிலத்துறை அமைச்சர் (1848), பிரஷ்ய நாடாளுமன்றத்தின் உறுப்பினர்.—275.*

**கின்கெல்** [Kinkel], **கோத்ஃபிரீடு** *(1815-1882) — ஜெர்மன் கவிஞர், அரசியல் கட்டுரையாளர். லண்டனில் இருந்த சிறுமுதலாளித்துவ வகைப்பட்ட நாடுகடத்தப்பட்டோரின் தலைவரான இவர், மார்க்ஸ், எங்கெல்ஸ் இருவருக்கும் எதிராகப் போராடினுர்.—86.*

*(1892) ஒருவர். பாட்டாளி வர்க்கம் முதலாளித்துவ வர்க்கத்துடன் ஒத்துழைக்க வேண்டும் எனும் கொள்கையைக் கடைப்பிடித்தார். முதலாவது உலகப் போரின் போது மையவாத நிலையை அனுசரித்தார். அக்டோபர் சோஷலிஸப் புரட்சியிடம் பகைமையுடன் நடந்து கொண்டார். இத்தாலிய உழைப்பாளர்களின் புரட்சிகர இயக்கத்தை எதிர்த்துப் போராடினர்.— 182, 199.*

டூரிங் [Dühring], ஒய்கென் *(1833-1921) — ஜெர்மன் தத்துவ ஞானி, பொருளியலாளர். தத்துவஞானம், அரசியல் பொருளாதாரம், சோஷலிஸம் ஆகியவற்றைப் பற்றிய அவரது குழப்படிக் கருத்துக்களை எங்கெல்ஸ் தமது* டூரிங்குக்கு மறுப்பு. ஒய்கென் டூரிங் அவர்கள் விஞ்ஞானத்தில் நிகழ்த்திய கவிழ்ப்பு (1877-1878) *எனும் நூலில் விமர்சனம் செய்தார்.—28, 38, 41.*

தியேர் [Thiers], அடோல்ஃப் *(1797-1877) — பிரெஞ்சு முதலாளித்துவ அரசுத்துறையாளர், வரலாற்றாசிரியர். உள்நாட்டுப் போரைத் தொடங்குவதற்கும் பாரிஸ் கம்யூனை நசுக்குவதற்குமான முக்கிய அமைப்பாளர்களில் ஒருவர்.—263.*

திரோத்ஸ்கி [Trotsky] (பிரான்ஷ்டைன்), லெவ் தவீதவிச் *(1879-1940)—ருஷ்ய சமூக-ஜனநாயகவாதி, மென்ஷிவிக். ரு.ச.ஜ.தொ.கட்சியின் இரண்டாவது காங்கிரஸுக்குப் பிறகு (1903) சோஷலிஸப் புரட்சியைப் பற்றிய தத்துவ, போர்த்தந்திரப் பிரச்சினைகள் எல்லாவற்றிலும் போல்ஷிவிக்குகளை எதிர்த்துப் போராடினர். ரு.ச.ஜ.தொ. (போல்ஷிவிக்குகள்) கட்சியின் ஆருவது காங்கிரஸில் போல்ஷிவிக் கட்சியில் உறுப்பினராக அனுமதிக்கப்பட்டார். அக்டோபர் சோஷலிஸப் புரட்சிக்குப் பிறகு பல பொறுப்புள்ள பதவிகளை வகித்தார். என்றபோதிலும் கட்சியின் கொள்கையை எதிர்த்து தலைமறைவாகவும் வெளிப்படையாகவும் போராடினர். கம்யூனிஸ்டுக் கட்சி, கட்சியினுள் சிறுமுதலாளித்துவச் சரிவு என்ற முறையில் திரோத்ஸ்கியத்தை அம்பலப்படுத்தி சித்தாந்த, அமைப்புத் துறைகளில் இதை முறியடித்தது. 1927ல் திரோத்ஸ்கி கட்சியிலிருந்து வெளியேற்றப்பட்டார், 1929ல் சோவியத் யூனியனிலிருந்து நாடுகடத்தப்பட்டார்; 1932ல் அவர் தமது சோவியத் குடியுரிமையை*

*இழந்தார். வெளிநாட்டில் இருந்து கொண்டே திரோத்ஸ்கி சோவியத் அரசுக்கு எதிராகவும் கம்யூனிஸ்டுக் கட்சிக்கு எதிராகவும் சர்வதேசக் கம்யூனிஸ்டு இயக்கத்திற்கு எதிராகவும் தொடர்ந்து போராடினார்.—90, 166.*

**துருபெத்ஸ்கோய்** [Trubetskoi], **ஸெர்கேய் நிக்கலாயெவிச்** *(1862-1905)—பிரபு, அரசியலில் மிதவாதி; கருத்து முதல்வாதத் தத்துவஞானி. மிதவாதப் போக்குள்ள அரசமைப்புச் சட்டத்தைப் புகுத்துவதின் வழியாக ஜார் மன்னர் ஆட்சியைக் கெட்டிப்படுத்த முயன்றார்.—249, 275.*

**நதேழ்தின் எல்.** [Nadezhdin L.], **(ஸெலேன்ஸ்கி, யெவ்கேனி ஓஸிப்பவிச்)** *(1877-1905) — ருஷ்ய நரோத்னிக்கு வாதியாகத் தமது அரசியல் வாழ்க்கையைத் தொடங்கினார், பிறகு சமூக-ஜனநாயகவாதிகளுடன் சேர்ந்தார்.* **லெனின்** *நடத்தி வந்த* **இஸ்க்ராவை** *எதிர்த்தார். ரு.ச.ஜ.தொ. கட்சியின் இரண்டாவது காங்கிரஸுக்குப் பின் (1903) மென்ஷிவிக் வெளியீடுகளில் பங்காற்றினார்.—173.*

**நிக்கலாய், இரண்டாவது (ரமானவ்)** [Nicholas II (Romanov)] **(இரத்தக்கறை படிந்தவர்)** *(1868-1918) — 1894லிருந்து 1917 வரை ஆட்சியில் இருந்த ருஷ்யாவின் கடைசிப் பேரரசர். 1918 ஜூலை 17ல், யெக்கத்திரின்பர்க் (ஸ்வெர்திலோவ்ஸ்க்) நகரில், உரால் பிரதேசத்தின் தொழிலாளர், படையாளர் பிரதிநிதிகளின் சோவியத்து விதித்த உத்தரவுப்படி சுட்டுக் கொல்லப்பட்டார்.—153, 162, 262.*

**பக்கூனின்** [Bakunin], **மிஹயீல் அலெக்ஸாந்தரவிச்** *(1814-1876)—ருஷ்யாவில் நரோதியம், அராஜகவாதம் ஆகியவற்றின் சித்தாந்திகளில் ஒருவர். 1848-49ம் ஆண்டுகளில் ஜெர்மன் புரட்சியில் பங்கு கொண்டார். முதலாவது அகிலத்தில் மார்க்ஸியத்தின் கடும் பகைவராக நடந்து கொண்டார். மார்க்ஸும் எங்கெல்ஸும் பக்கூனினை எதிர்த்து உறுதியுடன் போராடினார்கள், பக்கூனின் வாதம் சிறுமுதலாளித்துவத் தன்மை கொண்ட குறுங்குழுவாதம் என்று அதை அம்பலப்படுத்தினார்கள். 1872ல் பக்கூனின் பிளவுண்டாக்கும் நடவடிக்கைகளுக்*

*காக முதலாவது அகிலத்திலிருந்து விலக்கப்பட்டார்.—37, 210, 255.*

பக்தானவ் [Bogdanov] (மலிநோவ்ஸ்கி), அலெக்ஸாந்தர் அலெக்ஸாந்தரவிச் *(1873-1928) — ருஷ்ய சமூக-ஜனநாயகவாதி, தத்துவஞானி, சமூகவியலாளர், பொருளியலாளர்.—41.*

பத்ரேஸவ் [Potresov] (ஸ்தரவேர்), அலெக்ஸாந்தர் நிக்கலாயெவிச் *(1869-1934)—ருஷ்யாவில் மென்ஷிவிஸத்தின் தலைவர்களில் ஒருவர். பிற்போக்கு தலைவிரித்தாடிய ஆண்டுகளில் கட்சிக் கலைப்புவாதத்தின் சித்தாந்தி. அக்டோபர் சோஷலிஸப் புரட்சிக்குப் பிறகு ருஷ்யாவிலிருந்து வெளியேறினர், சோவியத் ருஷ்யாவை எதிர்த்து வேலை செய்தார்.—155, 166, 205, 206, 258.*

பஸாரவ் [Bazarov] (ரூத்னெவ்), விளதீமிர் அலெக்ஸாந்தரவிச் *(1874-1939)—ருஷ்யத் தத்துவஞானி, பொருளாதாரவாதி. அரை மென்ஷிவிக் போக்குள்ள* நோவயா ஷீஸ்ன் *என்னும் செய்தியேட்டின் ஆசிரியர்களில் ஒருவர்; அக்டோபர் சோஷலிஸப் புரட்சியை எதிர்த்துப் பேசினர்.—41.*

பார்வஸ் [Parvus], (கெல்ஃபாந்த்), அலெக்ஸாந்தர் லாஸரெவிச் *(1869-1924)—ருஷ்ய மென்ஷிவிக், 1890ம் ஆண்டுகளின் இறுதியிலும் 1900ம் ஆண்டுகளின் தொடக்கத்திலும் ஜெர்மன் சமூக-ஜனநாயகக் கட்சியின் அணிகளில் பணியாற்றினர். பிற்போக்கு தலைவிரித்தாடிய காலத்தில் சமூக-ஜனநாயகவாதத்திலிருந்து விலகினர். முதலாவது உலகப் போரின் போது சமூக-தேசியவெறியினர். ஜெர்மன் ஏகாதிபத்தியவாதிகளின் கையாள்.—317.*

பிளாங் [Blanc], லுயீ *(1811-1882)—பிரெஞ்சு சிறுமுதலாளித்துவ சோஷலிஸ்டு, வரலாற்றாசிரியர்.—281.*

பிளெஹானவ் [Plekhanov], கியோர்கி வலென்தீனவிச் *(1856-1918)—ருஷ்ய, சர்வதேசத் தொழிலாளி வர்க்க இயக்கத்தின் தலைசிறந்த பிரதிநிதி, ருஷ்யாவில் முதன்முதலாய் மார்க்ஸியத்தைப் பரப்பியவர். ரு.ச.ஜ.தொ. கட்சியின் இரண்டாவது காங்கிரஸுக்குப் பிறகு (1903) இணக்கவாத நிலையை அனுசரித்தார், பிற்பாடு மென்ஷிவிக்குகளுடன் சேர்ந்து கொண்டார். முதலாவது உலகப்*

*நிறுவுவதில் முக்கிய பங்கெடுத்துக் கொண்டார்.—152, 270, 283.*

மோல் [Moll], இயோஸிஃப் *(1812-1849) — ஜெர்மன், சர்வ தேசத் தொழிலாளி வர்க்க இயக்கத்தின் முக்கியமான பிரமுகர், கம்யூனிஸ்டுச் சங்கத்தின் மத்தியக் குழுவின் உறுப்பினர், 1848-49ம் ஆண்டுகளின் புரட்சியில் பங் கெடுத்தவர்.—278.*

யுர்க்கேவிச் [Yurkevich], எல். *(1885-1918) — உக்ரேனிய முதலாளித்துவத் தேசியவாதி, சந்தர்ப்பவாதி. உக்ரே னிய சமூக-ஜனநாயகத் தொழிலாளர் கட்சி மத்தியக் குழுவின் உறுப்பினர்.—317.*

ரிக்கார்டோ [Ricardo], டேவிட் *(1772-1823) — தலைசிறந்த ஆங்கிலேயப் பொருளியலாளர். இவர் எழுதிய பல நூல்களில் முதலாளித்துவ அரசியல் பொருளாதாரம் முழுவடிவு பெற்றுள்ளது.—30.*

ருபனோவிச் [Rubanovich], இலியா அதோல்ஃபவிச் *(1860-1920) —ருஷ்யாவில் சோஷலிஸ்டு-புரட்சியாளர் கட்சியின் தலைவர்களில் ஒருவர். சர்வதேச சோஷலிஸ்டுப் பியூரோவின் உறுப்பினர். அக்டோபர் சோஷலிஸப் புரட்சிக்குப் பிறகு சோவியத் ஆட்சியின் பகைவராக இருந்தார்.—321.*

ரூகே [Ruge] அர்னோல்டு *(1802-1880) — ஜெர்மன் அரசியல் கட்டுரையாளர், இளம் ஹெகல்வாதி, முதலாளித்துவ தீவிரவாதி; ஜெர்மனியிலிருந்து இங்கிலாந்திற்கு நாடு கடந்தவர்களின் சிறுமுதலாளித்துவப் பகுதியினருக்குத் தலைமை தாங்கியவர்களில் ஒருவர்.—86.*

ரெனன் [Renan], எர்னஸ்ட் ஜொஸேஃப் *(1823-1892) — பிரெஞ்சு விஞ்ஞானி, சமயத்துறை வரலாற்றாசிரியர், கருத்துமுதல்வாதத் தத்துவஞானி. தொடக்கக் காலக் கிறித்துவத்தைப் பற்றி பல நூல்களை எழுதி பெயர் பெற் றார்.—283.*

ரெனொடேல் [Renaudel], பியேர் *(1871-1935) — பிரெஞ்சு சோஷலிஸ்டுக் கட்சியின் சீர்திருத்தவாதத் தலைவர்களில் ஒருவர்.—317.*

ரென்னர் [Renner], கார்ல் *(1870-1950) — ஆஸ்திரிய அரசியல்வாதி, ஆஸ்திரிய வலதுசாரி சமூக-ஜனநாயக*

*வாதிகளின் தலைவரும் தத்துவாசிரியரும் ஆவார். ''பண்பாடு-தேசியத் துறையிலான சுயாட்சி'' எனும் முதலாளித்துவ-தேசியவாதத் தத்துவத்தின் அடிகோலியவர்களில் ஒருவர்.—308.*

**ரோதிச்செவ்** [Rodichev], **ஃபியோதர் இஸ்மயிலவிச்** *(1856-1933)—ருஷ்யாவில் திவேர் பிரதேசத்தைச் சேர்ந்த நிலப்பிரபு, ஜெம்ஸ்துவோ பிரமுகர், காடேட்டுக் கட்சியின் தலைவர்களில் ஒருவர், அதன் மத்தியக் குழுவின் உறுப்பினர். அக்டோபர் சோஷலிஸப் புரட்சிக்குப் பிறகு ருஷ்யாவிலிருந்து வெளியேறினார்.—249, 274, 275.*

**லப்ரியோலா** [Labriola], **அர்த்தூரோ** *(1873-1959)—இத்தாலிய அரசியல்வாதி, வழக்கறிஞர், பொருளியலாளர். இத்தாலிய சிண்டிக்கலிஸ்டு இயக்கத்தின் தலைவர்களில் ஒருவர்.—48.*

**லஸ்ஸால்** [Lassalle], **ஃபெர்டினண்டு** *(1825-1864)—ஜெர்மன் சிறுமுதலாளித்துவ சோஷலிஸ்டு, ஜெர்மன் தொழிலாளர் இயக்கத்தில் சந்தர்ப்பவாதத்தின் ஒரு வகையாகிய லஸ்ஸாலியத்தின் அடிகோலியவர்.—84.*

**லாகர்டேல்** [Lagardelle], **யுபேர்** *(1874-1958) — பிரெஞ்சுச் சிறுமுதலாளித்துவ அரசியல்வாதி, அராஜகவாத-சிண்டிக்கலிஸ்டு.—48.*

**லியோ, பதின்மூன்றும் (வின்சேன்ஸோ ஜக்கினோ பெச்சீ)** [Leo XIII, Vincenzo Gioacchino Pecci] *(1810-1903)—போப்பாண்டவர், 1878ல் தேர்ந்தெடுக்கப்பட்டவர்.—263.*

**லீப்க்னெஹ்ட்** [Liebknecht], **வில்ஹெல்ம்** *(1826-1900)—ஜெர்மன் மற்றும் சர்வதேசத் தொழிலாளி வர்க்க இயக்கத்தின் முக்கியத் தலைவர்களில் ஒருவர், ஜெர்மன் சமூக-ஜனநாயகக் கட்சியின் நிறுவியவர்களிலும் தலைவர்களிலும் ஒருவர். முதலாவது அகிலத்தின் நடவடிக்கைகளிலும் இரண்டாவது அகிலத்தை நிறுவுவதிலும் பெரும் பங்கு கொண்டார்.—61, 62.*

**லீப்மன், எஃப்.** [Liebman F.], **(கேர்ஷ் பி.தி.)** *(பிறப்பு: 1882)—ருஷ்யாவில் பூந்த் சங்கத்தின் முக்கியமான பிரதிநிதி.—317.*

**லெஞ்ச்** [Lensch], **பாவுல்** *(1873-1926) — ஜெர்மன் சமூக-ஜனநாயகவாதி, தேசியவெறியினர். 1922ல் ஜெர்மன்*

# பொருட் குறிப்பகராதி

